ஸ்ரீ

# தியாகராஜஸ்வாமி கீர்த்தனைகள்





மொழிபெயர்ப்பாசிரியன்
டி. எஸ். பார்த்தஸாரதி

ஸ்ரீ ஸத்குரு ஸங்கீத ஸமாஜம்
சென்னை - 7

## ★ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள், காஞ்சீபுரம்

முகாம் ஏலூரு,
ஆந்திர பிரதேசம். தேதி: 26-5-1967

நம் பாரத தேசத்தில் ஸங்கீதத்தினுல் ஸ்ரீ ராமபிரானை வழிபட்டு ஸங்கீத சாஸ்திரத்தின் நுட்பமான விஷயங்களையும், வேத-உபநிஷத் புராண தத்வார்த்தங்களையும், பலவித உவமைகள், பொருத்தமான பழமொழிகள், நவரஸங்கள் இவைகளுடன் கலந்து ஸம்ஸ்கிருதம் சேர்ந்த மதுரமான தெலுங்கில் பொருத்தமான ராகங்களுடன் ஆயிரக்கணக்கான கீர்த்தனங்களை இயற்றி ''தியாகப்ரம்மம்'' என்று ஆஸ்திக-களால் போற்றப்படும் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் கீர்த்தனங்களைச் சென்ற இருபத்தாறு ஆண்டுகளாக ஜனங்களிடையே பரப்பும் சிறந்த தொண்டு புரிந்துவரும் சென்னை ஸ்ரீ ஸத்குரு ஸங்கீத ஸமாஜத்தின் நிர்வாஹத்தினர் இவ்வருஷம் ஸ்ரீ ஸ்வாமிகளின் இருநூருவது ஜெயந்தி விழாவை விமரிசையாகக் கொண்டாட இருப்பதையும், இந்த வைபவத்தின்போது ஸ்ரீ ஸ்வாமிகள் இயற்றியுள்ள எழுநூறு கீர்த்தனங்களை (அபூர்வ கீர்த்தனங்கள் உட்பட) தமிழ் லிபியில் அர்த்தத்துடன் வெளியிட முன் வந்திருப்பதையும், மற்றும் பல அறிஞர்கள் எழுதியுள்ள கட்டுரைகள் அடங்கிய ஒரு சிறப்பு மலரையும் பிரசுரிப்பதையும் அறிந்து ஸந்தோஷிக்கிருேம்.

அன்பர்கள் எல்லோரும் முக்கியமாக ஸங்கீத அப்யாஸிகளும் வித்வான்களும் இவ்வுத்ஸவத்தில் கலந்துகொண்டும், இவ்வுத்தம நூலின் துணை கொண்டு ஸ்ரீ தியாகப்ரமத்தின் க்ருதிகளைப் பொருளுணர்ந்து பாடியும் ஸ்ரீ ராமபிரானின் அருள் பெற்று எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

**நாராயணஸ்ம்ருதி:**

---

* இந்நூலின் முதற் பதிப்பிற்கு
காஞ்சிப் பெரியவர்கள் அருளிய ஸ்ரீமுகம்.

# உச்சரிப்புப் பட்டியல்

| தமிழ் | తెలుగు | संस्कृत | | தமிழ் | తెలుగు | संस्कृत |
|---|---|---|---|---|---|---|
| க | క | क | | த$_1^v$ | ధ | ध |
| க$_1$ | ఖ | ख | | ந | న | न |
| க$^v$ | గ | ग | | ப | ప | प |
| க$_1^v$ | ఘ | घ | | ப$_1$ | ఫ | फ |
| ங | ఙ | ङ | | ப$^v$ | బ | ब |
| ச | చ | च | | ப$_1^v$ | భ | भ |
| ச$_1$ | ఛ | छ | | ம | మ | म |
| ஜ | జ | ज | | ய | య | य |
| ஜ$_1$ | ఝ | झ | | ர | ర | र |
| ஞ | ఞ | ञ | | ற | ఱ | ऱ |
| ட | ట | ट | | ல | ల | ल |
| ட$_1$ | ఠ | ठ | | வ | వ | व |
| ட$^v$ | డ | ड | | ச̱ | శ | श |
| ட$_1^v$ | ఢ | ढ | | ஷ | ష | ष |
| ண | ణ | ण | | ஸ | స | स |
| த | త | त | | ஹ | హ | ह |
| த$_1$ | థ | थ | | ள | ళ | ळ |
| த$^v$ | ద | द | | க்ஷ | క్ష | क्ष |

தெலுங்கு, சம்ஸ்கிருதம் ஆகிய பாஷைகளில் நகரம் ஒன்றே யாதலால் அது 'ந' என்று தமிழ் எழுத்தினால் குறிப்பிடப் பெற்றுள்ளது. தெலுங்கு மொழியில் மாத்திரம் 'ர' 'ற' ஆகிய இரண்டு எழுத்துக்களும் வழக்கில் உள்ளன.



''கரமுன சர கோதண்ட காந்திதோ
தரணி தநயதோ''

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் புதல்வியின் திருமணத்தின் பொழுது வாலாஜாப்பேட்டை வேங்கடரமண பாகவதர் பரிசாக அளித்த படம்.

# முதற்பதிப்பின் முன்னுரை

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமியின் அனுக்கிரகத்தினாலும், அவருடைய இஷ்ட தெய்வமாகிய சக்கரவர்த்தித் திருமகனின் திருவருளாலும் இம் மொழி பெயர்ப்பு முடிவு பெற்றுக் கர்நாடக சங்கீத உலகின் சமுகத்தில் சமர்ப்பிக்கப் பெறுகிறது.

(2) தியாகராஜ கீர்த்தனைகளின் தமிழ்ப் பதிப்புக்கள் பல வருடங்களாக அச்சில் இல்லாத குறையை நீக்குவதும், பழைய பதிப்புக்களில் மலிந்து கிடக்கும் பிழைகளை நீக்கி சுத்தமான பதிப்பு ஒன்றை வெளியிடுவதுமே இப்பதிப்பின் முக்கிய நோக்கங்களாகும். ஆயினும், கீர்த்தனைகளின் பொருளைத் தெரிந்து கொள்ள விரும்புவோர்க்கு உதவும் வண்ணம் ஒவ்வொரு கீர்த்தனையின் அடியில் அதன் பொழிப்புரையும் சேர்க்கப் பெற்றுள்ளது,

(3) பரம பக்த சிகாமணியும், கவிஞர் பெருமானும், ரசக் கடலுமான தியாக பிரம்மத்தைப் போன்ற ஒரு வாக்கேயகாரரின் இரசனைகளைச் சுவை குன்றாமல் மற்றொரு பாஷையில் மொழிபெயர்ப்பது சிரம சாத்தியமான காரியமாகும். சூத்திரங்கள் போல் அமைக்கப்பெற்றுள்ள சில கீர்த்தனைகளின் முழுப்பொருளையும் விளக்க வேண்டுமாயின் அவற்றிற்கு நீண்ட உரைகள் எழுத நேரிடும். அது இந்நூலின் நோக்கம் அல்லவாதலால், ஸ்வாமியின் திருவுள்ளத்துக்கிசையும் வண்ணம் கீர்த்தனைகளின் சுருக்கமான பொருள் எழுதப்பெற்றுள்ளது. தியாகராஜ கீர்த்தனைகளின் சுவையை நுகர விரும்புவோர்க்கு இராமாயணம், புராணங்கள் முதலியவற்றில் ஏற்கனவேயே ஓரளவு பரிசயம் இருக்குமென்று எதிர்பார்ப்பதில் தவறொன்றுமில்லை.

(4) தெலுங்கு, சம்ஸ்கிருதம் ஆகிய மொழிகளின் யாப்பிலக்கணமும், எதுகை மோனையமைப்புக்களும் தமிழ் யாப்பிலக்கண அமைப்பிலிருந்து முற்றிலும் வேறுபட்டவையாதலால், கீர்த்தனங்களை நேராகத் தமிழில் மொழி பெயர்த்தால் தமிழ் மொழியின் மரபிற்கு இழுக்கு ஏற்படும். ஆகவே, கீர்த்தனைகளின் மொழிபெயர்ப்பைக் கூடியவரையில் தமிழ் மரபிற்கு ஒட்டியவாறே அமைத்திருக்கிறேன். தியாகராஜ ஸ்வாமி ஆழ்வார்கள், நாயன்மார்கள் பரம்பரையைச் சேர்ந்த ஒரு பக்தராதலால் பரமனைத் துதிக்க அவர் உபயோகித்திருக்கும் சொற்றொடர்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் நூற்றுக் கணக்கில் திவ்விய பிரபந்தம், தேவாரம் முதலியவற்றில் காணப்பெறுகின்றன. ஆயினும் வேதாந்தம், உபநிடதம், கீதை, சங்கீத சாத்திரம் முதலியன சம்பந்தமான கீர்த்தனை

களின் பொழிப்புரையில் சம்ஸ்கிருதப் பதங்களைச் சிறிது அதிகமாகவே வழங்க நேரிட்டது.

(5) ஸ்வாமியின் கீர்த்தனைகளைப் பெரும்பாலும் தமிழர்களான அவருடைய சிஷ்ய பரம்பரைகள் ஒரு நூற்றாண்டிற்கு மேலாகப் பாடி வந்திருக்கின்றனர். அவர்கள் பலருக்குத் தெலுங்கிலோ சம்ஸ்கிருதத்திலோ போதிய ஞானம் இல்லாமல் இருந்திருக்கலாம். ஆயினும் பரம பக்தியுடன் வேதத்தை அத்தியயனம் செய்வதுபோல் கீர்த்தனைகளைப் பாடிப் பாதுகாத்து நமக்கு அளித்திருக்கும் பெருமை அவர்களையே சார்ந்ததாகும். ஆனாலும் குரு-சிஷ்ய பரம்பரை மூலம் கற்பிக்கப் பெற்று வந்த இக்கீர்த்தனைகளில் பல பிழைகளும் பாட பேதங்களும் காலப் போக்கில் நுழைந்துவிட்டன. என்னிடமிருக்கும் சில பழைய தெலுங்குப் பிரதிகளின் உதவியாலும், ஒரு கைப் பிரதியின் உதவியைக் கொண்டும் பாட பேதங்களை ஒப்பு நோக்கி முடிந்தவரையில் திருத்தியிருக்கிறேன்.

(6) சில கீர்த்தனைகளில் காணப்பெறும் ஒரு சில சொற்றொடர்களுக்கு எவ்விதத்திலும் பொருள் அமையவில்லை. தியாகராஜ கீர்த்தனைகளுக்குத் தெலுங்கில் உரையெழுதி யிருக்கும் இரு பண்டிதர்களும் தங்கள் புத்தகங்களில் இவ்வாறே கூறியிருக்கின்றனர். இவ்விடங்களை இந்நூலில் ஆங்காங்கு குறித்திருக்கிறேன்.

(7) பாட பேதங்களுள் முக்கியமானவை மாத்திரமே இந்நூலில் குறிப்பிடப்பெற்றுள்ளன. ''ஸமயமு தெலிஸி'' (அஸாவேரி), ''கநுகொண்டிநி'' (பிலஹரி) முதலிய கீர்த்தனைகளின் பாட பேதங்களைக் கவனித்தால் பாடங்களை அடியோடு மாற்றும் வழக்கம் சில சிஷ்ய பரம்பரைகளில் இருந்து வந்ததாகத் தெரிகிறது. ''கநுகொண்டிநி'' கீர்த்தனையின் அனுபல்லவி, சரணங்களுக்கு முற்றிலும் வேறுபாடுள்ள இரு பாடாந்தரங்கள் உள்ளன. ஆகவே தற்காலத்துக் கச்சேரிகளில் பாடப் பெற்று வரும் பாடங்களை ஒட்டியே பாடாந்தரங்களைப் பொறுக்கியிருக்கிறேன்.

(8) மொத்தம் 675 உருப்படிகள் அடங்கிய இத்தொகுதியில் உள்ள கீர்த்தனைகள் வாசகர்களின் சவுகரியத்திற்காக ஆறு பாகங்களாகவும் ஓர் அனுபந்தமாகவும் பிரிக்கப்பெற்று பின் கண்ட அடைவில் அச்சிடப்பட்டுள்ளன.

(அ) பெரும்பாலும் விஷ்ணு பரமான கிருதிகளும், இலக்ஷ்மணன், சீதை, அனுமன் முதலியவர்களைக் குறித்த கிருதிகளும், சங்கீத சம்பந்தமான கிருதிகளும் முதற்பாகத்திலும்,

(ஆ) சிவபரமான கிருதிகளும், அம்பிகை, சுப்பிரமணியர் முதலியோரைக் குறித்த கிருதிகளும் இரண்டாம் பாகத்திலும்,

(இ) திவ்விய நாம சங்கீர்த்தனைகள் மூன்றாம் பாகத்திலும்,

(ஈ) உத்ஸவ சம்பிரதாய கீர்த்தனைகள் நான்காவது பாகத்திலும்,

(உ) பிரஹ்லாத பக்தி விஜய நாடக கீர்த்தனைகள் ஐந்தாவது பாகத்திலும்,

(ஊ) நௌகா சரித்திர கீர்த்தனைகள் ஆறுவது பாகத்திலும்,

(எ) தியாகராஜ முத்திரையுடன் வழங்கிவரும் இதர கீர்த்தனைகள் அனுபந்தத்திலுமாக அச்சிடப் பெற்றுள்ளன.

(9) ''பிரஹ்லாத பக்தி விஜயம்'', ''நௌகா சரித்திரம்'' ஆகிய இரு இசை நாடகங்களில் தியாகராஜ ஸ்வாமிகளால் அமைக்கப் பெற்றுள்ள பத்யங்கள், தருக்கள், தண்டகம் முதலியவை இப்பதிப்பில் சேர்க்கப்படவில்லை, கீர்த்தனைகள் மாத்திரமே சேர்க்கப்பெற்றுள்ளன. இந்நாடகங்களின் முழுப் பதிப்புக்கள் ஏற்கனவேயே வெளியிடப்பெற்றிருப்பதே இதற்குக் காரணம்.

(10) தெலுங்கு, சம்ஸ்கிருதம் ஆகிய மொழிகளிலுள்ள அட்சரங்கள் அனைத்தையும் தமிழ் லிபியில் எழுதுவதற்கு வசதியில்லை. ஆகவே, சிற்சில உச்சரிப்புள்ள தமிழ் எழுத்துக்களுக்குக் குறிகள் இடப்பெற்றுள்ளன. இவ்வடையாளங்கள் அடங்கிய ஓர் அட்டவணை தனியாகச் சேர்க்கப்பெற்றுள்ளது.

(11) தியாகராஜ ஸ்வாமி பல க்ஷேத்திரங்களுக்கு விஜயம் செய்தபொழுது அங்கு கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் தெய்வங்களைக் குறித்து அவர் இயற்றியருளிய கீர்த்தனைகள் எவையென்று ஆங்காங்கு குறிப்பிடப் பெற்றிருப்பதுடன் அவருடைய சரித்திர சுருக்கத்திலும் இவற்றைப் பற்றிய முழு விவரங்கள் தரப்பட்டுள்ளன.

(12) கீர்த்தனைகளின் இராக, தாளங்களுக்கு இப்பதிப்பில் முக்கியத்துவம் இல்லையெனினும், ஒவ்வொரு பகுதியிலும் கீர்த்தனைகள் மேளகர்த்தா வரிசையில் அச்சிடப்பெற்றுள்ளன.

(13) திருத்தக்க காகர்ல வமிசத் தோன்றல்
தீதில்லா ராம நற் பிரமச் செம்மல்
பெருமைசேர் புகழ்த்தியாக ராசப்பெம்மான்
பேரிசையில் உபநிடத மறைகள் சாரம்
பொருளாய புராணமொடு கீதை சேரப்
புகரில்லா ராமகதை யாவுங் கூட்டித்
திருவுளமோ டுலகுய்ய ஊழிக்காலம்
திவ்வியநற் பாமாலை தந்தான் மாதோ

(14) இன்னிசையாளர் இதங்களி கூர
இம்மொழி பெயர்ப்பினை இனிதே நல்கத்
தன்னிறை வில்லாச் சிற்றறி வுடையேன்
தகவில் பார்த்தசாரதிப் பேரேன்
மன்புகழ்க் கோசலை மைந்தன் காப்ப
மாமறை யாளன் மாண்மிகு வள்ளல்
தன்னேர் தியாகப் பெருமான் வாழ்த்தத்
தார்ணி குறைதீர்ந் தேற்பது கடனே.

ஜூலை 1967

---

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

1967ம் ஆண்டு நாடெங்கும் விமரிசையாகக் கொண்டாடப் பெற்ற ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளின் இருநூறுவது ஜயந்தி விழாவை ஒட்டி அவருடைய கீர்த்தனைகளின் சுத்தமான பதிப்பு ஒன்றை வெளியிட வேண்டுமென்று ஸ்வாமிகளிடம் அளவற்ற பக்தி பூண்டவரும், ஸ்ரீ ஸத்குரு ஸங்கீத ஸமாஜத்தின் உப தலைவருமான டாக்டர் ஆர். கிருஷ்ணஸ்வாமி அவர்கள் பெரிதும் விரும்பினார். இதற்காக அவர் மேற்கொண்ட பெருமுயற்சியின் பயனாகவே இந்நூல் அச்சிடப்பெற்று ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆராதனை தினத்தன்று அவரது சமாதியில் சமர்ப்பிக்கப் பெற்றது. இவ்விரண்டாம் பதிப்பும் அவருடைய நன்முயற்சியினாலேயே வெளியிடப்பெறுகிறது.

இந்த நூலின் முதற்பதிப்பு 1967-ம் ஆண்டு நவம்பர் மாதம் வெளியிடப்பெற்றது. அச்சமயம் அச்சிடப்பெற்ற 2,000 பிரதிகளும் முதல் மூன்று வருடங்களுக்குள்ளேயே செலவாகிவிட்டன. இரண்டாவது பதிப்பு வெளியிடப்பெறும் இத் தருணத்தில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளையும், அவருடைய உபாசனாமூர்த்தியாகிய ஸ்ரீ இராமபிரானையும் மனமார எண்ணி இறைஞ்சுகிறோம்.

முதற் பதிப்பிற்கு உதவியதுபோலவே இவ்விரண்டாம் பதிப்புக்கும் கல்கி ஸ்ரீ ஸதாசிவம் அவர்கள் மகத்தான உதவி புரிந்தார். இதை ஒரு கைங்கரியமாகக் கருதி நூலை அச்சிட்டுத் தரவேண்டும் என்று அவர் கூறியதை ஏற்று ''கலைமகள்'' அதிபர் ஸ்ரீ என். ராமரத்னம் அவர்கள் தமது M. L. J. அச்சகத்தில் புத்தகத்தை அச்சிட்டுத் தந்திராவிடில் இப்பதிப்பு வெளிவந்திராது. இவ்விரு அன்பர்களுக்கும் ஸ்ரீ ஸத்குரு ஸங்கீத சமாஜத்தாரின் ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முதற் பதிப்பில் சிற்சிலவிடங்களில் கீர்த்தனைகளின் தமிழ் மொழிபெயர்ப்பு சுருக்கமாக இருந்ததாகச் சில அன்பர்கள் கருதினர். இப்பதிப்பில் ஆங்காங்கே பொழிப்புரை சற்று விரிவாக எழுதப்பட்டுள்ளது. இதோடு சுமார் 800 வார்த்தைகள் அடங்கிய தெலுங்கு - தமிழ் அரும்பத அகராதி ஒன்றும் இப்பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளது.

சென்னை,
நவம்பர், 1973.

டி. எஸ். பார்த்தஸாரதி
(மொழிபெயர்ப்பாசிரியன்)

## ஸ்ரீ தியாகராஜஸ்வாமியின் சரித்திரச் சுருக்கம்

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமியின் திவ்விய சரித்திரத்தை விவரிக்கும் நூல்கள் பல ஏற்கெனவே வெளிவந்துள்ளன. ஆயினும், அவரைப் பற்றி வழங்கிவரும் வரலாறுகள் எவ்வளவு தூரம் ஆதார பூர்வகமானவை யென்று நிச்சயிப்பது கடினம். கி. பி. 1904ல் பிரசுரிக்கப்பெற்ற ஒப்புயர்வற்ற இசை நூலாகிய ''ஸங்கீத ஸம்பிரதாய பிரதர்சிநி''யில் நூலாசிரியரான ஸ்ரீ சுப்பராம தீட்சிதர் தியாகராஜரைப் பற்றிய தகவல்கள் தமக்குக் கிடைக்கவில்லையென்றும், புதுக்கோட்டை மகாராஜா கல்லூரியின் தலைவராகவிருந்த ஸ்ரீ எஸ். இராதாகிருஷ்ணய்யரிடமிருந்து கிடைத்த சரித்திரத்தைத் தம்முடைய நூலில் சேர்த்ததாகவும் கூறியிருக்கிறார். இதிலிருந்து, தியாகராஜ ஸ்வாமி சமாதியடைந்த பின்னர் சுமார் 60 வருடங்கள் வரையில் அவருடைய சரித்திரம் ஸ்ரீ சுப்பராம தீட்சிதரைப் போன்ற ஒரு பெரிய சங்கீத வித்வானுக்குக்கூடக் கிடைக்கவில்லையென்று தோன்றுகிறது. ஆயினும் கி. பி. 1908ல் திருநெய்த்தானம் நரஸிம்ஹ பாகவதரால் பிரசுரிக்கப்பெற்ற தியாகராஜ கீர்த்தனைகளின் பதிப்பில் ஸ்வாமியினுடைய சரித்திரம் அச்சிடப்பெற்றுள்ளது.

பின்னர், கர்ண பரம்பரையாக வந்தவையென்ற பெயரால் தியாகராஜ ஸ்வாமியைக் குறித்த வரலாறுகள் ஏராளமாக வழங்கி வருகின்றன. அவற்றை ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கம் அல்ல. தியாகராஜ ஸ்வாமியின் நேர் சிஷ்யரான வாலாஜாபேட்டை வேங்கடரமண பாகவதரும், அவருடைய குமாரரான கிருஷ்ணஸ்வாமி பாகவதரும் தனித்தனியாக ஸ்வாமியினுடைய சரித்திரத்தை எழுதியுள்ளனர். இவற்றுள் வேங்கடரமண பாகவதர் எழுதிய சரித்திரம் ஓலைச்சுவடி வடிவத்திலும், அவருடைய குமாரர் எழுதிய வரலாறு ஒரு நோட்டுப் புத்தக வடிவத்திலும் இருந்து வருகின்றன. ஸ்வாமிகளுடைய சரித்திரம் அடங்கிய சுவடிகளுள் இவை இரண்டுமே மிகப் பழையவையென்று தோன்றுகிறது. ஆகவே இச்சுவடிகளில் காணப்பெறும் சரித்திரம் கீழே தரப்பட்டுள்ளது.

### ஸ்ரீ வேங்கடரமண பாகவதரின் ஓலைச்சுவடி

தியாகராஜ ஸ்வாமி காகர்ல வமிசத்தில் முலகநாடு (முரிகிநாடு) திரிலிங்க வைதீகி குலத்தில் அவதரித்தவர். அவரது வமிசாவளி பின்வருமாறு:—




ஸ்வாமியின் பிதாவாகிய இராம பிரம்மம் இராமாயண பிரசங்கங்கள் புரிவதில் நிபுணராயிருந்து தஞ்சாவூர் மன்னன் துளஜாஜியிடமிருந்து அனேக மானியங்களைப் பெற்றவர். மருதாநல்லூர் மடத்தின் தலைவரிடம் இராம தாரக மந்திரோபதேசம் பெற்றவர். இராம பிரம்மத்தின் மூத்த குமாரர்களாகிய பஞ்சநத பிரம்மமும், பஞ்சாபகேச பிரம்மமும் குணமற்றவர்களாக இருந்தமையால், அண்டை வீட்டுக்காரர்களிடமிருந்து அவர்களைப் பற்றிய புகார்களை அடிக்கடி அவர் கேட்க நேரிட்டது. தியாகராஜ பிரம்மம் திருவாரூரில் பிறந்தார். பொட்டி ஜோஸ்யர் என்ற சோதிடர் அவருடைய ஜாதகத்தைக் கணித்து ஸ்புடம் எழுதினார். (தியாகராஜருடைய ஜாதகத்தை அவரது பெற்றோர்கள் வாழ்ந்திருந்த பொழுதே தஞ்சாவூர் ராமராவ் என்ற சிஷ்யர் அவர்களைக் கேட்டு எழுதி வைத்திருந்தார் என்று ஒரு குறிப்பு இங்கு காணப்படுகிறது). ஜாதகத்தில் காணப்பெறும் ஜனன காலத்திற்குச் சரியான இங்கிலீஷ் தேதி 4—5—1767.

தமது மூன்று குமாரர்களுடன் காசி யாத்திரை செய்ய நினைத்துப் புறப்பட்ட இராம பிரம்மம், திருவாரூர் தியாகராஜப் பெருமான் கனவில் இட்ட கட்டளைப்படி திருவையாறு சென்று அங்கு வசிக்கலாயினர். இதை அவர் துளஜாஜி மன்னனுக்கு அறிவிக்கவும், அரசன் அவருக்குத் திருவையாறு திருமஞ்ஜன வீதியில் ஒரு வீட்டையும் ஒரு வேலி நிலத்தையும் அளித்தார். திருவையாற்றில் நடத்தப்பெற்றுவரும் ராஜா ஸம்ஸ்கிருதக் கல்லூரியில் தியாகராஜர் கல்வி கற்றனர். தந்தையாகிய இராம பிரம்மம் அவருக்கு இராமதாரக மந்திரத்தை உபதேசம் செய்தனர். சிறுபிள்ளையாகிய தியாகராஜர் மற்றப்பிள்ளைகளுடன் தெருவில் விளையாடும்பொழுதே இராமபிரானைப் பற்றிக்

கனவு காண்பவராயினர். இச்சமயம் இராம கிருஷ்ணுநந்தர் என்ற சன்னியாசி தியாகராஜரைச் சந்தித்து அவருக்கு இராம ஷடக்ஷரி மந்திரத்தை உபதேசம் செய்தருளினர். தந்தை பகவானுக்கு ஆராதனம் செய்யும் சமயங்களில் அவருக்கு உதவி செய்துவந்த தியாகராஜர் ஒருநாள் அச்சமயத்தில் தேசியதோடி இராகத்தில் ''நமோ நமோ ராகவாய அநிசம்'' என்ற தமது முதல் கீர்த்தனையைக் கவனம் செய்தார். பின்னர், அவர் ஸொண்டி வேங்கடரமணய்யா என்ற சங்கீத வித்வானிடம் குருகுலவாசம் செய்யுமாறு அனுப்பப்பட்டார்.

தியாகராஜருடைய மாதாமகராகிய வீணை காளஹஸ்தி அய்யா காலமாகிவிடவும், தியாகராஜர் தமது பாட்டனர் வீட்டிலிருந்த ''நாரதீயம்'' முதல்ய நூல்களின் ஓலைச்சுவடிகளைக் கொண்டுவந்து படிக்கத் தொடங்கினுர். அவற்றில் பல பகுதிகள் அவருக்கு விளங்காமற் போகவே, தற்செயலாகத் திரும்பவும் சந்தித்த இராமகிருஷ்ணுநந்தரின் உபதேசப்படி நாரத மந்திரத்தை ஜபம் செய்யலாயினர். இதன் விளைவாக அவருக்கு நாரத முனிவரின் தரிசனம் கிடைத்து ''ஸ்வரார்ண வம்'' என்னும் இசை நூலும் கிடைக்கப்பெற்றனர். தியாக ராஜரும் ''ஶ்ரீ நாரத'', ''வர நாரத'' முதலிய கீர்த்தனைகளைப் பாடி அம்மகரிஷிக்குத் தமது நன்றியைத் தெரிவித்துக்கொண் டார்.

அந்நூலைப் பயின்றுவந்ததுடன் தியாகராஜர் இராமநாம ஜபத்தையும் இடைவிடாமல் செய்துவந்தனர். ஒரு கோடி நாமங்கள் முடிந்த சமயம் இராமபிரான் அவர் முன் தோன்றி ஒரு கணத்தில் மறைந்து போயினர். பரவசமடைந்த தியாக ராஜர் அடாணு இராகத்தில் ''ஏல நீ தய ராது?'' என்ற கிருதியைப் பாடினர். இரண்டு கோடி நாமங்கள் முடிந்த பிறகு அவர் ''கநுகொண்டிநி'', ''நாத ஸுதா ரஸம்பிலநு'', 'உபசாரமு சேஸேவாரு'', ''தொரகுநா இடுவண்டி ஸேவ'' முதலிய கிருதிகளை இயற்றினர்.

தியாகராஜரின் புகழ் நாடெங்கும் பரவலாயிற்று. அவ ருடைய குருவான ஸொண்டி வேங்கடரமணய்யா அவரை அழைப்பித்துப் புதிதாக தியாகராஜர் இயற்றியுள்ள கீர்த்தனை களைப் பாடுமாறு கேட்டுக்கொண்டார். முக்கியரான சில வித்வான்களின் முன்னிலையில் தியாகராஜர் முதலில் ''ஜாநகீ ரமண'' என்ற கிருதியைப் பாடிப் பின்னர் ''தொரகுநா இடு வண்டி ஸேவ'' என்ற கிருதியைப் பாடினர். இக்கீர்த்தனையின் கடைசிச் சரணத்தில் வரும் ''காமித பலதாயகியௌ'' என்ற இடத்தில் மிகவும் விரிவாக நிரவல் செய்தார். இதைக் கேட்டு அளவற்ற ஆனந்தமடைந்த வேங்கடரமணய்யா தமது தோடா வையும் மகர கண்டியையும் தியாகராஜருக்கு அணிவித்து ''தொரகுநா இடுவண்டி சிஷ்யுடு?'' (இப்படிப்பட்ட ஒரு சிஷ்யன் கிடைப்பானு?) என்று போற்றிப் புகழ்ந்தனர். பின்னர் வேங்கடரமணய்யாவின் மகளின் கலியாணத்தின்பொழுது தியாகராஜர் குரு அளித்த நகைகளை அவரிடமே திரும்பக் கொடுத்துவிட்டார்.

தியாகராஜரின் மூத்த சகோதரராகிய பஞ்சநத பிரம்மம் மணம் செய்துகொண்டு இல்வாழ்க்கை நடத்தலாயினர். ஆயினும், இரண்டாம் சகோதரராகிய பஞ்சாபகேச பிரம்மம் நோய் வாய்ப்பட்டு வருந்தினர். தியாகராஜர் ''அந்யாயமு ஸேயகுரா'' என்ற கிருதியைப் பாடித் தமையனின் நோயைத் தீர்க்குமாறு இராமபிரானை வேண்டினர். ஆயினும் பஞ்சாபகேச பிரம்மம் அதிக நாள் உயிர்வாழவில்லை.

தியாகராஜருக்கு 18 வயது நிரம்பியபொழுது பார்வதி என்ற பெண்ணை மணம் செய்துகொண்டார். அவருடைய இருபதாவது வயதில் தந்தையாகிய இராமபிரம்மம் பரகதியடைந்தனர். இருபத்து மூன்ருவது வயதில் மனைவியாகிய பார்வதியும் காலமாயினர். பின்னர் தியாகராஜர் பார்வதியின் தங்கையாகிய கமலாம்பாளை இரண்டாம் தாரமாக மணந்து கொண்டார்.

(வாலாஜாபேட்டை வேங்கடரமண பாகவதர் எழுதிய இந்த ஓலைச்சுவடி இவ்விடத்தில் திடீரென்று முற்றுப்பெறுகிறது).

## கிருஷ்ணஸ்வாமி பாகவதரின் நோட்டுப் புத்தகம்

இதில் தியாகராஜரின் சரித்திரம் முழுதும் காணப்பெறுகிறதெனினும் ஓலைச் சுவடிக்கும் இதற்கும் சில வேறுபாடுகள் உள்ளன.

இதில் இராம பிரம்மத்தின் தந்தையின் பெயர் ஸுப்ரமண்ய ஸ்வாமி யென்றும், தியாகராஜரின் சகோதரர்களின் பெயர்கள் பஞ்சநதய்யா, பஞ்சாபகேசய்யா என்றும் குறிப்பிடப் பெற்றுள்ளன. இராமபிரம்மமும் அவரது மனைவியாரும் தங்களுடைய இரு குமாரர்களின் துர்நடத்தையைப்பற்றிக் கவலைப்பட்டுக்கொண் டிருக்கையில், திருவாரூர் தியாகராஜப் பெருமான் அவர்கள் கனவில் தோன்றி நாரத மகரிஷியின் அம்சமாக அவர்களுக்கு மற்ருெரு புதல்வன் தோன்றுவான் என்று கூறி மறைந்தார். மூன்ருவது குமாரன் பிறந்ததும் பெற்ருேர் கனவில் ஈசுவரன் கட்டளையிட்டபடி அவனுக்குத் தியாகபிரம்மம் என்று பெயர் சூட்டினர்.

சிறு வயது முதலே தியாக பிரம்மம் மிகவும் தாராள குணம் படைத்தவராக இருந்ததுடன் இசை மேதையாக விளங்கினர். முதலில் நோய்வாய்ப்பட்டு மெலிந்தபோதிலும் பின்னர் திடகாத்திரம் படைத்தவராயினர். காசி யாத்திரை செய்யப் புறப்பட்ட இராம பிரம்மம் கடவுள் சித்தப்படி திருவையாறு சென்று குடியேறி திருமஞ்சன வீதியில் தஞ்சை மன்னன் அளித்த வீட்டில் வசிக்கலாயினர். தியாகராஜருக்கு எட்டு வயது நிரம்பியதும் இராம பிரம்மம் அவருக்கு உபநயனம் செய்வித்து இராம தாரக மந்திரத்தை உபதேசம் செய்தார். தாம் ஆராதனை செய்யும் சமயங்களில் தியாகராஜர் உடனிருந்து இயற்றிய கீர்த்தனைகளை இராம பிரம்மமே எழுதி வைக்கலாயினர். அவற்றைத் திருவையாற்றின் பண்டிதர்கள் முன்னிலையில் தியாகராஜரைக் கொண்டு பாடுவித்தனர்.

ஸொண்டி வேங்கடரமணய்யாவிடம் தியாகராஜர் இசை பயின்றது சில மாதங்களே. ஸொண்டி வேங்கடரமணய்யாவும் அவருடைய தந்தையாகிய ஸுப்பய்யாவும் ஆஸ்தான வித்வான்களாக இருந்தனர். அவர்கள் இருவரிடமும் தியாகராஜர் இசை பயின்ற போதிலும் சங்கீத ரகசியங்களை அறிந்து கொள்ளப் போதிய அவகாசம் கிடைக்கவில்லை. மாதாமகராகிய வீணை காளஹஸ்தி அய்யா பரகதி அடைந்த பிறகு அவர் எழுதி வைத்திருந்த பல இசை நூல்களைத் தியாகராஜர் கொண்டுவந்து அவற்றில் பயிற்சியடைந்தார். தியாகராஜரின் அன்னையாரின் பாட்டனாரான *கிரிராஜ கவியென்பவர் திரிசிரபுரம் மாத்ருபூதேசுவரின் பரம பக்தராக விளங்கியவர். தியாகராஜர் நாரத உபாசனை செய்ததுடன் கிரிராஜகவி சேகரித்து வைத்திருந்த ஸங்கீத ரத்நாகரம், நாரதீயம் முதலிய நூல்களைப் பயின்று, 22 சுருதிகள், பிரகிருதி விக்ருதி ஸ்வரங்கள், 21 மூர்ச்சனைகள், 72 மேள கர்த்தாக்கள், தசவித கமகங்கள் ஜன்ய ராகங்கள் இவற்றின் மர்மங்களைத் தம்முடைய முயற்சியினாலேயே அறிந்துகொண்டார். பரத மகரிஷியின் ''நாட்ய சாஸ்திரத்''தையும் பயின்றார். பழைய இராகங்களிலும் தாமே அமைத்திருந்த புதிய இராகங்களிலும் செவிக்கினிய கீர்த்தனைகளை இயற்றி சிஷ்யர்களுக்கு போதித்தார்.

இவ்வித அரிய சங்கீத ஞானத்தைப் படைத்திருந்தும் பண விஷயத்தில் சிறிதும் பற்றில்லாமல் தியாகராஜர் இருந்து வந்தது அவருடைய தமையனாகிய பஞ்சநத பிரம்மத்திற்குச் சிறிதும் பிடிக்கவில்லை. தமது இருபத்தைந்தாவது வயதில் தியாகராஜர் ஒருமுறை தஞ்சையில் சங்கீத வித்வான்கள் முன்னிலையில் கச்சேரி செய்து இரவு வெகுநேரம் வரையில் பாடினர். அவர்கள் மெய்ம்மறந்து போய், அரண்மனையில் அன்று நடக்கவிருந்த ஓர் அலுவலை அடியுடன் மறந்துபோயினர். வித்வான்கள் அனைவரின் முன்னிலையில் ஸொண்டி வேங்கடஸுப்பய்யா தியாகராஜருக்குச் சரியாசனம் அளித்து, அவருடைய குருவென்று கூறிக் கொள்வதற்கு தமக்கு யோக்கியதை இல்லையென்றும், ஒரு நந்தவனத்திற்குச் சமானமான அவரது ஞானத்திற்குமுன் தமது ஞானம் ஓர் இலையை ஒக்கும் என்று கூறிப் புகழ்ந்தார். இதைக் கேள்வியுற்ற தஞ்சை மன்னன் தியாகராஜரை அரண்மனைக்கு வந்து பாடுமாறு எவ்வளவோ சொல்லி அனுப்பிய போதிலும் அவர் மறுத்துவிட்டார். தமையனாரான பஞ்சநத பிரம்மமும் அவரை மிகவும் கேட்டுக்கொண்டும் தியாகராஜரின் மனம் மாறவில்லை.

தியாகராஜரின் பெற்றோர்கள் ஒவ்வொருவராகக் காலமாயினர். எஞ்சியிருந்த குடும்பச் சொத்துக்களைத் தமது தமையன்மாருக்கே விட்டு விட்டுத் தியாகராஜர் வேறு வீட்டில் வசிக்கலாயினர். சரபோஜி மகாராஜரின் மாப்பிள்ளையாகிய மோதிராவும், தஞ்சை சம்ஸ்தான மந்திரிகளும் அங்கு வந்து

---

*சில சரித்திரங்களில் இந்த கிரிராஜ கவிக்கும், இராம பிரம்மத்தின் தந்தையாகிய கிரிராஜ பிரம்மத்திற்கும் குழப்பம் காணப்பெறுகிறது.

தியாகராஜருடைய பஜனைகளைக் கேட்டு ஆனந்திப்பது வழக்கம்.

சென்னை நகரில் வசித்து வந்த தனிகரும் பக்திமானுமான கோவூர் சுந்தர முதலியார் என்ற கனவான் தியாகராஜரைத் தமது கிராமத்திற்கு வரவழைக்க வேண்டுமென்று விரும்பி, காஞ்சிபுரம் உபநிஷத் பிரம்மம் என்ற பெரியவரைத் தியாகராஜருக்குக் கடிதம் எழுதுமாறு வேண்டிக் கொண்டார். தமது தந்தையாகிய இராம பிரம்மத்தின் ஆப்தரும், நூறு பிராயத்திற்கு மேல் வயதானவருமான உபநிஷத் பிரம்மத்தின் கட்டளையை சிரஸா வகித்து தியாகராஜர் காஞ்சியில் அவருடைய மடத்திற்குச் சென்று பக்தி கானத்தை மழையெனப் பொழிந்தார். வழியில் ஸ்ரீரங்கம் முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துக் கொண்டு ஆங்காங்கு கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் தெய்வங்களின் பேரில் கீர்த்தனைகள் பாடிக்கொண்டே கோவூருக்கு விஜயம் செய்தார். அங்கு சுந்தர முதலியார் இல்லத்தில் தங்கியிருந்து அவ்வூரில் விளங்கும் சுந்தரேசுவரரைக் குறித்து ஐந்து கிருதிகள் இயற்றினர். தியாகராஜர் ''நௌகா சரித்திரம்'' பிரஹ்லாத பக்தி விஜயம்'' ஆகிய இசை நாடகங்களையும் இயற்றி நாத பிரம்மத்திற்கு அர்ப்பணம் செய்தார்.

தியாகராஜர் தமது ஒரே குழந்தையாகிய சீதா மகாலக்ஷ்மம்மா என்ற பெண்ணை சுப்பராமய்யா என்பவருக்கு மணம் செய்வித்தார்.

பராபவ ஆண்டு (கி: பி: 1847) புஷ்ய பஹுள பஞ்சமி செவ்வாய்க்கிழமையன்று சௌளம் முதலிய சடங்குகளைச் செய்து கொண்டு காவேரியில் நீராடிய பின்னர், பரமஹம்ஸ பரிவ்ராஜக ஸ்ரீ பிரம்மானந்த ஸ்வாமிகளை விசேஷ மரியாதைகளுடன் வரவழைத்து, அவரிடம் ஆபத் சந்நியாசம் பெற்றுக் கொண்டு, பிராம்மண ஸந்தர்ப்பணை முதலியவற்றையும் நடத்தினர். மறுநாள் காலை பதினொன்று நாழிகைக்கு சிஷ்யர்கள் கோஷமாக ராம பஜனை செய்ய, பூதவுடலை நீத்து பிரம்மைக்கியமடைந்தார். காவேரிக் கரையில் சந்நியாசிகளின் சமாதிகளுக்கருகே தியாகராஜ ஸ்வாமிக்கு பிருந்தாவனம் (சமாதி) அமைக்கப் பெற்றது. (சௌராஷ்ட்ர சபையின் வசமிருக்கும் இந்த தியாக பிரம்ம சரித்திரச் சுவடி வாலாஜா நகர் குப்பய்ய கிருஷ்ணஸ்வாமி பாகவதர் எழுதியது.)

## தியாகராஜஸ்வாமி இயற்றிய க்ஷேத்திர கிருதிகள்

பரம பாகவத சிகாமணியாகிய தியாக பிரம்மம் ''ராம த்யானமே வரமைந கங்கா ஸ்நாநமு'' என்ற கொள்கையையுடையவராதலின், வெகு தூரம் யாத்திரை செய்து வட இந்தியாவிலுள்ள க்ஷேத்திரங்களைத் தரிசித்திருப்பதாகத் தெரியவில்லை. ஆயினும் சிற்சில காரியங்களை முன்னிட்டு அவர் ஸ்ரீரங்கம், லால்குடி, திருப்பதி, கோவூர், திருவொற்றியூர், நாகப்பட்டிணம் முதலிய ஊர்களுக்குச் சென்றபொழுது, சகல தெய்வங்களிடத்திலும் சம பக்தியுள்ள பெருமானுதலால், தாம்

தரிசித்த எல்லா மூர்த்திகளையும் குறித்து ஒரே பக்தி பரவசத்துடனும் கற்பனு சௌந்தரியத்துடனும் கிருதிகள் இயற்றியுள்ளார். இவற்றைப் பற்றிய சுருக்கமான குறிப்புக்கள் கீழே தரப்பட்டுள்ளன.

## 1. திருவையாறு

ஸ்வாமி தமது பால்ய வயது முதல் சமாதியடையும் வரையில் திருவையாற்றில் வசித்துவந்தவராதலின் அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் பஞ்சநதீசுவரரையும் தர்மஸம்வர்த்தநி அம்மனையும் குறித்துப் பல கீர்த்தனைகளை இயற்றியிருப்பது இயற்கையேயாகும். அதிலும் விசேஷமாக தர்மஸம்வர்த்தநியின் சேவையில் அவர் மிகவும் ஈடுபட்டு, அறம் வளர்த்த நாயகியின் சந்நிதி சேவையை மதுரமான கவிதையால் வருணித்து ''இக் காட்சி தேவருக்கும் கிடைக்குமா?'' என்று உவப்படைந்துள்ளார். திருவையாற்றைக் குறித்த 11 கீர்த்தனைகள் பின்வருமாறு:

### பஞ்சநதீசர் கிருதிகள்

1. இலலோ ப்ரணதார்த்திஹருடு —அடாண
2. எவருந்நாரு ப்ரோவ —மாளவஸ்ரீ
3. ஏஹி த்ரிஜகதீச —ஸாரங்க
4. முச்சட ப்ரஹ்மாதுலகு —மத்யமாவதி

### தர்மஸம்வர்த்தநி கிருதிகள்

1. கருணஜூடவம்ம —தோடி
2. பராசக்தி மநுபராத —ஸாவேரி
3. நீவுப்ரோவவலெ — ஷ
4. பாலே பாலேந்து —ரீதிகௌள
5. அம்ம தர்மஸம்வர்த்தநி —அடாண
6. விதி சக்ராதுலகு —யமுநா கல்யாணி
7. சிவே பாஹிமாம் —கல்யாணி

## 2. காஞ்சிபுரம்

தமது தந்தையரான இராம பிரம்மத்தின் சிநேகிதரும், மடாதிபதியான உபநிஷத் பிரம்மம் என்ற பெரியவரின் விருப்பத்திற்கிணங்கி தியாகராஜ ஸ்வாமி காஞ்சிபுரம் சென்றது

ஏற்கெனவேயே குறிப்பிடப்பட்டது. அங்கு வரதராஜப் பெருமாளின் உற்சவ காலமாயிருந்ததால் ஸ்வாமி சில காலம் அங்கிருந்து, கருடசேவையையும் கண்டானந்தித்துப் பின்வரும் கிருதிகளை இயற்றியருளினர். காமாக்ஷியம்மனைத் தரிசித்து அவ்வம்மனின் மீதும் ஒரு கீர்த்தனை பாடினர்.

1. வரதா நவநீதாசா —ராகபஞ்ஜரம்
2. வரதராஜ நிந்நுகோரி —ஸ்வரபூஷணி
3. விநாயகுநி வலெநு —மத்யமாவதி

## 3. திருவொற்றியூர்

தம்முடைய முக்கிய சிஷ்யர்களுள் ஒருவரான வீணை குப்பய்யரின் பிரார்த்தனைக்கிணங்கி தியாகராஜஸ்வாமி ஆதிபுரமென்னும் திருவொற்றியூருக்கு விஜயம் செய்து அங்கு விளங்கும் திரிபுரசுந்தரி அம்மனைத் துதித்து ஐந்து கிருதிகளைப் பாடினர்.

1. கந்நதல்லி —ஸாவேரி
2. ஸுந்தரி நிந்நு — ஆரபி
3. ஸுந்தரி நந்நிந்தரிலோ —பேகட
4. ஸுந்தரி நீ திவ்ய — கல்யாணி
5. தரிநி தெலுஸுகொண்டி — சுத்தஸாவேரி

## 4. கோவூர்

தம்மிடம் பக்தி பூண்டொழுகிய கோவூர் சுந்தர முதலியாரென்ற பிரபுவின் க்ராமத்திற்கு ஸ்வாமி விஜயம் செய்த வரலாறு ஏற்கெனவேயே குறிப்பிடப்பட்டது. அச்சமயம் அவர் அவ்வூரில் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் சுந்தரேசுவரரைக் குறித்து இயற்றிய ஐந்து கிருதிகளாவன:—

1. ஈவஸுத — சஹாந
2. கோரி ஸேவிம்ப — கரஹரப்ரிய
3. சம்போமஹாதேவ —பந்துவராளி
4. நம்மி வச்சிந —கல்யாணி
5. ஸுந்தரேச்வருநி — சங்கராபரணம்

## 5. திருமலை

பின்னர் தியாகய்யரவர்கள் திருமலையை தரிசிக்கக் கருதி சிஷ்யர்களுடன் அங்கே சென்று அலர்மேல்மங்கை நாயகனை

ஸ்ரீனிவாசப் பெருமாளைச் சேவித்து இரண்டு கீர்த்தனைகளைப் பாடினார்:

1. தெரதீயகராதா —கௌளிபந்து
2. வேங்கடேசா நிநு —மத்யமாவதி

## 6. ஸ்ரீரங்கம்

தியாகராஜஸ்வாமியாலேயே ''பூலோக வைகுண்ட'' மென்று போற்றப்பட்டுள்ள ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தின் விஷயமாக அவர் இயற்றியுள்ள பஞ்சகம் (ஐந்து கிருதிகள்) அழகிய கீர்த்தனைகள் அடங்கிய ஒரு தொகுதியாகும். தம்முடைய இஷ்டதெய்வமாகிய இராமசந்திர மூர்த்தியே ஆராதனம் செய்த மூர்த்தியாதலால், ஸ்வாமிக்கு அரங்கமன்னனிடம் இருந்த விசேஷ ஈடுபாடு இக்கீர்த்தனங்களில் நன்கு சித்தரிக்கப் பட்டுள்ளது.

1. சூதாமுராரே —ஆரபி
2. ஓ ரங்கசாயீ —காம்போஜி
3. கருண ஜூடுமய்ய —ஸாரங்க
4. ராஜு வெடலெ —தோடி
5. விநராத —தேவகாந்தாரி

## 7. லால்குடி

திருத்தவத்துறை யெனப்பெறும் லால்குடியைச் சேர்ந்த தமது சிஷ்யர்களின் வேண்டுகோளின் பேரில் தியாக பிரம்மம் இவ்வூருக்கு விஜயம் செய்தாரென்று ஊகிக்க இடமுண்டு. தபஸ் தீர்த்தபுரமென்று வழங்கும் இத்தலத்தின் ஈசுவரராகிய ஸப்தரிஷீசரைக் குறித்தும், அம்மனாகிய பிரவிருத்த ஸ்ரீமதியைக் குறித்தும் ஸ்வாமி இயற்றியுள்ள ஐந்து கிருதிகள்:—

1. கதிநீவநி —தோடி
2. லலிதே ஸ்ரீ —பைரவி
3. தேவ ஸ்ரீ —மத்யமாவதி
4. மஹித ப்ரவ்ருத்த —காம்போஜி
5. ஈச பாஹிமாம் —கல்யாணி

## 8. நாகப்பட்டிணம்

அய்யரவர்கள் இவ்வூருக்குத் தமது ஸஹதர்மிணியுடன் விஜயம் செய்ததாகவும், அச்சமயம் அவருடைய மனத்திற்கு

வருத்தம் தந்த சம்பவம் ஏதோ நிகழ்ந்ததாகவும் சரித்திரக் குறிப்புகளில் காணப்பெறுகிறது. ''கர்மமே பலவந்தமாய'' என்ற கிருதியில் அவரே இதைக் குறிப்பாகக் காட்டியுள்ளா ரென்று தோன்றுகிறது.

1. எவரு தெலிய —தோடி
2. கர்மமே —ஸாவேரி

## 9. மற்ற தலங்கள்

தியாகராஜஸ்வாமி இதர ஸ்தலங்கள்மீது கிருதிகள் இயற்றியதாகத் தெளிவாகத் தெரியவில்லையெனினும், கீழ்க் கண்ட கிருதிகள் சோளிங்கபுரத்தையும் சீர்காழியையும் குறிப் பதாக ஊகிக்க இடமுண்டு. சோளிங்கபுரக் கீர்த்தனைகள்:—

1. நரஸிம்ஹா நநு —பிலஹரி
2. பாஹிராமதூத —வஸந்தவராளி
3. கலுகுநா பதநீரஜ —பூர்ணலலிதா

இவற்றுள் முதல் கீர்த்தனம் யோகலக்ஷ்மி ந்ருஸிம்ஹனைப் பற்றியும், மற்ற இரண்டும் யோக ஆஞ்ஜநேய ஸ்வாமியைக் குறித்தவையென்றும் சிலர் கூறுவர். கீழ்க்கண்ட இரண்டு கீர்த்தனைகளும் பிரமபுரமெனப்படும் சீர்காழியைக் குறிப்ப தாகக் காணப்பெறுகின்றன:

1. நீவண்டி தைவமுநு —தோடி
2. இந்நாள்ளவலெ —தேசிகதோடி

இவ்விதமே திருவல்லிக்கேணி பார்த்தஸாரதிப் பெரு மாளைக் குறித்த ''ஸாரி வெடலிந'' என்ற கிருதியின் பல்லவி யும், அனுபல்லவியும் நமக்குக் கிடைத்துள்ளன.

## நாதோபாசனையும் இசைப்புலமையும்

கர்நாடக சங்கீதத்தின் வாக்கேயகாரர்களுள் எவ்விதத் திலும் தலைசிறந்தவரான ஸ்ரீ தியாகராஜஸ்வாமி ஸங்கீத சாஸ்திர விற்பன்னராக விளங்கியதுடன் மற்றும் அனேக துறைகளில் சிறப்புற்ற மேதாவி ஆவர். அவர் பிரஹ்லாதன், நாரதர் முதலியோருடன் ஒப்பிடத் தகுந்த பக்த சிகாமணி யாகவும், வைராக்கியம் நிறைந்த ஆத்ம ஞானியாகவும், சிறந்த கவியாகவும், இசை நாடகாசிரியராகவும் திகழ்ந்தவர். நாதத்தை வழிபட்டு அதுவே மோட்சமளிக்கும் சுலபமான நல்வழியென்று பறைசாற்றிய நாதோபாசகர். கர்நாடக சங்கீதத்தின் இதர வாக்கேயகாரர்கள் தங்களுடைய கிருதிகளுள் ஆங்காங்கு சங்கீத சாஸ்திரத்தின் நுட்பங்களைப் பற்றிக் குறிப் பிட்டிருப்பினும், அவற்றையே அடிப்படையாகக் கொண்டு பல

கிருதிகளை இயற்றியுள்ள பெருமை ஸ்ரீ தியாகராஜரையே சார்ந்ததாகும். ஸ்வாமியின் கீழ்க்கண்ட கிருதிகள் சங்கீத சாஸ்திரத்திற்கு ஒரு விளக்கமே போல் அமைந்துள்ளன.

| | | |
|---|---|---|
| ஆனந்தஸாகர | — | கருடத்வநி |
| மோக்ஷமுகலதா | — | ஸாரமதி |
| நாதலோலுடை | — | கல்யாண வஸந்தம் |
| நாத ஸுதாரஸம் | — | ஆரபி |
| ராகஸுதாரஸ | — | பேகட |
| ஸ்வரராகஸுதா | — | சங்கராபரணம் |
| ஸ்ரீபப்ரிய | — | அடாண |
| ஸங்கீத சாஸ்த்ர | — | முகாரி |
| ஸொகஸுகா | — | ஸ்ரீரஞ்ஜநி |
| சோபில்லு | — | ஜகந்மோஹிநி |
| ஸங்கீத ஞானமு | — | தந்யாசி |
| விதுலகு | — | மாயாமாளவகௌளை |
| வரராக | — | செஞ்சு காம்போஜி |

இக் கீர்த்தனைகளை நாம் அவற்றிற்குரிய அடைவில் அமைத்துப் பரிசீலனை செய்தால் அவை சங்கீத சாஸ்திரத்திற்கும் நாதோபாசனைக்கும் ஓர் உரை (வியாக்கியானம்) போல் காணப் பெறுகின்றன. சங்கீதம் நாதத்தையே அடிப்படையாகக் கொண்டதாகையால் நாதத்தைப் பற்றி ஸ்ரீ தியாக பிரம்மம் விரிவாகக் குறிப்பிட்டிருக்கிறார். ''நாதோபாஸநசே சங்கர, நாராயண, விதுலு வெலஸிரி'' (நாத வழிபாட்டினால் சிவன். விஷ்ணு, பிரமன் ஆகிய திரிமூர்த்திகளும் ஒளி பெற்று விளங்கினர்) என்ற துணிபை உடையவர் அவர். ''நாதலோலுடை'' என்ற கிருதியில் அவர் நாதத்தை ''ஸ்வாது பலப்ரத ஸப்தஸ்வர ராக நிசய ஸஹித'' (இனிய பலன்களையளிக்கும் ஸப்த ஸ்வரங்கள், ராகக் கூட்டங்கள் முதலியவற்றுடன் கூடியது) என்று விளக்கியிருப்பதுடன் ''ஹரி ஹராத்மபூ ஸுரபதி சரஜந்ம கணேசாதி வர மௌநுலுபா ஸிஞ்சரே'' (விஷ்ணு, சிவன், பிரம்மா, இந்திரன், சுப்பிரமணியர், கணபதி முதலியோர் உபாசிப்பது நாதம்) என்றும் கூறியுள்ளார். நாதோபாசகர்களுள் முக்கியமானவரான நாரதரைப் பற்றி ஸ்வாமி இயற்றியுள்ள கிருதிகளில் அம் மகரிஷியை ''வேத ஜநித வர வீணா வாதந தத்வஜ்ஞ'' (வேதத்திலிருந்து பிறந்த வீணையை வாசிப்பதன் தத்துவத்தை அறிந்தவர்) என்றும், ''நாத ஸரஸீருஹ ப்ருங்க'' (நாதமெனும் தாமரையை வட்டமிடும் வண்டு) என்றும் அழகாகப் புகழ்ந்திருக்கிறார். ''நாரத குருஸாமி'' யென்ற கிருதியில் நாரதரை ''ஸாரெகு ஸங்கீத யோக நைகம பாரங்கதுடைந பரமபாவந'' (சங்கீதம், யோக சாத்திரம், வேத வேதாங்கம் முதலியவற்றைக் கரை கண்ட புனித மூர்த்தி) என்று போற்றியிருக்கிறார். நாதோபாசகரான தியாகராஜ ஸ்வாமியின் இஷ்ட தெய்வமும் நாதத்தின் வடிவமாகவே அவதாரம் செய்வது இயற்கையேயல்லவா? ஆகவே, அவ்வவதாரத்தை ஸ்வாமி ''நாத ஸுதா ரஸம்பிலநு'' என்ற கிருதியில் கீழ்க்கண்டவாறு வருணித்திருக்கிறார்.

''ஸ்வரமுலு யாறெருக கண்டலு
வரராகமு கோதண்டமு
துரநய தேச்யமு த்ரிகுணமு
நிரதகதி சரமுரா
ஸரஸ ஸங்கதி ஸந்தர்பமு
கல கிரமுலுரா''

(ஏழு சுரங்களும் வில்லில் கட்டப்பெற்ற சிறு மணிகளாகும். சிறப்புற்ற இராகமே கோதண்டமென்ற வில். கனம், நயம் தேசியம் ஆகிய மூவகை வேறுபாடுகளே அவ்வில்லின் நாண் கயிருகவும், தாள கதிகள் அம்புகளாகவும், ரசம் நிறைந்த சங்கதிகள் சமயத்திற்கு உசிதமான மொழிகளாகவும் அமைவன.)

நாதத்தின் பரிணமமான ஸ்வரத்தைப் பற்றியும் ஸ்வாமி தந்துள்ள விளக்கம் குறிப்பிடத்தக்கது. ''மோக்ஷமு கலதா'' என்ற கிருதியில் ''ப்ராணுநல ஸம்யோகமுவல்ல ப்ரணவநாதமு ஸப்தஸ்வரமுலை பரக'' (பிராணவாயு, நெருப்பு ஆகியவற்றின் சேர்க்கையினுல் பிரணவநாதம் ஸப்தஸ்வரங்களாகப் பெருக) என்று கூறியிருக்கிருர். இந்த ஸப்தஸ்வரங்கள் சிவபெருமானின் ஸத்யோஜாதம், அகோரம், தத்புருஷம், ஈசாநம், வாமதேவம் ஆகிய ஐந்து முகங்களிலிருந்து பிறந்தனவென்பதை ''நாததநும்'' என்ற கிருதியில் 'ஸத்யோஜாதாதி பஞ்ச வக்த்ரஜ ஸரிகமபதநி வர ஸப்தஸ்வர'' என்று காட்டியிருக்கிருர். ஏழு சுரங்களாகிய இவ்வழகிய வடிவங்களை ''சோபில்லு'' என்ற கிருதியில் துதித்துப் போற்றுகிருர்.

கர்நாடக சங்கீதத்தின் உயிர்நிலைபோன்ற இராகத்தைப் பற்றிய அழகிய வருணனைகள் தியாகராஜ கிருதிகளில் காணப் பெறுகின்றன. ''ராகஸுதாரஸ'' என்ற கிருதியில் ஸ்வாமியவர்கள் தம் மனத்தை விளித்து ''ராகஸுதா ரஸ பாநமு ஜேஸி ராஜில்லவே'' (ராகம் எனப்படும் அமுத ரசத்தைப் பருகி மலர்ச்சி பெறுவாயாக) என்று உபதேசிக்கிருர். இராகங்கள் வெறும் ஆரோகண, அவரோகணங்களுள்ள ஸ்வரக்கூடுகள் அல்ல. சங்கீத உபாசனை செய்பவர்களுக்கு அவை ''மஜ்ஜுளமகு அவதாரமுலெத்தி மஞ்ஜீரமு கல்லநி நடிஞ்சு'' (அழகிய தோற்றங்களை யெடுத்து நூபுரங்கள் கல்லென்று ஒலிக்க நடம் புரியும்). ''ஸ்வரராக ஸுதா'' என்னும் கிருதியில் நாதோபாசனையின் தத்துவங்கள் நன்கு விளக்கப்பெற்றுள்ளன. ''ஸ்வர ராக ஸுதா ரஸயுத பக்தி ஸ்வர்காபவர்கமுரா'' (ஸ்வரம், இராகம் ஆகியவற்றின் அமுதரசத்துடன் கூடிய பக்தியே சுவர்க்கம் மோட்சம் இரண்டையும் அளிக்கவல்லது) என்று தொடங்கி ஸ்வாமியவர்கள் ''ஸஹஜ பக்திதோ ராகஜ்ஞாந ஸஹிதுடு முக்துடுரா'' (இயற்கையான பக்தியுடன் இராக ஞானம் படைத்தவன் முக்தியடைகிருன்) என்று அறுதியிடுகிருர். ''சிவபெருமான் பார்வதிக்குரைத்த இந்த ஸ்வரார்ணவ மர்மங்களையறிந்து வெற்றி பெற்றவன் இத்தியாகராஜன்''

என்று பெருமைகொள்கிறார். நாத வித்யையின் மர்மங்களை அறியாமல் தாங்கள் சங்கீத வித்வான்கள் என்று பிதற்றுவோரை ''வரராக லயஜ்ஞுலு'' என்ற கிருதியில் கீழ்க்கண்டவாறு பரிகசிக்கிறார்.

''ஸ்வரஜாதி மூர்ச்சநா பேதமுல்
ஸ்வாந்தமந்து தெலியக யுண்டிந
வரராக லயஜ்ஞுலு தாமநுசு
வதரேரயா''

(ஸ்வரம், ஜாதி, மூர்ச்சனை ஆகியவற்றின் வேறுபாடுகளைத் தம் உள்ளத்தில் அறியாதவர்களாயினும் சிறந்த ராக, தாள வித்வான்கள் தாமே யென்று பிதற்றித் திரிகின்றனர்).

''ஸங்கீத சாஸ்த்ர ஜ்ஞாநமு ஸாரூப்ய ஸௌக்யதமே'' (ஸங்கீத சாஸ்திர ஞானம் நான்கு முக்திகளுள் ஒன்றான ஸாருப்பியம் (தான் உபாசிக்கும் தெய்வத்தின் உருவைப் பெறுதல்) என்ற சுகத்தை அளிக்க வல்லது) என்பது தியாக ராஜரின் சித்தாந்தம். இவ்வழியைப் பின்பற்றி நாதோபாசனை செய்த குரு பரம்பரையை ''விதுலகு'' என்ற கிருதியில் அவர் துதித்து ''இலக்ஷ்மி, பார்வதி, சரசுவதி, பிரமன், விஷ்ணு, சிவன், நாரதர், இந்திரன், பரதமுனி, காசியபர், சண்டிகேசுவரர், ஆஞ்ஜநேயர், சுப்பிரமணியர், கணபதி, மார்க்கண்டேயர், அகஸ்தியா, தும்புரு, சோமேசுவரர், சார்ங்கதேவர், நந்தி தேவர்'' ஆகிய சங்கீத பூர்வாசாரியர்களை வணங்குகிறார்.

''கிருதி'' என்பதன் இலக்கணத்தையும் ''ஸொகஸுகா'' என்ற கீர்த்தனத்தில் அவரே வகுத்துள்ளார்,

''யதி விச்ரம ஸத்பக்தி வி-
ரதி த்ராக்ஷாரஸ நவரஸ
யுத க்ருதி''

(எதுகை, விச்ரமம், ஒய்வு, உத்தம பக்தி, பத வாக்கியங்களின் முடிவில் விச்ராந்தி, திராட்சையின் ருசி, நவரசங்கள் இவற்றுடன் கூடியதே கிருதியாகும்.)

## தியாகராஜ கிருதிகளின் சங்கீதச் சிறப்பு

நாதோபாசனை சுலபமான மோட்ச சாதனம் என்ற கருத்துடன் தம் இஷ்ட தெய்வத்தைத் துதிப்பதற்காக ஸ்வாமியவர்கள் இயற்றியருளிய நூற்றுக்கணக்கான கீர்த்தனைகள் கர்நாடக சங்கீதத்திற்கே வளம் தந்து அதை மகோந்நத நிலைக்கு உயர்த்திவிட்டன. ஸ்ரீ தியாக பிரம்மம் கர்நாடக சங்கீதத்திற்குப் புரிந்துள்ள இச்சேவை மதிப்பிட முடியாதது. தற்காலத்தில் பாட்டுக் கச்சேரிகளில் பாடப்பெறும் கீர்த்தனைகளுள் பெரும்பான்மையானவை அவருடையதாகவே இருப்பதுடன்

வித்வான்கள் புரியும் இராக ஆலாபனைகளும் அவருடைய கீர்த்தனைகளை அடிப்படையாகக் கொண்டவையாக அமைகின்றன. அவருடைய காலத்திற்குப் பிறகு கர்நாடக சங்கீதத்தின் அமைப்பிலேயே ஒரு புரட்சிகரமான மாறுதல் உண்டாயிற்று என்று கூறுவது மிகையல்ல.

''கிருதி'' எனப்பெறும் இசை வகைக்கு சம்பூர்ணமான வடிவம் அமைத்துக்கொடுத்த பெருமை அவரையே சார்ந்ததாகும். வேறு ஒருவித இசை வடிவத்திலும் அவர் பாடல்களை அமைக்கவில்லையாதலின் அவருடைய இசை மேதை முழுவதும் கிருதிகளிலேயே பொதிந்துகிடக்கிறது. ஒவ்வொரு கிருதியும் அந்தந்த இராகத்தின் பரிபூர்ணமான தெளிந்த வடிவத்தைத் தன்னுள்ளடக்கிய ஓர் இரத்தினம் போன்றது. இராகங்களைப் படிப்படியாக விஸ்தாரம் செய்துகொண்டு போவதற்காகக் கிருதிகளில் அடுக்கடுக்கான சங்கதிகளை அமைத்த பெருமை தியாகராஜரையே சார்ந்ததாகும். இராகங்களில் உள்ளடங்கியிருக்கும் இராக பாவத்தை இயற்கையான முறையில் விகசிக்கச் செய்வதற்கு தியாகராஜ கிருதிகளில் அமைக்கப்பெற்றிருக்கும் வரிசை வரிசையான சங்கதிகள் உதவுவதுபோல் வேறு எந்த வாக்கேயகாரரின் சாகித்தியங்களும் உதவா,

இந்த சங்கதிகள் இராக மலர்ச்சிக்காக ஒரு குறிப்பிட்ட வரிசையில் ஸ்வாமியவர்களாலேயே அமைக்கப்பெற்றுள்ளன என்பதற்கு ''ராம நீ ஸமாநமெவரு'', ''சக்கநி ராஜமார்கமு'' முதலிய கிருதிகளே சான்றாகும். ''நா ஜீவாதார'', ''தொரகுநா'' முதலிய கிருதிகளின் பல்லவிகளிலேயே பத்துக்கு மேற்பட்ட சங்கதிகள் அமைக்கப்பெற்றிருப்பதிலிருந்து ஸ்வாமியவர்களின் மேதாவிலாசம் எளிதில் புலனாகிறது. பெரும்பான்மையான கிருதிகளில் சரணத்தில் நின்று விரிவாக நிரவல் செய்து கற்பனை ஸ்வரம் பாடும் வசதி அமைக்கப்பெற்றுள்ளது.

மேலும், தோடி, சங்கராபரணம் முதலிய இராகங்களில் 30 கீர்த்தனைகள் வரையிலும், ஸாவேரி, ஸௌராஷ்ட்ரம், கல்யாணி முதலிய இராகங்களில் 20 கீர்த்தனைகள் வரையிலும், பைரவி, மத்தியமாவதி முதலிய இராகங்களில் 15 கீர்த்தனைகள் வரையிலும் ஸ்வாமியவர்கள் இயற்றியிருப்பதிலிருந்து அவருடைய எல்லையற்ற மனோதர்மம் புலனாகிறது. ஒரே இராகத்தில் பல கீர்த்தனைகள் இருந்தும் அவற்றிலுள்ள சங்கதிகள் திரும்பத் திரும்ப வராமலிருக்கும் விந்தையை நாம் தியாகராஜ கிருதிகளில்தான் காண முடியும்.

கர்நாடக சங்கீதத்தின் 72 மேள கர்த்தா இராகங்களுள் ஐம்பதிற்க்கு மேற்பட்ட கர்த்தா ராகங்களிலும் நூற்றுக்கணக்கான ஜன்ய ராகங்களிலும் கிருதிகளை இயற்றியதுடன் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி அனேக இராகங்களைத் தாமே கற்பனை செய்து அவற்றிற்குத் தமது கிருதிகள் மூலம் நிரந்தரமான உருவங்களை ஏற்படுத்தினார். நாட்டை, கௌளை, ஆரபி, ஸ்ரீராகம், வராளி ஆகிய கன ராகங்களில் அவர் இயற்றியுள்ள பஞ்சரத்தின கீர்த்தனைகள் உன்னத சிருஷ்டிகளாகும். சாதாரணமாகப் பல்லவி, அனுபல்லவி, சரணம் கொண்ட கிருதிகள்போல்

அமைக்கப்பெருமல் இவை தனித்த முறையில் இயற்றப்பட்டுள்ளன. ''ஸாதிஞ்செநெ'' என்ற ஆரபி ராக கிருதியில் சரணத்தின் முதல் வரிக்கும் மிகுதிக்கும் இடையே ஸ்வர, சாகித்திய ஒத்துக்கடைகள் அமைக்கப்பெற்றுள்ளன. பல கிருதிகளில் சரணங்கள் ஒரே அளவாக இல்லாமல் பற்பல மாறுதல் களுடனும் விதவிதமான தாதுக்களுடனும் காணப்பெறுகின்றன. ''ப்ரோசேவாரெவரே' (ஸ்ரீரஞ்ஜநி), ''ஸ்ரீ ரகுவராப்ரமேய'' (காம்போஜி) முதலிய கிருதிகளை ஸ்வாமியவர்கள் தனித்த வகையில் அமைத்துள்ளார்.

உத்ஸவ ஸம்பிரதாய கீர்த்தனைகள், திவ்வியநாம ஸங்கீர்த்தனை ஆகிய பகுதிகளில் தியாகராஜ ஸ்வாமி முற்றிலும் வேறுபட்ட நடையையும் இசை வடிவங்களையும் பொருத்தியிருக்கிருர். உத்ஸவ ஸம்பிரதாயப் பகுதியில் கௌரீ கல்யாணம், நலங்குப் பாடல்கள், லாலி, மங்களம் முதலியவற்றிற்கு அழகிய கர்நாடக இராகங்களை அமைத்து அழகுபெறச் செய்திருக்கிருர். திவ்விய நாம ஸங்கீர்த்தனை ஹரிதாசர்கள் ஒன்று கூடி கோஷ்டிகானம் செய்வதற்கென அமைக்கப்பெற்ற உருப்படிகள். அவர்காலத்தில் வழங்கிவந்த பல நாடோடிப் பாடல்களின் மெட்டுக்களையும் சந்தங்களையும் ஸ்வாமியவர்கள் எடுத்து அவற்றிற்குக் கர்நாடக சுத்தமான வடிவங்களை யமைத்து அழகிய கீர்த்தனங்களாக நமக்கு வழங்கியுள்ளார். ஆகவே, தற்காலத்தில் கர்நாடக சங்கீதத்தில் வழங்கிவரும் சிறந்த அம்சங்களுச்கெல்லாம் தியாகராஜ கீர்த்தனைகளே அடிப்படையென்று கூறுவது முற்றிலும் பொருந்தும்.

## ஸ்ரீ தியாகராஜரின் கவித்திறன்

இத்தன்மையதான சங்கீதச் சிறப்புக்கொண்ட சுமார் 675 கிருதிகளை இயற்றியருளிய தியாகராஜ ஸ்வாமி சிறந்த ஒரு கவியாகவும், இசை நாடகாசிரியராகவும் திகழ்ந்தார். கர்நாடக சங்கீதத்தின் வாக்கேயகாரர்களுள் (க்ஷேத்ரக்ஞரைத் தவிர) கவியென்று குறிப்பிடத்தகுந்தவர் ஸ்வாமி ஒருவரே. ஆகவே, அவரை ''திருவையாற்றின் இசைக் கவி'' யென்றே பலர் அழைக்கின்றனர். அவருடைய கிருதிகளுள் பெரும்பான்மையானவை மெட்டு அமைக்கப்பெற்ற கவிதைகள் போலவே தோன்றுகின்றன. அவற்றில் சகல சாகித்திய லக்ஷணங்களும், அலங்காரங்களும் யதி பிராஸ அழகுகளும், யமக சித்திரங்களும் விளங்குகின்றன. இவற்றை ஒன்று கூட்டி ''ஸொகஸுகா'' என்ற கிருதியில் அவரே இலக்கணம் வகுத்துள்ளார் என்பது ஏற்கெனவேயே குறிப்பிடப்பெற்றது.

வட மொழியில் அவர் அமைத்துள்ள கிருதிகளில் மதுரமான பதங்களை அழகாகக் கோத்து வாரி வழங்கியிருப்பதைப் பண்டிதர்கள் போற்றுகின்றனர்.

"ஸுந்தரமுக மரவிந்த நயநமக
ப்ருந்த பர்வத புரந்தர மநக ஸ-
நந்தந நுத மாநந்த ஜலதி மஹி
ப்ருந்த ஸுபூஷண வந்தித சரணம்
தீரம் புவநாகாரம் ஸுகுணகாரம்
ஸமலங்காரம் துர்ஜந தூரம்
ஸ்ரீரகுவீரம் மே ஹ்ருதி வாரம் வாரம்"

"ஸாரஸார காந்தாரசர மத வி-
தார ஸுந்தராகார ஸுகுண ஸுகு-
மார மாரமண நீரஜாப்தகுல
பாராவார ஸுதாரஸ பூர்ண"

என்பது போன்ற எழிலுடைப் பகுதிகள் இவருடைய கிருதிகளில் பல விடங்களில் ஒளிவீசுகின்றன.

இவ்விதமே தெலுங்கு கிருதிகளிலும்,

"ஸ்ரீதமா நாதோ வாதமா நே பேதமா இதி மோதமா
ஸ்ரீரமா ஹ்ருச்சாரமா ப்ரோவபாரமா ராயபாரமா"

"மதிநி பெதரு ஸுததிநி கநி நீது
பதமுலு தயநு தரலோநு ப்ரோசே
கதர மதஜ தளநாபக ஜித
மதந புதஜநதந த்யாகராஜ"

என்ற பிராஸ, அநுப்பிராஸ அணிகளை ஆங்காங்கே அமைத்திருப்பதைக் காணலாம்.

ஸ்வாமியவர்கள் கவியுள்ளம் படைத்தவரென்பதற்கு அவர் கிருதிகளில் காணப்பெறும் இயற்கை வருணனைகளே சான்று. சோழமண்டலம், திருவையாறு, அதனூடே பாயும் காவிரி நதி முதலியவற்றைத் தமது கிருதிகளில் அவர் பரவசத்துடன் வருணித்துள்ளார். சோழநாட்டை

"ஈ மஹிலோ ஸொகஸைந சோளஸீமயந்து
வரமைந பஞ்சநதபுர"

என்றும், திருவையாற்றை

"ஈடுலேநி மலயமாருதமுசே
கூடிந காவேரீ தடமந்து

மேடல மித்தலதோ ச்ருங்காரமு
மிஞ்சு ஸதநமுலலோ''

என்றும், காவிரியாற்றை

''துரமுந நொக தாவுந கர்ஜந பீ-
கர மொக தாவுந நிண்டு கருணதோ
நிரதமுக நொக தாவுந நடுசுசு
வர காவேரீ கந்யகாமணி''

என்றும் வருணிப்பவர் சாமான்ய கவியல்லர்.

இவ்விதமே ''தொரகுநா'' முதலிய கிருதிகளில் பகவான் கொலு வீற்றிருக்கும் அழகைத் தம் கவியுள்ளத்தில் கண்டானந் தித்து அந்தம் பொருந்திய நடையில் வருணித்துள்ளார்.

''தும்புரு நாரதுலு ஸுகுண கீர்த்த-
நம்புல நாலாபமு ஸேயகா
அம்பரீஷ முக்யுலு நாமமு ஸேயகா
ஜாஜுல பை சல்லகா
பிம்பாதரலகு ஸுரவார யலி
வேணுலு நாட்யமுலாடகா
அம்புஜபவ பாகாருலிருகடல
நம்வய பிருதா வளிநி பொகடகா
அம்பரவாஸ ஸதுலு கர கங்க-
ணம்புலு கல்லநி விஸரக மணிஹா-
ரம்புலு கதலக நூசே பணிதல்-
பம்புந நெலகொந்ந ஹரிநி கநுகொந தொரகுநா

தெலுங்கு நாட்டின் பக்த கவிகளுள் தலைசிறந்தவரும் தெலுங்கு மொழியிலேயே இணையற்ற காவியமெனக் கருதப் பெறும் ''ஆந்திர பாகவதத்''தின் ஆசிரியருமான போதராஜு காரு என்ற போதனுவின் கிரந்தத்தை நித்திய பாராயணமாக தியாகராஜ ஸ்வாமி வைத்துக் கொண்டிருந்தால், ஸ்ரீ போதனு வின் நடையைப் போலவே ஸ்வாமியின் நடையும் இனிமையும் தெளிவும் பொருந்தியதென்று தெலுங்குப் பண்டிதர்கள் கூறு கின்றனர். போதனுவின் நடையைப் பின்பற்றுவதைப் போலவே தியாகராஜ ஸ்வாமி தெலுங்கு பாகவதத்தின் கருத்துக்களையும் தழுவி கிருதிகளை அமைத்துள்ளார். பிரஹ்லாத பக்தி விஜயத் தில் காணப்பெறும் நீலாம்பரி ராக கிருதியான

"எங்க மநஸுகு ராநி
பங்க சாயீ ஸொகஸு
பங்நுக கநுகொ நநி
கந்நுலேலே கண்டி மிந்நுலேலே"

என்பது போதன பாகவதத்தின் ஏழாவது ஸ்கந்தத்தில் வரும் இரு ஸீஸபத்யங்களைத் தழுவி இயற்றப்பட்டன.

"கமலாக்ஷு நர்ச்சிஞ்சு கரமுலு கரமுலு
ஸ்ரீநாது வர்ணிஞ்சு ஜிஹ்வ ஜிஹ்வ"

(தாமரைக் கண்ணனுகிய பகவானை அருச்சிக்கும் கரங்களே கரங்கள். ஸ்ரீபதியாகிய அவனை வருணிக்கும் நாவே நாவாகும்) என்பதே இந்த பத்யம்.

தியாகராஜ ஸ்வாமி இயற்கைக் கவி. ஆகவே, அவர் கவிதை இயற்றத் தொடங்கும்பொழுதே மரபிலிருந்து வழுவாத தெள்ளிய நடையும், பலவித உவமைகளும், பொருத்தமான பழமொழிகளும், நீதி வாக்கியங்களும் பிரயாசையின்று அவரது நாவில் தாண்டவமாடுகின்றன. நவரசங்களும் ஆங்காங்கே பொருத்தமாக அமைந்துவிடுகின்றன. பிரஹ்லாத பக்தி விஜயத்தின் இரண்டாவது கீர்த்தனத்தில் துவாரபாலகன் தன் கையில் பொற்பிரம்பைப் பிடித்துக்கொண்டும், அடிக்கடி மீசையை முறுக்கிக்கொண்டும், நானே மன்மதன் என்று பெருமையடித்துக்கொண்டும் தாண்டித் தாண்டிக் குதிப்பதை நகைச்சுவையுடன் வருணிக்கும் ஸ்வாமியவர்கள் மூன்றும் அங்கத்தில் பிரஹ்லாதன் ஹரியின் தரிசனத்திற்காக ஏங்கி வருந்தித் தன்னைத்தானே நொந்துகொள்வதைத் துயர் பெருகும் பாடல்களால் வருணித்து நம்மைக் கண்ணீர் வடிக்கச் செய்து விடுகிறுர்.

## தியாகராஜ ஸ்வாமியின் இசை நாடகங்கள்

இவ்வாறு கிருதிகளிலேயே தமது கவித்திறனைக் காட்டியுள்ள ஸ்வாமியவர்களுடைய மேதா விலாசத்தின் மற்ருெரு கோணத்தை நாம் அவரியற்றியுள்ள "பிரஹ்லாத பக்தி விஜயம்", "நௌகா சரித்திரம்" ஆகிய இசை நாடகங்களில் காண்கிருேம். இவற்றில் கீர்த்தனைகளைத் தவிர பத்யங்கள், சுலோகங்கள், வசனம், தருக்கள், கத்யம், தண்டகம் முதலியவற்றையும் அவர் அமைத்திருக்கிருர். ஆந்திர தேசத்துக் கவிகள் வழக்கமாகத் தமது காவியங்களில் அமைக்கும் ஸீஸபத்யம், கந்தபத்யம், த்விபதை, உத்பலமாலா, தேடகீதி, சம்பகமாலா, உத்ஸாஹ விருத்தம, சார்தூல விக்ரீடிதம் முதலிய விருத்தங்கள் அனைத்திலும் அவர் செய்யுட்கள் பாடியிருப்பதிலிருந்து அவர் ஆந்திரக் கவி மரபைச் சிறிதும் வழுவாமல் பின்பற்றுபவரென்பது தெளிவாகிறது.

''பிரஹ்லாத பக்தி விஜயத்தின்'' இரண்டாம் அங்கத்தில் நாரத முனிவர் வைகுந்தத்தில் பரந்தாமன் வீற்றிருக்கும் வைப வத்தைப் பிரஹ்லாதனுக்கு விவரிக்கும் இடத்தில் தியாகராஜ ஸ்வாமி அமைத்துள்ள ''கத்யம்'' (சூர்ணிகை) என்ற ஸம்ஸ் கிருத உரை நடைப்பகுதி மிகவும் அழகியது.

தண்டகம் என்பது வடமொழி இலக்கியத்தில் அடுக்குச் சொற்களும் சொல்லலங்காரங்களும் நிறைந்த ஓர் உரை நடை வகையாகும். ''ச்யாமலா தண்டகம்'', ''கருட தண்டகம்'' போன்றவை இதற்கு உதாரணங்கள். இவ்வகையில் ஸ்வாமி யவர்கள் மேற் கூறிய நாடகத்தில் தெலுங்கு பாஷையில் ஒரு தண்டகம் அமைத்திருக்கிறார். ''ஸ்ரீ பக்த ஹ்ருத்தாப காடாந்த கார'' என்று தொடங்கும் இப்பகுதி தியாகராஜருடைய பலதரப்பட்ட மேதா விலாசத்திற்கு மற்றொரு சான்றாகும்.

தியாகராஜ ஸ்வாமியின் காலத்திற்கு முன்பும் அவருடைய காலத்திலும் கவிகளும் வாக்கேயகாரர்களும் இசை நாடகங்களை அமைப்பது வழக்கத்திலிருந்து வந்தது. இவற்றை ஆந்திர, கர்நாடக தேசங்களில் ''யக்ஷ கானம்'' என்றும், தமிழ் நாட்டில் ''பாகவத மேள'' மென்றும், வங்காளத்தில் ''யாத்ரா'' என்றும், அஸ்ஸாமில் ''பாவனா'' என்றும் கூறுவர். தமிழ் நாட்டுக் குறவஞ்சி நாடகங்களும், கோபாலகிருஷ்ண பாரதியின் ''நந்தனர் சரித்திர''மும் இத்தன்மையான இசை நாடகங்களே. அஸ்ஸாமைச் சேர்ந்த மகாபுருஷ சங்கர தேவர், ஆந்திரரான ஸித்தேந்திர யோகி, தமிழ்நாட்டில் வாழ்ந்துவந்த மெரட்டூர் வேங்கடராம சாஸ்திரி, ஷாஹாஜி மகாராஜா ஆகியோர் புகழ் பெற்ற இசைநாடக ஆசிரியர்களாவர்.

இசை, கவிதை ஆகிய இரு கோணங்களிலிருந்து ஆராய்ந் தால், தியாகராஜ ஸ்வாமியின் இரு நாடகங்களும் தெலுங்கு பாஷையிலேயே சிறந்த இசை நாடகங்கள் என்பது விளங்கும். இவற்றில் அவர் பொருத்தியிருக்கும் கிருதிகள் ஒரு தனி வகை யைச் சேர்ந்தவை. அதிகமான சங்கதிகள் இன்றி, அந்தந்த இராகத்தின் ரசத்தை வடித்தெடுத்தவை போன்ற மெட்டுக் களில், உணர்ச்சிக்கு முக்கியத்துவமளித்து இயற்றப்பெற்றவை இக்கிருதிகள், ஒரு கட்டத்தை அமைக்கும்பொழுது நீண்ட பத்யங்களின் மூலம் உணர்ச்சி வெள்ளத்தைப் பெருகச் செய்து அதன் இறுதியில் செதுக்கிய ஓர் இரத்தினம் போன்ற கிருதி யொன்றைப் பொருத்துவதில் ஸ்வாமிகள் நிபுணர் ஆவர்.

இவ்விரு இசை நாடகங்களிலும் தியாகராஜர் சம்பிரதாய மான கதைகளைக் கையாளாமல், தமது கற்பனையில் தோன்றிய சம்பவங்களை அமைத்திருக்கிறார். உதாரணமாக ''பிரஹ்லாத பக்தி விஜயத்தில்'' நரசிம்ம அவதாரம் தோன்றி ஹிரண்ய கசிபுவை வதைக்கும் கட்டமே இல்லை. பிரஹ்லாதனுடைய நிச்சலமான பக்தி வெற்றிபெற்ற வரலாற்றை ஸ்வாமி விவரிக் கிறார். பக்தி மதத்தைப் பரப்புவதே அவரது நோக்கமாதலால் பக்தர்களின் கோஷ்டியில் அக்ர ஸ்தானம் வகிக்கும் பிரஹ் லாதனின் சரிதையை அவர் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். ஆயினும், தமக்கு வயதில் மூத்தவரும், சம காலத்தவருமான

மெரட்டூர் வேங்கடராம சாஸ்திரியவர்கள் ஏற்கெனவே ''பிரஹ்லாத சரித்திரம்'' என்ற தெலுங்கு இசை நாடகத்தை இயற்றிவிட்டதால், ஸ்வாமிகள் பிரஹ்லாதனின் பக்தியை மட்டும் குறித்து நாடகத்தை இயற்ற முற்பட்டார்.

''பிரஹ்லாத பக்தி விஜயம்'' ஐந்து அங்கங்களையும், 28 இராகங்களில் அமைக்கப்பெற்ற 45 கிருதிகளையும், 132 பத்யங்களையும் கொண்ட ஒரு ஸம்பூர்ண நாடகமாகும். இதில் காணப்பெறும் ''ஸ்ரீ கணபதி'', ''வாஸுதேவயநி'', ''வாரிதி நீகு'', ''நந்நு விடிசி'', ''ராரா மாயிண்டிதாக'' முதலிய கிருதிகள் ஏற்கனவேயே சங்கித உலகில் பிரசித்தமானவை. பரஜு, நாககாந்தாரி முதலிய அபூர்வ ராகங்களிலமைந்த கிருதிகள் இந்த நாடகத்தில் தான் காணப்படுகின்றன. ஸ்ரீமத் ராமாயணம், பாகவதம், முகுந்தமாலை முதலிய கிரந்தங்களிலிருந்து ஸ்வாமியவர்கள் சுலோகங்களை உதாரணமாக இந்த நாடகத்தில் வழங்கியுள்ளார். சங்கித ஞானமில்லாதவர்கள்கூட இந்த நாடகத்தைப் படித்துப் பயன் பெற வேண்டுமென்பது ஸ்வாமியின் நோக்கம். நாடகத்தின் பலச்ருதியில் (நூற்பயனில்) அவர்,

"யே காயந்தி ஸதா பக்த்யா
யே ச்ருண்வந்தி ச ச்ரத்தயா
யே படந்தி ஸதா ப்ரீத்யா
தேஷாம் ஸர்வாக நாசநம்"

(இதை எவர்கள் சதா பக்தியுடன் பாடுகிறார்களோ, சிரத்தையுடன் கேட்கிறார்களோ, பிரியத்துடன் படிக்கிறார்களோ அவர்களுடைய பாவங்களனைத்தும் அகன்றுவிடும்) என்று கூறியிருக்கிறார்.

''நௌகா சரித்திரம்'' என்ற இசை நாடகமும் ஸ்வாமியின் கவியுள்ளத்தில் தோன்றிய ஒரு கற்பனையேயாகும். இதற்கு ஸ்ரீமத் பாகவதத்திலோ வேறு நூல்களிலோ ஆதாரம் இல்லை. ஆயினும் ஸ்ரீகிருஷ்ணனும் கோபியரும் யமுனை நதியில் படகில் பிரயாணம் செய்த கதை வட இந்திய வைஷ்ணவ சம்பிரதாயத்தில் வழங்கி வருகிறது.

பிருந்தாவனத்தின் கோபியர் ஒரு சமயம் சிறு பிள்ளையான பாலகிருஷ்ணனை ஓர் ஓடத்தில் ஏற்றிக் கொண்டு யமுனையாற்றில் உல்லாசப் பிரயாணம் செய்த வரலாற்றை அடிப்படையாகக் கொண்டது இந்த நாடகம். கோபியரின் பக்தியையும் சரணாகதி தத்துவத்தையும் பரிசோதிக்க எண்ணிய கண்ணன் ஒரு பெரும் புயலை வரவழைத்துப் படகில் தண்ணீர் நிரம்புமாறு செய்து விடுகிறார். பரிதவிக்கும் கோபியர் எவ்வளவோ வேண்டிக்கொண்டும் பாலகிருஷ்ணன் அவர்களது ''ஆடைகளைக் களைந்து படகின் துவாரங்களில் அடைத்தால் தான் அனைவரும் உயிர் தப்பிப் பிழைக்கலாம்'' என்று உபதேசிக்கிறார். வேறு வழியின்றி அவர்கள் அவ்விதமே செய்யவும், மாயக்கண்ணன் படகைக் காப்பாற்றி அனைவரையும் கரைசேர்க்

கிறுர். சிருங்கார ரசத்தை அடிப்படையாகக் கொண்ட இக் கதையை வைராக்கிய நிதியும் உள்ளத் துறவியுமான ஸ்வாமி யவர்கள் கத்தி முனைமீது நடப்பதுபோல் விரசம் சற்றுமின்றி அமைத்திருப்பது வெகு கடினமான ஒரு சாதனையாகும். ஏனெனில் இவ்விஷயத்தில் ''கீத கோவிந்தத்தின்'' ஆசிரியரான ஜய தேவ ஸ்வாமி போன்ற பக்த கவிகளும் வரம்பை மீறி விட்டிருக்கின்றனர் என்பது இலக்கிய ஆராய்ச்சியாளர் கருத்து.

நௌகா சரித்திரத்தில் பல அழகிய இயற்கை வருணனைகள் காணப் பெறுகின்றன. யமுனை நதியின் அழகை ''சூடரே செலுலாரா'' என்ற கிருதியில் தியாகராஜ ஸ்வாமி வருணிப்பதிலிருந்து அவரது கவித்திறன் தெளிவாகிறது.

''தோழிகளே! யமுனா தேவியின் சௌந்தரியத்தை மகிழ்ச்சியுடன் பாருங்கள். சிவந்த தாமரை மலர்கள்! அவற்றில் மனோகரமான வண்டுகளின் ரீங்காரம் (முரலும் ஓசை). வெண்மை பொருந்திய மணற் திட்டுக்கள். யமுனா தேவியின் உடல் இந்திர நீலத்தை யொத்த கருமை, வைரமிழைத்த சிலைகளைப் போன்ற படிகள்! அவற்றின்கீழ் வளைந்து வரும் அலைகள்! அன்னப் பறவைகளின் இன்னிசையுடன் யமுனாதேவி இன்று பிரகாசிக்கிறாள். இனிய கொடி வீடுகளில் தேனொழுகும் பேரீச்சம் பழங்கள்! குலுங்கும் திராக்ஷைக் கொடிகள்! அவற்றில் பச்சைக் கிளிகளின் ஜோடிகள்! வித விதமான மலர்களின் மாரிகள்! கோகிலங்கள் கூவின! மதனன் தனது மலர்க் கணைகளை எய்கின்றனன். குளிர்ந்த தென்றல் வீசுகிறது. நாம் கண்ணனைக் கூடுவது திண்ணம்.''

மேற்கண்ட கிருதிக்கு முன் இதே பொருளை விளக்குவதற்காக சார்தூல விக்ரீடிதத்தில் அவர் அமைத்துள்ள நீண்ட பத்யம் அவருடைய சிறந்த கவனங்களுள் ஒன்று.

''வாலாயம்புக நாடலாடுசு ஜெலுல்
வர்ணிஞ்சுசுன் நேகுசுன்
ஆலோலம்பகு புஷ்ப வ்ருக்ஷமுலதோ
ஹம்ஸீ ஸமூஹம்புதோ
கீலாலம்புந ப்ருங்க நாத யுதமௌ
கெந்தம்மி ப்ருந்தம்புதோ
காலாம்போதர தீப்தி தோட ஜெலகே
காலிந்திநின் காஞ்சுசுன்''

''நௌகா சரித்திரத்தை''யும் மாந்தர் படித்துக் கண்ணனருளைப் பெற வேண்டுமென்ற ஸ்வாமியவர்களின் நோக்கத்தை நூலின் பல ச்ருதியிலிருந்து அறிகிறோம்.

“த்யாகராஜ க்ருதாம் புண்யாம் கதாம்
ஸாதுமனோஹராம்
யேச்ருண்வந்தி நரா லோகே தேஷாம்
க்ருஷ்ண : ப்ரஸீததி”

(நல்லோர் மனத்தைக் கவர்வதும், தியாகராஜனால் இயற்றப்பட்டதுமான இப்புனிதக் கதையை இவ்வுலகில் கேட்பவர்களுக்குக் கிருஷ்ணன் அருள் புரிவான்).

## ஞான, பக்தி, வைராக்கியங்கள்

ஸ்ரீ தியாக பிரம்மம் பரம பாகவத சிகாமணி. பக்தி சம்பிரதாயத்தை இவ்வுலகில் பரப்புவதற்காக அவதாரம் செய்த மகாபுருஷருள் ஒருவர். நாதயோகி. ஆத்மஞானி. திர்க்கதரிசி. வைராக்கியம் நிறைந்தவர். உபநிடதங்களிலும், கீதையிலும், இராமாயணம், பாகவதம் முதலிய நூல்களிலும் காணக் கிடைக்கும் தத்துவார்த்தங்களை எளிய தெலுங்கில் இசையுடன் வடித்தெடுத்து உலகிற்கு அளித்தவர். ஆகவே அவருடைய கிருதிகள் “தியாக பிரம்மோபநிஷத்” என்ற பெயருடன் வழங்குகின்றன. ஓர் உபநிஷத்தின் பொருளை ஒரு கீர்த்தனையிலும், ஓர் அனுவாகத்தின் சாரத்தை ஒரு சரணத்திலும் அடக்கிவிடக் கூடிய திறமை வாய்ந்தவர்.

ஸ்ரீ துளஸிதாஸர், இராமதாஸர் ஆகிய இராமபக்தர்களின் மரபில் வந்த தியாக பிரம்மம் இராமகிருஷ்ணானந்தர் என்ற சன்னியாசியினிடம் இராம ஷடக்ஷரி மந்திரோபதேசம் பெற்று நாம ஜபத்தின் மூலம் தமது இஷ்ட தெய்வத்தின் சாக்ஷாத்காரம் பெற்றவராதலின் பெரும்பான்மையான கிருதிகளை இராம பரமாகவே பாடியிருப்பது இயற்கை. (அவருடன் சமகாலத்தில் வாழ்ந்தவர்களுள் தந்தையாகிய இராம பிரம்மம், மேற்கூறிய இராமகிருஷ்ணானந்தர் ஆகிய இருவரை மாத்திரமே தமது நூல்களில் தியாக பிரம்மம் குறிப்பிட்டிருக்கிறார்). ச்ரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தநம், தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம் ஆகிய ஒன்பதுவித பக்தியால் தமது இஷ்ட தேவதையை வழிபட்டு அந்தந்த ரசத்திற்குத் தக்கவாறு கீர்த்தனைகளை அமைத்தருளினார்.

தமது இஷ்ட தெய்வமான இராமபிரானைக் குழந்தையாகவும், சிறு பிள்ளையாகவும், வீரனாகவும், பிராணநாதனாகவும், எஜமானனாகவும், தோழனாகவும், பரப்பிரம்மமாகவும் மனத்தில் பாவனை செய்துகொண்டு, தாம் கோசலை, தயரதன், விசுவாமித்திரன், சீதை, இலக்ஷ்மணன், அனுமன் ஆகியோரின் ஸ்தானத்திலிருந்து அனுபவித்துத் தம் அனுபவங்களைக் கீர்த்தனை ரூபமாகப் பொழிந்தனர். வால்மீகி இராமாயணமேயன்றி மற்றும் அத்யாத்ம இராமாயணம் முதலிய நூல்களில் காணப்பெறும் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு

நவரசம் ததும்பும் கிருதிகளை அமைத்தார். அழகிய பல சம்பவங்கள் அவரது அபாரமான கற்பனையில் தோன்றியவை. இவற்றை அனுபவிக்கப் புகுந்தால் அதுவே ஒரு தனி நூலென விரியும்.

இப்பேர்ப்பட்ட எண்ணற்ற யோக்கியதாம்சங்களைப் பெற்றிருந்தும், வைராக்கியத்தின் நிதியாக விளங்கி, இறைவனைத் தவிர ஒருவனுக்கும் தலை வணங்காமலும், மானிடம் பாடாமலும், வறுமையையே உறுதுணையாகக் கொண்டு ஸ்வாமியவர்கள் ஜீவயாத்திரையை நடத்தி முக்தியடைந்தார். இவருடைய வைராக்கிய கீர்த்தனைகள் நமக்கு பர்த்ருஹரியின் ''நீதி'', வைராக்ய'' சதகங்களையும் ஸ்ரீ வேதாந்த தேசிகனின் ''வைராக்ய பஞ்சகத்தை''யும் நினைவுறுத்துகின்றன. எது நேரினும் நரஸ்துதி செய்வதில்லையென்ற பிரதிக்கினையை ''காஸிச் சேதே'', ''துர்மார்க்கசர'', ''நிதிசால ஸுகமா'' முதலிய கிருதிகளில் வெளியிட்டிருக்கிறார்.

''சகல தர்மங்களிலும் தியாகமே சிறந்தது'' என்று அவரே ஒரு கிருதியில் குறிப்பிட்டிருப்பதுபோல் தியாக மூர்த்தியாக விளங்கிய அவருக்குத் தியாகராஜர் என்ற பெயர் அமைந்தது மிகவும் பொருத்தமேயாகும்.

பராசரர், புண்டரீகர், ஆழ்வார்கள், நாயன்மார்கள் போன்ற தொண்டர்களின் மரபில் வந்த பக்த சிகாமணியாகிய தியாக பிரம்மம் அபரிமிதமாக வாரி வழங்கியுள்ள இசைச் செல்வத்தையும் இலக்கியச் செல்வத்தையும் அள்ளிப் பருகி நாம் கிருதார்த்தர்களாக விளங்குவோமாக!

''ஈலாகநி விவரிம்பலேநு
சாலா ஸ்வாநுபவ வேத்யமே''

ஜூலை 1967 — டி. எஸ். பார்த்தஸாரதி

# கீர்த்தனை அட்டவணை

ஸ்ரீ

# தியாகராஜஸ்வாமி கீர்த்தனைகள்

---

## முதற் பாகம்

---

### விக்கிநேசுவர ஸ்தோத்திரம்

ராகம்: பங்காள — தாளம்: தேசாதி
(மேளகர்த்தா 29)

பல்லவி — கிரிராஜஸுதாதநய ஸதய (கி)

அனுபல்லவி — ஸுரநாத முகார்ச்சித பாதயுக
பரிபாலய மாமிப ராஜமுக (கி)

சரணம் — கணநாத பராத்பர சங்கரா-
கம வாரிநிதி ரஜநீகர
பணிராஜகங்கண விக்நநிவா-
ரண சாம்பவ ஸ்ரீத்யாகராஜநுத (கி)

மலைமகள் தனயனே! தயை பொருந்தியவனே! இந்திரன் முதலியோரால் தொழப்படும் பாதனே! என்னைக் காத்தருள். யானைமுகத்தவனே! சிவகணங்களுக்குத் தலைவனே! பராத்பர! நலம் புரிபவனே! வேதங்களென்னும் கடலுக்குச் சந்திரன் போன்றவனே! ஆதிசேடனைக் கங்கணமாக அணிந்தவனே! இடையூறுகளைப் போக்குபவனே! சிவகுமாரனே! ஸ்ரீ தியாகராஜனால் வணங்கப்பெறுபவனே!

2

ஸ்ரீமணி (மே. 2) ஆதி

ப. ஏமந்துநே விசித்ரமுநு இலலோந மநுஜுலாடே (தே)

அ. நீ மந்த்ரமஹிம நெறுங்கலேக
ஸாமாந்யுலை பல்கேரு நீதோ (நே)

ச. தாமஸம்பு சேத தத்வமு பலுகுசு
காமதாஸுலை கருணமாலி மதிநி
பூமி ஸஞ்சரிஞ்சி பொட்ட நிம்புசுநு
தாமே பெத்தலட த்யாகராஜநுத (ஏ)

இவ்வுலகில் மாந்தர் பேசும் விசித்திர மொழிகளை என்ன வென்பேன்? உன் திருமந்திரத்தின் மகிமையை அறியமுடியாமல் அற்பர்களைப்போல் உன்னுடன் உரையாடுகிறார்கள்! தாமஸ குணம் நிறைந்த தத்துவங்களைப் பேசி, காமத்திற்கு அடிமை களாகி, நெஞ்சில் சிறிதும் கருணையின்றி, உலகில் இங்குமங்கும் திரிந்து வயிற்றை நிரப்பிக்கொண்டு தாமே பெரியோர்கள் என்று பெருமைகொண்டனர்.

3

வநஸ்பதி (மே. 4) ஆதி

ப. பரிஹாஸகமா [1] மாட பதுகுரிலோ பொகடிநதி (ப)

அ. வெறபுநநு மாநமுந வெஸநம்புலசே கோரி
சரணாகதரக்ஷக நிநு ஸந்ததமுநு சரணண்டே (ப)

ச. ஒக முநிகை த்ரௌபதி த்வாரகாநிலயா சரணநக
ஒக மாடகு விபீஷணுடு ஓர்வலேக சரணநக
ஸகலேச்வர ப்ரஹ்லாது ஜாலிசே சரணநக ஹி-
தகருண்டை ப்ரோசிதி த்யாகராஜுநி மாட (ப)

---

1. பரியாசகமா

பதின்மருக்கிடையே நான் உன்னைப் புகழ்ந்ததனைத்தும் பரிகாசப் பேச்சாகிவிட்டதா? அச்சத்திலும், மானங்காக்கவும், துயரிலும் நான் உன்னை வேண்டி, சரண் புகுந்தவர்களைக் காக்கும் உன்னை சதா சரணடைந்தது (பரிகாசமா?) ஒரு முனிவருக்காக (துர்வாசர்) திரௌபதி ''துவாரகா நிலயா! நீயே சரண்'' என்ற பொழுதும், (ராவணன் கூறிய) ஒரு வார்த்தையைப் பொறுக்கமாட்டாத விபீஷணன் சரணடைந்த பொழுதும், பிரஹ்லாதன் துயரத்துடன் அடைக்கலம் புகுந்த பொழுதும் அவர்களுக்கு இதம் அளித்துக் காத்தருளினுய், ஸகலேசுவரனே! தியாகராஜனின் பேச்சு மாத்திரம் பரிகாசமா?

4

ரஸாளி (மே. 4) ஆதி

ப. அபராத்முல நோர்வ ஸமயமு
க்ருப ஜூடு க் நமைந நா (ய)

அ. சபலசித்துடை மநஸெறுக்கநே
ஜாலி கலுகஜேஸுகொநி[1] மொரலநிடே (அ)

ச. ஸகலலோகுல பலாபலமு[2] லெறிகி
ஸம்ரக்ஷிஞ்சுசு நுண்டக நங்-
நொகநி ப்ரோவ தெலியநு கீர்த்தந ச-
தக[3] மொநர்ச்சுகொந்ந த்யாகராஜுநி (அ)

கனத்த என் அபராதங்களைப் பொறுத்தருள இதுவே தருணம். கிருபையுடன் என்னை நோக்கு. சபலம் நிறைந்த உள்ளத்துடன், என் மனத்தை நானே அறியாமல், துயரடைந்து முறையிடும் என் குற்றங்களைப் பொறுத்தருள். ஜீவகோடிகளின் வினைப்பயன்களை அறிந்து நீ அவர்களைக் காப்பதுபோல் என்னையும் பாலித்தருள்வாய் என்று அறிந்து உன்மீது கீர்த்தனைத் தொகுதியைப்பாடிய தியாகராஜனின் பிழைகளைப் பொறுத்தருள்.

---

1. பெட்டுகொநி 2. பலமுல 3. ஸுசதக

5

மானவதி (மே. 5) தேசாதி

ப. எவரிதோ நே தெல்புது ராம நாலோநி ஜாலிநி (எ)

அ. கவகொநி ஸதா பஜநஸேய கார்யமுலந்நி வேராய (எ)

ச. கணநாது ஜேய கோர்க கடுவாநருடை தீரெகா

குணமயாமயாம்புத[1] ஸமீர கோபால

த்யாகராஜநுத (எ)

என் உள்ளத்திலுள்ள துயரத்தை யாரிடம் கூறுவேன்? ஜதை கூடி ஸதா பஜனை செய்தும் காரியங்களனைத்தும் வேருக முடிந்தன. பிள்ளையார் பிடிக்கக் குரங்காக முடிந்துவிட்டதே! ஐம்புலன்களென்னும் நோயாகிற மேகத்தைக் கலைக்கும் காற்றைப் போன்றவனே! கோபால! தியாகராஜனுல் வணங்கப் பெறுபவனே!

6

மனோரஞ்ஜநி (மே. 5) ஆதி

ப. அடு காராதநி பல்க நபிமாநமு லேகபோயெநா (அ)

அ. எடுலோர்த்துநு ஓ[2] தயஜூட

ஏவேல்பு ஸேயு சலமோ தெலிஸி (அ)

ச. வேத சாஸ்த்ரோபநிஷத் விதுடைந

நிஜதாரிநி பட்டி தாஸுடைந

நாதுபை நெபமெஞ்சிதே த்யாகராஜநுத (அ)

''அவ்விதம் நேராது'' என்று உறுதி கூற உனக்கு என்னிடம் அபிமானம் இல்லாமல் போய்விட்டதா? நான் எப்படிப் பொறுப்பேன்? என் ஐயனே! கருணை கூர்ந்து என்னைப் பார். இது எந்த தெய்வம் செய்யும் கொடுமையோ? வேதங்கள், சாத்திரங்கள், உபநிஷத்துகள் முதலியவற்றை நான் நன்கு கற்றிருந்தும், என் ஸ்வதர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு உன் தாசனுக விளங்கியும் என்மீது நீ குற்றம் சாட்டினுல் (எனக்கு வேறு கதி ஏது?).

---

1. குணமயமாயாம்புத 2. நே தயஜூட

7

தோட்̆ (மே 8.) சாபு (த்ரிபுட)

ப. எந்̆து தா̆கினாட̆ோ ஈட̆கு ரா-
நெங்நடு̆ த்̆யவச்சுநோ ஓ மநஸா (எந்̆து)

அ. எந்துகு சபலமு விநவே நா மநவிநி
முந்̆தடிவலெ ப̆க்துல போஷிஞ்சுட (கெந்̆து)

ச. 1. அலநாடு̆ கநககசிபு நிண்ட̆ாரு
சலமு ஜேஸி ஸுதுநி ஸகல ப̆ா-
த̆ ல பெ̆ட்டகா̆ மதி̆நி தா̆ளக நிச்-
சலுட̆ைந ப்̆ரஹ்லாது̆ கொறகு கம்ப̆மு லோ
பல நுண்ட̆க̆லேதா̆ ஆ ரீதிநி நே (டெ̆ந்̆து)

2. முநு வாரிவாஹ வாஹந தநயுடு̆ மத̆-
முந ரவிஜுநி சால கொ̆ட்டுட ஜூசி
மநஸு தாள ஜால லேக ப்ரேம-
முந பாலநமு ஸேய தாளதருவு மரு-
கு̆ந நில்வக̆லேதா̆ ரீதிநி நே (டெ̆ந்̆து)

3. தொலிஜந்மமுல நாடு̆ ஜேஸிந து̆ஷ்கர்ம
முல நண̆கநு ஸேய ஆறு சத்-
ருல பட்டி பொ̆டிஸேய அதி̆யு காக
இலலோ சஞ்சலமு ரஹித[1] நிஜப̆க்த ஜ-
நுலநு த்̆யாக̆ராஜுநி ரக்ஷிம்ப நே (டெ̆ந்̆து)

---

1. இலநு சஞ்சல விரஹித

எங்கு சென்று ஒளிந்தானோ? இங்கு எழுந்தருள வேண்டு மென்ற தயை அவனுக்கு என்று வருமோ? மனமே! உனக்கு வீண் சபலம் ஏன்? என் விண்ணப்பத்தைக் கேள். முன்புபோலவே பக்தர்களைக் காப்பாற்ற (அவன் எங்கு ஒளிந்தானோ?).

அன்றொரு நாள் ஹிரண்யகசிபு பெருஞ்சினத்துடன் தன் புதல்வனுக்குப் பல துன்பங்களை இழைக்கவும், அவற்றைக் கண்டு மனம் பொறுமல், கலங்காத பக்தியுடைய பிரஹ்லாதனின் பொருட்டுத் தூணில் மறைந்திருக்கவில்லையா?

முன்பு இந்திர குமாரனை வாலி மதத்துடன் சூரிய புத்திரனை சுக்கிரீவனை பலமாகத் தாக்குவதைக் கண்டு மனம் தாளாமல் அன்புடன் அவனைக் காக்கப் 1 பனைமரத்தின் மறைவில் நிற்கவில்லையா?

பூர்வ ஜன்மங்களில் புரிந்த தீச்செயல்களின் பயன்களை ஒழிப்பதற்கும், காமம் முதலிய ஆறு சத்துருக்களைப் பொடியாக்கவும், இவ்வுலகில் மனஞ்சலிக்காத தன் பக்தர்களையும் இந்த தியாகராஜனையும் காப்பாற்றவும் (அவன் இன்று எங்கு ஒளிந்தானோ?).

## 8

தோடி ஜம்ப

ப. தாசுகோவலெனா தாசரதி நீதய[2] (தா)

அ. ஐசுவாரலலோந சுலகநே நநுஜூசி (தா)

ச. 1. கநிகரமு காந்தபை கலிகி முத்திடு வேள
ஜநகஜ நாமாட ஸமயமநி பல்கிதே (தா)

2. கரகி பத்முல வ்ரால கநி கருணஸேயுவேள
ப்ரதுடெங்கோ நந்நு ப க்துடநி பல்கிதே (தா)

3. நேமமுந பரிசர்ய நேர்புநு பொக்டுவேள
ஸௌமித்ரி த்யாக்ராஜுநி மாட பல்கிதே (தா)

---

1. இங்கு "ஸால" அல்லது மராமரம் என்று இராமாயணத்தில் குறிப்பிட்டிருந்தும், பனைமரம் என்றும் சிலர் கூறுவர்.

2. நீது தய

தசரதன் மைந்தனே! உன் தயையை நீ ஒளித்துவிட வேண்டுமா? அனைவருக்குமிடையே என்னைப் பார்த்து உனக்கு அலட்சியமா? அன்பு பெருகி நீ பிராட்டியுடன் ஏகாந்தமாயிருக்கும்பொழுது அதுவே தருணமென்று சீதை என்னைப் பற்றிக் கூறியும், பக்தி பரவசத்துடன் உன் பாதங்களில் அடிபணிந்த பரதனுக்கு நீ அருள் புரிந்தபொழுது, அவன் நான் ஒரு பக்தன் என்பதைக் கூறியும், நியமத்துடன் இலக்ஷ்மணன் புரியும் பணிவிடையை மெச்சி நீ புகழும்பொழுது அவன் இந்த தியாகராஜனின் விஷயத்தைக் கூறியும் (உன் தயையை நீ ஒளிக்க வேண்டுமா?)

9

தோ̆டி ஆ̆தி

ப. சேஸிந தெ̆ல்ல மறசிதிவோ ஓ ராம ராம (சே)

அ. ஆஸகொ̆ந்நட்டி நந்நலபி̆ஞ்சுடகு முந்நு (சே)

ச: 1. ஆலோ[1] நீகைந ப̆க்துராலோ[2] யநுசு நாடு̆

ப்ராலுமாலக ரவிபா̆லுநி செலிமியு (சே)

2. பா̆ஷ கப்பகநு வி̆பீ̆ஷணுநி கொ̆றகாதி̆

சேஷுட̆க்கு தம்முநி போஷிஞ்சமநி ராஜு (சே)

3. ராம ஸ்ரீத்யாக̆ராஜ ப்ரேமாவதார ஸீதா

பா̆ம மாடலு தெ̆ல்பு[3] பீ̆மாஞ்ஜநேபு ப்ரஹ்ம (சே)

ஓ ராமா! உன்மீது அன்பு பூண்டிருக்கும் என்னைக் கஷ்டத்திற்கு ஆளாக்குவதற்காகவே நீ முன்பு செய்ததனைத்தையும் மறந்தாயோ? சீதா தேவி உன் தர்மபத்தினி என்றோ அல்லது உனது சிறந்த பக்தை என்றோ கருதி சிறிதும் சோம்பலின்றி அன்று சுக்ரீவனுடன் நட்பு கொண்டதையும், கொடுத்த வாக்கை மீறாமல் ஆதிசேடனின் அவதாரமாகிய உன் தம்பிக்கு உத்தரவிட்டு விபீஷணனை அரசனாக்கியதையும், சீதையிடம் தூது சென்று அவளுடைய செய்தியை உனக்குரைத்த அனுமனுக்கு பிரம்ம பட்டம் அளித்ததையும் மறந்தனையோ? ராம! தியாகராஜனின் அன்புருவானவனே!

---

1. ஆலு 2. ப̆க்துராலு 3. தெ̆ல்ப

## 10

தோ̆டி ஆதி

ப. கத்தநுவாரிகி கத்து கத்தநி மொறல நிடு

பெத்தல மாடலு நேடபத்த மௌனோ (க)

அ. அத்தம்பு செக்கிள்ளசே முத்துகாரு மோமுஜூட

புத்தி கல்கிநட்டி மாவத்த ராவதேமிரா (க)

ச. நித்துர நிராகரிஞ்சி முத்துகா தம்புர பட்டி

சுத்த மைந மநஸுசே ஸுஸ்வரமுதோ

பத்து தப்பக புஜியிஞ்சே பக்தபாலநமு ஸேயு

தத்தய சாலிவி நீவே த்யாகராஜ ஸந்நுத (க)

(தெய்வம்) உண்டென்று உரைப்பவர்களுக்கு "உண்டு, உண்டு" என்று முறையிடும் பெரியோர்களின் பொன்மொழிகள் இன்று பொய்யாகிவிட்டனவோ? கண்ணாடியையொத்த கன்னங்களுடன் எழில்மிகுந்த உன் திருமுகத்தைக் காண ஆசை கொண்ட என்னருகில் நீ வராததேன்? உறக்கத்தை ஒழித்து, தம்புராவை அழகுடன் கையில் ஏந்தி, நிர்மலமான மனத்துடனும், ஸுஸ்வரத்துடனும், நியமம் தவறாமல் உன்னை பஜனை செய்யும் பக்தர்களைப் பாலித்தருளும் தயாசீலன் நீயல்லவா?

## 11

தோ̆டி ரூபகம்

ப. தப்பி ப்ரதிகி போவ தரமா ராம கலிலோ (த)

அ. முப்புந விஷயதடாகமுந முநுக்க த்ருட மநஸை (த)

ச. 1. கஞ்சு மொதலு லோஹ தந கநகமுலநு ஜூசி விஸ

மஞ்சு மறியு பெங்குலநுசு [1] நெஞ்சியண்டநி மநஸை (த)

---

1. பெஞ்சிகநுசு

2. நங்க்நாசுல மாநகு் யங்க்வஸ்த்ரமுல பாக்கு்
முங்குருலநு க்நி யந்தரங்க்முநநு ஆஸிஞ்சக (த)

3. ஜாஜி மல்லெ மந்தார ஸரோஜமுலநு மநஸார
ராஜ பதமுசே த்யாக்ராஜநுதுநி பூஜிஞ்சக (த)

இக்கலியில் மாந்தர் பேராபத்துக்களில் அகப்படாமலும், சிற்றின்பக் குளத்தில் மூழ்காமலும் திடமான மனத்துடன் தப்பிப் பிழைத்துப் போவது சாத்யமா? வெண்கலம் முதலிய உலோகங்களேயும், செல்வம், பொன் முதலியவற்றையும் பார்த்து, அவை விஷம் என்றும், பானே ஓடுகள் என்றும் எண்ணி மனத்தை அவற்றில் அண்டவிடாமலும், கபடம் நிறைந்த மாதரின் மேலாடை வனப்பையும் முடி அழகையும் கண்டு உள்ளத்தில் ஆசை கொள்ளாமலும் (தப்பிப் பிழைக்க முடியுமா?). சாதி, மல்லிகை, மந்தாரை, தாமரை மலர் இவற்ருல் மனமார தியாகராஜன் அடிபணியும் இராகவனே ராஜமார்க்கமாகப் பூசிக்காமல் வேறுவிதமாக (தப்பிப் பிழைக்க முடியுமா?).

## 12

தோடி ரூபகம்

ப. ப்ருந்தாவந லோல கோவிந்தார விந்தநயந (ப்ருந்)

அ. ஸுந்தராங்க் த்ருதரதாங்க்
ஸுஜநாரி திமிர பதங்க் (ப்ருந்)

ச. மாமவ ஸ்ரீ ரமணீ மணி மதநாச்ரித மித்ர
ராமதாஸதாஸ த்யாக்ராஜநுத சரித்ர (ப்ருந்)

பிருந்தாவனத்தில் ஆசை கொண்டவனே! கோவிந்த! தாமரைக் கண்ணனே! அழகிய வடிவனே! சக்கரத்தைத் தரித்தவனே! நல்லோர்களின் விரோதிகளெனும் இருட்டைப் போக்கும் சூரியனே! என்னேக் காத்தருள். திருமகள் கேள்வனே! அண்டியவர்களின் நண்பனே! ராமதாசரின் தாசனுகிய தியாகராஜனுல் துதிக்கப்பட்ட சரித்திரத்தையுடையவனே!

## 13

தோடி தேசாதி

ப. கட்டேர ராதா மனஸா (க)

அ. எட்லேக பஜந ஜேஸி நீ—
யெட்கல்கு நிஜதப்பரலநு தெலிஸி (க)

ச. கலசித்த லௌகிகமநே[1] ச்ருங்-
கலமந்து தக்லகநே உலூ-
கல பத்துநிகி நிஜதாஸுடை
விலஸில்லு த்யாகராஜு மாட விநி (க)

*மனமே! இடைவிடாமல் பஜனை செய்துகொண்டு, உன்னிடம் தோன்றும் மோச சிந்தனைகளை நீயே அறிந்து கடைத்தேறலாகாதா? தீய எண்ணங்களை அடிப்படையாகக் கொண்ட உலக வழக்கென்னும் சங்கிலியால் பிணைக்கப்படாமல், உரலில் கட்டுப்பெற்ற கண்ணனின் மெய்யடியவனாக விளங்கும் தியாகராஜனின் பேச்சைக் கேட்டு (நீ கடைத்தேறலாகாதா?).*

## 14

தோடி ஆதி

ப. கொலுவமரெகதா கோதண்டபாணி (கொ)

அ. நலுவகு பலுகுலசெலியகு ருக்மிணிகி
லலிதகு ஸீதகு லக்ஷ்மணுநி கருதைந (கொ)

ச. 1. வேகுவஜாமுந வெலயுசு தம்புர
ஜேகொநி குணமுல ஜெலுவொந்த பாடுசு
ஸ்ரீ கருநிகி[2] ச்ரித சிந்தாமணிகிநி
ஆகலி தீர பாலாரகிம்பநு ஜேஸே (கொ)

---

1. மார்கம்நே 2. காச்ரித

2. விநவய்ய ஸரிபொத்துவேள நாது நிகி
சநுவுந பங்கீட ஸ்நாநமு காவிஞ்சி
க நுநிகி திவ்ய போஜநமுநு பெட்டி கம்-
மநி விடெ மொஸங்குசு மறவக ஸேவிஞ்சே (கொ)

3. பாகவதுலு கூடி பாகுக நநய
ராகமுலசே தீபாராதந மொநரிஞ்சி
வேக்மெ ஶ்ரீஹரி விருலபை பவளிஞ்சி
ஜோகொட்டி த்யாகராஜு ஸுமுகு நி லேபெ (கொ)

பிரமனுக்கும், ஸரஸ்வதிக்கும், ருக்மிணிக்கும், பராசக்திக்கும், ஸீதைக்கும், லக்ஷ்மணனுக்கும் கிடைத்தற்கரிய கொலுவிருக்கை கோதண்டபாணிக்கு எனது இல்லத்தில் அமைந்ததல்லவா? அதிகாலையில் தம்புராவைக் கையில் ஏந்தி அவனுடைய திவ்ய குணங்களை அழகாக ஸங்கீர்த்தனம் செய்து, லக்ஷ்மீகரனும் சரணடைந்தவர்களுக்குச் சிந்தாமணியுமாகிய அவனுக்குப் பசி தீரப் பால் அமுது செய்விக்கும் (கொலு அமைந்ததல்லவா?) பொழுது விடிந்ததும் பெருமானுக்குப் பன்னீரில் திருமஞ்சனம் செய்வித்து, திவ்யமான போஜன வகைகளை அமுது செய்வித்து, வாசனை மிகுந்த தாம்பூலம் அளித்து மறவாமல் சேவிக்கும் (கொலு அமைந்ததல்லவா?) அடியார்கள் ஒன்றுகூடி கன, நய ராகங்களில் இசை பாடி தீபாராதனம் செய்த பின்னர் ஸ்ரீ ஹரியை மலர்ப்படுக்கையின் மீது பள்ளிகொள்ளச் செய்து தியாகராஜன் அந்த ஸுமுகனைத் திருப்பள்ளியெழுச்சி பாடி எழுப்பும் (கொலு இங்கு அமைந்த தல்லவா?)

## 15

தோடி தேசாதி

ப. தாசரதீ நீ ருணமு தீர்ப்ப நா
தரமா பரமபாவந நாம (தா)

அ. ஆசதீர தூர தேசமுலநு ப்ர-
காசிம்ப ஜேஸிந ரஸிகசிரோமணி (தா)

ச. ப்க்திலேனி கவிஜால வரேண்யுலு
பாவ மெறுக்லேரனி கலலோ[1] ஜனி
புக்தி முக்தி கல்குனனி கீர்த்தநமுல
போதிஞ்சிந த்யாக்ராஜ கரார்ச்சித (தா)

தசரதன் மைந்தனே! உன் கடனைத் தீர்க்க என்னாலாகுமா? ஆசை தீர தூரதேசங்களில் என்னை பிரகாசிக்குமாறு செய்த ரசிகர் தலைவனே! பக்தியற்ற கவி சிரேஷ்டர்கள் உட்கருத்தை அறியாரென்று கருதி, கனவில் தோன்றி இகம், பரம் இரண்டையும் அளிக்கவல்ல கீர்த்தனங்களை எனக்குப் போதித்த சக்கரவர்த்தி திருமகனே!

## 16

தோடி ரூபகம்

ப. நிநுவிநா ஸுகமு கா்ந நீரஜநயந (நி)

அ. மநஸுகெந்தோ யாநந்தமை மைபுலகரிஞ்சகா (நி)

ச. 1. ரூபமு ப்ரதாபமு சரசாபமு ஸல்லாபமு கல (நி)

2. கருணாரஸ பரிபூர்ண வரதா ம்ருதுவார்த்தலுகல (நி)

3. ராகரஸிக ராகரஹித த்யாக்ராஜ பாக்தேய (நி)

தாமரைக் கண்ணனே! உன்னையன்றி வேறு எங்கும் இன்பத்தை நான் காணேன். உள்ளத்திற்கு அளவற்ற ஆனந்தத்தையளித்து உடல் பூரிக்கச் செய்கிறாய். வடிவழகும், வீரமும், அம்பும், வில்லும், அளவளாவுதலும், இன்சொல்லும் ஒருங்கே அமைந்தவன் நீ. கருணாரசம் நிறைந்தவன். வரம் தருபவன். இசையை ரசிப்பவன். மோகம் அற்றவன். தியாகராஜனின் பாக்யமே உருவானவன்.

## 17

தோடி த்ரிபுட

ப. எந்துகு த்யராதுரா ஸ்ரீராமசந்த்ர நீ (கெந்)

அ. ஸந்தடியநி மறசிதிவோ இந்துலேவோ நீ (கெந்)

---

1. கலிலோந

ச. 1. ஸாரெகு து³ர்விஷய ஸார மநுப⁴விஞ்சு
வாரி செலிமி ஸேயநேரக மேநு
ஸ்ரீராம ஸக்³மாயெ [1]ஜூசி சூசி
நீரஜத³ளநயந நிர்மலாபக⁴ந (எந்)

2. தீ³ரநி ப⁴வநீரதி⁴யாறடி³ ஸைரிம்ப
நேரக ப⁴யமந்த³க³ பங்கஜபத்ர
[2]நீருவிதமல்லாட³க³ இட்டி நநு ஜூசி
நீரதா³ப⁴ சரீர நிருபமசூர (எந்)

3. ஜாகே³ல இதி³ ஸமயமேகா³து³ சேஸிதே
ஏக³தி பலுகவய்ய ஸ்ரீராம நீ–
வே³காநி த³ரிலேத³ய்ய தீ³நசரண்ய
த்யாக³ராஜவிநுத தாரகசரித (எந்)

*ஸ்ரீ ராமசந்திர! உன் தயை வராத காரணமேன்? இது இரைச்சல் என்று என்னை மறந்தாயோ? அல்லது நீ இங்கு இல்லையோ? திரும்பத் திரும்பத் தீய விஷயங்களால் உண்டாகும் துக்கத்தை அனுபவிக்கும் மாந்தரின் உறவை நான் மேற்கொள்ள முடியாமல், உன் தயவை எதிர்பார்த்து என் உடல் பாதியாகி விட்டது. தாமரைக் கண்ணனே! தூய வடிவத்தாய்! தீராத இந்த சம்சாரக் கடலின் துன்பத்தைப் பொறுக்க முடியாமல், பயமடைந்து, தாமரையிலையில் தண்ணீரைப்போல் தத்தளிக்கும் என்னைப் பார்த்து (உன் தயை வராததேன்?) மேகவண்ணனே! இணையற்ற வீரனே! இன்னும் தாமதமேன்? இது தருணமல்ல என்கிறாயா? எனக்கு வேறு யார் கதி? ராம! உன்னைத் தவிரப் புகல் யாரும் இலர். தீனசரண்ய! தியாகராஜனால் துதிக்கப் பட்டவனே! மக்களைக் கடைத்தேற்றும் சரிதத்தையுடையவனே!*

---

1. நிட்டி நநு ஜூசி 2. நீரவிதி³நல்லாட³க³

3706



18

தோடி ஆதி

ப. ஏமனி மாட்லாடிதிவோ ராம

எவரி மனஸு கேவிதமோ தெலிஸி (ஏ)

அ. மாம மருது லநுஜுலு தல்லிதண்ட்ருலு

பாமலு பரிஜநுலு ஸ்வவசமௌட (கே)

ச. ராஜுலு முநுலு ஸுராருலு[1] வரதிக்-

ராஜுலு மரி ஸூருலு சசத்ர திந

ராஜுலு லோபடி நடுவநு த்யாக

ராஜவிநுத நயப்யமுக முத்துக (ஏ)

மாமன், மைத்துனர், தம்பியர், தாய் தந்தையர், ஸ்திரீகள், பரிஜனங்கள் முதலியோர் உன் வசமாவதற்கு அவரவர்களின் மனம் எவ்விதம் என்று அறிந்து எவ்வாறு சம்பாஷித்தாயோ? மேலும் அரசர்கள், முனிவர்கள், அரக்கர்கள், சிரேஷ்டர்களான திக்பாலகர்கள், பண்டிதர்கள், சந்திர சூரியர் முதலியோரும் உனக்கடங்கி நடக்குமாறு நயத்திலும், பயத்திலும், இனிமையுடனும் (எவ்வாறு சம்பாஷித்தாயோ?)

19

தோடி ஆதி

ப. நீதய ராவலெகாக நே நெந்தவாடநு ராம (நீ)

அ. வேத சாஸ்த்ர புராணமுலந்நி நீ-

வே கதியநுசு மொறபெட்டு கநுக (நீ)

ச. 1. ஸாரஸார காந்தாரசர மத் வி-

தார ஸுந்தராகார ஸுகுண ஸுகு-

மார மாரமண நீரஜாப்தகுல

பாராவார ஸுதா ரஸபூர (நீ)

---

1. ஸுராஸுருலு

2. ஸ்ரீஹரே வரவிதேஹஜாதிப வி-
வாஹ த்ளிதரிபுதேஹ சேஷஸம
பாஹ ஸஜ்ஜநஸமூஹ வைரி மத்
தாஹ மௌநிஹ்ருத்கேஹ நாதுபை (நீ)

3. ஆதிதேவ தேவாதி ம்ருக்ய ஸந
காதி விநுத காமாதிஷட்குண ஹ-
ராத் மத்ய ரஹிதாதி த்யாகரா-
ஜாதி வந்தித விவாதி மத்ஹரண (நீ)

வேத சாஸ்திர புராணங்களனைத்தும் நீயே கதியென்று முறையிடுகின்றனவாதலால், உன் தயை எனக்கு வரவேண்டுமே தவிர, இல்லாவிடில் நான் எம்மாத்திரம்? நீ அனைத்திற்கும் சாரமானவன். காட்டில் திரியும் அரக்கர்களின் மதத்தை அடக்குபவன். அழகிய வடிவத்தவன். நற்குணங்களால் அழகு செய்யப்பட்டவன். திருமகள் நாயகன். சூரிய குலமென்னும் கடலில் உதித்த சந்திரன். ஹரியே! மேன்மை பொருந்திய சீதையின் நாயகனே! கருட வாகனனே! நீ சத்துருக்களை ஒழிப்பவன். ஆதிசேடனையொத்த கைகளையுடையவன். நல்லோர்களால் விரும்பப்பட்டவன். எதிரிகளின் மதத்தை எரிக்கும் நெருப்பு. முனிவர்களின் இதயத்தில் உறைபவன். ஸனகாதிகளால் துதிக்கப்பட்டவன். காமம் முதலிய ஆறு குணங்களையும் ஒழிப்பவன். ஆதியும் நடுவும் அற்றவன். வழக்கிடுபவர்களின் கொழுப்பை அடக்குபவன். ஆதிசிவனால் வணங்கப்பட்டவன்.

## 20

தோடி ரூபகம்

ப. ஆரகிம்பவே பாலாரகிம்பவே - ரகு-
வீர ஜநகஜா கர பவித்ரிதமௌ வெங்நபா (லா)

ச. ஸாரமைந திவ்யாந்நமு
ஷட்ரஸயுத பக்ஷணமுலு
தாரஸோத ராதுலதோ
த்யாகராஜவிநுத பா (லா)

ரகுவீரனே! லோகமாதாவாகிய சீதாபிராட்டியின் கர ஸ்பரிசத்தினால் தூய்மை பெற்ற இவ்வெண்ணெயையும் பாலையும் அமுது செய்வாயாக! மேலும், ருசிமிகுந்த அன்னத்தையும் அறுசுவை நிறைந்த பக்ஷணங்களையும் உன் பத்தினியுடனும் தம்பியருடன் சேர்ந்து அமுது செய்தருள்.

## 21

தோடி ஆதி

ப. கோடி நதுலு த நுஷ்கோடிலோ நுண்டக்

ஏடிகி திரிகேவே ஓ மனஸா (கோ)

அ. ஸூடிக் ச்யாமஸுந்த்ர மூர்த்திநி

மாடி மாடிகி ஜூசே மஹாராஜுலகு (கோ)

ச. கங்க நூபுரம்புநநு ஜநிஞ்செநு

ரங்கநி காவேரி கநி ராஜில்லெநு

பொங்குசு ஸ்ரீ ரகு நாது நி ப்ரேமதோ

பொக்டே த்யாகராஜு மநவி விநவே (கோ)

நீல வர்ண காந்தியையுடைய ஸுந்தரமூர்த்தியை (ராமனை) ஸதா குறி தவறாமல் தரிசித்துக்கொண்டிருக்கும் பரமயோகிகளுக்கு கோடி நதிகள் தனுஷ்கோடியில் (குண்டலினியில் அல்லது புருவமத்தியில்) இருக்கும்பொழுது நீ ஏன் வீணாகத் திரிகிறாய், மனமே! கங்கை நதி திருமாலின் திருவடியிலிருந்து தோன்றிற்று. ஸ்ரீரங்கநாதனைத் தரிசித்துக் காவேரி நதி விளங்கிற்று. இராமபிரானை பக்தியுடன் துதிபாடும் தியாகராஜனின் விண்ணப்பத்தைச் செவி சாய்த்துக் கேள்.

## 22

தோடி சாபு

ப. ஏமி சேஸிதேமி ஸ்ரீராம

ஸ்வாமி கருணலேநிவாரிலலோ (ஏ)

அ. காமமோஹ தாஸுலை ஸ்ரீராமுநி

கட்டு தெலியலேநி வாரிலலோ (ஏ)

ச. 1. ஸவமு ஜேஸிதேமி கலிமிகி புத்ரோத்-
ஸவமு க்ல்கிதேமி
புவிலோ நங்யபீஜ ஜனிதுனி கொனியேமி
சிவகர ஸ்ரீராமுனி தயலேனி வா[1] (ரே)

2. மேட்கட்டிதேமி யந்துந லாந்தர்
ஜோடு கட்டிதேமி
சேடியலநு மெப்பிஞ்ச தெலிஸிதேமி
ஈடுலேனி ராமுனி தயலேனி வா[2] (ரே)

3. இம்மு கலிகிதே நேமி இல்லாலிகி
ஸொம்மு பெட்டிதே யேமி
கம்ம வில்து கேளினி தெலிஸியேமி
தம்மிகண்டிவானி கருணலேனி வாரிலலோ (நே)

4. ராஜ்யமேலிதேநேமி பஹுஜனுலலோ
பூஜ்யுலைதே நேமி
ஆஜ்யப்ரவாஹமுதோ நங்நமிடிதே நேமி
பூஜ்யுடைந ராமுனி தயலேநிவாரிலலோ (நே)

5. குருவு தானையேமி கண்டிகி மேநு
குருவை தோசிதேமி
வரமந்த்ர மங்யுல குபதேசிஞ்சிதே நேமி
வர த்யாகராஜநுதுனி தயலேனி வா (ரே)

காமம், மோகம் முதலியவற்றுக்கு அடிமைகளாகி, ஸ்ரீராமனின் நியமத்தை அறியாதவர்களும், அவனுடைய அருளுக்குப் பாத்திரமாகாதவர்களும் இவ்வுலகில் என்ன செய்து பயனென்ன? யாகம் செய்தும், செல்வ மிகுதியால் புத்திரன் பிறந்த விழாக் கொண்டாடியும், பிறர் வீட்டுக் குழந்தையை ஸ்வீகாரம் எடுத்துக்கொண்டும் என்ன பயன்? மெத்தை

1. 2 வாரிலலோ (நே)

வீடு கட்டியும், அதில் லாந்தர் விளக்குகள் பொருத்தியும், மாதரை வசப்படுத்த அறிந்தும் என்ன பயன்? மாளிகை அமைத்தும், மனைவிக்கு ஆபரணங்கள் அணிவித்தும், மதன விளையாட்டை அறிந்தும் என்ன பயன்? ராஜ்யம் ஆண்டும், பல ஜனங்களால் போற்றப்பட்டும், நெய் வழிந்தோடுமாறு உணவு அளித்தும் என்ன பயன்? தாமே குருவாக ஆகியும், கண்ணிற்குத் தம் உடல் பருத்ததாகத் தோன்றியும், மந்திரங்களைப் பிறருக்கு உபதேசம் செய்தும் என்ன பயன்? நன்மையளிப்பவனும், இணையற்றவனும், தாமரைக் கண்ணனும், பூசிக்கத்தக்கவனுமாகிய இராமபிரானின் அருள் பெறுதவர் என்ன செய்து பயனென்ன?

## 23

தோடி ஜ.ம்ப

ப. முந்நு ராவணபாத் நோர்வக விபீஷணுடு
மொற பெட்டகா ராமசந்த்ர (மு)

அ. மந்நிந்துநநுசு குலபிருதுலநு பொகடிந
மாட மறசிதிவோ ஸ்ரீராமசந்த்ர (மு)

ச. 1. முநு வஜ்ரபாத்ல நோர்வஜாலகநு
இநஜுண்டு நிநு ராமசந்த்ர
கொநியாட பரிதாபமுநு ஜூசி வாநி மதி
கொத்வ தீர்ச்சிந ராமசந்த்ர (மு)

2. முநு ஹேமகசிபு பாத்ல ஸஹிம்பலேக
முரஹரி யந ராமசந்த்ர
சநுவுதோ ப்ரஹ்லாது ஸந்தாபமுநு தீர்ச்சி
ஸௌக்ய மொஸகிந ராமசந்த்ர

3. முந்நு நீ மஹிம நே விந்நதேகாநி ஸந்-
முநி வந்த்ய ஸ்ரீராமசந்த்ர
பந்நகாத்பசயந பாலிஞ்சி நா வெதலு
பரிஹரிஞ்சவே ராமசந்த்ர (மு)

4. ராஜராஜ விராஜவாஹ ரவிகுலஜலதீ,
ராஜ ராக்வ ராமசந்த்ர
ராஜீவநேத்ர [1]ஜலஜோத்ப் வஸ்துத த்யாக்-
ராஜவந்தித ராமசந்த்ர (மு)

முன்பு ராவணன் இழைத்த துன்பங்களைப் பொறுக்க மாட்டாமல் விபீஷணன் முறையிடவும், ''நான் காப்பாற்று கிறேன்'' என்று நீ கூற, அவன் உன் குலப்பெருமையைப் புகழ்ந்ததனைத்தையும் மறந்தாயோ? முன்பு வாலி இழைத்த கொடுமைகளைத் தாளமாட்டாத சுக்ரீவன் உன்னை வேண்டவும், அவனுடைய பரிதாப நிலையைக் கண்டு அவன் மனக்குறையைப் போக்கியருளிய ராமசந்திர! முன்பு ஹிரண்யகசிபு புரிந்த தீமைகளைத் தாங்கமாட்டாத பிரஹ்லாதன் ''முரஹரியே'' என்று கதறவும் அன்புடன் அவனுடைய துயரத்தைப் போக்கி அவனுக்கு சௌக்கியம் அளித்த ராமசந்திர! முனிவர்களால் வணங்கப்படுபவனே! பாம்பணைப் பள்ளிகொண்டவனே! உன் புகழ் அனைத்தும் நான் காதால் கேட்டதுதான். என்னைப் பாலித்தருளி என் துயரங்களைத் தீர்ப்பாயாக! ராஜ ராஜனே! கருட வாகனனே! சூரிய குலமெனும் கடலில் உதித்த சந்திரனே! செந்தாமரைக் கண்ணனே! பிரமனால் துதிக்கப்படுபவனே!

## 24

தோடி சாபு

ப. பொத்து பொய்யேநி ஸ்ரீராமுநி
பூநி பஜிஞ்சவே மநஸா (பொ)

அ. நித்துரசேத கொ்ங்நாள்ளு விஷய
புத்து லசேத கொ்ங்நாள்ளு ஓ மநஸா (பொ)

ச. 1. பொத்துந லேசி த்ரிதாபமுலநு நருல
பொ்கடி பொ்கடி கொங்நாள்ளு பட்டி
எத்துரீதி கங்நதாவுந பஜியிஞ்சி
ஏமி தெலியக கொங்நாள்ளு

1. ப்வஸ்துத

முத்துக் தோஷே பவஸாகரமுந
முநிகி தேலுசு கொந்நாள்ளு
பத்து மாலிந பாமரஜநுலதோ வெர்ரி
பலுகுலாடுசு கொந்நாள்ளு ஓ மநஸா (பொ)

2. முதமுந த நதநயாகாரமுல ஜூசி
மதமுசேத கொந்நாள்ளு அந்து
செதரிநயந்த சோகார்ணவகதுடை
ஜாலி ஜெந்துடயு கொந்நாள்ளு
எதடி பச்ச ஜூசி தாளலேக தா-
நிலநு திருகுட கொந்நாள்ளு
முதிமதி தப்பிந வ்ருத்த தநமுந
முந்து வெநுக தெலியகநே கொந்நாள்ளு (பொ)

3. யாகாதி கர்மமுலநு ஸேயவலெநநி
யலஸடசேத கொந்நாள்ளு அந்து
ராக லோப முலதோ நபராத முலு சேஸி
ராஜஸமுந கொந்நாள்ளு
பாகுக நாம கீர்த்தநமுலு ஸேயுடே
பாக்யமநக கொந்நாள்ளு
த்யாகராஜ நுதுடைந ஸ்ரீராமுநி
தத்வமு தெலியகநே கொந்நாள்ளு (பொ)

ஓ மனமே! காலம் விரைவாகக் கழிந்துவிடும்! நன்முயற்சியுடன் ஸ்ரீராமனைத் துதிப்பாயாக. உறக்கத்தில் சில காலமும் இன்ப நுகர்ச்சியில் சில காலமுமாகப் பொழுது செல்கிறது. அதிகாலையில் எழுந்து மூவகைத் தாபங்களையும், மாந்தரையும் புகழ்ந்து சில காலம்; பட்டிமாட்டைப் போல் கண்ட இடங்களில் தின்று ஒன்றும் தெரியாமல் வாழ்ந்து சில காலம்; அழகாகத் தோன்றும் சம்சாரக் கடலில் மூழ்கி மிதந்து சில காலம்; ஒரு வகையிலும் சேராத பாமர ஜனங்களுடன் உன்மத்த

மொழிகளைப் பேசி சில காலம்; மகிழ்ச்சியுடன் தன் செல்வம், மக்கள், வீடு முதலியவற்றைக் கண்டு பெருமையடைந்து சில காலம்; பின்னர் அவை சிதறிப்போனால் துயரக்கடலில் ஆழ்ந்து துக்கமடைந்து சில காலம்; எதிரில் பசுமையை (பிறர் செல்வத்தை)க் கண்டு மனம் பொருமல் இங்குமங்கும் திரிந்து சில காலம்; கிழப்பருவத்தில் மனம் தடுமாறி முன்பின் தெரியாமல் சில காலம்; யாகம் முதலிய சடங்குகள் செய்ய வேண்டுமென்ற ஆயாசத்தினால் சில காலம்; அதில் ஆசை, கருமித்தனம் முதலியவற்றால் ஏற்படும் ரஜோகுண விகாரத்தினால் சில காலம்; பகவந்நாம ஸங்கீர்த்தனம் செய்வதே பாக்கியம் என்பதை அறியாமல் சில காலம்; தியாகராஜன் துதிக்கும் ஸ்ரீ ராமனின் தத்துவத்தை அறியாமல் சில காலம் (இவ்வாறாகக் காலம் விரைவில் கழிந்துவிடும். ஸ்ரீ ராமனை விடாமல் துதிப்பாயாக.)

25

தேசிகதோடி (மே. 8) ரூபகம்

| | | |
|---|---|---|
| ப. | * ராஜு வெட்லெ ஜூதாமு ராரே கஸ்தூரிரங்க | (ரா) |
| அ. | தேஜி நெக்கி ஸாமந்த[1] ராஜு லூடிக்மு ஸேய | |
| | தேஜரில்லு நவரத்நபு திவ்யபூஷணமுலிடி ரங்க | (ரா) |
| ச. | காவேரீ தீரமுநநு பாவநமகு ரங்கபுரிநி | |
| | ஸ்ரீ வெலயு சித்ரவீதி லோ வேட்கக ராக | |
| | ஸேவநு கநி ஸுரலு விருலசே ப்ரேமநு பூஜிஞ்சக | |
| | பாவிஞ்சி த்யாகராஜு பாடக வைபோகரங்க | (ரா) |

குதிரை வாகனமேறி, மன்னர்கள் பலரும் ஊழியம் புரிய, ஒளி வீசும் நவரத்தினங்கள் இழைத்த நகைகளை அணிந்து கொண்டு கஸ்தூரி ரங்கராஜன் பவனி வருகிறான், சேவிப்போம் வாரீர்! காவேரிக்கரையில் பவித்திரமான ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் திருவிளங்கும் சித்திர வீதியில் விநோதமாக அவன் எழுந்தருளும் சேவையைக் கண்டு தேவர்கள் வானுலக மலர்களைக்கொண்டு பக்தியுடன் பூஜிக்கவும், அதை மனத்தில் பாவித்து தியாகராஜன் பாடவும், வைபோகரங்க (ராஜன் பவனி வருகிறான், சேவிப்போம் வாரீர்).

---

* ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தைக் குறித்து ஸ்வாமி பாடியுள்ள ஐந்து கீர்த்தனைகளுள் இது ஒன்று.

1. ஸமஸ்த

## 26

தே̌சிகதோ̌டி ஜம்ப

ப. நே பொ̌கட்̌குண்டே நீகேமி கொ̌தவோ
நீ மநஸு தெ̌லிஸெ க̌த்ரா ஓராம (நே)

அ. ப்ராபு̌கல சுக ஸநக ப்ரஹ்லாத̌ நாரத̌
பரமேச ருத்̌ராதி̌ ப̌க்துலர்ச்சிம்பக̌ (நே)

ச. பூ̌ஜியிம்பபெ̌ட்ட ஸதி பு̌து̌லு ஸாமாஜிகுலு
ப̌ஜியிம்ப ஸோத̌ருலு பவநஸூநு-
ட̌ஜ̌பி̌டௌ̌ஜாதி̌ ஸுரலாப்துலைநாரு நீ-
ரஜநயந ஸ்ரீத்̌யாக̌ராஜநுத ப̌ாலுட̌கு (நே)

உன்னை ஆசிரயித்த சுகர், ஸநகர், பிரஹ்லாதன், நாரதர், பரமேசனாகிய ருத்திரன் முதலிய பக்தர்கள் அருச்சனை செய்து கொண்டிருக்கையில் (சிறுவனாகிய) நான் புகழாவிடில் உனக்கு என்ன குறைவு! ஓ ராம! உன் மனம் எனக்கு நன்கு விளங்க வில்லையா? உனக்கு அமுது செய்விக்கப் பத்தினியும், சபையினராக அறிவாளிகளும், சேவை புரியத் தம்பியரும், அனுமனும், ஆப்த நண்பர்களாக பிரமன், இந்திரன் முதலிய தேவர்களும் அமைந்திருக்கையில் (நான் புகழாவிடில் உனக்கு என்ன குறைவு?) தாமரைக் கண்ணனே!

## 27

தே̌சிகதோ̌டி ஆதி̌

ப. ரூகலு பதிவேலுந்ந சேரெடு̌
நூகலு க̌திகா̌நி ஓ மநஸா (ரூ)

அ. கோகலு வெய்யுந்ந கட்டு
கொ நுட கொகடேகா̌நி ஓ மநஸா (ரூ)

ச. ஊரேலிந தா ப்ண்டுட மூடுமூர தாவுகா்நி
நூறு ப்க்ஷணமுலப்பிந நோடிகந்த கா்நி[1]
ஏரு நிண்டி பாறிந பாத்ரகு தகு நீரு வச்சுகா்நி
ஸாரதருநி ஹரிநி த்யாக்ராஜ ஸந்நுதுநி மறவகே
மநஸா (ரூ)

மனமே! பதினாயிரம் ரூபாய்கள் இருந்தாலும் வயிறு நிரம்புவதற்கு ஒரு சிறுங்கை நொய் போதாதா? ஆயிரம் புடவைகள் இருந்தாலும் ஒன்றைத்தானே கட்டிக்கொள்ள முடியும்? ஒருவன் ஊர் முழுவதையும் ஆண்டபோதிலும், அவன் படுக்க மூன்று முழ நீள இடம்தானே வேண்டும்? நூறு பக்ஷணங்கள் கிடைத்தாலும் வாய் நிறையும் வரையில்தானே சுவைக்க முடியும்? ஆற்றில் வெள்ளம் பெருகியோடினும் நமது பாத்திரமளவு தானே நீர் கிடைக்கும்? ஆகவே, அனைத்திற்கும் சாரமானவனாகிய ஹரியை மறந்துவிடாதே.

## 28

அஸாவேரி (மே. 8) தேசாதி

ப. ஏபநிகோ ஜந்மிஞ்சிதிநநி [2]நீவெஞ்சவலது
ஸ்ரீராமநே (நே)

அ. ஸ்ரீபதி ஸ்ரீராமசந்த்ர நீ சித்தாநிகி தெலியதா நே (நே)

ச. வால்மீகாதி முநுலு நருலு நிந்நு
வர்ணிஞ்சிந நாயாஸ தீருநா
மேல்மியையுண்டு ஸத்ப்க்துலு
மெச்சுதுரே த்யாக்ராஜநுத நே (நே)

லக்ஷ்மீநாயகனே! ஸ்ரீ ராமச்சந்திர! நான் எக்காரியம் புரிவதற்காகப் பிறந்தேன் என்று நீ எண்ணலாகாது. (அது உன் புகழைப் பாடுவது என்று) உன் உள்ளத்திற்குத் தெரியாதா? வால்மீகி முதலிய முனிவர்களும், பிற மனிதர்களும் உன்னை வருணித்தால் என் ஆசை தீருமா? உத்தமர்களாகிய பக்தர்கள் மெச்சுவார்களா?

---

1. எந்தோ நோடிகந்த காநி 2. நந்நெஞ்சவலது

## 29

அஸாவேரி ரூபகம்

ப. ஜநகஜாஸமேத து̆ர்ஜநாகபு̆ருஹூத (ஜ)

அ. ஸநகாதி̆ஸ்ஸ்ருமுநிகீ̆த ஸஜ்ஜநக̆ணபாரிஜாத (ஜ)

ச. 1. தே̆வதே̆வ ஸகலஜீவந பு̆வநேச
பா̆வஜரிபு பா̆வஸத̆ந ப̆வ்யகுணமணிகோச (ஜ)

2. ஜலஜாப்த குலாம்போ̆நிதி̆ஜலஜ ஹரபரேச
ஜலஜாருண சரணஸுர ஜலதா̆சுக̆ ஸ்ரீச (ஜ)

3. ச்யாமஸுந்த̆ராங்க̆ ரங்க̆சயந விக̆தமாய
தாமஸஜநஹ்ருத்தூ̆ர த்யாக̆ராஜகே̆ய (ஜ)

*சீதாசமேதனே! தீயவர்களென்னும் மலைகளைத் தகர்ப்பதில் இந்திரனை ஒத்தவனே! ஸநகர் முதலிய முனிவர்களால் பாடப் பெற்றவனே! நல்லோர்களுக்குக் கற்பகவிருக்ஷம் போன்றவனே! தேவதேவனே! அனைத்திற்கும் ஆதாரமே! அண்டத்தின் ஈசனே! பரமசிவனின் உள்ளத்தில் அமர்ந்தவனே! மங்கள குணங்களின் கருவூலமே! சூரிய வம்சக் கடலில் உதித்த சந்திரனே! சிவனுக்கும் மேலான தெய்வமே! சிவந்த தாமரையையொத்த பாதனே! அரக்கரெனும் மேகத்தைக் கலைக்கும் காற்றைப் போன்றவனே! லக்ஷ்மி நாயகனே! நீலவண்ணனே! ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் பள்ளிகொண்டவனே! மாயையை வென்றவனே! தாமசகுணம் நிறைந்த மாந்தரின் உள்ளத்திற்கு அகப்படாதவனே! தியாகராஜனால் பாடப் பெற்றவனே!*

## 30

அஸாவேரி ஆதி

ப. மாபால வெலஸி யிக மம்மு ப்ரோவக̆ ராதா
ஸ்ரீராமசந்த்ர (மா)

அ. நீபாத்முல் பக்தி நிண்டார்க்நிச்சி
காபாடு சக்தி நீ கரமுந நுண்டக் (மா)

ச. 1. பாப ஸம்ஹார நா பரிதாபமுலநு த்நும
நேபாடிரா கருணாபயோநிதி வைந ஸ்ரீபதீ வித்ருத
சாபபாண ஈ பாபமதி நருலாபத்லநு நே-
நேபநி ஜேதுநு ஆபத்பாந்த வ
காபாட் நீகீ பராகேல (மா)

2. த்நரக்ஷக பக்தாத் ந ஸாகேதநக்ரீச நாமதி பத்-
ரிந ஸுஜந மாநாபிமாந பாலந ஸமாநரஹித ரோ-
ஸாந நீது தாஸாநுதாஸுடநு தாநவாந்தக மு-
தாந நாரத் ஸுகாநலோல தரிகாந ஸந்ததமு (மா)

3. நாகாதி பவிநுத நாகாரிரத நிநு விநாக்திநெறுக
நாகராஜ ஹ்ருத்ஸாகராப்ஜ ப வஸாகராந்தக ஸு-
ராகஹர கநகாகத்ர ஸுரநாககமந சர-
ணாகதாப்த ஸ்ரீ த்யாகராஜநுத (மா)

உன் திருவடி பக்தியை அனுக்கிரகித்துக் காப்பாற்றும் சக்தி உன் கையிலேயே இருக்கையில், எங்கள் குல தெய்வமாக விளங்கி நீ இன்று எங்களைப் பாலிக்கலாகாதா? பாவங்களைப் போக்குபவனே! என் பரிதாபத்தைப் போக்கியருள்வது உனக்கு எம்மாத்திரம்? கருணைக் கடலாகிய ஸ்ரீபதி! வில்லையும் அம்புகளையும் தரித்தவனே! இப்பாவிகள் எனக்கு விளைவிக்கும் ஆபத்துக்களுக்கிடையே நான் எக்காரியத்தை நிறைவேற்று வேன்? ஆபத்பாந்தவ! என்னைக் காக்க உனக்கேன் இப்பராமுகம்? தீன ரக்ஷக! பக்தர்கள் வசமானவனே! அயோத்தி மன்னனே! நல்லோர் மானம் காப்பவனே? இணையற்றவனே! என் மனம் பதறி மிகுந்த ரோசத்துடன் நான் உனக்கு தாசனுனேன். எனக்கு மகிழ்ச்சி தரும் ஆதரவு கிடைக்கவில்லை. அரக்கரை ஒழிப்பவனே! நாரதன் இசையில் திளைப்பவனே! ஆதிசேடனுல் துதிக்கப்படுபவனே! கருட வாகனனே! உன்னைத் தவிர வேறு கதி நான் அறியேன். கஜேந்திரனின் இதயமாகிய கடலுக்குச்

சந்திரன் போன்றவனே! சம்சாரக் கடலை ஒழிப்பவனே! தேவர்களின் பாவங்களைப் போக்குபவனே! மேரு பர்வதத்தை ஒத்த தீரனே! இந்திரனால் சரணடையப்பட்டவனே!

## 31

அஸாவேரி — தேசாதி

ப. லேகநா நிந்நு ஜுட்டுகொந்நாரு
ஏகஹ்ருத்யுலை நித்யாநந்தமு (லே)

அ. ஸ்ரீகர கருணாஸாகர நிருபம
சிந்மய ச்ரிதசிந்தாமணி நீயெட் (லே)

ச. 1. ஸௌந்தர்யமுலலோ ஸுகமு ஸீதம்மகு
ஸௌமித்ரிகி கநுல ஜாட்லோ ஸுகமு (லே)

2. ஸுந்தரமுக முந ஸுக முப ரதுநிகி
ஸுஜ்ஞாந ரூபமுந ஸுகமு ரிபுக்நிகி (லே)

3. சரணயுக்முநந்து ஸுக மாஞ்ஜநேயுநிகி
வர்குண த்யாகராஜ வரதாநந்தமு (லே)

(உன்னிடத்தில்) நிரந்தரமான ஆனந்தம் இல்லாமலா ஒருமனப் பட்டவர்களாக உன்னைச் சூழ்ந்து கொண்டார்கள்? திரு அளிப்பவனே! கருணைக் கடலே! ஒப்பற்றவனே! சித்ஸ்வ ரூபனே! சரண் புகுபவர்களுக்குச் சிந்தாமணி (நினைத்ததைத் தரும் ஒரு தெய்வ ரத்தினம்) போன்றவனே! உன் பேரழகில் ஈடுபட்டுச் சுகம் பெறுபவள் அன்னை சீதாதேவி. இலக்ஷ்மணனுக்கு உன் கண் ஜாடையைப் புரிந்து கொள்வதில் இன்பம். அழகிய உன் திருமுகத்தில் லயித்து ஆனந்தம் பெறுபவன் பரதன். உன் ஞான ஸ்வரூபத்தை தியானித்து சத்துருக்கினன் ஆனந்தம் அடைகிறான். ஆஞ்ஜநேயனுக்கு உன் திருவடிகள் இன்பம் பயக்கின்றன. உத்தம குணங்கள் நிறைந்தவனே! தியாகராஜ னுக்கு வரம் அளிப்பவனே! (இத்தனை இன்பம் இருப்பதா லல்லவா இவர்கள் எல்லோரும் உன்னைச் சூழ்ந்துகொண்டனர்?)

## 32

அஸாவேரி ரூபகம்

ப. நம்மகநே மோஸ போது நடரா
நடராஜ விநுத (ந)

ச. 1. துர் விஷயம்முலு மநஸுந
தூரக சேஸே நிநு நெற (ந)

2. தந தநய களத் ராதுலு
தமதநி பு த் தீயநி நிநு (ந)

3. இந்தரியமுல காஹ்லாத
மிச்சே ரூபமு கல நிநு (ந)

4. பொம்மரிண்ட்லு காநி நெற
நம்மகு பவமுநு[1] யநு நிநு (ந)

5. நெம்மதி லேநி ஜநந மர-
ணம்முல தொல கிஞ்சே நிநு (ந)

6. ரகு குல ரத்நமா த்யாக-
ராஜார்ச்சித பதயுக நிநு (ந)

நடராஜப் பெருமானுல் துதிக்கப் பெறுபவனே! உன்னே மனமார நம்பாமல் நான் மோசம் போகலாமா? கெட்ட விஷயங்களில் என் மனத்தைப் புகவிடாமற் செய்பவன் நீயே யல்லவா? செல்வம், மக்கள், பெண்டிர் முதலியன என்னுடையவை என்ற புத்தியை விலக்குபவனும் நீ. புலன் களுக்கு இன்பமளிக்கும் வடிவுடையவன் நீ. இந்த சம்சாரம் பொம்மை வீடாகையால் அதை நம்பாதே என்று எச்சரிப்பவன் நீ. நிம்மதியற்ற பிறப்பு, இறப்புகளேத் தவிர்ப்பவன் நீ. இரகு குலத்தின் இரத்தினமும், தியாகராஜனுல் அருச்சிக்கப் பெறும் பதவிணையையுடையவனுமாகிய உன்னே (முற்றிலும் நம்பாமல் நான் மோசம் போகலாமா?)

---

1: பவநமு

## 33

அஸாவேரி சாபு

ப. ஸமயமு தெலிஸி புண்யமு லார்ஜிஞ்சநி
குமதி[1]யுண்டி யேமி பொய் யேமி (ஸ)

அ. சமததோடி தர்மமு ஜயமேகாநி
க்ரமமுதோ மநவிநி விநவே ஓமநஸா (ஸ)

ச. 1. ஸாரமௌ கவிதல விநி வெர்ரிவாடு
ஸந்தோஷ படியேமி பட்கேமி
சேரடேஸி குட்டிகந்நுலு பாகு
[2]தெறசியேமி தெறவகுந்ந நேமி (ஸ)

2. துரகவீதி லோ விப்ருநிகி பாநகபூஜ
நெரய ஜேஸியேமி ஸேயகுண்டே நேமி
தரநீநி தநகோட்லகு யஜமாநுடு
தய்யமைதே நேமி லோபைதே நேமி (ஸ)

3. பதமு த்யாகராஜநுதுநிபை காநிதி
பாடியேமி பாடகுண்டே நேமி
எதநு ஸ்ரீராம பக்த்யு லேநி நரஜந்ம
மெத்தியேமி எத்தகுண்டேநேமி (ஸ)

சமயம் அறிந்து (தானம் செய்து) புண்ணியம் சம்பாதிக்காத தனவான் வாழ்ந்தென்ன? இறந்தால் என்ன? புலன்களை வென்று புரியும் தர்மமே வெற்றி பெறும். மனமே! முறையான என் விண்ணப்பத்தைக் கேள்! ரசமான கவிதைகளைக் கேட்டுப் பித்தன் ஒருவன் இன்பம் பெற்றாலென்ன, பெறுவிடில் என்ன? குருடன் அகன்ற தன் கண்களைத் திறந்தாலென்ன, மூடிக்கொண்டால் என்ன? மிலேச்சர்களின் வீதியில் அந்தணர்களுக்குப் பானக

---

1: தநிகுடு 2. கூர்ச்சியேமி தெறசுகொநியேமி

பூஜை அளித்தென்ன, அளிக்காவிடில் என்ன? ஈயாத லோபியாகிய கோடீசுவரன் இருந்தென்ன, இறந்து பேயாகி விட்டாலென்ன? தியாகராஜன் வணங்கும் தெய்வமாகிய இராமபிரானின் மீதல்லாமல் கீர்த்தனைகளைப் பாடியென்ன, பாடாவிட்டாலென்ன? உள்ளத்தில் இராம பக்தியில்லாத மானிட சன்மம் எடுத்தென்ன, எடுக்காவிடிலென்ன?

## 34

அஸாவேரி ஆதி

ப. ஸாரி வெட்லிந யீ காவேரிநி ஜூட்ரே (ஸா)

அ. வாரு வீரநுசு ஜூட்க நவ்-
வாரிகா பீஷ்டமுல நொஸங்குசு (ஸா)

1. துரமுந நொக தாவுந கர்ஜந பீ-
கர மொக தாவுந நிண்டு கருணதோ
நிரதமுக நொக தாவுந நடுசுசு
வர காவேரி கந்யகாமணி (ஸா)

2. வேடுககா கோகிலலு ம்ரோயகநு
வேடுசு ரங்கேசுநி ஜூசி மறி யீ-
ரேடு ஜகமுலகு ஜீவநமைந
மூடு ரெண்டு நதிநாதுநி ஜூட் (ஸா)

3. ராஜராஜேச்வரியநி பொகடுசு
ஜாஜி ஸுமமுல த்ராமரகணமுலு
பூஜலிருகடல ஸேயக த்யாக-
ராஜ ஸந்நுதுராலை முத்துக (ஸா)

நல்லோர், தீயவர் என்ற வேறுபாடின்றி அனைவருக்கும் ஏராளமான மன விருப்பங்களை வழங்கிக்கொண்டு அழகுடன் பவனி வரும் இக்காவேரி நதியைப் பாருங்கள். ஒருபுறம் அதிவேகத்துடனும், மற்றொருபுறம் பயங்கரமான கர்ஜனை

யுடனும், மற்றோரிடத்தில் இரக்கத்துடனும் எப்பொழுதும் பெருகி வருபவள் காவேரியாகிய இக்குமரி. குயில்கள் குதூகலத்துடன் இசை பாட, ஸ்ரீரங்கநாதனைத் தரிசித்த பின்னர் ஈரேழு புவனங்களுக்கும் வளம் தந்து, பஞ்சநதீசுவரனைக் காண வரும் (இக்காவேரியைப் பாருங்கள்). இரு கரைகளின் மீதும் வேதியர் குழாங்கள் ''இராஜராஜேசுவரி'' என்று போற்றி மல்லிகை மலர்கொண்டு பூசிக்க, தியாகராஜனால் வணங்கப் பெற்று அழகாக பவனிவரும் (இக்காவேரியைப் பாருங்கள்.)

## 35

ஆஹிரி (மே. 8) ஆதி

ப. ஆத்ய ஸ்ரீரகு வரநேட்லே
ராத்ய ஓ தயாம்புதீ நீ (கா)

அ. மோதமுதோ ஸத்பக்தி மர்மமுநு[1]
போதந ஜேஸி ஸதா ப்ரோசிந நீ (கா)

ச. நிந்நு திட்டி கொட்டி ஹிம்ஸ பெட்டிந
தந்நியு நந்நநலேதா
எந்நராநி நிந்தல தாளமநி
மந்நிஞ்சக லேதா
அந்நமு தாம்பூல மொஸகி தேஹமு
மிந்ந ஸேயலேதா
கந்ந தல்லிதண்ட்ரி மே மநுசு த்யாக
ராஜுநிகி ப்ரவஸ மீலேதா (ஆ)

ஸ்ரீ ரகுவர! கருணைக்கடலே! ஸத் பக்தியின் மர்மங்களை மகிழ்வுடன் போதனை செய்து என்னை அனவரதமும் காத்தருளிய உனக்கு அந்த தயவு இன்று வராத காரணமேன்? ''உன்னை வைது, அடித்துத் துன்புறுத்தியதனைத்தும் என்னைச் சார்ந்த தாகும்.'' என்று நீ கூறவில்லையா? எண்ணற்ற நிந்தனைகளைப் பொறுத்துக்கொள்ளுமாறு கூறி (வைதவர்களை) நீ மன்னிக்க வில்லையா? அன்னம், தாம்பூலம் முதலியவை அளித்து என்

1. மார்கமுல

தேகத்தை (ஒளி வீச) நீ போஷிக்கவில்லையா? ''உனக்குத் தாய் தந்தையர் நானே'' என்று இத்தியாகராஜனுக்கு நீ தைரியம் கூறவில்லையா? (அந்த இரக்கம் உனக்கு இன்று வராததேன்?)

## 36

ஆஹிரி த்ரிபுட

ப. எடுல காபாடு̆துவோ ஶ்ரீராமசந்̆ர நந் (நெ)

அ. எடுல காபாடு̆து̆வோ ரகு̆ வீர
மடுமாய ஸம்ஸாரமந்̆து̆ த̆கிலிந நந் (நெ)

ச. 1. அநுதி̆நமுநு தா̆ரதநயவர்கா̆துல பா-
லநமு ஸேயுடகொறகு த̆நமுலு கலிகி̆ந
மநுஜுல பொ̆க̆டி̆ யார்ஜிஞ்சிந பைகமுல ஜூசி
தநகு ஸரிலேத̆நி பி̆கு̆வுநந்̆திரிகி̆ந நந் (நெ)

2. காயஜஜநக நா ப்ராயமுலெல்லநு
மாயாபூரிதுலைந தா̆யாது̆லசேத
ஸாயபர்யந்தமு காயக்லேசமு ஜெந்̆த̆
நாயெநு கா̆நி மௌநித்̆யேய நிநு தெ̆லியலேநி நந் (நெ)

3. ஸதமநி பா̆ந்த̆வுல ஜதநு நம்மி மதிகி
ஹிதவுலேக யோ பதிதபாவந ஸந்-
ததமு த்யாக̆ராஜஸஹித ஸுரநிகர பூ-
ஜித நிந்நே சரணு ஜொச்சிதிகா̆நி ராம நந் (நெ)

கனத்த மாயை சூழ்ந்த சம்சாரத்தில் உழலும் என்னை நீ எவ்வாறு காப்பாற்றுவாயோ? ஶ்ரீ ராமசந்திர! அனுதினமும் மனைவி, மக்கள் முதலியோரைக் காக்கும் பொருட்டுச் செல்வர் களான மாந்தரைத் துதிபாடிச் சம்பாதித்த பணத்தைக் கண்டு ''எனக்கு நிகர் யார் உளர்?'' என்ற செருக்குடன் திரியும் என்னை (எவ்வாறு காப்பாற்றுவாயோ?) மன்மதன் தந்தையே! என் பருவகாலம் முழுதும் வஞ்சனை நிறைந்த உறவினர்

இழைத்த துன்பத்தால் காலை முதல் மாலை வரை உடல் சோர்ந்ததில் கழிந்ததே தவிர முனிவர் தியானிக்கும் உன்னை அறிந்துகொள்ளாத என்னை (எவ்வாறு காப்பாற்றுவாயோ?) உறவினர் கூட்டத்தைச் சாசுவதமென்று நம்பியும் உள்ளத்திற்குச் சிறிதும் இதம் கிடைக்காமல் ''ஓ பதிதபாவன! தியாகராஜனை என்றும் பிரியாதவனே! தேவர்களால் தொழப்படுபவனே! நீயே புகல்'' என்று சரண் புகுந்த என்னை (எவ்வாறுகாப்பாற்றப் போகிறாயோ?

## 37

கண்டா (மே. 8) த்ரிபுட

ப. இந்நாள்ளு நந்நேலி யெந்துகீ கேலி (இ)

அ. பந்துக நாபாலி பாக்யமா வநமாலி (இ)

ச. 1. ப்ராலுடைந நா பரிதாபமு ஜூசி
தாளு தாளுமநி தை்ர்யமு பலிகி
ஜாலிதீர வேட்க ஸல்புசு மறி நீ-
கீலாகு புத்த்யநி க்ரீகண்ட ஜூசுசு (இ)

2. எந்துபோயிந வெண்ட நேகிவத்து நநுசு
முந்து பல்கிந நீ வெந்து போதிவோ
அந்தகாட ஸத்யஸந்துடு நீவைதே
அந்தரிலோ நந்நாதரிஞ்சு கொம்மி (இ)

3. ஜாடமாடக நேநு ஜாநகீ நாயக
வேடலேதுரா வேமாறுலகு
ஈடுஜோடுலேநி தோடு நீவேகாநி
யாடி தப்பலேநி ஆபத்பாந்தவ நீ (விந்)

4. ஒகருபமுந ப்ரோசி ஒகருபமுந ஏசி
ஒகருபமுந ஜூசுசுண்டிவி காநி
ஸுக தாயக ஸத்த ஸுந்தைந லேதா
அகளங்க த்யாகராஜார்ச்சித சரண (இ)

இத்தனை காலமாக என்னைக் காத்துவந்த உனக்கு இன்று ஏன் இப்பரிகாசம்? முறையாக என்னைப் பாலிக்கும் செல்வமே! வனமாலையை அணிபவனே! சிறுவனுகிய என் பரிதாபத்தைக் கண்டு ''பொறுத்துக் கொள்'' என்று தைரியம் கூறி, என் துயர் தீர இன்பம் தந்து, ''திரும்பவும் உனக்கேன் இந்த புத்தி?'' என்று கடைக் கண்ணுல் பார்த்து வந்த உனக்கு (ஏன் இப்பரிகாசம்?) ''நீ எங்கு சென்றுலும் நான் உடன் வருவேன்'' என்று முன்பு கூறிய நீ எங்கு மறைந்தாயோ? வடிவழகனே! நீ சத்திய சந்தனுகில் அனைவருக்குமெதிரில் என்னை ஆதரிப்பாயாக! ஜானகீ நாயக! உன்னுடன் பிணங்குவதற்காக நான் உன்னைப் பல முறை வேண்டவில்லை. நீ எனக்கு ஈடில்லாத துணையென்பதில் ஐயம் சிறிதும் இல்லை. ஆபத்பாந்தவ! நீ ஒருருவில் பிரபஞ்சத்தைக் காத்தும், மற்றேருருவில் அழித்தும், வேறெரு வடிவத்தில் கடாட்சித்தும்[1] (சிருஷ்டித்தும்) வருகிருயே தவிர, உண்மையான சக்தி உன்னிடம் சிறிதும் இல்லையா? இன்பம் தருபவனே! களங்கமற்றவனே! தியாகராஜன் போற்றும் பாதனே!

## 38

க॒ண்டா ஆதி

ப. இங்க யோசனைதே நேநேமி ஸேயுதுரா (இங்)

அ. பங்கஜாக்ஷ நீவண்டி பரமத்யாநிதி॒கி (இங்)

ச 1. தீரராநி போராயெ
ஸாரெகு மேநு ஸ்க்மாயெ
நேரமேமோ தெலியதாயெ
ஆறடிகிக தாளதாயெ (இங்)

2. ஸ்ரீபதி எங்நிகல லேநி
தாபத்ரயமுல நலஸிதி காநி
பாபக்ணமு லங்நியு புருஷுநி
ரூபமை ப்ராதி॒ஞ்சே காநி (இங்)

---

1. ''ஸ ஈக்ஷத லோகாந்நு ஸ்ருஜா இதி'' என்றும் ''ஈக்ஷதேர் நாசப்தம்'' என்றும் சுருதி வாக்கியங்கள். பரமாத்மா ஜகத்தை சிருஷ்டிப்பதற்கு இந்த பிரம்மாண்டத்தைத் தனக்குள்ளேயே பார்த்துக்கொண்டான் என்பது பிரமாணம்.

3. வாக்திபவந்த்ய நிந்-
நேகாநி யொருல நம்மநி
த்யாகராஜுநி பைநி
பாகாயெ ஸ்ரீராம நீ (கிங்)

தாமரைக் கண்ணனே! உன்னைப்போன்ற பரம கருணாநிதிக்கு (என்னைக் காக்க) இன்னமும் யோசனையானால் நான் என்ன செய்வேன்? (என் வாழ்க்கை) தீராத போராக முடிந்தது. உடல் பாதியாகிவிட்டது. நான் புரிந்த குற்றம் என்னவோ அறியேன். நிந்தையை என்னால் பொறுக்க முடியவில்லை. ஸ்ரீபதி! கணக்கற்ற தாபங்களினால் உடல் சோர்ந்தேன். என் பாபங்களனைத்தும் மானிட உருவத்தில் வந்து என்னை வாட்டுகின்றன. பிரமனால் வணங்கப்படுபவனே! உன்னையன்றி வேறு தெய்வத்தை நம்பாத இத்தியாகராஜன் படும்பாடு வெகு அழகுதான் ஸ்ரீ ராம!

39

கண்டா ரூபகம்

ப. காரவிம்ப ராதா கருடகமந ராம நநு (கா)

அ. ஸ்ரீரமாமநோஹர ச்ரிதஹ்ருதயவிஹார
சேரராவதேர ஸ்ரீரகுவரதீர (கா)

ச. 1. பேருகைந லேதா பிலிசிதே ராராதா ஸரி-
வாரலாட லேதா விநிவரத கருண ராதா
மாறு பல்க வாதா மும்மாரு நம்மலேதா (கா)

2. தநயுடாடு மாட தல்லி தண்ட்ருலகதியாட காதா
நிநு பாடிந பாடவிநி நீ முத்து நோட யே-
மந வல திச்சோட மாதவ இங்க தெரசாட (கா)

3. ரூகலொஸகி கொந்நஸதி ரூப மெட்லுந்ந
ஸ்ரீகர குணமுந்ந செலி செலிமி வீடரந்ந ப-
ராகு நீகு மிந்ந த்யாகராஜவிநுத பிந்ந (கா)

திருமகளின் மனத்துக்கினியவனே! அடியார் உள்ளத்தில் உறைபவனே?என்னை நீ கவுரவிக்கலாகாதா? கருடவாகனனே! இராம! நீ என்னருகில் வராததேன்? ரகு குல தீரனே! புகழிற்காகவாவது தயை புரிந்து நான் அழைத்தால் வரலாகாதா? உன்னையொத்தவர்கள் உன்னிடம் கூறவில்லையா? அதைக் கேட்டும் உனக்குக் கருணை வரவில்லையா? மறு மொழியாவது கூறலாகாதா? நான் உன்னை என்றும் நம்புபவனல்லவா? புதல்வனின் மழலைப் பேச்சு தாய் தந்தையருக்கு இன்பம் தருவதல்லவா? நான் பாடும் இசையைக் கேட்டு நீ உன் அழகிய வாய் திறந்து மாறுக ஒன்றும் கூறலாகாது. மாதவா! இன்னும் ஏன் திரை மறைவு? திருவளிப்பவனே! கன்னியா சுல்கம் கொடுத்து மணந்த மனைவியின் தோற்றம் எவ்வாறிருப்பினும் அவள் குணவதியாக இருந்தால் கணவன் புறக்கணிப்பானு? என்னை அலட்சியம் செய்வது உனக்கு மேன்மை தருமா? விரைவாக வந்து (கவுரவிக்கலாகாதா?)

## 40

த்ˇந்யாஸி (மே. 8) ஆதி

ப. த்ˇயானமே வரமைந கˇங்காˇ ஸ்நாநமே
மநஸா ராம (த்ˇயா)

அ. வாநநீட முநுகˇ முநுகˇலோநி
வஞ்சந த்ˇரோஹமநு கர போவுநா (த்ˇயா)

ச. பரதˇந நாரீமணுலநு தூˇறி
பரநிந்தˇல பரஹிம்ஸல மீறி
தˇரநுவெலயு ஸ்ரீராமுநி கோரி
த்யாகˇராஜு தெˇலிஸிகொந்ந ராம (த்ˇயா)

மனமே! இராம தியானமே உத்தமமான கங்கா ஸ்நான மாகும். மழைத் தண்ணீரில் திரும்பத் திரும்ப முழுகினுல் இதயத்தில் உள்ள வஞ்சனை, துரோகம் முதலிய களங்கங்கள் (கறைகள்) அகன்றுவிடுமா? பிறருடைய செல்வம், பெண்டிர் முதலியவற்றை வெறுத்து, ஒருவரையும் நிந்திக்காமலும், தீங்கிழைக்காமலும் இவ்வுலகில் அர்ச்சாரூபியாக விளங்கும் ஸ்ரீ ராமனிடம் பக்திபூண்ட இந்த தியாகராஜன் அறிந்துகொண்ட (தியானமே கங்கா ஸ்நானமாகும்).

## 41

தந்யாஸி ரூபகம்

ப. எந்து பாய ராதய இநகுல திலகாதய (எங்)

ச. 1. இந்து வதந குந்த ரதந மந்தர தர நீதய (எங்)

2. சாந்தபூஷ பக்தபோஷ சரணு சேஷசாயீ (எங்)

3. ச்ரித சரண்ய ஸுரவரேண்ய க்ருதஸுபுண்ய
தந்யாதய (எங்)

4. நாகராஜ தர நுதாஜ த்யாகராஜ வரதாதய (எங்)

சூரியகுல திலகமே! முன்பு நீ என்னிடம் காட்டிய இரக்கம் இன்று எங்கு போயிற்று? (அது எங்கும் அகலக் கூடாது). (நீ) சந்திர முகத்தவன். முல்லையையொத்த பற்களையுடையவன். மந்தர கிரியைத் தாங்கியவன். சாந்தமே அலங்காரமாக உடையவன். பக்தர்களை ஆதரிப்பவன். ஆதிசேடன் மீது பள்ளி கொண்டவனே! சரணம்! (நீ) அடியவர்க்குப் புகலானவன். தேவருள் சிறந்தவன். புண்ணியம் செய்யும் மாந்தரை தன்யர்களாக்குபவன். பர்வதத்தை எடுத்தவன். பிரமனால் துதிக்கப்பெறுபவன். தியாகராஜனுக்கு வரந்தருபவன்.

## 42

தந்யாஸி சாபு

ப. நீ சித்தமு நிர்மலமு நிச்சலமநி
நிந்நே நம்மிநாநு (நீ)

அ. நா சித்தமு வஞ்சந சஞ்சலமநி
நந்நு விடநாடகுமி ஸ்ரீராம (நீ)

ச. குருவு சில்லகிஞ்ஜ குருவே ப்ரமரமு
குருடே பாஸ்கருடு [1]
குருடே பத்ருட குகுருவு நீவநுகொண்டி
தரநு தாஸுநி ப்ரோவ த்யாகராஜநுத (நீ)

உன் இதயம் மாசற்றது, அசைவற்றது என்று அறிந்து உன்னையே நம்பியுள்ளேன். என் உள்ளம் வஞ்சனையும் சஞ்சலமும்

---

1. குருடே பத்ருடு குருடே உத்தமகதி

நிரம்பியது என்பதற்காக நீ என்னை விட்டுவிடலாகாது. குரு (சேற்று நீரைத் தெளியவைக்கும்) தேற்றாங்கொட்டை. அவனே (புழுவை வண்டாக மாற்றும்) தேன் வண்டு. அவனே (அஞ்ஞானத்தை ஒளியால் விலக்கும்) சூரியன். மங்களம் தருபவனும் அவனே. அத்தகைய குரு நீயே என்பதை உணர்ந்தேன். உன் அடியவனான என்னைக் காத்தருள்.

## 43

தˇˌந்யாஸி ஆத்ˇதி

ப. ராமாபிˇˌராம மநஸுᵘ ரஞ்ஜில்ல பˇல்கராதாˇ (ரா)

அ. ஈ மஹிநி வெலஸிந தேˇமி ஸதாˇ நாதோ (ரா)

ச. பˇங்காˇரு மேடி பாந்புபை பாˇˌமாமணி ஜாநகி

ச̲ருங்காˇரிஞ்சுகொநி செலுவொந்தˇநிந்நு கˇநி

பொங்ˇகு சு மல்லெ விருல பூˇஜிஞ்சு வேள ஸ்ரீஹரி

ஸங்கீˇதமு பாˇடுˇமநு ஸாமி த்யாகˇராஜுᵘநிதோ (ரா)

இராம! மனங்கவர்வோனே! எப்பொழுதும் நீ என்னுடன் உள்ளங் குளிர உரையாடலாகாதா? இவ்வுலகில் இதைக் காட்டிலும் வேறு இன்பம் உளதா? பொன்னிழைத்த மஞ்சத்தின்மீது நீ வீற்றிருக்க, நாரீமணியாகிய சீதை நன்கு அலங்கரித்துக்கொண்டு, உன்னைக் கண்டு உளம் பொங்கி மல்லிகை மலர்களால் பூசிக்கும்பொழுது இத்தியாகராஜனை இசை பாடுமாறு நீ கட்டளையிடலாகாதா? ஸ்ரீ ஹரி!

## 44

தˌந்யாஸி ரூபகம்

ப. ச̲யாமஸுᵘந்தˇராங்கˇஸகல சக்தியு நீவேரா (ச̲யா)

அ. தாமஸரஹித குˇணஸாந்த்ˇர

தˇரநு வெலயு ராமசந்த்ˇர (ச̲யா)

ச. துˇˇஷ்ட தˇநுஜ மதˇவிதாˇர

சி̲ஷ்டஜந ஹ்ருதˇயவிஹார

இஷ்ட தைˇவமு நீவேர

இலநு த்யாகˇராஜுᵘ வேரா (ச̲யா)

முகில்வண்ணனே! சக்தியனைத்திற்கும் உறைவிடம் நீயே: தமோ குணமற்ற குணக்கடலே! இவ்வுலகில் விளங்கும் இராம சந்திர! கொடிய அரக்கரின் செருக்கையடக்கியவனே! நல்லோர் உள்ளத்தில் உறைபவனே! என் இஷ்ட தெய்வம் நீயே. உன்னிடமிருந்து இத்தியாகராஜன் வேறுபட்டவனு?

## 45

தˇந்யாஸி ஆதிˇ

ப. ஸங்கீதˇ ஜ்ஞாநமு பˇக்திவினா (ஸங்)

ஸந்மார்கˇ மு கˇலதேˇ மநஸா-

அ. ப்ˇருங்கிˇ நடேச ஸமீரஜ கˇடஜ ம-

தங்கˇ நாரதாˇ துˇலு பாஸிஞ்சே (ஸங்)

ச. ந்யாயாந்யாயமு தெˇலுஸுˆநு ஜகˇமுலு

மாயாமய மநே[1] தெˇலுஸுˆநு துˇர்குˇண

காயஜாதிˇ ஷட்ˇரிபுல ஜயிஞ்சே

கார்யமு தெˇலுஸுˆநு த்யாகˇராஜுˆநிகே (ஸங்)

ஓ மனமே! பிருங்கி முனிவர், நடராஜப் பெருமான், வாயு தனயனுன அனுமன், அகஸ்தியர், மதங்கமுனி, நாரதர் ஆகியோர் உபாசனை செய்யும் சங்கீத ஞானமும், பக்தியும் இன்றி உலகில் நல்வழி உளதா? நியாயம் எது, அநியாயம் எது என்பது தெரிந்தும், புவனங்கள் மாயை நிரம்பியவை என்று தெரிந்தும், கொடிய காமம் முதலிய ஆறு சத்துருக்களை வெல்லும் முறை தெரிந்தும், தியாகராஜனுக்கு (சங்கீத ஞானம், பக்தியின்றிச் சன்மார்க்கம் உளதா?)

## 46

புந்நாகˇவராளி (மே. 8) ஆதிˇ

ப. இதிˇ நீகு மேரகாˇதுˇரா ஸ்ரீராம நா-

மதிˇ தல்லடிˇல்லெரா (இ)

அ. பதிˇலமுகாˇ கொˇலிசிதே

பாˇவமு [2]வேரேயுண்டேˇதிˇ (இ)

ச. 1. கˇதிலேநிவாரிநி கடˇதேரிசே தைˇவமநி

பதிதபாவந நம்மிதி ஸ்ரீராம நிந்–

---

1. மாயாமயமநி 2. வேறையுந்நதி

நதி வேக ᵛமுந வேடி ᵛதி ஸந்ததமு ஸம்
மதிநி நிங்நே கோரிதி ஸீதாராம (இ)

2. பரம த ᵛயாளுவநி பாலந ஸேதுவநி
ஸரகு ᵛந தே ᵛவராய கொ ᵛல்சிந நாபை
கருணலேத ᵛநி கந்நீராயா சூசி நீ மநஸுᵘ
கருக ᵛதெ ᵛந்து ᵛகுரா ஓ ஸீதாராம (இ)

3. அந்நிட நிண்டி ᵛந அத் ᵛபு ᵛ,தாநந்த ᵛ க ᵛ,ந
மந்நந ஸேயராதா ᵛ ஸ்ரீராம நீ-
கெந்நராநி புண்யமு ராதா ᵛ ஸ்ரீத்யாக ᵛராஜ
ஸந்நுத நீவாட ᵛநு கா ᵛதா ᵛ ஸீதாராம (இ)

இது உனக்கு முறையல்ல. என் மனம் தத்தளிக்கிறது. வெகு சாக்கிரதையுடன் உன்னை உபாசனை செய்தும் உன் மனம் வேறாகிவிட்டது. கதியற்றவர்களைக் கடைத்தேற்றும் தெய்வம் நீயேயென்று நம்பி விரைவுடன் உன்னை வேண்டி சதா உன்னையே வந்தடைந்தேன். நீ பரமதயாளுவென்றும், பாலிப்பவனென்றும் உன்னைத் துதித்த என்மீது நீ கருணைகாட்டாததால் நான் கண்ணீர் வடிப்பதைக் கண்டும் உன் மனம் கரையாததேன்? இராம! ஸீதாராம! அனைத்திலும் நிறைந்துள்ள அற்புத ஆனந்த ஸ்வரூபனே! என்னை கவுரவிக்கலாகாதா? ஸ்ரீ ராம! உனக்கு அளவற்ற புண்ணியம் கிடைக்குமே! நான் உன்னைச் சேர்ந்தவன் அல்லவா?

## 47

புந்நாக ᵛவராளி — சாபு

ப. இந்த பா ᵛ,க் ᵛயமநி நிர்ணயிம்ப ப் ᵛரஹ்•
மேந்த் ᵛராது ᵛல தரமா (இந்)

அ. (முநி) சிந்தநீய ஸ்ரீராக ᵛ,வ நிநுமதி ᵛ
சிந்திஞ்சு ஸுᵘஜநுல பூஜிஞ்சுவாரி (கிந்)

ச. 1. மதிஹீநுலைந நெம்மதி ᵛ லேநி வாரைந
அதிபாப க்ருதுலைந எந்நடிகி ஸத் ᵛ-
க ᵛதி ராநி வாரைந ஸ்ரீராம
ச்ருதிபுராணநுத ப்ரதிலேநி நிநு ஸந்-
நுதி ஸேயு ப ᵛ,க்துல ஜதகூ ᵛடி ᵛநவாரி (கிந்)

2. ஸாரெகு மாயா ஸம்ஸாரமந்து ᵛ சால
தூ ᵛரி நவாரை ந காமாது ᵛல

பூரித மதுலைந ஸகல வேத³
ஸார நிந்நு மநஸார நம்மிந ஸுதா²,
பூர சித்துல ஸேவ கோ³ரி நவாரி (கிந்)

3. ப³்ர்மசேல நீது³ மர்மமு தெலிய நி
கர்ம மார்கு³லைந த்யாக³ராஜநுத
த³்ர்ம ரஹி துலைந லோகமுலு
நிர்மிஞ்சி ந நீது³ சர்மமு ஸ்மரிஞ்சு
நிர்மல மதுலகு சர்மமெஞ்சிநவாரிகி (இந்)

முனிவர்களால் தியானிக்கப்பட்டவனே! ஸ்ரீ ராகவா! உன்னை உள்ளத்தில் தியானிக்கும் பக்தர்களைப் பூசிப்பவர்களின் பாக்கியம் இவ்வளவென்று நிர்ணயிக்க பிரமன், இந்திரன் முதலியோரால்கூட சாத்தியமா?

ஞானமற்றவர்களாயினும், பொறுமையற்றவர்களாயினும், பாவச் செயல்களைப் புரிபவர்களாயினும், என்றுமே நல்வழிக்கு வராதவராயினும், ஒப்பற்ற உன்னைத் தொழும் அடியார்களுடன் ஜதை கூடியவர்களின் (பாக்கியம்..சாத்தியமா?)

சதா மாயையால் சூழப்பெற்ற சம்சாரக் கடலில் முழுகியவர்களாயினும், காமம் முதலியன நிரம்பிய உள்ளத்தவராயினும், வேதங்களனைத்திற்கும் சாரமாகிய உன்னை மனமார நம்பி, அமுதம் நிறைந்த உள்ளத்தையுடைய பக்தர்களை அண்டியவர்களின் (பாக்கியம்..சாத்தியமா?)

பொன்னுடையணிந்தவனே! உன் மர்மத்தை அறியாமல் கர்ம மார்க்கத்தைப் பின்பற்றுபவராயினும், அறம் அற்றவராயினும், புவனங்களைப் படைத்த உன் திருநாமத்தைச் செபிக்கும் தூய மனத்தவரான அடியார்களுக்குச் சுகத்தையளிப்பவர்களின் (பாக்கியம்..சாத்தியமா?)

## 48

சுத்³த³ஸீமந்திநி (மே. 8) ஆதி³

ப. ஜாநகீரமண ப³க்தபாரி-
ஜாத பாஹி ஸகல லோக சரண (ஜா)

அ. கா³னலோல க³ந தமாலநீல
கருணாலவால ஸுகு³ணசீல (ஜா)

ச. ரக்தநளிநத³ளநயந ந்ருபால
ரமணீயாநந முகுரகபோல
ப⁴க்திஹீநஜந மத³க³ஜஜால
பஞ்சவத³ந த்யாக³ராஜபால (ஜா)

*சீதை மணாளனே! பக்தர்களின் கற்பகத்தருவே! என்னைக் காத்தருள். சகல புவனங்களின் தஞ்சமே! சங்கீதப் பிரியனே! கனத்த பச்சிலை மரத்தைப்போன்ற நீலவண்ணனே! கருணையின் தேக்கமே! நற்குண சீலனே! செந்தாமரையிதழையொத்த கண்ணனே! ராஜனே! அழகிய முகத்தவனே! கண்ணாடி போன்ற கன்னங்களையுடையவனே! பக்தியில்லாத மாந்தரென்னும் மத யானைக் கூட்டத்திற்குச் சிங்கம்போன்றவனே! தியாகராஜனைப் பாலிப்பவனே!*

## 49

தே⁴நுக (மே. 9) தே³சாதி³

ப. தெலியலேரு ராம ப⁴க்தி மார்க³முநு (தெ)

அ. இலநந்தட திருகு³சு க³லுவரிஞ்சேரே கா³நி (தெ)

ச. வேக³லேசி நீட முநிகி³ பூ⁴தி பூ³ஸி
வேள்ளநெஞ்சி வெலிகி ச்லாக⁴நீயுலை
பா³க³பைக மார்ஜநலோலுலை-
ரே கா³நி த்யாக³ராஜவிநுத (தெ)

*புவி முழுவதும் இங்கு மங்கும் திரிந்துகொண்டு கலவரப் படுகிறார்களே தவிர (மாந்தர்) இராம பக்தியென்னும் நல்வழியை அறியமாட்டார். அதிகாலையில் எழுந்து, நீராடிய பின்னர், விபூதி முதலியன அணிந்து, (சபம் செய்வதுபோல்) விரல்களை எண்ணி, வெளிக்கு நல்லவர்கள்போல் நடித்து, நன்கு பணம் திரட்டுதலில் ஆசை கொள்வார்களே தவிர (இராம பக்தி மார்க்கத்தை அறியமாட்டார்கள்.)*

## 50

பி⁴ந்நஷட்³ஜம் (மே. 9) தே³சாதி³

ப. ஸரிவாரிலோந சௌக சாலதா³யெநா (ஸ)

அ. பொருகி³ண்ட்³ல வாரலசேதி
பூஜ ஜூசிசூசி சல்லநாயெநா (ஸ)

ச. தாருமாருகா பலுகு வாரலு
தத்தரிஞ்சகா ஜூட ந்யாயமா
பாரமார்தி, குல து:க்க, ஜாலமுல
பாபலேதா ஸ்ரீ த்யாகராஜநுத (ஸ)

*எனக்குச் சமானமானவர்களுக்கெதிரில் நீ என்னைச் செய்யும் அலட்சியம் போதாதா? (என் மானஸீக பூஜையைக் காட்டிலும்) அயலார் கையினால் செய்யும் பூஜையைக் கண்டு உன் உள்ளம் குளிர்ந்ததா? தாறுமாறுகப் பேசும் மாந்தர் எனக்கிழைக்கும் துன்பங்களைக் கண்டு நீ வாளாவிருப்பது நியாயமா? பரமார்த்தத்தை விரும்பும் ஞானிகளின் துயரங்களை நீ போக்கியருளவில்லையா?*

## 51

கோகிலப்ரிய (மே. 11) தேசாதி

ப. தாசரதே, தயாசரதே (தா)

அ. ஆசரஹரண பராசரகேயக-
வீச ஸுஹ்ருதயநிவேச க்ருணாகர (தா)

ச. ஸரஸிஜநாபா, ஜலதர சோபா,
பரிபாலிதேபா, வரபக்தலாபா,
பரிசரகீச பாபவிநாச
தரணி ஸங்காச த்யாகராஜேச (தா)

*தயரதன் மைந்தனே! கருணைக்கடலே! அரக்கரை வதைத்தவனே! பராசரரால் (ஸம்ஹிதையில்) பாடப் பெற்றவனே! கவி சிரேஷ்டர்களின் இதயத்தில் உறைபவனே! தயை நிரம்பியவனே! கொப்பூழில் தாமரையையுடையவனே! மேகவண்ணனே! கஜேந்திரனைக் காத்தவனே! பக்தர்களின் பாக்கியமே! குரங்குகளைத் தோழர்களாக உடையவனே! பாவங்களை ஒழிப்பவனே! சூரியனைப்போல் ஒளி பொருந்தியவனே!*

## 52

வர்தநி (மே. 11) ரூபகம்

ப. மநஸா மந ஸாமர்த்யமேமி ஓ (ம)

அ. விநு ஸாகேதராஜு விச்வமநே ரத, முநெக்கி
தந ஸாமர்த்யமுசே[1] தாநே நடிபிஞ்செநே (ம)

---

1. ஸாரத்யமுசே

ச. அலநாடு<sup>v</sup> வஸிஷ்டா,து<sup>v</sup>லு பட்டமு க<sup>v</sup>ட்டேபலு-
குலவிநி வேக<sup>v</sup>மே பூ<sup>v</sup>ஷணமுல நொஸகி<sup>v</sup>ந கைகநு
பலுமாறு ஜக<sup>v</sup>ம்முலு கல்லலநிந ரவிஜு<sup>v</sup>நி மாய-
வல வேஸி த்யாக<sup>v</sup>ராஜ வரது<sup>v</sup>டு<sup>v</sup> தா ஜநக<sup>v</sup>லேதா<sup>v</sup> (ம)

ஓ மனமே! நமது சாமர்த்தியம் எம்மாத்திரம்? இதைக் கேள். அயோத்தியாபதியாகிய பகவான் புவனம் என்ற தேரின் மீதூர்ந்து தன் சாமர்த்தியத்தால் அனைத்தையும் தானே நடத்திக்கொள்கிறான். அன்றொரு நாள் வசிஷ்டர் முதலியோர் (இராமனுக்கு) முடிசூட்டப்போகும் செய்தியைக் கேட்டு விரைவாகக் (கூனிக்கு) ஆபரணங்களையளித்த கைகேயியையும், (வாலியிழைத்த கொடுமையைத் தாளாமல்) இவ்வுலகமனைத்தும் மாயையென்று அங்கலாய்த்த சுக்கிரீவனையும் மாய வலை வீசி மனம் மாறச் செய்து பகவான் தன் அவதார காரியத்தை நடத்திக்கொள்ளவில்லையா!

53

ரூபாவதி (மே. 12)[2] த்ரிபுட

ப. நே மொறபெ<sup>v</sup>ட்டிதே மதி<sup>v</sup>லோந
நீ காயாஸமு ஏலரா (நே)

அ. ஈ மாநவாத<sup>v</sup> முலநு கோ<sup>v</sup>ரி
எல்லவாரலவலெ நுண்ட<sup>v</sup>கநு (நே)

ச. தபமொக டொநர ஜேஸிதி நநோ
தா<sup>v</sup>நம்பொ<sup>v</sup>கடி யடி<sup>v</sup>கி<sup>v</sup>திநநோ
கபடாத்முடை<sup>v</sup> பலிகிதிநநோ
கலிஹர த்யாக<sup>v</sup>ராஜநுத (நே)

மாந்தருள் கடைத்தரமானவர்களை அண்டி மற்றவர்களைப் போல் நான் பிழைக்க முடியாமல் உன்னிடம் முறையிட்டால் அது உன் மனத்திற்குக் களைப்பை உண்டாக்குகிறதா? தவங் கிடந்து வரம் கேட்டேன் என்றோ, தானம் கேட்டேன் என்றோ, கபடமாக உன்னுடன் உரையாடினேன் என்றோ எண்ணி (உன் மனம் களைப்படைகிறதா?) கலியின் கொடுமைகளை நீக்குபவனே?

54

கலகண்டி, (மே. 13) ஆதி<sup>v</sup>

ப. ஸ்ரீ ஜநகதநயே ச்ரிதகமலாலயே (ஸ்ரீ)

---

2. இது தோடியிலும் பாடப்படுகிறது.

அ. ராஜந்நவமணி பூ꞉ஷணே ஸ்ரீ
ரகு꞉ராமஸதி ஸததம மாமவ (ஸ்ரீ)

ச. சதவத꞉நாத꞉ யாசர ஜலத꞉ராநிலே
நத மாநவ மாநஸ ஸத்ஸத꞉நே
சதமக,கிரீட லஸந்மணிக꞉ண நீரா-
ஜித சரணே த்யாக꞉ராஜார்ச்சிதே (ஸ்ரீ)

*ஸ்ரீ ஜனகன் திருமகளே! தாமரையில் உறைபவளே! ஒளி வீசும் நவரத்தினங்களை அணிபவளே! ஸ்ரீ ரகுராமனின் பத்தினியே! என்னை என்றும் காப்பாயாக. நூறுமுகங்களை யுடைய* இராவணன் போன்ற அரக்கரென்னும் மேகக் கூட்டத்தைச் சிதறவடிக்கும் காற்றைப் போன்றவளே! அடிபணிவோரின் இதயத்தை இருப்பிடமாகக் கொண்டவளே! இந்திரன் முடிமீதுள்ள மணிக் குவியலால் தீபாராதனை செய்யப்பட்ட பாதங்களையுடையவளே! தியாகராஜனுல் அருச்சிக்கப் பெறுபவளே!*

## 55

கல்க꞉ட꞉ (மே. 13) ஆதி꞉

ப. ஸமயமு ஏமறகே மநஸா (ஸ)

அ. ஸுமதுலெள நருலநு சேரி நிஜ
ஸுக,மநுப꞉ விஞ்சுடகு நீகிதே꞉ (ஸ)

ச. அந்தரங்க꞉முந க꞉லுகு꞉ ப꞉யமுந
ஆந்தரிக ப꞉க்திமார்க꞉மு தெ꞉லிஸி
தா꞉ந்த ஸம்ரக்ஷகுடை꞉ந ஸ்ரீ
த்யாக꞉ராஜ ஸந்நுதுநி ஜூட꞉ (ஸ)

*மனமே! நல்லறிவு படைத்த பெரியோர்களை அணுகி ஆத்மானந்தம் அனுபவிக்க இதுவே சமயம். தவறவிடாதே. உள்ளத்திலேற்படும் பயங்களுக்கிடையே ஏகாந்த பக்தி மார்க்கத்தை அறிந்துகொண்டு புலன்களையடக்கிய ஞானிகளைக் காக்கும் பரம்பொருளைத் தரிசிக்க (இதுவே சமயம்.)*

---

* *வால்மீகியைத் தவிர வேறு சில இராமாயணங்களில் இராவணனுக்கு நூறு தலைகள் இருந்தனவென்று கூறப்பட்டுள்ளது.*

அ. ஸரஸிஜப்ˇவநுத சரணஸரோஜ
ஸாகேதஸத்ˇந த்ˇசரத, தநூஜ (ப)

ச. 1. சேஷாதிˇப வரபூˇஷண வாகˇவி-
சேஷக்ருத நாம கோˇஷ ஜநித ஸங்-
தோஷ ரவிஜ ஸம்பாˇஷண நதஜந
போஷண சுபˇகரவேஷ நிர்தோˇஷ (ப)

2. ஸத்யஸந்தˇ வரப்ˇருத்ய பாலகா-
திˇத்யகுலோத்தம ஸத்யஜநாவந
அத்யந்தஸுந்தˇர ந்ருத்யஜநப்ரிய
ஸ்துத்ய ஸுசாரித்ர நித்யோத்ஸவரூப (ப)

3. ஸாகˇரமதˇதˇமந நாகாˇ ரிநுத சர-
ண கˇணபதி ஹ்ருதˇயாகாˇர பாலந
ஜாகˇரூக சரணுகˇத வத்ஸல
த்யாகˇராஜநுத நாகாˇரி துரகˇ (ப)

கோதண்டத்தை தரித்தவனே! தூயவனே! அண்டியவர்கள் நினைத்ததைத் தரும் சிந்தாமணியே! என்னைக் காப்பாற்று. பிரமன் வணங்கும் திருவடித் தாமரையையுடையவனே! அயோத்தியில் வசிப்பவனே! தயரதன் மைந்தனே!

ஆதிசேடனை பூஷணமாக அணிந்த பரமசிவன் அரிய வாக்கினுல் செய்யும் நாம ஸங்கீர்த்தனத்தினுல் மகிழ்பவனே! சுக்கிரீவனுடன் உரையாடியவனே! வணங்கியவர்களைக் காப்பவனே! சுபமளிக்கும் தோற்றமுடையவனே! களங்கமற்றவனே!

சத்தியசந்தர்களுள் உயர்ந்தவனே! பரிஜனங்களைக் காப்பவனே! சூரியகுலத் தோன்றலே! சத்தியம் பேசுபவர்களைக் காப்பவனே! பேரழகனே! நிருத்தியம் செய்பவர்களின் நேயனே! மாந்தர் துதிக்கும் நற்சரிதனே! நித்தியமங்கள ரூபனே!

சமுத்திர ராஜன் கர்வத்தையடக்கியவனே! கருடன் தொழும் பாதனே! கணபதியின் இதயத்தில் வசிப்பவனே! அடியாரைக் காப்பதில் கருத்துடையவனே! சரண் புகுந்தவரிடம் பரிவுடையவனே! கருட வாகனனே!

## 170

தˇர்பாˇரு ஆதிˇ

ப. முந்துˇ வெநுகஇருப்ரக்கல தோடைˇ
முரக,ரஹர ராரா (முந்)

அ. எந்து³காந³ நீயந்த³முவலெ ரகு⁴-
நந்த³ந வேக³மே ராரா (முந்)

ச. 1. சண்ட³பா⁴ஸ்கர குலாப்³தி⁴சந்த்³ர கோ-
த³ண்ட³ பாணியை ராரா
அண்ட³கொ³லுசு ஸௌமித்ரி ஸஹிதுடை³
அமிதபராக்ரம ராரா (முந்)

2. ஓ க³ஜரக்ஷக ஓ ராஜகுமார
ஓங்கார ஸத³ந ராரா
பா⁴க³வதப்ரிய ப்ர³க³ ப்³ரோவவய்ய
த்யாக³ராஜநுத ராரா (முந்)

முரன், கரன் முதலிய அரக்கரை மாய்த்தவனே! என் முன்னும், பின்னும், இருபுறங்களிலும் நீ எழுந்தருளி வருக! உன் திருவழகைப்போல் நான் எங்குமே கண்டதில்லை. இரகு நந்தன! விரைவில் வருக!

புகழ்மிகுந்த சூரியகுலக் கடலில் உதித்த சந்திரனே! கோதண்டத்தைக் கையிலேந்தி வருக! அளவற்ற பராக்கிரமம் உடையவனே! உன் பக்கலில் சதா ஊழியம் செய்யும் இலக்ஷ்மணனுடன் கூடி வருக!

யானையைக் காத்தவனே! சக்கரவர்த்தி திருமகனே! ஓங்காரமெனும் பிரணவத்தில் வசிப்பவனே! வருக! பாகவதர்களின் நேசனே! என்னை நன்கு காப்பாற்ற வருக! வருக!

## 171

த³ர்பா³ரு ஆதி³

ப. யோசநா கமல
லோசந நநுப்³ரோவ (யோ)

அ. ஸூசந தெலியக நொருல
யாசந ஜேதுநநுசு நீகு
தோசந த்³யுதிவிஜிதாயுத வி-
ரோசந நந்து ப³ரோவநிங்க (யோ)

ச. [1]கேசந நிஜப⁴க்தநிசய பாப வி-
மோசந க³ல பிருது³லெல்ல கொ³நி நந்-

1. "கேசந நிஜபக்தநிசய" என்ற சொற்றொடர் ஸம்ஸ்கிருத வியாகரண விதிப்படி பிழை என்று கருதிச் சிலர் "கேசர நுத" என்று பாடுகிறார்கள். இக்கீர்த்தனம் முழுதிலும் "சந" என்ற இரு எழுத்துக்களே பிராஸமாதலால் இவ்வாறு திருத்துவது உசிதமல்ல. மேலும், தெலுங்கு கிருதிகளில் ஸம்ஸ்கிருத வியாகரணத்தை அநுசரிக்க வேண்டிய நிர்ப்பந்தமில்லை.

நேசநா க்ருதவிபிநசர வராபி'

ஷேசநா த்யாக'ராஜபூஜித (யோ)

*கமலக்கண்ணனே! என்னைக் காக்க யோசனையா? குறிப்பு அறியாமல் நான் மற்றொருவரை அடுத்து யாசிப்பேன் (இரப்பேன்) என்று உனக்குத் தோன்றிற்று? ஒளியால் பதினாயிரம் சூரியர்களை வென்றவனே! இன்னும் (யோசனையா?)*

*அனேக மெய்யடியார்களின் பாவங்களை ஒழித்தவன் என்ற விருதையுடைய நீ என்னை வருத்தலாமா? காட்டில் திரிபவனுக்குக்கூட (சுக்ரீவனுக்கு)ப் பட்டாபிஷேகம் செய்து வைத்தவனே! இன்னும் என்ன யோசனை?*

## 172

த'ர்பா'ரு ஆதி'

ப. ராம லோப'மேல நந்நு

ரக்ஷிஞ்சுபட்ல நீ கிந்த ஶ்ரீ (ரா)

அ. ஸோமார்க்க லோசந ஸுகு'ண

ஸுத்ராமாது' லெல்ல நவ்வரா (ரா)

ச. சரணநு கொந்ந காகா-

ஸுருநி ராவணுநி ஸோ-

த'ருநி ப்'ரோவலேதா'

ஸரகு'ந கரிநி கா'சிந ஶ்ரீ (ரா)

2. க'திலேநிவேள த்'ரௌ-

பதி'வேக'மே க்ருஷ்ணயந

அதி ப்ரேமதோ வேஞ்சேஸிந

மதி நேடெ'ந்து' போயெநோ (ரா)

3. டே'க'கை மேநொஸங்கு'

ராக'வாந்வயமுந

பா'க' ஜந்மிஞ்சிந

த்யாக'ராஜநுத ஶ்ரீ (ரா)

*ஶ்ரீராம! என்னைக் காக்கும் விஷயத்தில் மாத்திரம் உனக்கு ஏன் இக் கருமித்தனம்? சந்திர சூரியர்களைக் கண்களாக உடையவனே! நற்குணனே! இந்திரன் முதலியோர் இதைக் கண்டு சிரிக்கமாட்டார்களா?*

*உன்னைச் சரணடைந்த காகாசுரன், விபீஷணன், கஜேந்திரன் ஆகியோரை நீ காத்தருளவில்லையா? வேறு கதியற்ற*

சமயம் திரௌபதி விரைவாக ''கிருஷ்ணு'' என்று முறையிட, அன்புடன் எழுந்தருளிய உனது திருவுள்ளம் இன்று எங்குப் போயிற்று? பருந்திற்காக (சிபிச் சக்கரவர்த்தி) உடலை வழங்கிய இரகு குலத்தில் நற்பிறப்பு எடுத்த ஸ்ரீராம! ஏன் கஞ்சத்தனம்?

## 173

தே³வமனோஹரி (மே. 22) சாபு

ப. எவரிகை யவதார மெத்திதிவோ
இபுடை³ந தெ³லுபவய்யா ராமய்ய நீ (வெ)

அ. அவனிகி ரம்மநி பிலிசிந மஹரா-
ஜெவடோ³வாநிகி ம்ரொக்கெநு ராம (எ)

ச. வேத³வர்ணநீயமௌ நாமமுதோ
விதி⁴ ருத்³ருலகு மேல்மியகு³ ரூபமுதோ
மோத³ஸத³நமகு³ படு சரிதமுதோ
முநிராஜவேஷியௌ த்யாக³ராஜநுத நீ (வெ)

யார் பொருட்டு நீ அவதாரம் எடுத்தனையோ? இப்பொழுதாகிலும் கூறுவாய். இராமய்ய! உன்னை இவ்வுலகிற்கு எழுந்தருளுமாறு அழைத்த மகானுபாவரை நான் வணங்குகிறேன்.

வேதங்களால் வருணிக்கப்பெறும் திவ்ய நாமத்துடனும், பிரமனுக்கும் சிவனுக்கும் மேலான உருவத்துடனும், ஆனந்தத்திற்கு உறைவிடமான நற்சரிதத்துடனும், ராஜரிஷியின் கோலத்துடனும் (நீ யார் பொருட்டு அவதரித்தனையோ?)

## 174

தே³வமனோஹரி தே³சாதி³

ப. கந்த தண்ட்³ரிநாபை
கருணமாநகே கா³ஸி தாளநே (க)

அ. நிந்நேயு பநுலு நேடு³ கா³க வே-
ரெந்ந லேத³நுசு வேமா றுலகு (க)

ச. எது³ரு தாநநே இங்கி³தம் பெ³றிகி³
செத³ரநீக பஞ்சேந்த்³ரிய மணஞ்சி நின்
வத³லலேநி தை⁴ர்யசாலி கா³த³நி
மத³நகோடிருப த்யாக³ராஜநுத (க)

என்னைப் பெற்ற தந்தையே! என்மீது கருணை காட்டுவதை நிறுத்திவிடாதே! சிரமத்தை நான் தாளமாட்டேன். நேற்றுச் செய்த காரியங்களையே இன்றும் செய்துகொண்டு வேறு ஒன்றையும் நான் நினைப்பதில்லையென்று எண்ணி (உன் கருணையை மறுக்காதே).

எதிரில் தோன்றுபவையனைத்தும் நானேயென்னும் அபிப்பிராயத்தையறிந்து, ஐம்புலன்களைச் சிதறவிடாமல் அடக்கி, உன்னை விடாமல் துதிக்கும் தைரியசாலி நான் அல்லன் என்று கருதி உன் (கருணையை விட்டுவிடாதே!) கோடி மன்மதரை நிகர்த்த அழகனே!

## 175

தே^வமநோஹரி — ரூபகம்

| | | |
|---|---|---|
| ப. | குலபி^ருது^நு ப்^ரோசுகொம்மு ரம்மு | (கு) |
| அ. | இலக^ல பூ^தே^வ ஸுரா- | |
| | து^ல காதா^ருட^கு^நீ | (கு) |
| ச. | நிக^மாக^மசர நீகு | |
| | நித்யமங்க^ளமு கல்கு^ | |
| | வக^ஸேயகு ஶ்ரீராம | |
| | வந்தி^த த்யாக^ராஜ | (கு) |

(இக்ஷ்வாகு) குலப் பெருமையைக் காப்பாற்றிக்கொண்டு நீ உடனே வருக. தேவருக்கும் அந்தணருக்கும் ஆதாரமானவன் நீயேயல்லவா? வேதம், சாத்திரம் ஆகியவற்றில் சஞ்சரிக்கும் உனக்கு நித்திய மங்களம் உண்டாகுக. என்னைக் கஷ்டத்திற்கு உள்ளாக்காதே. ஶ்ரீராம! தியாகராஜன் வணங்கும் மூர்த்தியே!

## 176

[1]நாத^வராங்கி^ணி மே. 22) — ஆதி^

| | | |
|---|---|---|
| ப. | க்ருபாலவால[2] கலாத^ர சேக^ர | |
| | க்ருதாபி^ வந்த^ந ஶ்ரீராம | (க்ரு) |
| அ. | ந்ருபோத்தம சரணக^த ஜநாக^- | |
| | நிவாரணப்^ஜ ஹிதாந்வய சசாங்க | (க்ரு) |

1. இந்த இராகத்தின் பெயர் நாததரங்கிணி என்று சில பதிப்புக்களில் காணப்படுவதோடல்லாமல் இலக்ஷணமும் வேவ்வேறுவிதமாகக் காணப்பெறுகிறது.

2. ந்ருபாலவால

ச. அபவர்க³ ப₂ல காமமுலநு ஜூசி அட்'ட³மை
யணிமாதி³ ஸித்³து₄ல மோஸபு³ச்செத³ரய்ய
ஸுபவித்ரரூப ஸதா³ கருணஜூடு³
ஸுரபாலக த்யாக'ராஜநுத (க்ரு)

கருணையின் உறைவிடமே! பிறைசூடிய பெருமானால் வணங்கப் பெற்றவனே! சரண் புகுந்தவரின் பாவங்களை யகற்றுபவனே! சூரிய குலத்தில் உதித்த சந்திரனே!

மோக்ஷம் ஒன்றையே நாடும் என் விருப்பத்தைக் கண்டு அதற்குத் தடையாக அணிமா முதலிய அஷ்ட சித்திகளை வாக்களித்து (மற்ற தேவதைகள்) என்னை மோசம் செய்ய முயற்சி செய்கின்றனர். தூயவடிவத்தாய்? சதா என்னைக் கருணையுடன் பார். தேவரைக் காப்பவனே!

## 177

நாயகி (மே. 22) ரூபகம்

ப. கநுகொ³நு ஸௌக்₂யமு
கமலஜுகைந கல்கு³நா (க)

அ. த³நுஜவைரியகு³ ராமுநி
த³ய க³ல்கி³ந யதநி விநா (க)

ச. தநுவொகசோ மநஸொகசோ
தகி³ந வேஷமொகசோ நிடி³
ஜநுல நேசு வாரிகி
ஜயமௌநே த்யாக³ராஜு (க)

அரக்கரின் சத்துருவாகிய இராமனின் தயைக்குப் பாத்திரமானவனைத் தவிர, தியாகராஜன் கண்டுகொண்ட இவ்வானந்தம் பிரமனுக்கும் கிடைக்குமா?

தேகத்தை ஒருபுறமும், மனத்தை ஒருபுறமும், தகுந்த வேஷத்தை மற்றொரு புறமும் வைத்து மாந்தரை ஏமாற்றுபவர்களுக்கு வெற்றி கிடைக்குமா?

## 178

நாயகி ஜ₂ம்ப

ப. த³யலேநி ப்³ரதுகேமி தா³சரதி₂,[1] ராம (த³)

அ. வயஸு நூறைந ஈ வஸுத₄, நேலிந கா³நி (த³)

---

1. தசரத: 2: த்யாகராஜஸந்நுத நீது

ச. ராஜாதி₁ராஜ ரதிராஜசதலாவண்ய

பூஜ ஜபமுல வேள பொந்து³கா நெது³ட

ராஜில்லி லோகாந்தரங்க³ மர்மமு தெ³லிபி

ராஜி ஸேயநி த்யாக³ராஜாதி³ விநுத[2] (த³)

நூறு வயது வாழ்ந்தாலும், இவ்வுலகை அரசு புரிந்தாலும், உன் தயையில்லாத பிழைப்பு எதற்கு? தாசரதி! ராஜாதி ராஜனே! நூறு மன்மதரை நிகர்த்த அழகனே! உன்னைப் பூசித்து, சபம் செய்யும் சமயம் நட்புடன் நீ எதிரில் விளங்கி, உலகத்தின் அந்தரங்க மர்மங்களை விளக்கி சமாதானம் செய்யாவிடில் (அச்சன்மம் எதற்கு?)

## 179

நாயகி ஆதி³

ப. நீ ப₄ஜந கா³ந ரஸிகுல நே

நெந்து³ கா³நரா ராம (நீ)

அ. ஶ்ரீப₄வ ஸரோஜாஸநாதி³ச-

சீமநோரமண வந்த்³ய இலலோ (நீ)

ச. ஸகு³ண நிர்கு³ணபு நிஜதப்³ப³ரலநு

ஷண்மதமுல மர்ம மஷ்டஸித்³து₄ல

வக³லு ஜூப ஸந்தஸில்லி க³ண்டிநி

வராநந த்யாக³ராஜவிநுத (நீ)

உன் பஜனையாகிற கானத்தில் ஈடுபடுபவர்களை இவ்வுலகில் நான் எங்கு காண்பேன்? இலக்ஷ்மி, சிவன், பிரமன், சசிதேவியின் பதியாகிய இந்திரன் முதலியோரால் வணங்கப் பெறுபவனே!

ஸகுண நிர்க்குண உபாசனைகளின் உண்மை, பொய்களையும், (சைவம், சாக்தம் முதலிய) அறுசமயங்களின் மர்மங்களையும், (அணிமா முதலிய) அஷ்ட சித்திகளின் பகட்டையும் (நீ) விளக்க நான் மகிழ்ச்சியுடன் தெரிந்துகொண்டேன். நன்முகத்தவனே! (உன் பஜனையென்னும் கானத்தில் அபிருசியுள்ளவர்களை எங்கு காண்பேன்?)

## 180

பூர்ணஷட்³ஜம்[1] (மே. 22) ரூபகம்

ப. லாவண்யராம கந்து-

லார ஜூட³வே அதி (லா)

---

1. ருத்ரப்ரிய

அ. ஸ்ரீவனிதா சித்தகுமுத
சீதகர சதாநங்யஜ (லா)

ச. நீ மநஸு நீ ஸொகˇஸு
நீ திˇநுஸு வேறே
தாமஸ மத தைˇவமேல
த்யாகˇராஜநுத திˇவ்ய (லா)

திவ்ய சௌந்தரியம் அமைந்த இராமனே! உன் கண்களார என்னைக் கடாக்ஷிப்பாயாக! திருமகளின் இதயமெனும் அல்லியை மலர்விக்கும் சந்திரனே! நூறு மன்மதரையொத்த அழகனே!

(தயை நிரம்பிய) உன் மனதும், உன் பேரழகும். இவற்றிற்கு இசைந்த உனது பக்குவமும் உனக்கே உரியவை, (நீ யிருக்கையில்) தமோ குணம் நிறைந்த மற்ற தெய்வங்கள் எனக்கு எதற்கு?

## 181

பூர்ணஷட்ˇஜம் தேˇசாதிˇ

ப. ஸ்ரீமாநிநீ மநோஹர
சிரகாலமைந[1] மாடயொகடிரா
வேமாறு பˇல்கஜாலரா (ஸ்ரீ)

அ. ஸ்ரீமந்துலௌ நீ ஸோதˇருலு
ஸேயுரீதி பாதˇஸேவ கோரிதிநி (ஸ்ரீ)

ச. த,ர்மாத்ˇயகி,ல புருஷார்த்த,முலு
தாˇசார்ஹுநி ரூபமப்ˇபிˇந
மர்மம்புˇ வேறேயுந்திˇ
மந்நிம்பு மிக த்யாகˇராஜநுத (ஸ்ரீ)

இலக்குமி நாயகனே! வெகு நாட்களாக நான் உன்னை வேண்டியவரும் கோரிக்கை ஒன்றுதான். அதை ஆயிரம் முறை கூறவேண்டுமா? சிமான்களாகிய உன் சகோதரர்கள் உனக்குப் புரிந்துவரும் திருவடித்தொண்டிற்கே நான் ஆசையுற்றேன்.

அறம் முதலிய நான்கு வகைப் புருஷார்த்தங்களும் (தாசார்ஹ எனப்படும்) யாதவ குலத்தில் கண்ணனாக அவதரித்த மர்மம் வேறு உள்ளது. (''தாசார்ஹோ தசரூப ப்ருத்'' என்பது நிகண்டு) என்னை மன்னித்து உன் பாதசேவையை அளிப்பாயாக!

---

1: சிரகாலமு

## 182

பு,லமஞ்ஜரி (மே. 22) தே'சாதி'

ப. ஸநாதந பரமபாவந
க',நாக',ந வர்ண கமலாநந (ஸ)

அ. தநவாட'நே யபி',மாநமு
தை'வமைந நீகேல கலுக'து' (ஸ)

ப. ராஜாதி',பாங்வய ஸாக'ர
ராஜு நீவை விலஸில்லிதே
தேஜரில்லகா'க்ருபஜூிதுவே
ஈ ஜகா'ந த்யாக'ராஜஸந்நுத (ஸ)

*என்றும் சாசுவதமானவனே! தூய்மை பொருந்தியவனே! மேகவண்ணனே! பங்கஜ வதனனே! தன்னைச் சேர்ந்தவன் என்ற அபிமானம் தெய்வமாகிய உனக்கே (என்னிடம்) ஏன் உண்டாக வில்லை?*

*க்ஷத்திரிய வம்சமெனும் கடலில் தோன்றிய சந்திரனாக நீ விளங்குவதால் உன் புகழ் ஓங்குமாறு நீ என்னைக் கருணையுடன் நோக்குவாயாக!*

## 183

ப்'ருந்தா'வநஸாரங்க'(மே. 22) தே'சாதி'

ப. கமலாப்தகுல[1]கலசாப்'தி',சந்த்'ர
காவவய்ய நநு க'ருணாஸமுத்'ர (க)

அ. கமலா களத்ர கௌஸல்யா ஸுபுத்ர
கமநீய கா'த்ர காமாரி மித்ர (க)

ச. முநு தா'ஸுலப்'ரோசிநதெ'ல்ல ஜால
விநி நீ சரணாச்ரிதுடை'தி நய்ய
கநிகரம்பு'ந நா கபு',ய மிவ்வுமய்ய
வநஜலோசந ஸ்ரீத்யாக'ராஜநுத (க)

*தாமரையின் நண்பனாகிய சூரியனின் குலமென்னும் கடலில் தோன்றிய சந்திரனே? கருணைக் கடலே! என்னைக் காப்பாயாக! இலக்ஷ்மியைப் பத்தினியாக உடையவனே!*

---

1 *கலசவார்தி*

கௌசலையின் நற்புத்திரனே! அழகிய வடிவத்தாய்! மன்மதனை எரித்த சிவனின் தோழனே!

முன்பு நீ உன்னடியார்களைக் காப்பாற்றிய வரலாறுகளைக் கேட்டு உன் திருவடிகளை வந்தடைந்தேன். இரக்கத்துடன் எனக்கு நீ அபயம் அளிக்கவேண்டும் பங்கயக் கண்ணனே!

## 184

மணிரங்கு (மே. 22) ஆதி

ப. ராநிதிராது ஸுராஸுருலகைந (ரா)

அ. போநிதிபோது பூ,ஸுருலகைந (ரா)

ச. தேவேந்த்ருநிகி ஸுதேஹமு பூர்வ
தேவுள்ள கம்ருத மபாவமே கானி
ஆ வநசர பாதலாமுநுலகே கானி
பாவந த்யாகராஜ பாக்யமா ஸ்ரீராம (ரா)

தேவருக்காயினும் அசுரருக்காயினும் வராதன என்றும் வாரா. பிராம்மணராயினும் அவர்களுககு ஒழியாதன என்றும் ஒழியா.

(கௌதம ரிஷியின் சாபத்தினால் உடலில் ஆயிரம் கண் படைத்த) தேவேந்திரனுக்குத் திரும்பவும் நல்ல தேகமும், அசுரர்களுக்குக் (கிடைக்காமற்போன) அமிருதமும் என்றும் கிடைக்கமாட்டா. (அவ்விதமே) வனத்தில் வசிக்கும் முனிவர்களுக்கு அரக்கர் இழைக்கும் துன்பங்கள் ஒரு பொழுதும் விலகா. தூயவனே! தியாகராஜனின் பாக்கியமே!

## 185

மத்யமாவதி (மே. 22) ரூபகம்[1]

ப. அடிகிஸுகமு லெவ்வரநுபவிஞ்சிரிரா
ஆதிமூலமா ராம (அ)

அ. ஸடலநி பாபதிமிரகோடிஸூர்ய
ஸார்வபௌம ஸாரஸாக்ஷ ஸத்குண நின் (ந)

ச. 1. ஆச்ரயிஞ்சி வரமடிகின ஸீத
யடவிபோநாயெ
ஆசரஹரண ரக்கஸி யிஷ்டமடுக
அபுடேமுக்கு போயெ ஓராம நின் (ந)

---

1 சாபு.

2. வாஸிக³நாரத³மௌநி வரமடு³க³
வநித ரூபுடா³யெ
ஆஸிஞ்சி து³ர்வாஸு³ட³ந்நமடு³க³
அபுடெ³மந்த³மாயா ஓ ராம நிந் (ந)

3. ஸு³துநி வேடு³க ஜூட³தே³வகி யடு³க³
யசோத³ஸூட³நாயெ
ஸதுலெல்ல ரதிபி⁴க்ஷமடு³க³வாரிவாரி
பதுல வீட³நாயெ ஓராம நிந் (ந)

4. நீகே த³யபு³ட்டி ப்³ரோதுவோ ப்³ரோவவோ
நீ கு³ட்டு ப³யலாயெ
ஸாகே த தா⁴ம ஸ்ரீத்யாக³ராஜநுத
ஸ்வாமி ஏடி மாயா ஓ ராம நிந்

ஆதிமூலமாகிய இராமனே! உன்னைச் சுகம்வேண்டுமென்று கேட்டவர்கள் யாராவது அதைப்பெற்று அனுபவித்தார்களா? அகலாத பாவமென்னும் இருளைப்போக்கும் கதிரவனே! சக்ர வர்த்தியே! கமலநயனனே! நற்குணனே!

உன்னையடுத்து வரம் கேட்ட சீதை காட்டிற்குப்போகும்படி யாயிற்று. அரக்கரை வதைத்தவனே! சூர்ப்பநகை தன் விருப் பத்தை உன்னிடம் தெரிவித்தவுடனேயே தனது மூக்கை இழந்தனள்.

நாரதமுனிவர் உன்னை ஒருவரம் கேட்க முற்பட அவர் பெண்ணுருவை ஏற்க நேர்ந்தது. ஆசையுடன் துர்வாசர் அன்னம் வேண்டுமென்று கேட்க அவர் வயிறு அப்பொழுதே மந்தமாயிற்று.

புதல்வனை வளர்க்கும் இன்பம் வேண்டுமென்று தேவகி கேட்க அந்த பாக்கியம் யசோதைக்குக்கிடைத்தது. கோப ஸ்திரீகள் உன்னிடம் காமவின்பத்தை விரும்பவும் தங்கள் கணவர்களையே துறக்குமாறு ஆயிற்று.

உனக்கே தயை பிறந்து காப்பாயோ, காக்கமாட்டாயோ? உன் இரகசியம் வெளியாகிவிட்டது. கோசல மன்னனே! சுவாமி! இதென்ன மாயை!

## 186

மத்⁴யமாவதி ரூபகம்

ப. அலக லல்லலாட³க³க³நி
ஆராண்முநி எடு பொங்கெ³நோ (அ)

அ. செலுவு மீரக ᵛநு மாரீ-
சுநி மதᵛமணசே வேள (அ)

ச. முநி கநு ஸைகᵛதெᵛலிஸி சிவ
தᵛநுவுநு விறிசே ஸமய-
முந த்யாகᵛராஜ விநு-
துநி மோமுந ரஞ்ஜில்லு (அ)

தோற்றப் பொலிவுடன் மாரிசனின் மதத்தை அடக்கும் சமயம் (இராமனின்) நெற்றியில் புரளும் சுருண்ட குழல் அசைந்தாடுவதைக் கண்டு அந்த ராஜரிஷி (விசுவாமித்திரர்) எப்படி மகிழ்ந்தனரோ?

அம்முனியின் கண் ஜாடையைத் தெரிந்து பரமசிவனின் வில்லையெடுத்து ஒடிக்கும் தருணம் தியாகராஜன் வணங்கும் தெய்வமாகிய இராமனின் முகத்தில் விளங்கும் (சுருண்ட குழல்.. மகிழ்ந்தாரோ?)

## 187

மத்ᵛயமாவதி ஆதிᵛ

ப. எவரிச்சிரிரா சரசாபமுலு நீ-
கிநகுலாப்ᵛதிᵛசந்த்ᵛர (எ)

அ. அவதரிஞ்சுவேள நுண்டேᵛநோ லேக
அவநிகேகிᵛயார்ஜிஞ்சிதிவோ ஸ்ரீராம நீ (கெ)

ச. ஒகடேஸிந பதிᵛநூரை வெய்யை
சகபகலாடிᵛசத்ருவுல நணசே நட
விகலுநி காகிநி ப்ᵛரோவ த்ரிமூர்த்துலு
வெநுக தீஸி நாரட
ஸகலநதீᵛபதிகை த்ᵛருமகுல்யுல
ஸம்ஹரிஞ்செ நடா
ப்ரகட கீர்த்தி கᵛலிகிᵛந கோதᵛண்டᵛ
பாணி ஸ்ரீத்யாகᵛராஜநுத நீ (கெ)

கோதண்டபாணியென்று பிரபலமான கீர்த்திபெற்ற வில்லாளியே! சூரிய குலதிலகனே! உனக்கு வில்லையும் அம்புகளையும் யார் அளித்தனர்? நீ (இராமனாக) அவதரிக்கும்பொழுதே அவை உன்னுடன் இருந்தனவா? அல்லது நீ இவ்வுலகிற்கு வந்த பிறகு சம்பாதித்துக்கொண்டனையா'

நீ ஓரம்பைத் தொடுத்தால் அது பத்து, நூறு, ஆயிரமாகப் பெருகி சத்துருக்களை அடக்கினவாம் புத்தியிழந்த காகாசுரனை (உன் பாணம் துரத்தியபொழுது) காக்கத் திரிமூர்த்திகளும் பின்வாங்கினராம். சமுத்திர ராஜனின் பொருட்டு (உன் பாணம்) துரும குல்யங்கள் எனப்படும் அரக்கர் வாழுமிடங்களை நாசம் செய்ததாம். (அத்தகைய வில் அம்புகளை உனக்கு யார் அளித்தனர்?)

## 188

மத்₄யமாவதி சாபு

ப. நளிநலோசந நீவுகா₃க அங்யுல நம்ம
நரஜந்ம மீடே₃ருநா

அ. ஜலஜாப்த குலபூ₄ஷண ஸஜ்
ஜநபோஷண ஜநகஸுதாரமண (ந)

ச. 1. கொங்க₃வண்டி த்₄யாநமு சேஸிதே தந
கோரிக கொநஸாகு₃நா
தொ₃ங்க₃மக₃நி ப₄க்திமீற நம்மிதே மஞ்சி
தோ₃வ ஜூப நேர்ச்சுகா
க₃ங்க₃லோநி ஓட₃நு நம்மி ப₄வஸா-
க₃ரமு தா₃டவச்சுநா
நங்க₃நாசுல சரணநுடசேத ந-
நங்கு₃டு₃ஜ்ஞாநோபதே₃சமு ஜேயுநா (ந)

2. பரமவந்த்₃யகு பா₃லு பெருகு₃போ₃ஸிதேசண்டி
பாலு கலுக₃நேர்ச்சுநா
நெறய த₄நமுலு தா₃யாது₃ல கிச்சிதே
நெநரு மாட கல்கு₃நா
எருவு வேஸி யூஷர பூ₄மி வித்திதே
ஏமைந ப₂லிஞ்சுநா
வரமைந பேருக₃லுகு₃ க₃ங்க₃ராவிகி
வந்த₃ந மொநரிஞ்சிதே ப்₃ரோவநேர்ச்சுநா (ந)

3. ஸொகஸைந பூ₃ருகு₃லநு பெ₃ஞ்சிதே
ஸுரஸ ப₂லமு லிச்சுநா

பா॒க்॒யமுக॒ல திருமஞ்ஜந விப॒வமு
பரிசாரகுல கப்॒பு॒நா
ராக॒லோப॒முலதோ த॒பமு ஜேஸிதே ப-
ரக॒தி கலுக॒ நேர்ச்சுநா
த்யாக॒ராஜஸந்நுத ஸத்॒கு॒ண ஸ-
த்யஸ்வருப நிர்விகார பராத்பர (ந)

பங்கயக் கண்ணனே! உன்னையன்றி மற்றதெய்வங்களை உபாசித்தால் இம்மானிட சன்மம் ஈடேறுமா? சூரிய குல திலகனே! இனிய பேச்சையுடையவனே! நல்லோரைக் காப்பவனே! ஜானகி நாயக!

கொக்கைப்போல் (ஓடுமின் ஓட உறுமீன் வருமளவும்) கண்மூடி தியானம் செய்தால் நம் விருப்பம் நிறைவேறுமா? திருடனாகிய கணவனை பக்தியுடன் நம்பினால் மனைவிக்கு நல்வழி காட்டுவானா? கங்கையின்மீது செல்லும் ஓடத்தை நம்பி சம்சாரக் கடலைக் கடக்க முடியுமா? கபடம் நிறைந்த மாதரிடம் சரண் புகுந்தால் மன்மதன் ஞானோபதேசம் செய்வானா?

மலடிக்குப் பால், தயிர் வார்த்து வளர்த்தால் குழந்தைப் பால் கிடைக்குமா? நிறைந்த செல்வத்தை தாயாதிகளுக்கு அளித்தால் அவர்களிடமிருந்து சிறிதேனும் நன்றி கிடைக்குமா? எருப்போட்டு உழ மன் நிலத்தில் விதைத்தால் ஏதாவது முளைக்குமா? பிரமதாரு என்ற சிறந்த பெயருடைய பூவரச மரத்திற்கு நமஸ்காரம் செய்தால் அது நம்மைக் காக்குமா?

அழகிய இலவ மரத்தை வளர்த்தால் அது ரசம் நிறைந்த பழங்களை அளிக்குமா? பகவானின் திருமஞ்சனத்தைச் சேவித்து பக்தர் அனுபவிக்கும் பாக்கியம் அர்ச்சகருக்குக் கிடைக்குமா? ஆசை உலோபம் முதலியவற்றுடன் தவம் புரிந்தால் பரகதி கிடைக்குமா? நற்குண நிதியே! சத்திய ஸ்வரூபனே! நிர்வி காரனே! பராத்பர!

## 189

மத்॒யமாவதி ஜ,ம்ப

ப. நாது॒பை பலிகேரு நருலு (நா)

அ. வேத॒ஸந்நுத ப॒வமு
வேறு ஜேஸிதி நநுசு (நா)

ச. 1. பஞ்சசரஜநக ப்ரபஞ்சமுந க॒ல ஸுக,மு
மஞ்சுவலெ நநுசு மதி॒ நெஞ்சிதிநி கா॒நி
பஞ்சுகொநி த॒நமுலார்ஜிஞ்சுகொநிஸரியவ்வ-
ரஞ்சு மறி க॒தியு லேத॒ஞ்சு ப॒ல்கிதிநா (நா)

2. தி<sup>v</sup>நமு நித்யோத்ஸவம் முந காஸ ஜெந்தி<sup>v</sup>தினா
மநஸுநநு நில்லு யொகடநி யுண்டிகா<sup>v</sup>நி
அநுதி<sup>v</sup>நமு யொருல மேலுநு ஜுசி தாள லே-
கநு ரெண்டு<sup>v</sup> ஸேயவலெ நநுசு ப<sup>v</sup>ல்கிதினா (நா)

3. ப்ராண மேபாடியநி மாநமே மேலண்டி
கா<sup>v</sup>நி ஸ்ரீராம பரமாநந்த<sup>v</sup> ஜலதீ,
ஸ்ரீநாத, குலமுலோ லேநி தா<sup>v</sup>ரிநி பட்டி
ஜாநெ டு<sup>v</sup>த<sup>v</sup>ரமு நிம்ப நொருல பொ<sup>v</sup>க<sup>v</sup>டி<sup>v</sup>தினா (நா)

4. ஆஜாநுபா<sup>v</sup>ஹுயுக<sup>v</sup> ஸ்ரீஜாநகீபதி ப-
யோஜாக்ஷ ஸ்ரீத்யாக<sup>v</sup>ராஜநுத சரண
ஈ ஜக<sup>v</sup>திலோ நிந்நு பூ<sup>v</sup>ஜிஞ்சுவாரிந-
வ்யாஜமுந ப்<sup>v</sup>ரோசே ஸுராஜ நீ வாடை<sup>v</sup>ந-

வேதங்களால் துதிக்கப்பெறுபவனே! இக் குடும்பத்தைப் பாகம் செய்தேனென்ற பழியை ஊர் மக்கள் உன் அடியவனை என்மீது சுமத்தினர்.

ஐங்கணையோனுகிய மதனனைப் பெற்றவனே! இவ்வுலகிலுள்ள சுகமனைத்தும் பனியை ஒத்தனவென்று மனத்தில் எண்ணினேனே தவிர, சொத்தைப் பங்கிட்டுக்கொண்டு, மேலும் செல்வந்தேடி, ''எனக்கு நிகர் யார்? என்னைவிட்டால் கதியேது?'' என்று கர்வித்தேனு?

தினமும் உன் ஆராதனையை விடாது நடத்த வேண்டுமென்று ஆசைகொண்டு மனத்தில் இவ்வீடு ஒன்றேயென இருந்தேனே தவிர, அனுதினமும் பிறர் மேன்மையைக் கண்டு மனம் பொருமல் குடும்பத்தை இரண்டாக்க வேண்டுமென்றேனு?

உயிர் எப்படியாயினும் மானமே பெரிதென்றேனே தவிர ஸ்ரீராம! பரமானந்தக் கடலே! லக்ஷ்மீபதி! என் குலத்திற்குத் தகாத வழியைப் பின்பற்றி இச்சாண் வயிற்றை நிரப்ப மாந்தரைப் புகழ்ந்தேனு?

நெடுந்தோளனே! ஜானகி பதியே! கமலக் கண்ணு! தியாகராஜன் வணங்கும் பாதனே! இவ்வுலகில் உன்னைப் பூசிப்பவர்களைக் காரணமின்றிக் காக்கும் மன்னர் பெருமானே!

## 190

மத்<sup>v</sup>யமாவதி — தே<sup>v</sup>சாதி<sup>v</sup>

ப. ராம கதா, ஸுதா<sup>v</sup>ரஸ பாநமொக (ரா)
ராஜ்யமு சேஸுநே

அ. பாᵛ¦மாமணி ஜாநகி ஸௌமித்ரி
பᵛ¦ரதாதுᵛலதோ பூᵛ¦மி வெலயு ஸ்ரீ (ரா)

ச. தᵛ¦ர்மாத்ᵛயகி¦ல ப¦லதᵛமே மநஸா
தைᵛ¦ர்யாநந்தᵛ ஸௌக்¦யநிகேதநமே
கர்மபᵛந்தᵛ¦ ஜ்வலநாப்ᵛதிᵛ¦நாவமே
கலிஹரமே த்யாகᵛராஜ விநுதுடᵛகுᵛ (ரா)

பெண்களுள் இரத்தினமாகிய சீதாதேவி, இலக்ஷ்மணன், பரதன் முதலியோருடன் கூடி இப்பூமியில் விளங்கும் ஸ்ரீ ராமனின் திவ்ய சரிதமாகிய அமிருதபானமே ஓர் அரசாட்சி புரியும்.

(அது) தர்மம் முதலிய நான்குவகை புருஷார்த்தங்களை அளிக்க வல்லது. தைரியம், ஆனந்தம், சுகம் இவற்றின் உறைவிடம். பழவினைகளால் ஏற்படும் தாபங்களாகிற சமுத்திரத்தைக் கடக்க உதவும் நாவாய். கலியுகத்தின் பாவங்களைப் போக்கடிப்பது.

## 191

மத்¦யமாவதி ஆதிᵛ

ப. ராம ஸமயமு ப்ᵛரோவ
ரா நாபாலி தைᵛவமா (ரா)

அ. ராம தᵛநுஜகᵛணபீᵛ¦ம நவகᵛ¦ந
ச்யாம ஸந்ததமு நாம கீர்த்தநமு
யேமறகநு யதி நேமமு ஜே-
ஸே மஹாத்முலகு காமிதப¦லதᵛ (ரா)

ச. 1. தாᵛந்த ஸம்ரக்ஷணகᵛமாந்தசர பாᵛ¦கᵛவ-
தாந்தரங்கᵛசர ஸ்ரீகாந்த கமநீயகுᵛ-
ணாந்தகாந்தக ஹிதாந்த ரஹித முநி
சிந்தநீய வேதாᵛந்த வேத்ᵛய ஸா-
மந்தராஜநுத*யாந்த பாᵛ¦ந்தநி-
சாந்த ஸுகருணாஸ்வாந்த நீகிதிᵛ (ரா)

* இதற்குப்பின் வரும் ''யாந்த பாந்த'' என்று வார்த்தைகளுக்குப் பொருள் விளங்கவில்லை. ''ய'' விற்கு அடுத்த எழுத்தாகிய ''ர''வையும் ''ப,''விற்கு அடுத்த எழுத்தாகிய ''ம''வையும் சேர்த்து ''ராம'' என்று கற்பனையாகப் பொருள் கூறலாம்.

2. ப்ருந்தா^v ரகாதி^v முனி ப்^v ருந்தார்ச்சித பதா^v ர–
விந்த^v ஸத்^v ப^v்க்தி ஜீவாநந்த^v கர ஸூர்யகுல
சந்த^v நாரி ஹர நந்த^v காயுத^v ஸ-
நந்த^v நாதி^v நுத குந்ந^v ரத^v ந வர
மந்த^v ரத^v ர கோ^v பிந்த^v முகுந்த^v
ஸந்தே^v ஹமு நீகெந்து^v கு நாபை (ரா)

3. ஈ ஜக^v திநி நீவவ்யாஜ கருணா மூர்த்திவநி
பூஜ ஜேஸிதி க^v ஜராஜரக்ஷக த்யாக^v
ராஜவந்தி^v த இப^v ராஜவந்த^v ந ப^v ணி-
ராஜசயந விநரா ஜக^v த்பதீ
பூ^v ஜாநாயக ராஜிதமகுட த^v -
ராஜஸந்நுத ஸுராஜ யிபுடே^v (ரா)

இராம! என்னைப் பாலிக்கும் தெய்வமே! என்னைக் காக்க இதுவே தருணம். அரக்கரை வதைப்பவனே! மேக வண்ணனே! சதா நியமத்துடன் உன் நாம ஸங்கீர்த்தனம் செய்யும் மகான் களின் விருப்பங்களை யளிப்பவனே!

புலன்களை யடக்கியவர்களைக் காப்பவனே! வேதங்களில் சஞ்சரிப்பவனே! பக்தரின் உள்ளத்துறைபவனே! திருமகள் நாயகனே! உள்ளங்கவரும் குணசீலனே! காலனை வென்ற சிவனின் தோழனே! முடிவற்றவனே! முனிவரால் தியானிக்கப் படுபவனே! மறை முடியால் அறியப்படுபவனே! மகாராஜர் களால் தொழப்படுபவனே! சாந்த ஸ்வரூபனே! கருணை நிரம்பிய உள்ளத்தவனே!

தேவர், முனிவர் குழாத்தினுல் தொழப்படும் பாதனே! பக்தருக்கு ஆனந்தமளிப்பவனே! சூரிய குலத்திற்குச் சந்தனம் போல் குளிர்ச்சி தருபவனே! சத்துருக்களை ஒழிப்பவனே! நந்தக மென்னும் கத்தியை அணிந்தவனே! ஸநந்தனர் முதலியோரால் துதிக்கப் பெறுபவனே! முல்லைப் பற்களையுடையவனே! மந்தர மலையைத் தாங்கியவனே! கோவிந்த! முகுந்த! என்மீது உனக் கென்ன சந்தேகம்?

இவ்வுலகில் காரணமின்றி அருள் புரிபவன் நீயென்று உன்னைப் பூசித்தேன். கஜேந்திரரக்ஷகா! அந்த யானை யரசனுல் வணங்கப் பெற்றவனே! சேஷசயந! கேளாய்! உலகநாயகனே! ஸீதாபதியே! ஒளிவீசும் கிரீடத்தையணிந்தவனே! பிரமனுல் தொழப்படுபவனே! இதுவே நீ என்னைக் காக்க வேண்டிய சமயம்.

## 192

மத்<sup></sup>யமாவதி ஆதி

ப. வேங்கடேச நிநு ஸேவிம்பநு பதி-
வேல கநுலு காவலெநய்ய (வே)

அ. பங்கஜாக்ஷ பரிபாலித முநிஜந
பாவுகமகு திவ்யரூபமுநு கொந்ந (வே)

ச. எக்குவ நீவநி திக்குல பொகடக
அக்கறகொநி மதி ஸொக்கி கநுங்கொந
நிக்கமு நீவே க்ரக்குந ப்ரோவுத-
ளுக்கநி மெறஸே சக்கதநமு கல (வே)

2. ஏநோமு பலமோ நீ நாமாம்ருத
பாநமு அநு ஸோபாநமு தொரிகெநு
ஸ்ரீநாயக பரமாநந்த நீ ஸரி
கநமு சோபாயமாநாங்க்ருலுகல (வே)

3. யோகிஹ்ருதய நீவே கதியநு ஜந-
பாகதேய வர போகீசசயந
பாகவதப்ரிய த்யாகராஜ நுத
நாகாசலமுபை பாகுக நெலகொந்ந (வே)

பங்கயக் கண்ணனே! முனிவர்களைக் காப்பாற்றியவனே! மங்களகரமான திவ்ய ரூபத்துடன் நாகாசலமென்ற திருமலை மீது எழுந்தருளியிருக்கும் வேங்கடேசனே! உன்னைச் சேவிக்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும் ஐயனே!

மேலானவன் நீயேயென்று திக்குகள் அனைத்தும் புகழ, நான் அன்பினால் மெய்ம்மறந்து சாகுவதனுகிய உன்னைத் தரிசிக்க வந்துள்ளேன். ஒளிவீசும் உன் நல்லழகுடன் விரைவாக வந்து காப்பாயாக.

உன் திருநாமமாகிய அமுதபானம் என்ற படிக்கட்டு எனக்குக் கிடைத்தது எந்த நோன்பின் பலனோ? லக்ஷ்மீபதி! பரமானந்த! பிரகாசிக்கும் திருவடிகளையுடைய உனக்கிணை எங்கும் கண்டிலோம். யோகிகள் உள்ளத் துறைபவனே! நீயே கதி யென்று கூறும் மக்களின் பேரதிர்ஷ்டமே! சேஷநயன! பக்தப்பிரிய!

## 193

மத்⁴யமாவதி ஆதி³

ப. சரணுசரணநுசு மொறலிடி³ந நா—
கி³ரமுலந்நி பரியாசக மௌநா (ச)

அ. சரஜநயந பரமபுருஷ நிந்நு
ஸரணதோ க³ருணதோ மறி மறி (ச)

ச. 1 சரமு தரம தரமுகா³க காகா
ஸுருடு³ஸுருல நாய வேட³கா³நு த³-
சரத,வர குமாருநி பா³ணமநுசுநு
வெறசி ஜரக³மரல தாநு க³நி கா³-
ப³ரபடி³ஸரகு³ந சரணநு மாத்ரமு
நிருவுக³நு ரஜத கி³ரிநாதா,து³லு
வரமகு³பி³ருது³ந ஸரஸத மெச்சநு
கருணநு ஸ்தி,ரமுக³வரமிச்சிந நிநு (ச)

2. முநுபு மநஸுந நஸூயலநு தபோ—
த³,நுடு³விநயமுநநு த்³ரௌபதி³நிசோ-
த³,நமுக³,நமுக³நிஜமுநஸேய த்³ருட³,
முநநு தநமதி³நி சரணநகா³நே
கநிகரமுந வேக³ந நீவெந்தோ சநு-
வுந முநுலு ஸுஜநுலு ஸுராஸுர
க³ணமு லவநிபால நருலு பொ³க³ட³க³நு
வநஜநயந லகு³,வுந ப்³ரோசிந நிநு (ச)

3. மதி³நி பெ³த³ருஸுத³திநி க³நி நீது³
பத³முலு த³யநு த³,ரலோநு ப்³ரோசே
க³த³ர மத³ஜந த³ளநாபக³,நஜித
மத³ந பு³த³,ஜநத³,ந த்யாக³ராஜ
ஹ்ருத³ய குமுத³ஜலஜத³,ர ஸம்ஹரணு-
ரித³மந ஸத³மலரத³ந முநிமநோ-

ஸதˇன ஸுப்ˇதˇனநு முதˇமுன ப்ˇரோவுமு

ஸதˇயுடˇகொதˇவல நதˇலிம்புமு நிநு (ச)

*தாமரைக் கண்ணனே பரம! புருஷ! உன் திருவுள்ளத்தை அனுசரித்து நீயே அடைக்கலம் என்று முறையிடும் என் வார்த்தைகள் உனக்குப் பரிகாசமாகிவிட்டனவா?*

*உன் பாணம் துரத்தியபொழுது அதைத் தாளமுடியாமல் வேறு கதியின்றி காகாசுரன் தேவர்களைத் தேடி வேண்டவும் ''இது தசரத குமாரனின் பாணம்'' என்று அவர்கள் பயப்பட அதைக்கண்டு கலக்கமுற்று உன்னையே சரணடையவும் வெள்ளி மலைக் கதிபதியாகிய சிவன் முதலியோர் உன் புகழை மெச்சுமாறு காகாசுரனை நீ காக்கவில்லையா?*

*முன்பு மனத்தில் பொறுமையுடன் துர்வாச முனிவர் துரௌபதியைப் பெரிய சோதனைக்கு ஆளாக்க விரும்பவும், அவள் திடமாகத் தன் மனத்தில் உன்னைச் சரண் புகவும், நீ இரக்கத்துடன், முனிவர், நல்லோர், தேவர், அசுரர், மக்கள் முதலியோர் புகழ அவளை எளிதில் காக்கவில்லையா? கமலக் கண்ணனே!*

*உள்ளத்தில் பரிதாபமடைந்த அகல்யையைக் கண்டு உன் திருவடிகள் தயையுடன் அவளைக் காப்பாற்றவில்லையா? மத முள்ளவரை அடக்குபவனே! அழகினால் மதனனை வென்றவனே! ஞானியர் செல்வமே! தியாகராஜன் உள்ளமெனும் அல்லியை மலர்விக்கும் சந்திரனே! பூதேவியை இம்சை செய்த அரக்கரை வதைத்தவனே! வெண் பற்களையுடையவனே! முனிவருள்ளத் துறைபவனே! மங்களம் தருபவனே! தயாநிதியே! மகிழ்வுடன் என்னைக் காத்து என் குறைகளைப் போக்குவாயாக!*

## 194

மனோஹரி (மே 22) ரூபகம்

ப. பரிதாபமு கˇனி யாடிˇன

பலுகுல மறசிதிவோ[1]னா (ப)

அ. ஸரிலேநி ஸீததோ

ஸரயூ மத்ˇயம்புˇன நா

ச. வரமகுˇபˇங்காˇரு வாடˇநு

மெறயுசு பˇதிˇபூடலபை

கˇருணிஞ்செதˇனநுசு க்ரீ-

கˇநுல த்யாகˇராஜுனி

*நிகரற்ற சீதா தேவியுடன் சரயு நதியின் மிசை என் பரிதாபத்தைக் கண்டு மொழிந்த வார்த்தைகளை மறந்தனையோ!*

1. ''ஆ பலுகுல மறசிதிவோ'' என்று அதிக பாடம்.

சிறந்த தங்கத் தோணியின் மீதமர்ந்து ''இன்னும் பத்து நாட்களில் உனக்குக் கருணை புரிவேன்'' என்று கூறி கடைக் கண்ணால் தியாகராஜனின் (பரிதாபத்தைக் கண்டு கூறிய வார்த்தைகளை மறந்தனையோ?)

## 195

மஞ்ஜரி (மே. 22) ஆதி^v

ப. பட்டி விடு^vவராது^vநா செயி
பட்டி விடு^vவராது^v (ப)

அ, புட்டிந நாடே^vநிஜப^v,க்திநிமெட^v
க^vட்டி கு^vட்டு செத^vரக ப்^vரோசி செயி (ப)

ச. நித்யாநித்யமுலநு போ^vதி^v,ஞ்சி
க்ருத்யாக்ருத்யமுலநு தெ^vலிபிஞ்சி
ப்ரத்யேகுடு^v நீவநி கநிபிஞ்சி
ப்^v,ருத்யுடை^vந த்யாக^vராஜு^vசெயி (ப)

நான் பிறந்ததினமே உன் பக்தியை என் கழுத்தில் பிணைத்து என் கௌரவம் கெடாமல் காப்பாற்றி என்னைக் கைப்பிடித்த நீ என்னை இன்று விடலாகாது.

அழிவற்றது, அழிவுள்ளது ஆகியற்றைப் போதித்து, செய்யத் தக்கன, செய்யத் தகாதன ஆகியவற்றை அறிவுறுத்தி, தனிச் சிறப்புள்ள தெய்வம் நீயே யென்பதைக் காட்டி, உன் சேவகனாகிய தியாகராஜனைக் கைப்பிடித்த நீ (என்னை விட லாகாது).

## 196

மாளவஸ்ரீ (மே. 22) ஆதி^v

ப. எந்நாள்ளு திரிகே^vதி^v யெந்நாள்ளு (எ)

அ. எந்நராநி தே^vஹாலெத்தி
ஈ ஸம்ஸார க^vஹநமந்து^v
பந்நுக^vஜோருலரீதி
ப^vருலநு வேகி^vஞ்சுசுநு (எ)

ச. 1. உப்பு கர்ப்பூரமு வரகு
உஞ்ச,வ்ருத்திசே நார்ஜிஞ்சி
மெப்புலகு பொ^vட்ட நிம்பி
மேமே பெத்^vத^vலமநுசு (நெ)

2. ரேபடி கூடிகி லேதˇநி
ரேயி பகˇலு வெஸநமந்திˇ
ஸ்ரீபதி பூஜலு மறசி
சேஸி நட்டி வாரிவலெ நே (நெ)

3. ப்ˇ|ரமநுகொநி இருகுˇபொருகுˇ
பˇ|க்ஷிம்ப ரம்மநி பில்வ
அமருசுகோ பூஜ ஜபமு
நாஸாயமு சேதுநநுசு (எ)

4. நாயந்துˇஉண்டேˇதப்புலு
நாடேˇதெலிஸிகொண்டி காˇநி
பாˇய விடுˇவக மஹாநு-
பாˇ|வ த்யாகˇராஜவிநுத (எ)

எத்தனை காலம் நான் இவ்வாறு திரிவது? எண்ணற்ற சன்மங்களெடுத்து சம்சாரமென்னும் இக்காட்டில் திருடர் களைப்போல் பிறரை விரட்டியடித்து (எத்தனை காலம் திரிவது?)

உப்பு முதல் கற்பூரம் வரையில் யாசகத்தினல் சம்பாதித்து வீண் பெருமைக்காக வயிறு நிரப்பி ''நாமே உயர்ந்தவர்கள்'' என்று (எத்தனை காலம் திரிவது?)

நாளைக்குச் சோறில்லையென்று இரவு பகலாகக் கவலையுற்று பகவானின் பூஜையை மறந்து, அதைச் செய்ததுபோல் நடித்து (எத்தனை காலம் திரிவது?)

அயல் வீட்டுக்காரர்கள் (இவன் பண்டிதனென்று) பிரமித்து விருந்திற்கு அழைக்க ''எல்லாம் சித்தமாக இருக்கட்டும்'' என்று கூறி (போலியாக) மாலை வரையில் பூஜை, சபம் முதலியன செய்து (எத்தனை காலம் திரிவது?)

என்னிடமுள்ள பிழைகளை நானே தெரிந்துகொண்டும் அவற்றை அடியோடு விடமுடியாமல் நான் (எத்தனை காலம் திரிவது?) மகானுபாவனே!

## 197

முகா|ரி (மே. 22) ரூபகம்

ப. எந்தநி நே வர்ணிந்துநு சபˇரீபாˇ|க்ˇய (மெந்)

அ. தாˇந்துல வரகாந்தலு ஜகˇ-
மந்த நிண்டிˇயுண்டˇகˇ (எந்)

ச. கநுலார ஸேவிஞ்சி கம்மநி ப,லமுலநொஸகி<sup>v</sup>
தநுவு புலகரிஞ்ச பா<sup>v</sup>த<sup>v</sup>யுக<sup>v</sup>முலகு ம்ரொக்கி
இநகுலபதி ஸமுக,ம்பு<sup>v</sup>ந புநராவ்ருத்திரஹிதபத<sup>v</sup>-
முநு பொந்தி<sup>v</sup>ந த்யாக<sup>v</sup>ராஜ நுதுராலி
புண்யம்முநு (எந்)

புலன்களை வென்ற முனிவர்களின் தர்ம பத்தினிகள் பலர் இவ்வுலகு முழுவதும் நிறைந்திருக்கையில் (வேடுவ ஸ்திரீயான) சபரிக்குக் கிடைத்த பாக்கியத்தை நான் என்னவென்று வருணிப்பேன்?

சூரிய குல திலகனுன இராமனைக் கண்ணுர தரிசித்து, அவனுக்கு இனிய கனிகளை அளித்து, மெய்சிலிர்க்க அவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, மறு பிறப்பில்லாத மோட்ச பதவியை அடைந்தவளும், தியாகராஜனுல் வணங்கப்படுப வளுமான (சபரியின் புண்ணியத்தை எவ்வளவென்று வருணிப் பேன்?)

## 198

முகா,ரி ஆதி

ப. காருபா<sup>v</sup>ரு ஸேயுவாரு
க<sup>v</sup>லரே நீவலெ ஸாகேத நக<sup>v</sup>ரிநி (கா)

அ. ஊரிவாரு தே<sup>v</sup>ஸஜநுலு வரமுந
லுப்பொங்கு<sup>v</sup>சு பா<sup>v</sup>வுகுலய்யே (கா)

ச. நெலகு மூடு<sup>v</sup>வாந லகி,ல வித்<sup>v</sup>யல
நேர்ப்<sup>v</sup>பு கலிகி<sup>v</sup> தீ<sup>v</sup>ர்கா<sup>v</sup>யுவு கலிகி<sup>v</sup>
சலமு க<sup>v</sup>ர்வ ரஹிதுலு கா<sup>v</sup>லேதா<sup>v</sup>
ஸாது<sup>v</sup>த்யாக<sup>v</sup>ராஜவிநுத ராம (கா)

ஊர் மக்களும், தேசஜனங்களும், மகரிஷிகளும் பரமானந்தமடைந்து சர்வ மங்களமும் பெற்று வாழுமாறு ஸாகேத நகரத்தை (அயோத்தியாபுரியை) உன்னைப்போல் அரசு புரிபவர்கள் உளரா?

மாதம் மும்மாரி பெய்ய, பிரஜைகள் சகல வித்தைகளையும் கற்று, நீண்ட ஆயுளைப் பெற்று, கோபம், கர்வம் முதலியன அற்றவர்களாக வாழவில்லையா? தியாகராஜன் தொழும் இராம!

## 199

முகா₁ரி ஆதி³

ப. [1]க்ஷீணமை திருக³ஜன்மிஞ்சே
ஸித்³தி⁴மானுரா ஓமநஸா (க்ஷீ)

அ. (கீ³ர்) வாண நாடகாலங்கார வேத³பு
ராண யஜ்ஞ ஜப தபாது³லப₂லமுலு (க்ஷீ)

ச: எதி³ சேஸின ஜக₃ந்நாது₂டு³ சிரமுந
ஹ்ருத³யமுந வஹிஞ்சி
பதி³லமைந ஸத்பத³மு நொஸங்கே³
பா³ட த்யாக³ராஜ விநுதினி ப⁴ஜநரா (க்ஷீ)

மனமே! தேவ பாஷையாகிய ஸம்ஸ்கிருதத்தில் நாடகம், அலங்காரம் முதலியன இயற்றுவதாலும், அத்யயனம் செய்வதாலும், புராணங்கள் படிப்பதாலும், யாகம், ஜபம், தவம் முதலியன செய்வதாலும் உண்டாகும் பலன்கள் நசித்துத் திரும்பவும் சன்மம் எடுக்கும் சித்தியை வேண்டாமென்று விட்டுவிடு.

(நாம்) எது செய்தாலும் உலகநாயகனுகிய பகவான் அதைத் தன் சிரத்தாலும் உள்ளத்தாலும் அங்கீகரித்துத் திடமான நற்பதத்தை அளிக்கும் ராஜமார்க்கம் தியாகராஜன் வணங்கும் இராமபிரானின் பஜனையே ஆகும்.

## 200

முகா₁ரி ஆதி³

ப. சிந்திஸ்துந் நாடே³ யமுடு³ (சிந்)

அ. ஸந்ததமு ஸுஜநுலெல்ல
ஸத்³ப⁴ஜந ஜேயுட ஜூசி (சிந்)

---

1. "க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விசந்தி" (யாகம் முதலிய உத்தம கர்மாக்களைச் செய்வதன் மூலம் கிடைக்கும் புண்யங்கள் குறைந்தவுடன் மனிதன் திரும்பவும் சன்மம் எடுக்கிறுன்) என்ற சுருதி வாக்கியத்தை அடிப்படையாகக் கொண்ட கிருதி: கீதையில் கண்ணன்,

"ஆ ப்ரஹ்ம புவநால்லோகா: புநராவ்ருத்தி நோர்ஜுந।
மாமுபேத்யது கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே ॥

என்று கூறியிருப்பதும் இங்கு பொருந்தும்.

ச. 1. சூல பாச த˘ரப˘ட
ஜாலமுல ஜூசி மறி மீ
கோலாஹலமு லூடிˇகேˇ
காலமாயெநே யநுசு (சிங்)

2. வாரிதி˘ சோஷிம்ப ஜேயு
க்ரூர கும்ப˘ஜுநி ரீதி
கோ˘ர நரகாதுˇலணசே
தாரக நாமமுநு தˇலசி (சிங்)

3. தாˇரி தெலியலேக திரிகேˇ-
வாரலைந சாலுநண்டே
ஸாரமநி த்யாகˇராஜு
ஸங்கீர்த்தநமு பாˇடேˇரநுசு (சிங்)

உலகில் நன்மக்கள் அனைவரும் நாம ஸங்கீர்த்தனம் செய்வதைக் கண்டு யமன் (கவலையுடன்) யோசனையில் ஆழ்ந்திருக்கிருன்.

சூலம், பாசக்கயிறு முதலியன ஏந்திய தன் தூதர்களைப் பார்த்து ''உங்கள் கொண்டாட்டம் அடங்கும் காலம் வந்துவிட்டது'' என்று கூறி (யோசனையில் ஆழ்ந்திருக்கிருன்).

சினத்துடன் சமுத்திரத்தை (ஆசமனம் செய்து) வற்றச் செய்த அகஸ்திய முனிவரைப்போல், கோரமான நரகங்களை ஒழிக்கவல்ல தாரக நாமமாகிய இராம நாமத்தை எண்ணி (யோசனையில் ஆழ்ந்திருக்கிருன்).

நல்வழி தெரியாமல் திரியும் மாந்தர்களேனும் (யமலோகத்திற்குப்) போதும் என்ருல், அவர்களும் தியாகராஜன் இயற்றிய திவ்ய கீர்த்தனைகளைப் பாடுகிருர்களே என்று (யமன் யோசனையில் ஆழ்ந்திருக்கிருன்).

## 201

முகா˘ரி ஆதிˇ

ப. தலசிநந்ததே நா தநுவேமோ ஜல்லநெரா (த)

அ. ஜலஜவைரி த˘ராதிˇ வித்˘ந்த்ˇருல
செலிமி பூஜலந்திˇந நிநு நே (த)

ச. 1. ரோடிகி கˇட்ட தˇகிˇந நீ லீலலு
மூடிகெக்குவைந நீதுˇ குˇணம்முலு
கோடி மதˇந லாவண்யமுநைந
ஸாடிகாˇநி நீ திˇவ்யரூபமுநு (த)

2. நித்ராலஸ்ய ரஹித ஸ்ரீராம-
பத்ராநிலஜ ஸுலப ஸம்ஸாரச்
சித்ரார்த்திநி தீர்ச்சே சக்திநி விதி
ருத்ராதுல நுதமௌ சரிதம்புநு (த)

3. பாதவிஜித முநிதருணீசாப
மோத த்யாகராஜவிநுத த்ராப
நாத ப்ரஹ்மாநந்தரூப
வேதஸாரமௌ நாமதேயமுநு (த)

தாமரையின் விரோதியாகிய சந்திரனைச் சிரத்திலணிந்த சிவபெருமானும், பிரமனும், இந்திரனும் அன்புடன் பூசிக்கும் உன்னை நினைத்தவுடனேயே என் உடல் குளிர்ந்து புளகிதம் அடைகிறது.

(யசோதையால்) உரலில் கட்டப்பெறும் உன் திருவிளையாடல்களையும், (சாத்துவிகம், இராசதம், தாமதம் ஆகிய) முக்குணங்களுக்கும் அப்பாற்பட்ட உன் குணங்களையும், கோடி மன்மதரை நிகர்த்த உன் அழகையும், இவற்றுக்குச் சமானமான உன் திவ்விய உருவத்தையும் (நினைத்தால் என் உடல் புளகிதம் அடைகிறது).

நித்திரை, சோம்பல் முதலிய (தமோ குணங்கள்) அற்றவனே! ஸ்ரீராமபத்திர! அனுமனுக்கு எளிதில் கிடைப்பவனே! சம்சாரத்தில் ஏற்படும் இன்னல்களையும் துயரங்களையும் தீர்க்கும் உன் சக்தியையும், பிரமன், சிவன் முதலியோர் தொழும் உன் சரிதத்தையும் (நினைத்தால் என் உடல் புளகிதம் அடைகிறது)

திருவடி மகிமையால் ரிஷி பத்தினி (அகல்யை)யின் சாபத்தை நீக்கியவனே! மகிழ்ச்சியுடன் கூடிய தியாகராஜனால் வணங்கப்படுபவனே! மன்னனே! நாத பிரம்மானந்த ரூபனே! வேதத்தின் சாரமாகிய உன் பெயரை (நினைத்தால் எனது உடல் புளகிதம் அடைகிறது).

## 202

முகாரி ஆதி

ப. முரிபெமு [1]கலிகெ கதா ராம ஸங்-
முநிநுத கரிவரத ஸ்ரீராம (மு)

அ. பரமபுருஷ ஜகதீச வரம்ருது-
பாஷ ஸுகுண மணிகோச நீகு (மு)

1. கலிகெநா ராம

ச. 1. ஈடு^லேநி மலயமாருதமுசே
கூ^டி^ந காவேரீ தடமந்து^
மேட^ல மித்^தெ^லதோ ச்ருங்கா^ரமு
மிஞ்சு ஸத^நமுலலோ
வேடு^சு பூ^ஸுருலக்^நி ஹோத்ருலை
வேத^ கோ^ஷமுலசே நுதியிம்ப
ஜூட^சிவுடு^ கோ^ரு யோக்^யமைந
ஸுந்த^ரமகு^ புரமு தொ^ரிகெநுசு (மு)

2. ஸகல ஸுக^ந்த^ராஜ ஸுமமுலு
ஸலலிதமகு^ கோகில நாத^ம்முலு
சுகமுக, ஸநகாது^ல நுதமைந
ஸுர தருவுலு க^லிகி^
நிகடமந்து^ வாணி கொலுவ ஸுரபதி
நீலமணி நிப^ சரீர நேடு^
ப்ரகடமைந நவரத்ந க,சித ஹா-
டக மண்டப வாஸமு க^லிகெ^ நநுசு (மு)

3. ஈமஹிலோ ஸொக^ஸைந சோள
ஸீமயந்து^ வரமைந பஞ்சநத^புர
தா^முநி செந்தநு வஸிஞ்சுடகை
நீமதி^ நெஞ்சக^
காமஜநக த்யாக^ராஜஸந்நுத
நாம பவநதநய வித்^ருதசரண
க்ஷேமமுக^வர்தி^ல்லுநட்டி புரமுந ஸீதா
பா^ம ஸௌமித்ரி ப்ரக்க கொலிசெத^ரநி (மு)

உனக்கு அன்புடன் கலந்த சிறிது கர்வம் ஏற்பட்டுவிட்டதல்லவா? இராம! முனிவரால் தொழப்படுபவனே! பரம புருஷனே! ஜகதீச! இன்சொல் உடையவனே! நற்குண நிதியே!

ஈடில்லாத தென்றல் காற்று வீசும் காவேரிக் கரையில் மாடங்களும் உப்பரிகைகளும் அமைந்து அலங்காரம் மிகுந்த வீடுகளில் நித்திய அக்னி ஹோத்திரிகளான மறையவர் வேத கோஷத்துடன் தோத்திரம் செய்ய, பஞ்ச நதீசுவரராகிய சிவ பெருமான் தாமே உகந்து கோயில் கொண்டெழுந்தருளிய

அழகிய இவ்வூர் கிடைத்தது என்று (உனக்கு கர்வம் ஏற்பட்டு விட்டதல்லவா?)

இந்திர நீலமணியை நிகர்த்த காந்தியை உடையவனே! நறுமணம் வீசும் சம்பங்கி மலர்களும், குயில்களின் இன்னிசையும், சுகர், ஸனகர் முதலியோர் போற்றும் கற்பக விருட்சத்தையொத்த மரங்களும் விளங்க, உன் முன்னிலையில் சரசுவதி சேவை புரிய, இன்று நவரத்தினங்களிழைத்த பொன் மண்டபத்தில் கொலு அமைந்ததென்று (உனக்கு கர்வம் ஏற்பட்டு விட்டதல்லவா?)

இவ்வுலகிலேயே அழகு மிகுந்த சோழ நாட்டில் சிறந்த இத்திருவையாற்றில், ஆதி தெய்வமாகிய பஞ்சநதீசுவரரின் அருகிலேயே வசிக்க நீ திருவுள்ளம் கொண்டு, வளம் தழைத்தோங்கும் இவ்வூரில் சீதாபிராட்டியும் இலக்ஷ்மணனும் உன் பக்கலில் நின்று தொண்டு புரிகிறார்களென்று (உனக்கு கர்வம் ஏற்பட்டுவிட்டதல்லவா?) மன்மதன் தந்தையே! தியாகராஜன் தொழும் திருநாமத்தையுடையவனே! அனுமன் தாங்கும் பாதங்களையுடையவனே!

## 203

முகாˌரி — தே˅சாதி˅

ப. ஸரஸீருஹாநந ராம
ஸமயமு ப்˅ரோவ சித்˅கˌ˅ந (ஸ)

அ. பரபா˅ˌமல ¹நர்ச்சிஞ்சி யங்நமிடி˅
பக˅லு ரேயி ஸரஸமாடு˅வாரி நொல்ல (ஸ)

ச. ப்˅ராஹ்மணீகமு பா˅ய நீசுல
ப்˅ரதுகாய நதி˅கா˅கயீ கலிலோ
ப்˅ரஹ்மமைந மாடல் நேர்ச்சுகொநி
ப˅ரகே˅ரய்ய த்யாக˅ராஜநுத (ஸ)

பங்கய வதனனே! இராம! சைதன்ய ரூபத்தால் சிறந்தவனே! என்னைக் காக்க இதுவே தருணம். பிறர் பெண்டிரைப் போற்றி அன்னமளித்து அவர்களுடன் இரவு பகலாக சரசம் புரிபவர்களுடன் நான் உறவாடமாட்டேன்.

பிராமணியம் மறைந்துபோக நீசர்களின் பிழைப்பை மேற்கொண்டனர். மேலும் இக்கலியில் மாந்தர் போலி வேதாந்தம் பேசக் கற்று வாழ்க்கை நடத்துகின்றனர்.

---

1 .நாஸிஞ்சி

## 204

முகா,ரி[1] ஆதி

ப. ஏலாவதார மெத்து கொண்டிவி
ஏமி காரணமு ராமுடை (ஏ)

அ. ஆலமு ஸேயுடகா அயோத்,யா
பாலந ஜேயுடகா ஓ ராக,வ (ஏ)

ச. யோகு லநு ஜூசுடகா ப,வ-
ரோகு லநு ப்ரோசுடகா சத-
ராக ரத்ந மாலிகலு ரசிஞ்சிந
த்யாக ராஜுநகு வர மொஸங்கு டகா (ஏ)

*நீ இராமனுக எவ்வாறு அவதாரம் எடுத்தனையோ? அதற்கு என்ன காரணமோ? ஓ ராகவ! (அரக்கருடன்) போர் புரிவதற்கா? அல்லது அயோத்தியைப் பரிபாலனம் செய்வதற்கா?*

*யோகிகளைத் தரிசிப்பதற்கா? சம்சாரமென்னும் வியாதியால் பீடிக்கப்பட்டவர்களைக் காப்பதற்கா? அல்லது நூற்றுக் கணக்கான இராக இரத்தினங்களில் கீர்த்தனை மாலைகளை இயற்றிய தியாகராஜனுக்கு வரம் தருவதற்கா? (நீ இராமனுக அவதாரம் செய்த காரணம் என்னவோ?)*

## 205

முகா,ரி தே சாதி

ப. ஸங்கீத சாஸ்த்ர ஜ்ஞாநமு
ஸாரூப்ய ஸௌக்,யத மே மநஸா (ஸங்)

அ. ச்ருங்கா ர ரஸாத யகி,லஸார பூ-
ரித ராமகதா, நந்தாப் தி,யுத (ஸங்)

ச. ப்ரேம ப,க்தி ஸுஜந வாத்ஸல்யமு
ஸ்ரீமத் ரமாவர கடாக்ஷமு
நேம நிஷ்ட, யசோ த,நமொஸங்கு நே[2]
நேர்ப்பு க ல்கு த்யாக ராஜு நேர்ச்சிந (ஸங்)

*மனமே! திறமையுடன் இந்தியாகராஜன் பயின்றுள்ள ஸங்கீத சாஸ்திர ஞானம் (நாதோபாசனை) (நான்கு முக்திகளுள்*

---

1. ஸாளக பை,ரவி
2. யசோத,நமு க ல்கு நே

ஒன்றான) ஸாருப்பியம் (தான் உபாசிக்கும் தெய்வத்தின் உருவைப் பெறுதல்) என்ற சுகத்தை அளிக்க வல்லது.

சிருங்காரம் முதலிய ஒன்பது ரசங்களின் சகல சாரமும் நிறைந்த இராம சரிதம் என்ற ஆனந்தக் கடலுடன் கூடிய (ஸங்கீத சாஸ்திர ஞானம் ஸாருப்பியத்தை அளிக்கவல்லது).

மேலும் அது அன்பு, பக்தி, நல்லோரின் தயை, திருமகள் நாயகனான பகவானின் அருள் நோக்கு, நியமம், நிஷ்டை, புகழாகிற செல்வம் முதலியவற்றையும் அளிக்கவல்லது.

## 206

ஸாளக³பை⁴ரவி தே³சாதி³

ப. பத³வி நீ ஸத்³ப⁴க்தியு க³ல்கு³டே (ப)

அ. சதி³வி வேத³ சாஸ்த்ரோபநிஷத்துல
ஸத்த தெலியலேநிதி³ பத³வா (ப)

ச. 1. த⁴நதா³ர ஸுதாகா³ர ஸம்பத³லு
த⁴ரணீசுல செலிமொக பத³வா (ப)

2. ராக³ லோப⁴யுத யஜ்ஞாது³லசே
போ⁴க³முல லப்³பு³டயதி³ பத³வா (ப)

3. ஜபதபாதி³ யணிமாதி³ ஸித்³து⁴லசே
ஜக³முல நேசுட யதி³ பத³வா (ப)

4. த்யாக³ராஜ நுதுடௌ³ ஸ்ரீராமுநி
தத்வமு தெ³லியநி தொ³க பத³வா (ப)

உன்னிடம் உண்மையான பக்தி பூண்டொழுகும் வாய்ப்புக் கிடைப்பதே நற்பதவியாகும். எவ்வளவு கற்றும் வேதம், சாஸ்திரம், உபநிடதங்கள் முதலியவற்றின் சாரத்தைத் தெரிந்து கொள்ளாமலிருப்பது ஒரு பதவியா?

பொருள், மனைவியர், வீடு முதலிய செல்வங்களும் அரசரின் நட்பும் ஒரு பதவியா? ஆசை, உலோபம் முதலியவற்றுடன் யாகங்கள் செய்து போகங்களையடைவது ஒரு பதவியா? சபம், தவம், அணிமா முதலிய சித்திகள் இவற்றின் மூலம் உலகைத் துன்புறுத்துவது ஒரு பதவியா? தியாகராஜன் உபாசிக்கும் தெய்வமாகிய ஸ்ரீராமனின் தத்துவத்தை அறியாமலிருப்பது ஒரு பதவியா? உன்னிடம் பக்தி பூண்டொழுகுவதே பதவியாகும்.

207

சுத்^வ த்^ப^வங்கா^வள (மே. 22) ரூபகம்

ப. தப்பக^வநே வச்சுநா
தநுவுகு லம்பட நீ க்ருப (த)

அ. மெப்புலகை கொப்புலு க^வல
மேடி ஜநுல ஜூசி ப்^ஜந (த)

ச. ருகலகை பைகி மஞ்சி
கோகலகை யாஹாரமுநகு
நூகலகை த்^யாநிஞ்சிதி
த்யாக^வராஜ நுதுநி ப்^ஜந (த)

*மெச்சுதலுக்காகச் செல்வர்களைப் பார்த்து வியந்து (உன் பஜனையை மறந்தால்) உனது கிருபை கிடைக்காமற்போய் இவ்வுடலுக்கு ஆபத்தே உண்டாகும்.*

*பணத்திற்காகவும், வெளிப் பகட்டிற்காகச் சிறந்த ஆடைகளுக்காகவும், உணவிற்காகவும் நொய்க்காகவும் நான் உன்னை கியானம் செய்தேன். (இவ்வாறு செய்தால் உனது கருணை கிடைக்காமலே போய்விடும்).*

208

சுத்^வ த்^ப^வங்கா^வள ஆதி^வ

ப. தொலி நே ஜேஸிந பூஜாப,லமு
தெ^வலிஸெநு நா பாலி தை^வமா (தொ)

அ. பலுவித்^முல நே த்^வலசி கரக^வகா^வ
ப^வலுகக நீவடு நேநிடு கா^வக (தொ)

ச. ஸரிவாரலலோ ஜெளக ஜேஸி உ-
த்^வர போஷகுலநு பொ^வருகு^வந ஜேஸி
ஹரிதா^வஸரஹித புரமுந வேஸி
த்^வரி ஜூபகுண்ட^வக^வ த்யாக^வராஜார்ச்சித (தொ)

*என்னைக் காக்கும் தெய்வமே! அனேக விதங்களில் நான் மனமுருகி உன்னை தியானம் செய்தும் நீ அப்படியும் (பராமுகமாயும்) நான் இப்படியும் (எளிய நிலைமையிலும்) இருப்பதிலிருந்து நான் பூர்வ சன்மங்களில் செய்த என் பூசையின் பலனைத் தெரிந்துகொண்டேன்.*

எனக்குச் சமமாயிருப்பவர்களுக்கிடையே என்னை இழிவு செய்து, வயிறு நிரப்புவதையே நோக்கமாக உடையவர்களை என் அருகில் வைத்து ஹரிதாசர்களேயில்லாத ஓர் ஊரில் என்னை இருத்தி, ஒரு புகலும் காட்டாமல் நீ இருப்பதிலிருந்து (நான் முன்பு செய்த பூஜையின் பலனை அறிந்துகொண்டேன்).

## 209

சுத்<sup>v</sup>த<sup>4</sup>ப<sup>v</sup>ங்கா<sup>v</sup>ள ஆதி<sup>v</sup>

ப. ராமப<sup>4</sup>க்தி ஸாம்ராஜ்ய-
மே மர்நவுல கப்<sup>v</sup>பெ<sup>v</sup>நோ மநஸா (ரா)

அ. ஆமாநவுல ஸந்த<sup>v</sup>ர்சந-
மத்யந்த ப்<sup>v</sup>ரஹ்மாநந்த<sup>v</sup>மே (ரா)

ச. ஈலாக<sup>v</sup>நி விவரிம்பலேநு
சாலா ஸ்வாநுப<sup>4</sup>வ வேத்<sup>v</sup>யமே
லீலா ஸ்ருஷ்ட ஜக<sup>v</sup>த்ரயமநே
கோலஹல த்யாக<sup>v</sup>ராஜ நுதுட<sup>v</sup>கு<sup>v</sup> (ரா)

தன்னால் விளையாட்டாகப் படைக்கப்பெற்ற இம்மூவுலகமாகிய ஆரவாரத்தையுடைய ஸ்ரீ ராமபிரானின் பக்தியென்னும் சாம்ராஜ்யம் (சக்ரவர்த்தி பதவி) எம்மனிதர்களுக்குக் கிடைக்கிறதோ அவர்களுடைய தரிசனமே பிரம்மானந்தத்தை அளிக்க வல்லது.

(அவ்வானந்தத்தை) இப்படியென்று வருணிக்க என்னால் இயலாது. அது ஒவ்வொருவரும் தாமே அனுபவித்து அறியத் தக்கது.

## 210

ஸ்ரீரஞ்ஜநி (மே 22) தே<sup>v</sup>சாதி<sup>v</sup>

ப. பு<sup>4</sup>விநி தா<sup>v</sup>ஸுட<sup>v</sup>நே பேராஸசே
பொ<sup>v</sup>ங்குலாடி<sup>v</sup>திநா பு<sup>v</sup>த<sup>4</sup>மநோஹர (பு<sup>4</sup>)

அ. அவிவேக மாநவுல கோ<sup>v</sup>ரி கோரி
அட்<sup>v</sup>ட<sup>v</sup> த்<sup>v</sup>ரோவ த்ரொக்கிதிநா ப்<sup>v</sup>ரோவவே (பு<sup>4</sup>)

ச. சால ஸௌக்<sup>1</sup>யமோ கஷ்டமோ நேநு
ஜாலி ஜெந்தி<sup>v</sup>திநா ஸரிவாரிலோ
பால முஞ்சிந நீட முஞ்சிந
பத<sup>v</sup>முலே க<sup>v</sup>தி த்யாக<sup>v</sup>ராஜநுத (பு<sup>4</sup>)

பண்டிதர்களின் உள்ளங் கவர்பவனே! இவ்வுலகில் நான் உன் அடியவனென்று புகழ்பெறவேண்டுமென்ற ஆசையினல் பொய்கள் கூறித் திரிந்தேனு? அல்லது, விவேகமற்ற மாந்தரை அண்டித் தீய வழிகளில் சென்றேனு? ஆகவே என்னைக் காப்பாயாக.

நான் அனுபவிப்பது கஷ்டமாயினும், சுகமாயினும் அதற்காக வருந்தினேனு? பிறர் நடுவில் நீ என்னைப் பாலில்* அமிழ்த்தினலும் நீரில் அமிழ்த்தினலும் உன் திருவடிகளே எனக்குக் கதி.

## 211

ஶ்ரீரஞ்ஜநி ஆதி^ᵛ

ப. மாறுப^ᵛல்ககுந்நா வேமிரா
மாமநோரமண (மா)

அ. ஜாரசோர ப^ᵛஜந ஜேஸிதிநா
ஸாகேதஸத^ᵛந (மா)

ச. தூ^ᵛரபா^ᵛரமந்து^ᵛநாஹ்ருத^ᵛ-
யாரவிந்த^ᵛமந்து^ᵛநெலகொந்ந
தா^ᵛரிநெறிகி^ᵛஸந்தஸில்லிநட்டி
த்யாக^ᵛராஜநுத (மா)

திருமகளின் மனத்திற்கினியவனே! நீ மறுமொழி கூருமல் இருப்பதேன்? அயோத்தியில் உறைபவனே! விட புருடரையும் திருடர்களையும் போற்றி நான் பஜனை செய்தேனு?

வெகுதூரத்திலும், (சமீபத்தில்) என் இதயத் தாமரையிலும் அமர்ந்திருக்கும் உன் வழியையறிந்து மகிழ்ச்சியுற்றிருக்கும் எனக்கு (நீ மறுமொழி கூருமலிருப்பதேன்?)

## 212

ஶ்ரீரஞ்ஜநி தே^ᵛசாதி^ᵛ

ப. ஸரி யெவ்வரே ஶ்ரீஜாநகி நீ (ஸ)

அ. பரமாத்முநிகை க^ᵛடி^ᵛதே^ᵛரிஸதா^ᵛ
ஸிரிலிச்சுடகு சேரி கொ^ᵛலிசிந நீ (ஸ)

---

* ''பாலமுஞ்சின நீடமுஞ்சின'' (பாலில் அமிழ்த்தினலும் நீரில் அமிழ்த்தினலும்) என்பது தெலுங்கு மரபு; ''நன்மை புரிந்தாலும், தீமை புரிந்தாலும்'' என்று பொருள்.

ச. வநமந்து^v^ப^v^யங்கரமைந தா-
வுநில்தூநி மநஸுதெ^v^லிஸி
கநகாங்கி^v^யந்த^v^ந்து^v^ந ராஜஸுக,ம்-
பு^v^நு கல்க^v^ஜேஸிதிவே த்யாக^v^ராஜநுதே (ஸ)

பரமபுருஷனாகிய இராமனின் பொருட்டுக் (காட்டில்) அவனுடன் சேர்நது மிகுந்த சாமர்த்தியத்துடன் எப்பொழுதும் சௌபாக்கியங்களையளித்து சேவை புரிந்த அன்னை ஜானகியே! உனக்கு நிகர் யார் உளர்?

வனத்தில் பயங்கரமான இடங்களில் வசிக்கநேரிடுமென்று தெரிந்தும் அங்கங்கு நீ சென்று (உன் நாயகனுக்கு) இராஜ சுகங்களை அமைத்துக் கொடுத்தனையே! பொன்னை நிகர்த்த மேனியுடையவளே!

213

ஸ்ரீரஞ்ஜநி ரூபகம்

ப. ஸொக^v^ஸுகா^v^ம்ருத^v^ங்க^v^தாளமு ஜத
கூ^v^ர்ச்சி நிநு
ஜொக்க ஜேயு ^v^தீ^v^ருடெ^v^வ்வடோ^v^ (ஸொ)

அ. நிக^v^மசிரோர்தத,மு க^v^ல்கி^v^ந
நிஜவாக்குலதோ ஸ்வரசுத்^v^த^v^முதோ (ஸொ)

ச. யதி விச்ரம ஸத்^v^ப^v^க்தி வி-
ரதித்^v^ராக்ஷாரஸ நவரஸ
யுத க்ருதிசே ப^v^ஜியிஞ்சே
யுக்தி த்யாக^v^ராஜுநி தரமா ஸ்ரீராம (ஸொ)

மறை முடியாகிய உபநிஷத்துக்களின் பொருள் நிறைந்து உண்மையான வாக்குடனும், ஸ்வரசுத்தத்துடனும் சொகுசாக மிருதங்க தாளத்தை ஜதை சேர்த்துக்கொண்டு (இசைபாடி) உன்னை மயங்கச் செய்யும் திரன் எவனோ?

எதுகை, விச்ரமம் (ஒய்வு), உத்தம பக்தி, பத வாக்கியங்களின் முடிவில் விச்ராந்தி, திராட்சையின் ருசி, நவரசங்கள் இவற்றுடன் கூடிய கிருதிகளால் (உன்னை) பஜனை செய்யும் சாமர்த்தியம் இத்தியாகராஜனுக்கு சாத்தியமா, இராம!

214

ஸித்^v^த^v^ஸேந (மே 22) தே^v^சாதி^v^

ப. எவரைந லேரா பெத்^v^த^v^லு
இலலோந தீ^v^நுல ப்^v^ரோவநு (எ)

அ. ப^v^வ காநநம்முந[1] ஜரிஞ்சே
ப^v^லுகா^v^ஸி ராமுநிதோ தெ^v^லுப (எ)

ச. கலி மாநவாத^v^முல கார்யமுல்
காம மத்ஸராது^v^லக்ருத்யமுல்
சல சித்தமுலேநி வாரிபுடு^v^
சால த்யாக^v^ராஜ நுதுநிதோ தெ^v^லுப (எ)

இவ்வுலகில் எளியவர்களைச் காப்பதற்குப் பெரியோர்கள் ஒருவரும் இலரா? சம்சாரமென்னும் காட்டில் உழன்று (மாந்தர்) மிகவும் வருந்துவதை இராமனிடம் சென்று தெரிவிக்கப் (பெரியோர்கள் இலரா?)

கலியுகத்தில் நீசர்கள் புரியும் காரியங்களையும், காமம் அகங்காரம் முதலியவற்றின் சேஷ்டைகளையும் தியாகராஜன் வணங்கும் தெய்வத்தினிடம் தெரிவிக்க சஞ்சலமற்ற மனத்தவராகிய (பெரியோர்கள் இலரா?

## 215

ஹு^ஸேநி (மே. 22) ஆதி^v^

ப. ராம நிந்நே நம்மிநாநு நிஜமுக^v^ஸீதா (ரா)

அ. காமஜநக கமநீயவத^v^ந நநு
கா^v^வவே காருண்ய ஜலதே^v^ (ரா)

ச 1. ஸார ஸாமாதி^v^வேத^v^ஸார ஸந்தத
பு^v^த^v^விஹார ராஜித முக்தா-
ஹார கநககேயூரத^v^ரஸு^கு^v^ண
பாராவார ஸு^ராராதி^v^த பத^v^ (ரா)

2. தீ^v^ர ஸு^ஜநஹ்ருத் பஞ்ஜரகீர நீபத^v^
ப^v^க்தி மாகீர மத^v^நஸு^ந்த^v^ரா-
கார த^v^நுஜஸம்ஹார துஷ்டஜந
தூர^v^ரகு^v^குலோத்^v^தா^v^ரோதார^v^ (ரா)

3. ரஜராஜ வந்தி^v^த பூ^v^ஜாநாயக ஸு^ரஸ-
மாஜ ஸ்ரீகர த்யாக^v^
ராஜ மாநஸ ஸரோஜ குஸு^ம தி^v^ந
ராஜ பங்க்திரத,ராஜதநய ஸ்ரீ (ரா)

---

1. ஸாகரம்முந

ஸீதாராம! நான் உண்மையாக உன்னையே நம்பியுள்ளேன். மன்மதன் தந்தையே! சுந்தரமுகத்தவனே! கருணைக் கடலே! என்னைக் காப்பாற்று!

நீ அனைத்திற்கும் சாரமானவன். சாமம் முதலிய வேதங்களின் பொருள். நித்தியன். அறிஞர்க்கு இன்பம் பயப்பவன். ஒளிவீசும் முத்து மாலையும், பொன்மயமான தோள்வளையும் அணிந்தவன். நற்குணக்கடல். தேவர் தொழும் பாதன்.

தீரன். நல்லோர் இதயமெனும் கூட்டிலகப்பட்ட கிளி. உன் திருவடி பக்தியை எனக்கு அருள். நீ மன்மதனை நிகர்த்த அழகுடையவன். அரக்கரை வதைப்பவன். தீயவர்க்கு எட்டாதவன். ரகு குலத்தை உத்தாரணம் செய்தவன். உதாரன்.

குபேரனால் வணங்கப்பெறுபவன். சீதா நாயகன். தேவர் குழாத்துடன் கூடியவன். திருவளிப்பவன், தியாகராஜனின் இதயத்தாமரையை மலர்விக்கும் சூரியன். தயதரன் மைந்தன்.

## 216

ஹுஸேநி ரூபகம்

ப. ரகு₄வீர ரணதீ₄ர ராரா ராஜகு₂மார (ர)

அ. ப்₄ருகு₃ஸூனு மத₃விதா₃ர
ப்₃ருந்தா₃ர காதா₄ர (ர)

ச. ராவண க₄டகர்ண ப₃லா-
ராதி ரிபு நக₃நகா₃ரீ
ஸ்தா₂வர ஜங்க₃மரூப
த்யாக₃ராஜ ஹ்ருச்சாரீ (ர)

ரகு வீரனே! போரில் தீரனே! ராஜகுமாரனே! வருக! பரசுராமன் மதத்தையடக்கியவனே! தேவருக்கு ஆதாரமானவனே!

இராவணன், கும்பகர்ணன், இந்திரசித்தன் முதலிய (அரக்க) பர்வதங்களைத் தகர்ப்பதில் இந்திரன் போன்றவனே! சராசரங்களை உருவமாக உடையவனே! தியாகராஜன் உள்ளத்தில் நடமாடுபவனே!

## 217

ஸ்வரபூ₄ஷணி (மே. 22) ரூபகம்

ப. வரத₃ராஜ நினுகோரி₃வச்சிதி ம்ரொக்கேரா (வ)

அ. ஸுரலு முநுலு பூ₄ஸுருலு
சுட்டி சுட்டிஸேவிஞ்சே (வ)

ச. வரகி^ரி_வைகுண்ட,மட
வர்ணிம்ப த^ரமுகா^த^ட நிர்
ஜருலநு தாரகமுலலோ சந்த^ருடை^
மெரயுது^வட வர த்யாக^ராஜநுத
க^ருட^ஸேவ ஜூட^ (வ)

வரதராஜப் பெருமானே! உன்னை வேண்டி வந்தடைந்தேன். உனக்கு நமஸ்காரம். தேவரும், முனிவரும், அந்தணரும் சுற்றிச் சுற்றி (பிரதட்சிணம் செய்து) உன்னைச் சேவிக்கின்றனர்.

நீ எழுந்தருளிக்கும் அத்திகிரியே வைகுந்தமென்பர். அதை வருணிக்கவும் இயலாதாம். தேவரென்னும் நட்சத்திரங்களுக்கிடையே நீ சந்திரன் போல் (தேவராஜனாக) விளங்குகிறாய். உன் கருட சேவையின் வைபவத்தைக் காண இத்தியாகராஜன் வந்துள்ளேன்.

## 218

ஸ்ரீராக^ம் (மே. 22) ஆதி^

ப. *எந்த^ரோ மஹாநுபா^வு-
லந்தரி^கி வந்த^நமு (லெந்)

அ. [1]சந்து^ரு வர்ணுநி யந்த^சந்த^முநு ஹ்ருத^யார-
விந்த^முந ஜூசி ப்ரஹ்மாநந்த^மநுப^விம்சுவா (ரெந்)

ச. 1. ஸாமகா^நலோல மநஸிஜலாவண்ய
த^ந்ய மூர்த^ந்யு லெந்)

2. மாநஸ வநசர வரஸஞ்சாரமு நிலிபி
மூர்த்தி பா^கு^க^பொட^க^நேவா (ரெந்)

3. ஸரகு^நபா^த^முலகு ஸ்வாந்தமநு
ஸரோஜமுநு ஸமர்ப்பணமு ஸேயுவா (ரெந்)

---

* ஸ்வாமிகளின் பஞ்சரத்தின கிருதிகளுள் ஒன்று.

1 ''சந்துரு வர்ணுநி'' என்பதன் சரியான பொருளை அறியாத சிலர் இதை ''சந்த்ர வதநுநி'' என்று மாற்றிவிடுகின்றனர். பகவானுக்கு ஆதியில் சந்திரன் போன்ற பால் வண்ணம் இருந்ததென்பது ''முன்னை வண்ணம் பாலின் வண்ணம் முழுதும் நிலைநின்ற பின்னை வண்ணம் கொண்டல் வண்ணம்'' என்ற திருமங்கையாழ்வாரின் பாசுரத்தால் தெளிவாகிறது.

4. பதிதபாவனுட³னே பராத்பருநி கு³ரிஞ்சி
பரமார்த்த₂மகு³நிஜமார்க³முதோநு
பா³டு³சுநு ஸல்லாபமுதோ
ஸ்வரலயாதி³ராக³முல தெலியுவா (ரெங்)

5. ஹரிகு³ண மணிமய ²ஸரமுலுக³ளமுந
சோபி₄ல்லு ப₄க்த கோடுலிலலோ
தெலிவிதோ செலிமிதோ க³ருணக³ல்கு³
ஜக³மெல்லநு ஸுதா₄த்₃ருஷ்டிசே ப்³ரோசுவா
(ரெங்)

6. ஹொயலுமீற நட³லு க³ல்கு³ஸரஸுநி
ஸதா³க³நுல ஜூசுசுநு புலகசரீருலயி
யாநந்த³பயோதி₄நிமக்³நுலயி
முத³ம்பு³நநு யசமு க³லவா (ரெங்)

7. பரப₄க³வத மௌநிவர சசி
விபா₄கர ஸநகஸநந்த³ந
தி³கீ³சஸுரகிம்புருஷ கநக-
கசிபுஸுத நாரத³தும்பு³ரு
பவநஸூநு பா³லசந்த்³ரத₄ர சுக
ஸரோஜப₄வ பூ₄ஸுரவருலு
பரமபாவநுலு க₄நுலு சாச்வதுலு
கமலப₄வஸுக₂மு ஸதா³நுப₄வுலு கா³க (எங்)

8. நீ மேநு நாம வைப₄வம்முலநு
நீ பராக்ரம தை₄ர்யமுல
சாந்த மாநஸமு நீவுலநு
வசநஸத்யமுநு ரகு₄வர நீயெட³
ஸத்³ப₄க்தியு ஜநிஞ்சகநு து³ர்மதமுலநு
கல்லஜேஸிநட்டி நீமதி³

2 மனுவகு³

நெறிங்கி ஸந்ததம்பு நநு கு ண-
ப ஜநாநந்த கீர்த்தநமு ஸேயுவா (ரெங்)

9. பா க வத ராமாயண கீ தாதி
ச்ருதி சாஸ்த்ர புராணபு மாமமுலங்
சிவாதி ஷண்மதமுல கூ ட முல
முப்பதி முக்கோடி ஸுராந்தரங்க முல
பா வமுல நெறிகி பா வராக லயாதி
ஸௌக்யமுசே ஜிராயுவுல் க லிகி
நிரவதி ஸுகா த்முலை
த்யாக ராஜாப்துலைந வா (ரெங்)

10. ப்ரேம முப்பிரி கொ நுவேள
நாமமுநு த லசேவாரு
ராமப க்துடை ந த்யாக
ராஜநுதுநி நிஜதா ஸுலைந வா (ரெங்)

*(இவ்வுலகில்) எத்தனை மகானுபாவர்கள் (மேன்மையுடைய வர்கள்) உளரோ அவர்களனைவருக்கும் என் நமஸ்காரம்.*

*(இப்பெரியோர்) சந்திரனின் வண்ணம் அமைந்த பகவா னின் திவ்ய சொரூபத்தைத் தம் இதயத் தாமரையில் தரிசித்து பிரம்மானந்தம் அனுபவிப்பவர்கள்.*

*ஸாம காலத்தில் பிரியமுள்ளவனே! மன்மதனை நிகர்த்த அழகனே! அவர்கள் புண்ணியசாலிகளுள் சிறந்தவர்.*

*மனக் குரங்கின் ஆட்டங்களை நிறுத்தி இறைவனின் வடிவத்தை நன்கு தரிசிப்பவர்கள்.*

*உன் திருவடியில் தம் உள்ளமென்ற தாமரையை சமர்ப்பணம் செய்பவர்கள்.*

*எளியவரைக் காக்கும் பரமாத்மாவாகிய உன்னைக் குறித் துப் பரமார்த்தத்தை அளிக்கும் உண்மையான பக்தி மார்க்கத் துடன் இசைபாடி. அளவளாவி ஸ்வரம், லயம், ராகம் முதலிய வற்றை அறிந்தவர்கள்.*

*ஹரியின் குணங்களாகிய மணிகள் அமைந்த மாலைகள் தங்கள் கழுத்தில் விளங்க, ஞானத்துடனும், கருணை பெருகி உலகமனைத்தையும் அமுதம் பெருகும் பார்வையுடன் நோக்கும் பக்தர்கள்.*

*ஒய்யாரமான நடையுடைய பகவானை அனவரதமும் கண்களால் பார்த்துக்கொண்டு மெய்சிலிர்க்க ஆனந்தக் கடலில் திளைக்கும் புகழ் படைத்தவர்கள்.*

பரம பாகவதர்களாகிய முனி சிரேஷ்டர்கள், சந்திர சூரியர்கள். ஸநக ஸநந்தனர்கள், திக்பாலகர்கள், தேவர்கள், கிம்புருஷர்கள், பிரஹ்லாதன், நாரதர், தும்புரு, ஆஞ்சநேயன், இளம்பிறை சூடிய சிவன், சுகர், பிரமன், பிராம்மண சிரேஷ்டர்கள் முதலியோர் தூயவரும், அழிவற்றவரும், பிரம்மானந்தத்தை சதா அனுபவிப்பவரும் ஆவர். இவர்களைத் தவிர இன்னும் (எத்தனை பெரியோர்கள் உளரோ அவர்களுக்கெல்லாம் எனது நமஸ்காரம்)

உனது திருவுருவத்தையும், நாமத்தின் வைபவத்தையும், பராக்கிரமத்தையும், தைரியத்தையும், சாந்தம் குடிகொண்ட மனத்தையும், பொய்யாமொழியையும் சேவித்து, உன்னிடம் பக்தி பெருகாமற் செய்யும் துர் மதங்களையழிக்கும் உன் மனத்தையறிந்து அனவரதமும் உன் கல்யாண குணங்களை ஆனந்தமாக ஸங்கீர்த்தனம் செய்பவர்கள் (அனைவருக்கும் நமஸ்காரம்).

ஸ்ரீமத் பாகவதம், இராமாயணம், கீதை முதலிய சுருதி, சாஸ்திரம், புராணங்கள் ஆகியவற்றின் மர்மங்களையும், சைவம் முதலிய ஆறு மதங்களின் இரகசியங்களையும், முப்பத்து முக்கோடி தேவர்களின் உள்ளக் கருத்துக்களையும் அறிந்து, பாவம், ராகம், தாளம் ஆகியவற்றின் இன்பத்துடன் நீண்ட ஆயுளைப் பெற்று, எல்லையற்ற சுகத்தையனுப்பவர்களும், தியாகராஜனின் நேயர்களுமாகிய (பெரியோர் அனைவருக்கும் நமஸ்காரம்). பக்தி அதிகரித்து மூன்று பிரிவாகும்பொழுது உன் திருநாமத்தை நினைப்பவர்களும், ராம பக்தர்களும், தியாகராஜன் வணங்கும் தெய்வத்தின் மெய்யடியார்களுமாகிய (மகானுபாவர்கள் அனைவருக்கும் நமஸ்காரம்).

## 219

ஸ்ரீராக³ம் — தே³சாதி³

ப. நாம குஸுமமுலசே பூ³ஜிஞ்சே
நரஜந்மமே ஜந்மமு மநஸா (நா)

அ. ஸ்ரீமந் மாநஸ கநகபீட₂முந
செலக³ஜேஸிகொநி வரசிவராம (நா)

ச. நாத³ஸ்வரமநே வர நவரத்நபு
வேதி³கபை ஸகல லீலா வி-
நோது³நி பரமாத்முநி ஸ்ரீராமுநி
பாத³முலநு த்யாக³ராஜ ஹ்ருத்³பூ⁴ஷணுநி (நா)

மனமே! சோபையுடன் கூடிய மனமென்னும் பொற் பீடத்தில் (இராமச்சந்திர மூர்த்தியை) பிரதிஷ்டை செய்து கொண்டு சிறப்புற சிவ, ராம நாமங்களென்னும் மலர்களால் அர்ச்சனை செய்யும் நரசன்மமே சன்மமாகும்.

நாதம், ஸ்வரம் முதலிய நவரத்தினங்களிழைக்கப்பெற்ற மேடையின் மீது, பல திருவிளையாடல்கள் புரியும் பரமாத் மாவும், தியாகராஜன் உள்ளத்தை அலங்கரிக்கும் தெய்வமு மாகிய ஸ்ரீராமனின் திருவடிகளை எழுந்தருளச் செய்து (பூசை செய்யும் சன்மமே சன்மமாகும்).

## 220

ஸ்ரீராக³ம் சாபு

ப. யுக்தமு கா³து³ நு ரக்ஷிம்பக
யுண்டே³தி³ ராம (யு)

அ. ப⁴க்தவத்ஸல பதிதபாவந த்ரி-
சக்தியு க³லிகி³ந தே³வுடு³ நீவை (யு)

ச. 1. தொலி து³ஷ்க்ருதமுல நணசே நீ பி³ரு-
தி³லநு த³டு³ஸுகொநெநோ
பலிகி பொ³ங்க ட³நு நீ கீர்த்தியு நே
பா³க³லேது³ அநெநோ
தெலிஸி தெலியநி நீ தா³ஸுல ப்³ரோவ
தே³வத³ய ராநநெநோ முநு
வெலஸிந ப⁴க்துலகே நீ சக்தியு
ஸெலவை போயெநோ தெ³ல்புமு (யு)

2. வத்³த³யுண்டு³ ஜநகாத்மஜ ப³ல்க
வத்³த³நெநோ லேக
நித்³து³ரஜிதுட³தி கோபமுதோட³நு
நீகேல யநெநோ
முத்³து³க ப⁴ரதுடா³நந்த³ பா³ஷ்ப-
முல க³நுல நிஞ்செநோ
பத்³து³ந பவநஸுதுடு³ வத்³த³நி நீ
பத³மு பட்டுகொநெநோ தெ³ல்புமு

3. சல்லநி நீ ப⁴க்திலேத³நி விதி⁴
கல்லலாடு³ கொநெநோ நா-
வல்லகா³த³நி பலுகுசெலி மிக்கிலி
வார்த்தலாடு³ கொநெநோ
உல்லமுநநு ஸ்ரீத்யாக³ராஜு நிந்-
நுஞ்சுகொந மறசெநோ
செல்லலைந த⁴ர்மஸம்வர்த⁴நி
சேரபோ³குமநெநோ தெ³ல்புமு (யு)

பக்தரிடம் அன்பு கொள்பவனே! எளியவரைக் காப்பவனே! ஆக்கல், பாதுகாத்தல், அழித்தல் ஆகிய முச்சக்தியும் படைத்த தெய்வம் நீயாக இருந்தும் நீ என்னை இரட்சிக்காமலிருப்பது நியாயமல்ல இராம!

பழவினைகளை ஒழிக்கும் உன் விருது இன்று சிதறிவிட்டதா? ''கொடுத்த வாக்கை மீறுதவன்'' என்ற உன் புகழ் ''இத்தியாகராஜன் தகுதியற்றவன்'' என்று உன்னிடம் கூறிவிட்டதா? தெரிந்தும், தெரியாமலும் உள்ள உன் பக்தர்களைக் காப்பாற்ற உன் தயை வர மறுத்துவிட்டதா? அல்லது முற்காலத்து பக்தர்களைக் காப்பாற்றியதில் உன் சக்தியனைத்தும் செலவாகிவிட்டதா, கூறு.

உன்னருகிலேயே விளங்கும் அன்னை ஜானகி நீ என்னுடன் பேசக்கூடாது என்று தடுத்துவிட்டாளோ? அல்லது நித்திரையை ஜயித்த இலக்ஷ்மணன் மிகுந்த கோபத்துடன் ''உனக்கேன் (இத்தொல்லை)?'' என்ருனே? இனிய பார்வையுடைய பரதன் தன் ஆனந்தக் கண்ணீரை நிறுத்திவிட்டானே? அல்லது அனுமன் உன்னைப் போகவேண்டாமென்று தடுத்து உன் பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டானே? கூறு.

உன்னிடம் எனக்கு சாந்த பக்தியில்லையென்று பிரமன் பொய் கூறினனே? ''என்னல் முடியாது'' என்று சரஸ்வதியும் மறுதலித்துவிட்டாளோ? ஒருவேளை இத்தியாகராஜனே உன்னைத் தன் உள்ளத்தில் தியானிக்க மறந்துவிட்டானே? அல்லது உன் தங்கையாகிய தர்மஸம்வர்த்தனி (பார்வதி) ''நீ அவனுடன் சேராதே'' என்றனளோ? கூறுவாய்.

## 221

கௌ³ரீமநோஹரி (மே. 23) ஜ²ம்ப

ப. கு³ருலேக யெடுவண்டி கு³ணிகி தெ³லியக³போ³து³ (கு³)

அ. கறுகைந ஹருத்³ரோக³ க³ஹநமுநு கொ³ட்டநுஸத்³ (கு³)

ச. தநுவு ஸுத த⁴ந தா³ர தா³யாத³ பா³ந்த⁴வுலு
ஜநியிஞ்சி செத³ரு ஜாலிநி கருணதோ
மநஸு நண்டக [1]ஸேயு மந்த³நுசு த³த்வ போ³-
த⁴ந ஜேஸி காபாடு³ த்யாக³ராஜாப்துட³கு³ (கு³)

தீவிரமான (காமம் முதலிய) மனப் பிணிகளென்னும் பெருங்காட்டை அழிப்பது ஸத்குருவாகிய ஆசாரியன் உதவியின்றி எத்தகைய குணவானுக்கும் சாத்தியமல்ல.

உடல், மக்கள், செல்வம், மனைவியர், உறவினர் போன்றவை தோன்றி, அவற்றின் மூலம் சிதறும் துக்கத்தில் மனத்தை அண்டவிடாமல் செய்யும் நன்மருந்து தத்துவ போதனையாகும். அதனைக் கருணையுடன் செய்பவர் தியாகராஜனுக்கு ஆப்தனாகிய ஸத்குரு ஆவர்.

## 222

வீரவஸந்த (மே. 24) ஆதி³

ப. ஏமநி பொக³டு³து³ரா ஸ்ரீராம நிந் (நே)

அ. ஸ்ரீமந்நபோ⁴மணி வம்ச ல-
லாம பு⁴வநவாஸீ மா ராம நிந் (நே)

ச. சிவுநிகி தாமஸ கு³ணமிச்சி கமல-
ப⁴வுநிகி ராஜஸ கு³ணமொஸகி³ சசீ-
த⁴வுநி க³ர்வஹ்ருத³யுநிகா³ ஜேஸிந
தா³சரதி, த்யாக³ராஜவிநுத நிந் (நே)

*ஸ்ரீராம! சூரிய வம்ச திலகனே! அலைகடல் துயில்பவனே! உன்னை நான் என்னவென்று புகழ்வேன்? சிவனுக்குத் தாமஸ குணத்தையும், நான்முகனுக்கு ராஜஸ குணத்தையும், சசீதேவியின் நாயகனாகிய இந்திரனுக்கு கர்வத்தையும் அளித்துவிட்டு (நீ மாத்திரம் சுத்த ஸத்வ ஸ்வரூபனாக) விளங்கிய தசரதன் மைந்தனே!*

## 223

மாரரஞ்ஜநி (மே. 25) ஆதி³

ப. மநஸா ஸ்ரீராமுநி த³யலேக
மாயமைந வித⁴மேமே (ம)

---

1. மஞ்சி

அ. க॒ந து॑ரிதமுல [1]கொடி॑க॑ட்டி நா
க்ார்யமுலநு செறசிதிவோ (ம)

ச. பரதா॑ரல பரத॒நமுல காஸ
படி॑ செடி॑ தி॑ரிகி॑திவோ லேக
பரஜீவாத்முல ஹிம்ஸிஞ்சிதிவோ
வர த்யாக॑ராஜநுதுநி மறசிதிவோ (ம)

மனமே! ஸ்ரீராமனின் தயை வராமல் மாயமாகப்போன விதம் என்னவோ? கனத்த பாவங்களைக் கோட்டையாகக் கட்டி, நான் செய்யும் (பகவதாராதனை முதலிய) காரியங்களை நீ கெடுத்துவிட்டாயோ?

பிறர் பெண்டிற்கும். செல்வத்திற்கும் ஆசையுற்று நடத்தை கெட்டுத் திரிந்தாயோ? அல்லது பிறருக்குத் துன்பம் இழைத்தாயோ? தியாகராஜன் வணங்கும் தெய்வத்தை மறந்தாயோ?

## 224

சாருகேசி (மே. 26) தே॑சாதி॑

ப. ஆட॑மோடி॑ க॑லதே॑ ராமய்ய மாட (லா)

அ. தோடு॑ நீட॑ நீவே யநுசு ப॒க்திதோ
கூ॑டி॑ பாத॑மு ப॑ட்டிந நாதோ மாட (லா)

ச. சது॑வுலந்நி தெ॑லிஸி சங்கராம்சுடை॑
ஸத॑யுடா॑சுக॑ ஸம்ப॒வுண்டு॑ ம்ரொக்க
க॑த॑லு தம்முநி ப॑ல்க ஜேஸிதிவி
கா॑கநு த்யாக॑ராஜு ஆடி॑ந மாட[2] (லா)

துணையும் நிழலும் நீயே யென்று பக்தியுடன் உன் திருவடிகளைப் பற்றிய என்னுடன் பேசுவதற்கு உனக்கு மோடியா (பிகுவா?)

கலைகளனைத்தையும் கற்றுச் சிவபெருமானின் அம்சம் பெற்று, தயை நிரம்பிய ஆஞ்சநேயன் உன்னை வணங்க, உன் வரலாறுகளைக் கூறும்படி உன் தம்பிக்கு உத்தரவிட்டாயே தவிர (நீ அவனுடன் பேசவில்லை) ஆகவே, இத்தியாகராஜன் உனக்கு எம்மாத்திரம்?

---

1. கோட
2. த்யாக॑ராஜேபாடிமாட

## 225

ஸரஸாங்கி(மே. 27) தே³சாதி³

ப. மேநு ஜூசி மோஸபோ³கவே மநஸா
லோநி ஜாட³ லீலாகு³ கா³தா³ (மே)

அ. ஹீநமைந மலமூத்ர ரக்தமுல
கில நெஞ்சு மாயாமயமைந சாந (மே)

ச. கநுலநேடி யம்பகோல சேத கு³ச்சி
சநுலநேடி கி³ருல சிரமு நுஞ்சி
பநுலு சேதுரட த்யாக³ராஜநுதுநி
பா⁴க³ நீவு ப⁴ஜந ஜேஸிகொம்மி ஸ்த்ரீல (மே)

*மனமே! பெண்களின் மேனியழகைக் கண்டு மோசம் போகாதே. உள்ளிருக்கும் மர்மம் இதுதானென்று நமக்குத் தெரிந்ததே! ஈனமான மலம் முதலியன நிரம்பிய மாயாமய மானது அவ்வெளியழகு.*

*அவர்கள் கண்வீச்சென்னும் அம்புகளை எய்து, கொங்கை களின் பகட்டின் உதவியால் (காமாதுரருக்கு இன்பம் பயக்கும்) பல லீலைகள் புரிவர். அதைக் கண்டு மோசம் போகாமல், நீ ப⁴ஜனை மார்க்கத்தைப் பின்பற்றிக் கடைத்தேறு.*

## 226

கமலாமநோஹரி (மே. 27) ஆதி³

ப: நீ முத்³து³மோமு ஜூபவே (நீ)

அ. நாமீத³நெருஞ்சி நளிநத³ளநயந (நீ)

ச. 1. உரமுந நிந்நுஞ்சுகொநே கா³நி
உரக³சயந நாது³ல்லமு ரஞ்ஜில்ல (நீ)

2. புலகரிஞ்ச நிநு பூ³ஜஸேதுகா³நி
கலநைந மறுவ சுக்கலராயநி போ³லு (நீ)

3. மருலுகொந்நாநு மத³நஜநக
த³ரஸுதாரமண த்யாக³ராஜுநிகி (நீ)

*பங்கயக் கண்ணனே! என்மீது அபிமானம் வைத்து அழகிய உன் திருமுகத்தை எனக்குக் காட்டுவாயாக.*

*பாம்பணைத் துயில்பவனே! என்னிதயத்தில் உன்னை நான் என்றும் தியானிப்பதால், என்னுள்ளம் மகிழ (உன் அழகிய முகத்தைக் காட்டுவாய்).*

உடல் புலகிதம் அடைய உன்னை நான் பூசிப்பதால், கனவிலும் மறக்க முடியாத சந்திரன் போன்ற உனது (திரு முகத்தைக் காட்டுவாய்).

உன்மீது மையல் கொண்டுள்ளேன். மதனனைப் பெற்றவனே! சிதாநாயகனே! இத்தியாகராஜனுக்கு (அழகிய உன் முகத்தைக் காட்டுவாய்).

## 227

நளிநகாந்தி (மே. 27) தேˇசாதிˇ

ப. [1]மநவிநாலகிஞ்ச ராதˇடே
மர்மமெல்ல தெˇல்பெதˇநே மநஸா (ம)

அ. க¦நுடைˇந ராமசந்த்ˇருநி
கருணாந்தரங்கˇமு தெலிஸிந நா (ம)

ச. கர்மகாண்டˇ மதாக்ருஷ்டுலை ப¦வ-
கˇஹநசாருலை காˇஸி ஜெந்தˇகˇ
கநி மாநவாவதாருடைˇ
கநிபிஞ்சிநாடேˇ நடˇத த்யாகˇராஜு (ம)

மனமே! மகாத்மாவாகிய இராமபிரானின் கருணை நிறைந்த உள்ளத்தை நன்கு அறிந்த என் விண்ணப்பத்தை நீ கேட்கலாகாதா? மர்மங்களைக் கூறுகிறேன், கேள்.

(மாந்தர்) பயன் கருதி அநுஷ்டிக்கப்பெறும் கர்ம மார்க்கத்தையே பின்பற்றுவோராகி, சம்சாரமென்றும் காட்டில் திரிந்து துயரம் அடைந்த பொழுது, தான் (இராமனாக) மானிட அவதாரமெடுத்துத் தன் நடத்தையின் மூலம் நல்லொழுக்கத்தை அவர்களுக்குக் காட்டியருளவில்லையா?

## 228

ஸிம்ஹவாஹிநி (மே. 27) தேˇசாதிˇ

ப. நெருஞ்சரா நாபைநி சால:
நீ தாˇஸுடˇநு காˇநா ஸ்ரீராம (நெ)

அ. ஸநகாதிˇ யோகிˇப்ˇருந்தˇ வந்த்ˇயபாதˇ
ஸாகேதவாஸ ஸத்ˇப¦க்தபோஷ (நெ)

---

1. மநவால

ச. தல்லி தண்ட்ரி கு³ரு தை³வமு நீவநி
தறுசுகா³நு நிந்து நம்மியுந்ந நே
த³ல்லடி³ல்லுசுண்ட³ த³ரி ஜூபவேமி
த்யாக³ராஜ பரிபால ஸுகு³ணசீல (ரெ)

ஸ்ரீராம! என்மீது அன்பு காட்டு. நான் உன் அடியவன் அல்லவா? ஸனகர் முதலிய யோகியர் குழாம் தொழும் பாதனே! அயோத்தியில் வசிப்பவனே! பக்தர்களைப் போஷிப்பவனே!

அன்னை, பிதா, குரு, தெய்வம் அனைத்தும் நீயேயென்று எப்போதும் உன்னை நம்பியிருக்கும் நான் தத்தளிக்கும்பொழுது எனக்குப் புகலிடம் காட்டமாட்டாயா? தியாகராஜனைப் பரிபாலிக்கும் குணசீலனே!

## 229

ஹரிகாம்போ³ஜி (மே. 28) ரூபகம்

ப. உண்டே³தி³ ராமுடொ³கடு³
ஊரக செடி³போகு மநஸா (உ)

அ. சண்ட³ மார்ததாண்ட³ மத்³ய
மண்ட³லமுநநு செலங்த³சு¹ (உ)

ச. தாமஸாதி³ கு³ணரஹிதுடு³
த³ர்மாத்முடு³ ஸர்வஸமுடு³
க்ஷேமகருடு³ த்யாக³ராஜ
சிதஹிதுடு³ ஜக³மு நிண்டி³ (உ)

மனமே! சகம் முழுதும் நிறைந்து (சர்வ வியாபியாய்) நிற்கும் பரம்பொருள் இராமன் ஒருவனே. (வேறு நம்பிக்கைகளை ஏற்று) வீணில் கெட்டுப் போகாதே. தீவிரமான பிரகாசத்தையுடைய சூரிய மண்டலத்தின் நடுவில் விளங்குபவன் அவன்.¹

தமோ குணம் முதலிய குணங்களற்றவன். தர்மாத்மா. அனைவருக்கும் சமமானவன். நன்மை புரிபவன். தியாகராஜனின் உள்ளத்திற்கு இதம் தருபவன்.

---

¹ "த்யேயஸ்ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தி நாராயணஸ் ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட:"

## 230

ஹரிகாம்போ்ஜி தே்சாதி்

ப. எந்தராநி தநகெந்த போநி நீ
செந்த விடு்வஜால (எங்)

அ. அந்தகாரி நீ செந்தஜேரி ஹநு-
மந்துடை் கொலுவலேதா் (எங்)

ச 1. சேஷுடு் சிவுநிகி பூ்ஷுடு் லக்ஷ்மண-
வேஷியை கொலுவலேதா் (எங்)

2. சிஷ்டுடு் மௌநிவரிஷ்டுடு் கொப்்ப வ-
ஸிஷ்டு,டு் ஹிதுடு் கா்லேதா் (எங்)

3. நரவர நீகை ஸுரக்ணமுலு வா-
நருலை கொலுவலேதா் (எங்)

4. ஆக்மோக்தமகு் நீ கு்ணமுலு ஸ்ரீ
த்யாக்ராஜு பா்ட்க்லேதா் (எங்)

எத்தனை வரினும், எத்தனை போயினும் நான் உன் அருகை என்றும் விடமாட்டேன். காலனை வென்ற சிவபெருமான் அனுமன் உருவத்தில் உன்னையடைந்து தொண்டு புரியவில்லையா? பரமசிவனின் ஆபரணமாகிய ஆதிசேடன் இலக்ஷ்மணனாக அவதாரம் செய்து உன்னைச் சேவிக்கவில்லையா? பரமஞானியாகிய மாபெரும் வசிட்டன் உனக்கு இதம் புகட்டும் (புரோகிதனாக) ஆசாரியனாக அமையவில்லையா? மாந்தருள் சிறந்தவனே! உன்பொருட்டு தேவகணங்கள் வானர வடிவம் பூண்டு உன்னைச் சேவிக்க வில்லையா? வேதங்கள் புகழும் உன் திவ்விய குணங்களை தியாகராஜன் பாடவில்லையா?

## 231

ஹரிகாம்போ்ஜி தே்சாதி்

ப. எந்து்கு நிர்த்ய எவருந்நாருரா (எங்)

அ. இந்து்நிபா்நந இநகுலசந்த்ந (எங்)

ச. 1. பரமபாவந [1] பரிமளாபக்ந (எங்)

2. நேபரதே்சி பா்பவே கா்ஸி (எங்)

---

1. பரமளாபக்ந

3. உடு^v^த ப^,^க்தி க^v^நி உப்பதில்லக^v^ லேதா^v^ (எங்)

4. சத்ருல மித்ருல ஸமமுக^v^ ஜூசே நீ (கெங்)

5. த^,^ரலோ நீவை த்யாக^v^ராஜுபை (எங்)

தியாகராஜன் மீது ஏன் இவ்விரக்கமின்மை? எனக்கு வேறு யார் உளர்? மதிவதனனே! சூரியவம்சத்திற்குச் சந்தனம் போல் குளிர்ச்சி தருபவனே! பரிசுத்தப்படுத்துபவனே! நறுமணம் வீசும் சரீரமுள்ளவனே! நான் பரதேசி. என் துயரைப் போக்குவாயாக. ஓர் அணிலின் பக்தியைக் கண்டு நீ மகிழ்ச்சியுறவில்லையா? எதிரிகளையும், நண்பர்களையும் சமமாகக் கருதபவன் அல்லவா நீ? இவ்வுலகமே உன் மயமானது.

## 232

ஹரிகாம்போ^,^ஜி ரூபகம்

ப. ஒகமாட ஒகபா^v^ணமு
ஒகபத் நீவ்ரதுடே^v^மநஸா

அ. ஒக சித்தமுக^v^லவாடே^v^
ஒகநாடு^v^நு மறவகவே (ஒ)

ச. சிரஜீவித்வமு நிர்ஜர
வர [1]ஸௌக்,ய மொஸங்கு^v^நே
த^,^ர ப^v^ரகே^v^ தே^v^வுடே^v^
த்யாக^v^ராஜநுதுடே^v^ (ஒ)

மனமே! அவன் ஒரு சொல், ஒரு கணை, ஒரு பத்தினி இவற்றை நியமமாக உடையவன். கலங்காத ஒரே சித்தத்தை யுடையவன். அவனை ஒருநாளும் மறவாதே. நீண்ட ஆயுள், இந்திரபோகம் ஆகியவற்றை அளிப்பவன். இவ்வுலகில் நடமாடும் தெய்வம். தியாகராஜன் வணங்கும் மூர்த்தி.

## 233

ஹரிகாம்போ^,^ஜி * ஆதி^v^

ப. சநி தோடி^v^ தேவே வோ மநஸா (ச)

அ. கநிகரம்முதோ^v^ கநி கரமிடி^v^ சிர–
காலமு ஸுக,மநுப^v^விம்ப வேக^v^மே (ச)

---

1. மோக்ஷ * கமாஸ்

ச. பதிதுல ப்ரோசே பட்டாதிகாரிநி
பரமார்த்த, மத வஸிஷ்டா, நுஸாரிநி
த்யுதி நிர்ஜித சதசம்பராரிநி
துரீண த்யாகராஜ ஹருச்சாரிநி (ச)

மனமே! நீ சென்று அவனை அழைத்து வா. தயையுடன் (என்னை) நோக்கிக் கைகொடுத்து, என்றென்றும் சுகம் அனுபவிக்குமாறு விரைவாக (அழைத்துவா).

அவன் வீழ்ந்தவரை (எளியவரை)க் காப்பதெனப் பட்டம் கட்டிக் கொண்ட பிரபு. பரமார்த்தத்தையே மதமாகவுடைய வசிஷ்டனைப் பின்பற்றுபவன். ஒளியினால் நூறு மன்மதரை வென்றவன். தியாகராஜனது இதயத்தில் சஞ்சரிப்பவன்.

## 234

ஹரிகாம்போஜி ஆதி

ப. திநமணிவம்ச திலக லாவண்ய
தீநசரண்ய (தி)

அ. மநவிநி பாகுக மதிநி தலஞ்சுசு
சநுவுந நேலு சாலுகாஜாலு (தி)

ச. சர்வவிநுத நநு ஸம்ரக்ஷிஞ்சநு
கர்வமுலேல காசுவாரெவரே
நிர்விகாரகுண நிர்மல கரத்ருத-
பர்வத த்யாகராஜ ஸர்வஸ்வமௌ (தி)

சூரியகுல திலகனே! பேரழகனே! எளியோரின் அடைக்கலமே! என் விண்ணப்பத்தை நன்கு மனத்தில் எண்ணிப் பார்த்து அன்புடன் நீ என்னைக் காப்பாயாக. நீ இதுவரையில் என்னைச் செய்த அலட்சியம் போதும், போதுமய்யா!

சிவனால் வணங்கப்படுபவனே! என்னைக் காப்பாற்றாமலே உனக்கு கர்வம் ஏன்? என்னை வேறு யார் காப்பர்? விகாரமற்ற குணங்களையுடையவனே! தூயவனே! கோவர்த்தன மலையைக் கரத்தால் தாங்கியவனே! தியாகராஜனுக்கு அனைத்துமானவனே!

## 235

ஹரிகாம்போஜி ரூபகம்

ப. ராம நந்நு ப்ரோவரா-
வேமகோ லோகாபி (ரா)

அ. சீமலோ ப்ˇரஹ்மலோ சிவ கேசவாதுˇலலோ[1]
ப்ரேமமீற மெலகுˇசுண்டேˇபிˇருதுˇ வஹிஞ்சிநஸீதா (ரா)

ச. மெப்புலகை கந்நதாவு
நப்பு பˇடˇகˇ விர்றவீகிˇ
தப்பு பநுலு லேகயுண்டேˇ
த்யாகˇராஜநுத ஸீதா (ரா)

*எறும்பு முதல் பிரமன் வரையுள்ள ஜீவராசிகளிலும் சிவன், விஷ்ணு முதலிய கடவுளரிடமும் அன்புடன் பரந்து விளங்கும் விருது பெற்ற (பரம்பொருளாகிய) ஸீதாராம! நீ உலகத்தோரின் மனங்கவர்வோனாக இருந்தும் என்னைக் காக்க வரமாட்டாயோ? பகட்டிற்காகக் கண்ட விடத்தில் கடன் படாமலும், கர்வமடைந்து தீச் செயல்கள் புரியாமலும் இருக்கும் இந்த தியாகராஜனால் வணங்கப்பெறும் ஸீதாராம!*

## 236

கர்நாடக பெஹாக்ˇ (மே. 28) ஆதிˇ

ப. நே நெந்துˇ வெதுகுதுˇரா ஹரி (நே)

அ. ஆநால்குˇ மோமுலவாநி மொற-
நாலகிˇஞ்சி ராநி நிந்நு (நே)

ச. கலுஷாத்முடைˇ துˇஷ்கர்மயுதுடைˇ
பலுமாரு துˇர்பாˇஷியை
இலலோ பˇக்தாகˇரேஸ-
ருல வேஷியை த்யாகˇராஜபூஜித (நே)

*நான்கு முகங்கள் படைத்த பிரமனிட்ட முறைகளைக் கேட்டும் வராத உன்னை நான் எங்கு தேடுவேன்? ஹரியே!*

*பாவம் நிறைந்த உள்ளத்துடன், தீச் செயல் புரிந்து, பன்முறை தகாத மொழிகளைப் பேசிக்கொண்டு, உலகில் சிறந்த பக்தனைப்போல் வெளி வேடமிட்ட (நான் உன்னை எங்கு தேடுவேன்?)*

## 237

ஈசமநோஹரி (மே. 28) ஆதிˇ

ப. மநஸா ஸ்ரீராமசந்த்ˇருநி
மறவகே ஏமறகே ஓ (ம)

---

1. *''ஆ ப்ரஹ்மாதி பிபீலிகாந்த தநுஷு
ப்ரோதா ஜகத்ஸாக்ஷிணி''*

அ. [1]முநு புட்டநு புட்டிந மௌநிக்ருதமௌ
மூடுந்நாரத்யாயமுந ஜூசுகோ (ம)

ச. ஸ்ருஷ்டி புஷ்டி நஷ்டி ஸேயு பநுலு நி-
க்ருஷ்ட மநுசுது த்ரிமூர்த்துல கொஸகி
துஷ்டுடை பரகெ ஸத்பக்தமநோ-
பீஷ்டமுலிச்சே த்யாகராஜநுதுநி (ம)

மனமே! ஸ்ரீராமசந்திரனை மறவாதே: அசிரத்தையுடன் இருந்துவிடாதே. (அவன் அவதார இரகசியத்தை) முன்பு புற்றில் தோன்றிய (வால்மீகி) முனிவர் இயற்றிய (ஸ்ரீமத் ராமாயண) கிரந்தத்தின் மூன்ருவது, ஆருவது அத்தியாயங்களில் கண்டுகொள்.

ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்சள் ஈனமானவையென்று அவற்றைத் திரிமூர்த்திகளுக்கு விட்டுவிட்டு, என்றும் மகிழ்ச்சியுடன் விளங்கும் மெய்யடியாரின் மனவிருப்பங்களை அளிக்கும் இராமசந்திர மூர்த்தியை (மறவாதே).

## 238

ஈசமநோஹரி தேசாதி

ப. ஸ்ரீஜாநகீ மநோஹர ஸ்ரீராகவ ஹரி (ஸ்ரீ)

அ. நாஜாலிநி நீவே தெலிஸி
நம்ராநநுடைள்ட கேமி காரணமு (ஸ்ரீ)

ச. நே ஸேயு துஷ்கர்ம தேவத
நீ ஸந்நிதிநி நில்வஸாகெநோ
நீ ஸேவ நில்வதேலரா
நீரஜாக்ஷ த்யாகராஜஸந்நுத (ஸ்ரீ)

சீதாதேவியின் உள்ளங்கவர்ந்தவனே! ஸ்ரீ ராகவ! என் துயரை நீயே அறிந்தும் தலைகுனிந்திருப்பதற்குக் காரணம் என்ன?

நான் புரியும் பாவங்கள் துர்த்தேவதை வடிவில் ஒருவேளை உன் சமுகத்தில் தோன்ற ஆரம்பித்துவிட்டனவோ? (இதனால்) உன் சேவையும் எனக்கு நின்றுவிடுமோ! பங்கயக் கண்ணனே!

---

1. வால்மீகி இராமாயணத்தில் ஸர்க்கங்களே இருப்பதாலும் அத்தியாயங்கள் இல்லாமையாலும் இங்கு குறிப்பிடப்பெறும் நூலைப் பற்றி அபிப்பிராயபேதம் இருந்துவருகிறது. ஆயினும் இங்கு வால்மீகி இராமாயண பாலகாண்டத்தில் மூன்ருவது ஆருவது ஸர்க்கங்களே குறிப்பிடப்பெறுகின்றனவென்று தெலுங்கில் உரை எழுதிய கல்லூரி வீரபத்திர சாஸ்திரியவர்கள் கூறியிருப்பதே பொருத்தமாகவிருக்கிறது.

## 239

**உமாப,ᵛரணம் (மே. 28)** **ஆதிᵛ**

ப. நிஜமர்மமுலநு தெலிஸிநவாரிநி
நீ வலயிஞ்சே தேᵛமொகொ ராம (நி)

அ. அஜ கᵛஜரக்ஷக கᵛஜசர்மாம்பᵛ-
ராதிᵛ [1] தைவᵛ பே,ᵛதᵛமுலநு லீல கல்கᵛஜேஸிந (நி)

ச. ச்ருதி சாஸ்த்ர புராண [2] விதாᵛதிᵛ ஷண்-
மத நிஷ்டு,ல நாமபராதுᵛல
க்ஷிதிபதுலங் [3]குᵛமதுலுகாᵛ ஜேஸிந
[4] க்ஷேம த்யாகᵛராஜநுத ஸ்ரீமநோஹர (நி)

பிரமன், விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளின் தெய்வ வேறுபாட்டை விளையாட்டாக ஏற்படுத்திய உனது உண்மை இரகசியத்தை அறிந்தவர்களை (தத்துவ ஞானிகளை) நீ எவ்வழியில் சிரமத்திற்கு ஆளாக்க முடியும்?

வேதம், சாத்திரம், புராணங்கள் ஆகியவற்றை அறிந்தவர்களையும், அறுசமயங்களைப் பின்பற்றுபவர்களையும், நாம ஸங்கீர்த்தனம் செய்பவர்களையும், [5]மன்னர்களையும் மனமயக்கம் கொண்டவர்களாகச் செய்த நீ (உனது உண்மையான மர்மத்தை அறிந்தவர்களை என்ன செய்ய முடியும்?) நன்மை புரிபவனே! திருமகள் நாயகனே!

## 240

**கமாஸ் (மே. 28)** **தேᵛசாதிᵛ**

ப. ஸீதாபதீ நா மநஸுந
ஸித்ᵛதா,ᵛந்தமநி யுந்நாநுரா (ஸீ)

அ. வாதாத்மஜாதுᵛல செந்தநே
வர்ணிஞ்சிந நீ பலுகுலெல்ல (ஸீ)

ச. ப்ரேம ஜூசி நாபை பெத்ᵛதᵛ மநஸுஜேஸி
நீ மஹிமலெல்ல நிண்டாᵛர ஜூபி
ஈமஹிநி ப,ᵛயமேடிகந்ந மாட
ராமசந்த்ᵛர த்யாகᵛராஜவிநுத (ஸீ)

---

1. கௌᵛண 2. விவாதிᵛ 3. லங்கᵛமதுலுᵛகா 4. ஸ்ரீதᵛ

5. இங்கு "க்ஷிதிபதுலந் குமதுலகா ஜேஸிந" என்றும் "க்ஷிதிபதுல் அங்கமதுலுகா ஜேஸின" என்றும் இரு விதமாகப் பதம் பிரித்து வெவ்வேறு பொருள் கூறுவாருமுளர்.

சீதாபதி! அனுமன் முதலியோரிடம் நீ கூறிய வார்த்தைக ளனைத்தும் நிச்சயமானவையென்று என் மனத்தில் நம்பி யிருக்கிறேன்.

என் மீது அன்பு கூர்ந்து, பெரிய மனது வைத்து, உன் மகிமையை நிரம்பக் காட்டி "இவ்வுலகில் உனக்கேன் பயம்?" என்று நீ உறுதி கூறிய மொழிகளை (நிச்சயமாக நம்பியுள்ளேன்).

## 241

கமாஸ் ரூபகம்

ப. ஸுஜநஜீவந ஸுகு³ணபூ⁴ஷண ராம (ஸு)

அ. பு⁴ஜக³பூ⁴ஷணார்ச்சித பு³த⁴ஜநாவநாத்-
மஜ வந்தி³த ச்ரிதசந்த³ந த³சதுரங்க³ மாமவ (ஸு)

ச. சாருநேத்ர ஶ்ரீகளத்ர ஶ்ரீரம்ய கா³த்ர
தாரகநாம ஸுசரித்ர த³சரத₂புத்ர
தாரகாதி⁴பாநந த⁴ர்மபாலக
தாரய ரகு⁴வர நிர்மல த்யாக³ராஜஸந்நுத (ஸு)

நல்லோர் வாழ்விற்கு ஆதாரமே! நற்குணங்களையே அணிகளாக உடையவனே! சிவனால் வணங்கப்படுபவனே! அடிய வர்க்குச் சந்தனம்போல் இதம் அளிப்பவனே! கருடவாகனனே! என்னைக் காப்பாற்று.

அழகிய கண்களையுடையவனே! லக்ஷ்மிபதியே! சுந்தர வடிவத்தாய்! தாரகநாமத்தாய்! நற்சரிதனே! தயரதன் மைந்த! மதிமுகத்தவனே! தர்மத்தைப் பாலிப்பவனே! ரகுவர! நிர்மலனே! என்னைக் கடைத்தேற்று.

## 242

காபிநாராயணி (மே. 28) தே³சாதி³

ப. ஸரஸ ஸாம தா³ந பே⁴த³ த³ண்ட சதுர
ஸாடிதை³வ மெவரே ப்³ரோவவே (ஸ)

அ. பரமசாம்ப⁴வாக்³ரேஸருண் ட³கு³சு
ப³ல்கு ராவணுடு³ தெலியலேக போயெ (ஸ)

ச. ஹிதவுமாட லெந்தோ பா³க ப³ல்கிதிவி
ஸதமுகா³ நயோத்³ய⁴ நிச்சேநண்டிவி[1]
நதஸஹோத³ருநி ராஜு ஜேஸி ராக
ஹதமு ஜேஸிதிவி த்யாக³ராஜநுத (ஸ)

---

1. நித்து நண்டிவி

சாமம், தானம், பேதம், தண்டம் ஆகிய நான்கு வகை உபாயங்களை (சமயமறிந்து) உபயோகிக்கும் சமர்த்தனே! உனக்கிணையான தெய்வம் வேறு ஏது? என்னைக் காப்பாற்று. சிவ பக்தருள் தலைசிறந்தவனான இராவணன்கூட இந்த உண்மையை அறியாமற் போனானே!

(தூதன் மூலமாக) இதமான வார்த்தைகள் எத்தனையோ கூறியனுப்பினாய். "நிரந்தரமாக அயோத்தியா ராஜ்யத்தை உனக்கு அளிக்கிறேன்" என்றாய். உன்னை வணங்கிய (இராவணன் தம்பியாகிய) விபீஷணனை (லங்கா ராஜ்யத்தின்) அரசனாக்கினாய். (இவ்வளவிற்கும்) வராத அவ்வரக்கனை இறுதியில் வதம் செய்து ஒழித்தாய்.

## 243

காம்போ³ஜி (மே. 28) ஆதி³

ப. எவரிமாட விந்நாவோ ராவோ
இந்து³ லேவோ ப³ளி ப³ளி (எ)

அ. அவனிலோநார்ஷேய பௌருஷேய மந்தி³
சோத்³ய மெறுக³லேநய்ய (எ)

ச. ப⁴க்த பராதீ⁴நுடநுசு ப்³ரம
பா⁴க³வதுல
வ்யக்தரூபுடை³ பலிகிந முச்சட
யுக்தமநுசு நுண்டி
சக்திக³ல மஹாதே³வுடு நீவநி
ஸந்தோஷமுந நுண்டி
ஸத்த சித்துட³கு³ த்யாக³ராஜநுத
ஸத்யஸந்து⁴ட³நுகொண்டி நில்லோ (எ)

யாருடைய பேச்சைக் கேட்டாயோ? (அதன் விளைவாக) வரமாட்டாயோ? அல்லது நீ இங்கு இல்லையோ? நன்று, நன்று.

* இவ்வுலகில் ரிஷிகளின் வாக்கையும் மனிதர் இயற்றிய நூல்களையும் ஆராய்ந்தும் இவ்வாச்சரியத்தை என்னால் அறியக் கூடவில்லை.

---

* இங்கு காணப்பெறும் "ஆர்ஷேய பௌருஷேயமந்தி" என்ற வார்த்தைகளுக்கு வேறுவிதமாகப் பொருள் கூறுவர் சிலர். "நீ சிறந்த ரிஷி சம்பிரதாயத்தைச் சேர்ந்தவனாகவும், ஆண்மையுடையனாகவும் இருந்தும் இவ்வாறு அநியாயம் செய்வது ஆச்சரியம் தருகிறது" என்று கல்லூரி வீரபத்திர சாஸ்திரியவர்கள் உரையெழுதியிருக்கிறார்.

''நான் பக்தர் வசப்பட்டவன்'' என்று வெளிப்படையான உன் அவதார உருவங்களில் பரமபாகவதர்களிடம் நீ கூறிய வரலாறுகளைக் கேட்டு நான் இதுவே தகுதியென்றிருந்தேன். சக்தியுடைய பெருந் தெய்வம் நீ யென்று நம்பி மகிழ்ச்சி யுற்றிருந்தேன். நிலையான சித்தமுள்ள தியாகராஜனுல் வணங்கப்படுபவனே! நீ சத்தியசந்தன் என்று உறுதி கொண்டிருந்தேன். (ஆயினும் நீ யாருடைய பேச்சைக் கேட்டாயோ? இது என்ன விந்தை?)

## 244

காம்போ᳚ஜி ஆதி᳚

ப. ஓ ரங்க᳚சாயீ பி᳚லிசிதே
ஓயனுசு ராராதா᳚ (ஓ)

அ. [1] ஸாரங்க᳚வருடு᳚ ஜூசி கைலா-
ஸாதி᳚புடு᳚ கா᳚லேதா᳚ (ஓ)

ச. பூ᳚லோக வைகுண்ட, மிதி᳚யநி
நீலோந நீவே யுப்பொங்கி᳚
ஸ்ரீலோலுடை᳚யுண்டே
சிந்த தீ᳚ரே தெ᳚ந்நடோ᳚
மேலோாவலேநி ஜநுலலோ நே
மிகு᳚ல நொகி᳚லி தி᳚வ்யரூபமுநு முத்-
யால ஸருல யுரமுநு க᳚ந வச்சிதி
த்யாக᳚ராஜ ஹ்ருத்᳚பூ᳚ஷண (ஓ)

''ஓ ரங்கசாயி'' என்று நான் அழைத்தால் நீ ''ஓ''வென்று விடையளித்து எழுந்தருளலாகாதா? கருவண்டின் உருவத்தை யடைந்த (ருசிகா என்ற) முனிவர் சிவநாமத்தை ஜபித்து இறுதியில் கைலாசபதியாகிய அக்கடவுளிடமே ஒன்றிவிட வில்லையா?

நீ வதியும் ஸ்ரீரங்க க்ஷேத்திரம் பூலோக வைகுந்தமென்று உனக்குள் நீயே உளம் பொங்கித் திருமகளுடன் குலாவிக் கொண்டிருந்தால் என் துயர் தீர்வது எந்நாளோ? என் சிறப்பைக் கண்டு பொருமையுறும் மாந்தருக்கிடையே நான் மிகுந்த மனவருத்தமடைந்து, முத்துமாலைகள் அசைந்தாடும் உன் திருமார்பைக் காண வந்துள்ளேன். தியாகராஜன் உள்ளத்தை அலங்கரிப்பவனே!

---

1 ஸாரங்க᳚த᳚ரு᳚டு, ஸாரங்க᳚சருடு᳚. இக்கீர்த்தனத்தின் அநுபல்லவியில் மேற்கண்ட இருவார்த்தைகளையும் அமைத்துப் பார்த்தால் பொருள் தெளிவாகவில்லை. ''ஸாரங்கவருடு'' (சிறந்த கருவண்டு) என்ற பாடமே சரியானதெனத் தோன்றுகிறது; தேவீ பாகவதத்தில் காணப்பெறும் ருசிகர் என்ற முனிவரின் வரலாற்றை அது குறிக்கும்.

## 245

காம்போ₃ஜி ஆதி₃

ப. மறி மறி நின்னே மொறலிட₃ நீ
மனஸுன த₃யராது₃ (ம)

அ. கரிமொற வினி ஸரகு₃ன சன நீகு
கா₃ரணமேமி ஸர்வாந்தர்யாமி (ம)

ச. கருணதோ த்₄ருவுனி கெது₃ட நில்சின
கத, வின்னானய்யா
ஸுரரிபு தனயுனிகை நரம்ருக₃மௌ
ஸூசன லேமய்யா
மறசியுன்ன வனசருனி ப்₃ரோசின
மஹிம தெ₃லுபவய்யா
த₄ரனு வெலயு த்யாக₃ராஜஸன்னுத
தரமுகா₃தி₃க நே வினனய்ய (ம)

திரும்பத் திரும்ப நான் உன்னிடமே முறையிட்டுக்கொண்டும் உன் மனத்தில் தயை உண்டாகவில்லை. எங்கும் நிறைந்திருப்பவனே! கேவலம் ஒரு யானையின் முறையீட்டைக் கேட்டு நீ விரைந்து சென்ற காரணம் என்ன?

கருணையுடன் நீ துருவனுக்கெதிரில் தோன்றிய கதையை நான் கேட்டிருக்கிறேன். தேவ சத்துருவாகிய இரணியனின் புதல்வனின் பொருட்டு நீ நரசிங்கமாக மாறியதன் குறிப்பு என்ன? (நம்பிக்கையற்று) அனைத்தையும் மறந்திருந்த சுக்ரீவனை நீ காத்ததன் பெருமையைக் கூறுவாய். தியாகராஜன் தொழும் தெய்வமே! இனிப் பொறுக்க முடியாது. நீ எது கூறினும் நான் இனிமேல் கேட்கமாட்டேன்.

## 246

காம்போ₃ஜி தே₃சாதி₃

ப. [1]மா ஜானகி செட்ட ப₃ட்டக₃
மஹராஜ வைதிவி (மா)

அ. ராஜராஜ வர ராஜீவாக்ஷ வினு
ராவணாரியனி ராஜில்லு கீர்த்தியு (மா)

---

1 இது நிந்தாஸ்துதி யென்ற வகையைச் சேர்ந்தது. இராவண ஸம்ஹாரமான பிறகு ஸீதாதேவியைச் சேர்ந்த யாரோ ஒருவர் இராமபிரானைப் பரிகாசம் செய்ததுபோல் அமைக்கப்பட்ட கிருதி.

ச. காந கேகி யாஜ்ஞ மீரக மாயா-
கார முநிசி சிகி, செந்தநே யுண்டி
தாநவுநி வெண்டநே சநி யசோக
தரு மூலநுண்டி
வாநி மாடலகு கோபகிஞ்சி கண்ட
வதியிஞ்சகநே யுண்டி
ஸ்ரீநாயக யசமு நீகே கல்க
ஜேயலேதா த்யாகராஜபரிபால (மா)

மன்னர் மன்னனே! தாமரைக் கண்ணனே! கேள். எங்கள் ஜானகியைக் கைப்பிடித்ததாலன்றோ நீ இராவணனைக் கொன்றவன் என்ற கீர்த்தியுடன் சக்கரவர்த்தியாக இன்று விளங்குகிறாய்?

(உன்னுடன்) காட்டிற்குச் சென்று, உன் ஆணையை மீறாமல் தன் மாய உருவை மாத்திரம் வைத்து, நிஜ ரூபத்தை அக்கினியில் பிரவேசிக்கச் செய்து, அரக்கனுடன் இலங்கையடைந்து, அசோக மரத்தினடியில் வசித்து, அவனுடைய பேச்சைக் கேட்டுக் கோபமடைந்து கண்ணால் அவனைச் சுட்டெரிக்காமல், புகழ் அனைத்தையும் உனக்கே சேருமாறு செய்தனளல்லவா? திருமகள் நாயகனே! தியாகராஜனைக் காப்பவனே!

## 247

காம்போஜி ஆதி

ப. ஸ்ரீரகுவராப்ரமேய மாமவ (ஸ்ரீ)

அ. ஸ்ரீ ரகுகுல ஜலநிதி ஸோம ஸ்ரீராம பாலய (ஸ்ரீ)

ச. 1. ஸாரஸ ஹித குலாப்ஜப்ருங்க
ஸங்கீதலோல

2. விரோசந குலேச்வர ஸ்வரலயாதி
மூர்ச்ச, நோல்லஸித நாரத விநுத (ஸ்ரீ)

3. ஸ்ரீ பாஸ்கர குலாத்ரி தீப
ஸ்ரீ பாகவத நதசரண
ஸீதாபாகதேய த்யாகராஜ-
நுதாநில ஸுதாப்த ஸுகுணபரண (ஸ்ரீ)

ஸ்ரீ ரகுவர! அளவிட இயலாதவனே! என்னைக் காத்தருள். ரகுகுலமென்னும் கடலில் தோன்றிய சந்திரனே! பாலித்தருள்.

சூரியவம்சமென்னும் தாமரையை வட்டமிடும் வண்டு போன்றவனே! சங்கீதப் பிரியனே!

ஆதித்திய வம்சத்தின் நாயகனே! ஸ்வரம், லயம், மூர்ச்சனை ஆகியவற்றில் திளைப்பவனே! நாரதரால் வணங்கப்படுபவனே!

கதிரவன் குலமென்னும் குன்றின் மீதிட்ட விளக்கே! பக்தர்கள் தொழும் பாதனே! சீதையின் பாக்கியமே உருவானவனே! அனுமனின் நேயனே! நற்குணங்களை அணியாக உடையவனே!

## 248

குந்தலவராளி (மே. 28) தே॑ஶாதி॑

ப: கலிநருலகு மஹிமலு
தெ॑லிபேமி ப,லமநலேதா॑ (க)

அ. இலநு வெலயு வர [1]வ்ருஷபா॑து॑ல கடு
குல ருசி தெலியு சந்த॑முகா॑ நீ (க)

ச. தா॑ர ஸுதுலகை த॑,நமுலகை யூரு
பேருலகை ப॑ஹுபெத்॑த॑நமுகை
ஸாரெகு ப॑,க்த வேஸமு கொநுவாரிகி
தாரகநாம ஸ்ரீ த்யாக॑ராஜார்ச்சித

இவ்வுலகில் திரியும் எருதுகளுக்கு அவலின் ருசி தெரியாததுபோல் இக் கலியுக மாந்தருக்கு உன் மகிமையை விவரித்துப் பயனில்லையென்று (நான்) கூறவில்லையா?

மனைவி மக்களுக்காகவும், செல்வத்திற்காகவும், பெயர், புகழ் முதலியவற்றுக்கும், பெரியதனத்திற்காகவும் சதா பக்த வேஷம் போட்டு நடிப்பவர்களுக்கு (உன் மகிமையைக் கூறிப் பயனில்லை). (பிறவிக் கடலை) தாண்டுவிக்கும் பெயரை உடையவனே!

## 249

குந்தலவராளி தே॑ஶா॑தி

ப. செந்தநே ஸதா॑ யுஞ்சுகோவய்ய (செ)

அ. மந்துகெக்கு ஸ்ரீமந்துடௌ॑ ஹநு
மந்து ரீதிகா॑ ஸ்ரீகாந்த (செ)

---

1 வ்ருஷராஜுல (உலக்கைகள் என்று பொருள்.) இப்பாடத்தை அனுசரித்தால் "உலக்கைக்கென்ன தெரியும் அவலின் ருசி?" என்று பொருள் கூறலாம். ஆயினும், "எருதுக்கென்ன தெரியும் அவலின் ருசி?" என்பதே தெலுங்குப் பழமொழி. (எத்துகேமி தெலுஸு அடுகுல ருசி?)

ச. தலசிந பநுலநு நே தெ^v^லிஸி
தலதோ நட^v^சி ஸந்தஸில்லுது^v^ரா
பலுமாறு ப^v^ல்க பநிலேது^v^ ராம
ப^v^ரதுநிவலெ த்யாக^v^ராஜநுத (செ)

*ஸ்ரீகாந்த! புகழ்பெற்றவனும், திருமகள் கடாட்சம் உள்ளவனுமான அனுமனைப் போல் என்னையும் உன்னருகில் சதா வைத்துக்கொள், ஐயனே!*

*நீ மனத்தில் நினைக்கும் பணிகளை நான் அறிந்துகொண்டு தலையால் நடந்து (நிறைவேற்றி) சந்தோஷம் அடைவேன். பன்முறை என்னிடம் கூற அவசியமில்லை. பரதனைப் போலவாகிலும் (என்னை உன்னருகில் வைத்துக் கொள்).*

## 250

குந்தலவராளி ஆதி^v^

ப. சரசர ஸமரைகஶூர
சரதி^v^, மத^v^விதா^v^ர (ச)

அ. ஸுராரிபு மூலப^v^லமநு தூல
கி^v^ருல கநல ஸமமௌ ஸ்ரீராம (ச)

ச. தொலி ஜேஸிந பாபவந குடா,ரமா
கலநைந ஸேயக^v^லேநி
ப^v^லுவிலுநு விறிசி வெலஸிந ஸ்ரீரகு^v^-
குலவர ப்^v^ரோவுமு த்யாக^v^ராஜநுத (ச)

*புல்லையே அம்பாகக் கொண்டவனே! போரில் இணையற்ற வீரனாக விளங்குபவனே! சமுத்திரராஜனின் கர்வத்தை யடக்கியவனே! தேவ சத்துருவாகிய இராவணனின் மூலபலமென்னும் பஞ்சு மலைகளைப் பொசுக்குவதில் நெருப்பை யொத்தவனே!*

*பூர்வ சன்மங்களில் செய்த பாவங்களென்னும் காட்டை அழிக்கும் கோடரியே! கனவிலும் சாத்தியமில்லாத பெருத்த வில்லை ஒடித்துப் புகழ் பெற்றவனே! ரகுகுலத் தோன்றலே! காத்தருள்.*

## 251

கேதா^v^ரகௌ^v^ள (மே. 28) சாபு

ப. கருணாஜலதீ^v^, தா^v^சரதீ,
கல்யாண ஸுகு^v^ணநிதீ^v^, (க)

அ. தருணருண நிப,ˇ சரண ஸுரமதˇ-
ஹரண ச்ரிதஜந சரணத்ˇபு,ˇதகுˇண (க)

ச. 1. மநவிநி விநக யோசந ஜேஸிதே நே
விநய்ய ஸ்ரீராம ஓ பரமபா-
வந தாரகநாம ஸுகுˇணதா,ˇம
ஜநக தநயாவந சதுர்முக,-
ஜநக ஜநகவசந ஸுபரிபா-
லநமு ஜேஸிந வநஜலோசந
ஸநகநுத மா த,ˇநமு நீவே (க)

2. ஸுரமுநி வரநுத ஸரஸமுதோ நந்நு
கˇருணிஞ்சிதே நீதுˇ தண்ட்ˇரி ஸொம்மு
வெறவக போநேரதுˇ எந்துˇகு வாதுˇ
ஹரிகˇணதி,ˇப பரிசராகˇம-
சர பராத்பர தரமுகாˇதிˇக
ஜரண ப,ˇக்தி விதரணமுகˇ நீ
தருணமிதிˇ ஸ்ரீகர த,ˇராதி,ˇப (க)

3. த,ˇநமதˇமுந நுண்டுˇ ஜநுலநு நேநு யா-
சந ஸேயகˇலேநுரா த்யாகˇராஜ
விநுத க்,ˇருணஸாகˇர ஸமீர
தநயஸேவித த,ˇநதˇநுத ஸஜ்-
ஜந மநோஹர க,ˇநரவஸ்வர
மநஸு சாலா விநதுˇரா ஈ
தநுவு நீதˇநி விநுதி ஜேஸெதˇ (க)

கருணைக்கடலே! தாசரதி! கல்யாண குணநிதியே! இளஞ் சூரியனைப்போல் சிவந்த பாதனே! அரக்கர் மதத்தையடக்கு பவனே! சரண்புகுந்தவரின் புகலே! அற்புத குணசீலனே!

என் விண்ணப்பத்திற்குச் செவி கொடாமல் நீ ஏதோ யோசனை செய்தால் நான் கேட்கமாட்டேன். ஸ்ரீராம! பரம பாவன! தாரகநாம! நற்குணங்களின் உறைவிடமே! சீதை மணாளனே! நான்முகன் தந்தையே! தந்தை சொல் காத்த பங்கயக் கண்ணனே! ஸனகரால் வணங்கப்படுபவனே! என் செல்வம் நீயே.

தேவர், முனிவரால் தொழப்படுவனே! சரசத்துடன் என் மீது கருணை காட்டினால் உன் பரம்பரைச் சொத்து செலவாகி விடாது. பயப்படாதே. வீண் வாதம் ஏன்? வானரத் தலைவனைத் தோழனாக உடையவனே! மறைகளில் சஞ்சரிப்பவனே! பராத்பர! என்னால் தாள முடியாது. உன் பாத பக்தியைக் கொடையாக அருள இதுவே தருணம். திருவளிப்பவனே! பூமிநாயகனே!

பணச்செருக்குள்ள மாந்தரை இரக்க என்னால் முடியாது. கருணாகர! அனுமனால் சேவிக்கப்படுபவனே! குபேரனால் வணங்கப்படுபவனே! நல்லோர் உளங்கவர்வோனே! மேகத்தின் முழக்கம் போன்ற குரலுடையோனே! என் மனம் எது கூறினும் கேட்காது. இவ்வுடல் உனதென்று கூறி வணங்குகிறேன்.

## 252

கேதா³ரகௌ³ள ஆதி³

ப. துலஸீ பி³ல்வ மல்லிகாதி³
ஜலஜ ஸுமமுல பூஜல கை³கொனவே (து)

அ. ஜலஜாஸந ஸநகாதி³ கரார்ச்சித
ஜலதா³ப⁴ ஸுநாப⁴ விபா⁴கர ஹ்ருஜ்-
ஜலேச ஹரிணாங்க ஸுக³ந்த⁴ (து)

ச. உரமுந முக₂முந சிரமுந பு⁴ஜமுந
கரமுந நேத்ரமுந சரணயுக³ம்பு³ந
க³ருணதோ நெநருதோ ப³ரமாநந்த³முதோ
நிரதம்முநு ஸ்ரீத்யாக³ராஜு நிருபாதி⁴குடை³
யர்ச்சிஞ்சு (து)

நறுமணம் வீசும் துளசி. வில்வம் இவற்றின் தளங்களையும் மல்லிகை, தாமரை முதலிய மலர்களையும் கொண்டு நான் செய்யும் பூசனையை ஏற்றுக்கொள். பிரமன், ஸநகர் முதலியோரால் அர்ச்சிக்கப்படுபவனே! மேகவண்ணனே! உந்திக் கமலத்தோனே! சூரியகுலமென்னும் கடலில் உதித்த சந்திரனே!

உன் திருமார்பிலும், முகத்திலும், சிரத்திலும், புஜங்களிலும், கரங்களிலும், திருவடிகளிலும் (மலர் பொழிந்து) மனம் கரைந்து அன்புடனும் பரமானந்தத்துடனும் அனவரதமும் இத் தியாகராஜன் உலக சிந்தனையற்றுச் செய்யும் (ஆராதனையை ஏற்றுக்கொள்.)

## 253

கேதா'ரகௌ'ள ஆதி'

ப. [1]வநஜநய நுட'நி வலசிதிவோ வாநி
மநஸுந த'யலேதே' (வ)

அ. முநுபடி சரிதமுலநு விநியுந்ந
வநித ஸ்வபா',வமுவலந ஶ்ரீரா முநி (வ)

ச. ஒருல பா'த',லகு ஓர்வகயுண்டு'ட
பரம த',ர்ம மநுசு பா'கு'க' ப'ல்குநு
வரது'டு' ஆச்ரித வத்ஸலுட'நி பேரே
த',ர ஜயமொஸங்கு' ஶ்ரீத்யாக'ராஜவிநுதுநி (வ)

அவன் தாமரைக் கண்ணனென்று கருதி அவன்மீது மையல் கொண்டனையோ? அவன் உள்ளத்தில் இரக்கம் சிறிதும் இல்லையே! முற்காலத்தில் நிகழ்ந்த வரலாறுகளைக் கேள்வி யுற்றுப் பெண் புத்தியினால் ஶ்ரீராமன்மீது (மையல் கொண் டனையோ?)

பிறர் துன்பத்தைக் கண்டு சகியாமல் இருப்பது பரம தர்மமென்று அவன் நன்கு உரைப்பான். (ஆயினும்) அவன் வரந்தருபவன், அடியாரைக் காப்பவன் என்பதெல்லாம் வெறும் பெயருக்கு மாத்திரமே! இவ்வுலகில் வெற்றி தரும் தியாக ராஜன் வணங்கும் இராமனை (தாமரைக் கண்ணனென்று கருதி மையல் கொண்டனையோ?)

## 254

கேதா'ரகௌ'ள ரூபகம்

ப. வேணுகா'நலோலுநி க'ந
வேயி கந்நுலு கா'வலெநே (வே)

அ (அளி) வேணுலெல்ல த்'ருஷ்டி சுட்டி
வேயுசு ம்ரொக்குசு ராக' (வே)

ச. விகஸித பங்கஜவத'நலு
விவித', க'துல நாட'க'

---

1. நிந்தாஸ்துதியாகிய இக்கீர்த்தனத்தின் அனுபல்லவியில் ''வெலயு ஶ்ரீ தேவராஜு'' என்ற பாடத்துடன் காஞ்சி ஶ்ரீ வரதராஜப் பெருமானின்மீது இயற்றிய கிருதிபோல் சில பிரதிகளில் காணப் பெறுகிறது. மேற்கண்ட பாடம் தில்லைஸ்தானம் சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்த டாக்டர் ஶ்ரீநிவாஸராகவனிடமிருந்து கிடைத்தது.

நொகரி கொகரு கரமுந நிடி^v^
யோரகநுல ஜூட^v^க^v^
சுகரவமுலு க^v^ல தருணுலு
ஸொக^v^ஸுகா^v^நு பா^v^ட^v^க^v^
ஸகலஸுருலு த்யாக^v^ராஜ
ஸகு,நி வேட^v^க^v^ வச்சே (வே)

குழலிசைப் பிரியனை (இக் கண்ணனை) காண ஆயிரம் கண்கள் வேண்டும். வண்டு மொய்த்த மலர்க் கூந்தலுள்ள வனிதையர் திருஷ்டி சுற்றிப் போட்டு வணங்கும் (கண்ணனைக் காண ஆயிரம் கண்கள் வேண்டும்.)

மலர்ந்த தாமரை போன்ற முகங்களுடைய அணங்குகள் பலவிதத் தாள கதிகளில் நாட்டியமாடிக்கொண்டு, ஒருவர் கரத்தை யொருவர் பற்றிக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டும், கிளியை யொத்த இனிய குரலால் சொகுசாகப் பாடிக்கொண்டும் வர, இதைக் கண்டு சகல தேவர்களும் வேண்ட, பவனிவரும் (கண்ணனைக் காண ஆயிரம் கண்கள் வேண்டும்).

## 255

கேதா^v^ரகௌ^v^ள ஆதி^v^

ப. ஸிக்^v^கு^v^மாலி நாவலெ த^v^,ர நெவ்வரு
திருக^v^ ஜாலரய்ய (ஸி)

அ. முக்^v^கு^v^ரிலோ மேலைந ராம மா-
முகா,ப்ஜ தி^v^நரமண நிந்நு நம்மி (ஸி)

ச. 1. முந்த^v^ர த^v^யதோ ப^v^லிகிந தி^v^ங்க
முந்து^v^ ராகபோயெ
த^v^ந்த^v^நாலதோ தி^v^நமுலு க^v^டி^v^பே
தா^v^ரி தெலிஸிபோயெ
அந்த^v^ரிசேதநு நாப்^v^ரதுகுலிபுடு^v^
நிந்த^v^ல கெட^v^மாயெ
மந்த^v^ரத^v^,ர நாஜீவுடு^v^ ஜீவந-
மிந்து^v^ ஸேயநாயெ அநி தெ^v^லிஸி (ஸி)

2. எல்லவாரிவலெ ப^v^,வஸாக^v^ரமுநு
ஈத^v^ மநஸுராது^v^

உல்லமுநநு க³நி நீவே நேநை
யுண்ட³தெ³லியலேது³
ஒல்லநி பநுலகு பொய்யேடி வ்யஸந–
மோர்வ த³ரமுகா³து³
தல்லடி³ல்லுசுந்நதி³ நாமநஸு
தாளதி³ங்க மீது³ அநி தெ³லிஸி (ஸி)

3. நிந்நாட³நு நா மநஸெபுடை³ந
நிஜமுக³ ராலேது³
வெந்நவண்டி நீ சித்தாநிகி நா
வெதலு தெலியலேது³
பந்நக³சயந நீ தயகுநே
பா³த்ருடு³ கா³லேது³
கந்ந தண்ட்³ரி த்யாக³ராஜுநி கிங்க
கருணஜூட³லேது³ அநி தெ³லிஸி (ஸி)

உன்னை நம்பி வெட்கத்தை விட்டு இவ்வுலகில் என்னைப் போல் யாரேனும் திரிவார்களா? மும்மூர்த்திகளுக்கும் மேலான இராம! லக்ஷ்மியின் தாமரை வதனத்தை மலர்விக்கும் சூரியனே!

முன்பு நீ தயையுடன் கூறிய வார்த்தைகள் இன்றுவரை நிறைவேறவில்லை. மாயாஜாலங்களினாலேயே நீ நாட்களைக் கழிக்கும் வழி எனக்குத் தெரிந்துவிட்டது. என் பிழைப்பு பலரின் நகைப்பிற்கு இடமாகிவிட்டது. மந்தரகிரியை எடுத்தவனே! என் ஜீவன் இவ்விதமே பிழைக்கவேண்டி யிருக்கிறது.

எல்லோரையும் போல் இந்த சம்சாரக் கடலில் நீந்த எனக்கு மனம் வரவில்லை. என் உள்ளத்தில் சிந்தித்தும் நீயே நானாக பாவிக்கும் (அத்துவைத) மார்க்கமும் எனக்கு விளங்க வில்லை. மனமொவ்வாத காரியங்களைச் செய்ய முடியாமலிருக் கும் துன்பம் பொறுக்க முடியவில்லை. என் மனம் தத்தளிக் கிறது. இனி என்னால் தாள முடியாது.

உன்னைக் குறைகூற என் மனம் ஒருபொழுதும் சம்மதியாது. வெண்ணெயைப்போல் இளகிய உன் மனம் என் துயரை இன்னும் ஏனோ அறியவில்லை. பாம்பணைத் துயில்வோனே! உன் தயைக்கு நான் பாத்திரனாகவில்லை போலும்! என்னைப் பெற்ற தந்தையே! நீ இன்னும் என்னைக் கருணையுடன் நோக்கவில்லை யென்று தெரிந்தும் (வெட்கமற்று என்னைப்போல் யார் திரிவர்?)

## 256

கோகிலத்₄வநி (மே.28) ஆதி₃

ப. கொநியாடே₃ நாயெட₃ த₃ய வெலகு₃
கொ₃நியாடே₃வு ஸுமீ ராம நிநு (கொ)

அ. அநயமு நீ [1]ஸொக₃ஸுநு க₃நி பொங்கு₃சு
நந்தரங்க₃முந நதிப்ரேமதோ நிநு (கொ)

ச. விந்த விந்த மதமுலலோ ஜொறப₃டி₃
வெத ஜெந்த₃க₃ லேட₃நு நீ மநஸுந-
கிந்த தெ₃லிஸி த்யாக₃ராஜஸந்நுத
யேவேளநு நீ சுப₄சரிதம்பு₃நு (கொ)

சதா உன் பேரழகைக் கண்டு உளம் பொங்கி என் அந்தரங்கத்தில் மிகுந்த பக்தியுடன் உன்னைப் புகழ்ந்து கொண்டிருக்கும் என் மீது காட்டுவதற்கு தயையை விலைக்கு வாங்கி விற்பது போல் பேரம் செய்கிறாயே!

விதவிதமான மதங்களில் நுழைந்து கஷ்டப்பட என்னால் முடியாதென்று நீ மனத்தில் நினைப்பதைச் சிறிது தெரிந்து கொண்டு அனவரதமும் உன் திவ்விய சரிதைகளையே (புகழ்ந்து கொண்டிருக்கும் என்னிடம் காட்ட வேண்டிய தயைக்கு பேரம் செய்கிறாய்).

## 257

கோகிலத்வ₄நி ஆதி₃

ப. தொலி நேநு ஜேஸிந [2] பூஜா-
ப₂ல மீலாகே₃ (தொ)

அ. வெலவேஸி தீ₃யக₃ வச்சுநா
வெத தீ₃ருநா மநஸாரக₃ (தொ)

ச. பரமாத்ம நீ காயாஸபட₃
ப₃நிலேது₃ரா கருணாகர
வர ப₄க்தவேஸமு வேயுவேள
வர்ஜகாலமேமொ த்யாக₃ராஜநுத (தொ)

முன்னர் நான் செய்த பூசைகளின் பலன் இவ்வளவே போலும்! (நற்பயனை) விலை கொடுத்து வாங்க முடியுமா? அதனால் துயர் தீருமா?

---

1. மநஸுநு
2. ஜேயு

*பரமாத்ம! அருளாளா! (எனக்காக) நீ ஆயாசப்படவேண்டிய அவசியமில்லை. நான் பக்தன் என்ற கோலம் பூண்ட சமயம் விலக்கப்பட வேண்டிய (இராகு) காலம் போலும்!*

## 258

செஞ்சுகாம்போ³ஜி (மே. 28) தே³சாதி³

ப. வர ராக³ லயஜ்ஞுலு தா³மநுசு
வத³ரேரயா (வ)

அ. ஸ்வர ஜாதி மூர்ச்ச₂நா பே⁴த³முல்
ஸ்வாந்தமந்து³ தெ³லியகயுண்டி³ந (வ)

ச. தே³ஹோத்³ப⁴வம்ப³கு³ நாத³முல்
திவ்யமௌ ப்ரணவாகாரமநே
தா³ஹம்பெ³ருங்க³நி மாநவுல்
த்யாக³ராஜநுத யேசேரு ராம (வ)

*ஸ்வரம், ஜாதி, மூர்ச்சனை ஆகியவற்றின் வேறுபாடுகளைத் தம் உள்ளத்தில் அறியாதவர்களாயினும், சிறந்த ராக, தாள வித்வான்கள் தாமேயென்று பிதற்றித் திரிகின்றனர்.*

*தேகத்திலிருந்து பிறக்கும் நாதங்கள் திவ்யமான பிரணவத்தின் (ஓங்காரத்தின்) உருவங்களேயென்பதை அறிந்து கொள்வதில் வேட்கையற்ற மாந்தர் பிறரைத் துன்புறுத்தி வாழ்கின்றனர்.*

## 259

சா₂யாதரங்கி³ணி (மே. 28) ரூபகம்

ப. இதர தை³வமுலவல்ல
இலநு ஸௌக்₂யமா ராமா (இ)

அ. மதபே⁴த³மு லேக ஸதா³
மதி³நி மருலுகொந்ந தந (கி)

ச. மநஸுந தெ³லிஸி ப்ரோசிநநு
மறசிநநு நீவே ராமா
தநவாட³ந தருணமிதி³
த்யாக³ராஜஸந்நுத (இ)

*இராம! மத வேறுபாடின்றி சதா உன் மீதே மோகம் கொண்டுள்ள எனக்கு இவ்வுலகில் வேறு தெய்வங்கள் மூலம் சுகம் கிடைக்குமா?*

என் மனத்தை யறிந்து நீ என்னைக் காப்பாற்றினாலும், மறந்து போனாலும் எனக்கு நீயே கதி. நான் உன்னைச் சேர்ந்தவன் என்று நீ கூற இதுவே தருணம்.

## 260

சா,யாதரங்கி^v^ணி ஆதி^v^

ப. க்ருப ஜூசுடகு வேளரா ராமா (க்ரு)

அ. அபராத,^v^முல நோர்வ வசமா
யந போ^v^கவே ஸரிவாரலலோ (க்ரு)

ச. பரமார்த்த,மௌ மார்க^v^ மெறுக^v^ரு
ப்ரபு,^v^வுலெல்ல நீச ஸேவகுலுரா
பரலோக ப,^v^ய மெந்த கா^v^நரு
வர த்யாக^v^ராஜ ஹ்ருத்ஸத^v^ந (க்ரு)

இராம! என்னிடம் நீ கருணை புரிவதற்கு இதுவே தருணம், "உன் அபராதங்களையெல்லாம் மன்னிக்க என்னாலாகுமோ?" என்று நான்கு பேர்களுக்கிடையே கூறிவிடாதே.

உலகாளும் மன்னர்கள் பரமார்த்த மார்க்கதை அறியாதவர்கள். நீசர்களை சேவகர்களாக உடையவர்கள். பரலோக பயம் சிறிதும் அற்றவர்கள். நீ என் உள்ளத்தில் வசிப்பவனல்லவா' (என்னைக் கண் பார்).

## 261

நவரஸகந்நட^v^ (மே. 28) ரூபகம்

ப நிநுவிநா நாமதெ^v^ந்து^v^
நிலுவதே^v^ ஸ்ரீஹரிஹரி (நி)

அ. கநுலகு நீ ஸொக^v^ஸெந்தோ
க்^v^ரம்மியுந்நதி^v^ க^v^நுக (நி)

ச. 1. நீது^v^ கத,லு வீநுலந்து^v^ நிண்டி^v^யுந்நதி^v^ ராம
ஸ்ரீத^v^ நீநாமமு நோட ஜெலகி^v^யுந்நதி^v^க^v^நுக (நி)

2. நேநு எசட ஜூசிநநு நீவை யுந்நதி^v^ராமா
பா^v^,நுவம்சதிலக நீது^v^ ப,^v^க்துட^v^நுசு பேரு க^v^நுக (நி)

3. கபடமௌ மாடலெல்ல கம்மநைநதி^v^ நா
தபமுயொக்க[1] ப,லமு நீவே த்யாக^v^ராஜஸந்நுத (நி)

---

1 யோக^v^

உன்னிடம் தவிர வேறு எங்கும் என்னுள்ளம் நிலைபெறுது, ஸ்ரீஹரி!

உன்னழகைக் கண்டு என் கண்கள் நிறைகின்றன. உன் சரிதத்தைக் கேட்டு என் செவிகள் நிரம்பியுள்ளன. திருவளிப் பவனே! உன் திருநாமம் என் நாவில் விளங்குகிறது. நான் எங்கு நோக்கினும் உன் மயமாகவே தோற்றமளிக்கிறது. சூரிய குலதிலகனே! நான் உன் பக்தன் என்ற பெயர் படைத்தவனல்லவா' உன் கபடமான மொழிகளும் எனக்கு இனிமையையே தருகின்றன. நான் செய்த தவத்தின் பயன் நீயே!

## 262

நவரஸகந்நட³ தே³சாதி³

ப. பலுகு கண்ட³சக்கெரநு கே³ருநே
பணதுலார சூட³ரே (ப)

அ. கொலுவு கூடமுநு கொ³லுசுவாரிநி
பி³லிசி தா³சரதி, ப்ரேம மீறப³லிகே (ப)

ச. ஸுரல காமிநீமணுல கா³ந மா-
த³ரண நாலகி³ஞ்சுசுநு ச்ருங்கா³-
ரரஸயுக்த வாரரமணுலாட³ஜூசி
ஸரஸ த்யாக³ராஜ வருநிதோ பொ³க³டே³ (ப)

தான் கொலுவீற்றிருக்கும் கூடத்தில் சேவை புரிபவர்களை விளித்து தாசரதி (இராமன்) அன்பு ததும்பப் பேசும் பேச்சு கற்கண்டைப் பழிக்குமே! மங்கையரே! பாருங்கள்!

வானுலக மங்கையரின் இன்னிசையை ஆதரவுடன் கேட்டும், சிருங்கார ரசம் பொழியும் கணிகையரின் நாட்டியத்தைப் பார்த்தும் (இராமபிரான்) அவற்றைப் புகழ்ந்து தியாக ராஜனிடம் பேசும் பேச்சு (கற்கண்டைப் பழிக்குமே!)

## 263

நாக³ஸ்வராவளி (மே. 28) தே³சா³தி

ப. ஸ்ரீபதே நீபத³ சிந்தநே ஜீவநமு (ஸ்ரீ)

அ. நே பரதே³சி நா கா³ஸி
பா³பவே சநுவுந த³யசேஸி (ஸ்ரீ)

ச. ராஜாதி⁵ராஜ ரவிகோடி தேஜ
பூஜிஞ்சி நிங்கிந்த்³ராது³லுதி³க்³-
ராஜுலை வெலய லேதா³
ராஜில்லு ஸ்ரீத்யாக³ராஜுனிகி (ஸ்ரீ)

லக்ஷ்மி நாயகனே! உன் திருவடிகளை தியானிப்பதே இத் தியாகராஜனுக்கு ஜீவனம் ஆகும். நான் திக்கற்றவன். ஆகவே கருணை கூர்ந்து என் கஷ்டத்தைப் போக்குவாய்.

ராஜாதிராஜனே! கோடி சூரியப் பிரகாசனே! உன்னைப் பூசித்ததனாலேயே இந்திரன் முதலியோர் திக்பாலர்களாக விளங்கவில்லையா?

## 264

நாடகுரஞ்ஜி (மே. 28) ஆதி³

ப. மநஸுⁿ விஷய நடவிடுல கொஸகி³தே
மா ராமுநிக்ருப க³ல்கு³நோ மநஸா (ம)

அ. தா³ⁿ தலுபொகரிண்டிகி தீஸி பெட்டி
தா கு³க்கலு தோலுரீதி கா³தோ³ (ம)

ச. தவிடிகி ரங்காட³ போ³யி கூடி
தபில கோதி கொம்போயிநடு கா³தோ³
செவிடிகி யுபதே³சிஞ்சிநடு கா³தோ³
ஸ்ரீ த்யாக³ ராஜநுதுநி த³லஞ்சக (ம)

தியாகராஜன் வணங்கும் மூர்த்தியை தியானிக்காமல், மனத்தை ஐம்புலன்களென்னும் தூர்த்தரிடம் ஒப்படைத்து விட்டால், அந்த ராமனின் கிருபை கிடைக்குமா? தன் கதவைப் பெயர்த்து அயல் வீட்டிற்களித்து விட்டு ஒருவன் (தன் வீட்டில் நுழையும்) நாய்களை விரட்டியது போலாகுமல்லவா இது?

தவிட்டிற்காகத் தகாத காரியம் செய்யத் துணிந்த ஒருத்தியின் சோற்றுப் பானையைக் குரங்கு கொண்டுபோனதை ஒக்குமல்லவா? செவிடன் காதில் செய்த உபதேசம் போலாகுமல்லவா?

## 265

நாராயணகௌ³ள (மே. 28) சாபு

ப. இந்நாள்ளு த³யராகுந்த வைநமேமி
இப்புடை³ந தெ³லுபவய்யா (இ)

அ. சிந்ந நாடநுண்டி³ நிங்நோ³நி நே-
நங்யுல நம்மிதிநா ஓராம நீ (கி)

ச. 1. அலநாடு<sup>v</sup> தரணி ஸுதார்த்திநி தீ<sup>v</sup>ர்ப்பநு
வெலஸி நில்வக<sup>v</sup>லேதா<sup>v</sup> அதி<sup>v</sup>யு கா<sup>v</sup>க
ப<sup>v</sup>லமு ஜூபலேதா<sup>v</sup> வாநி நேர-
முலகு தா<sup>v</sup>ளுகொநி செலிமி ஜேஸி பத<sup>v</sup>-
முல ப<sup>v</sup>,க்தீயக<sup>v</sup>லேதா<sup>v</sup> நாயந்து<sup>v</sup> நீ (கி)

2. த<sup>v</sup>,ந க<sup>v</sup>ஜாச்வமுலு தநகு கலுக<sup>v</sup> ஸேய-
மநி நே நிந்நடி<sup>v</sup>கி<sup>v</sup>திநா இங்கநே
கநக மிம்மநிநாநா ஸ்ரீராம நா-
மநஸுந நிநு கு<sup>v</sup>லத<sup>v</sup>,நமுக<sup>v</sup> ஸம்ர-
க்ஷணமு ஜேஸிதி கா<sup>v</sup>நி மரசிதிநா (இ)

3. தல்லி த<sup>v</sup>ண்ட்<sup>v</sup>ரு லந்நத<sup>v</sup>ம்முலு நீவநி
யுல்லமு ரஞ்ஜில்ல பெத்<sup>v</sup>த<sup>v</sup>லதோநு
கல்லலாட<sup>v</sup>க மொல்ல ஸுமமுல நீ
சலலநி பத<sup>v</sup>மு கொல்லலாடு<sup>v</sup>சு வெத<sup>v</sup>-
சல்லிதி கா<sup>v</sup>நி த்யாக<sup>v</sup>ராஜுநிபை நீ (கி)

இத்தனை நாட்களாக உன் தயை வராத காரணம் என்ன? இப்பொழுதாகிலும் கூறு ஐயனே! சிறு வயது முதல் நான் உன்னைத் தவிர வேறு யாரையேனும் நம்பினேனோ ராம!

அன்றொரு நாள் சூரிய புத்திரனான சுக்கிரீவனின் துயரைப் போக்க நீ பிரத்தியட்சமாகி உன் வலிமையைக் காட்டவில்லையா? அவனுடைய குற்றங்களைப் பொறுத்து நேசபாவத்துடன் உன் திருவடி பக்தியை அவனுக்கு அளிக்கவில்லையா?

செல்வம், யானை, குதிரை முதலியன எனக்கு வேண்டுமென உன்னைக் கேட்டேனா? அல்லது பொன் வேண்டுமென்றேனா? என் மனத்தில் உன்னையே குலதனமாகக் காப்பாற்றி வந்தேனே தவிர உன்னை என்றாவது மறந்தேனா?

தாய் தந்தையரும், அண்ணன் தம்பியரும் நீயேயென்று உளம் மகிழ்ந்து பெரியோரிடம் பொய் பேசாமல், முல்லை மலர்களை உன் குளிர்ந்த திருவடிகளில் பொழிந்து அருச்சனை செய்தேன். உனது தயை வராத காரணம் என்ன?

## 266

நாராயணகௌள<sup>v</sup>ள ஆதி<sup>v</sup>

ப. கத<sup>v</sup>லேவாடு<sup>v</sup> கா<sup>v</sup>டே<sup>v</sup> ராமுடு<sup>v</sup>
கத,லெந்நோ க<sup>v</sup>ல்வாடே<sup>v</sup> (க)

அ. மொத^vலே தானைநாடே^v துத^v
மொத^vலே லேகிவாடை^v நாடே^v (க)

ச. கல்பந லெந்நடு^v லேடு^v ஸங்-
கல்பமுலே க^vலவாடு^v சேஷ-
தல்பசயநுடே^v வாடு^v ஸ்ரீ
த்யாக^vராஜ நுதுடை^vநாடே^v (க)

* இராமன் சலிப்பவன் (அசைபவன்) அல்லனே! ஆயினும் சரிதங்கள் எத்தனையோ உடையவன். அனைத்திற்கும் அவனே ஆதியானவன். ஆயினும் தான் ஆதியும் அந்தமும் அற்றவன்;

(அனைத்தும் தானேயாதலால்) கற்பனை எதுவும் அற்றவன். ஆயினும் தன் மனத்தில் எத்தனையோ சங்கற்பங்கள் உடையவன். ஆதிசேடன் மீது துயில்பவன். தியாகராஜன் உபாசிக்கும் இஷ்ட தெய்வம் அவனே.

## 267

நாராயணி (மே. 28) தே^vசாதி^v

ப. ப^vஜந ஸேயு மார்க^vமுநு ஜூபவே
பரம பா^vக^vவத பா^vக^vதே^vய ஸத்^v (ப^v)

அ. அஜுடு^v ருத்^vருடா^vக,ண்ட^vல பவநஜ
விஜயாது^vலு கு^vமிகூ^vடி^v நீது^v சரண (ப^v)

ச. ஸகல வேத^v சாஸ்த்ர புராணாதி^v தீ^vப
ஸகல மந்த்ர தந்த்ர ரூப ஸீதாப
ஸகல தே^vவ ரிபு ஸமரப்ரதாப
ஸாது^v த்யாக^vராஜநுத ஸ்ரீராம நிஜ (ப^v)

ஸத் பஜனை செய்யும் மார்க்கத்தைக் காட்டுவாயாக, பரம பாகவதர்களின் பாக்கியமே உருவானவனே! பிரமன், ருத்திரன், இந்திரன், அநுமன், அருச்சுனன் முதலியோர் ஒன்றுகூடி உன் பாதங்களில் (பஜனை செய்யும் வழியை எனக்குக் காட்டுவாயாக).

வேத, சாஸ்திர, புராணங்களனைத்தையும் ஒளிபெறச் செய்பவனே! சகல மந்திர, தந்திரங்களை உள்ளடக்கியவனே!

---

* கத^vலு கதலு, மொத^vலு, துத^vமொத^vலு முதலிய தெலுங்குப் பதங்களை மோனையாக அமைத்து இயற்றப்பெற்றுள்ள இக்கிருதிக்குச் சரியான தமிழ் மொழிபெயர்ப்பு அமைப்பது கடினம்; ஆகவே கருத்துரை மாத்திரம் தரப்பட்டுள்ளது:

அரக்கர் அனைவருடனும் போரிட்டு வெல்லும் பிரதாபனே! சீதாநாயகனாகிய ஸ்ரீ ராம! உண்மையான பஜனை செய்யும் வழியை எனக்குக் காட்டுவாய்.

## 268

நாராயணி ஆதி^ᵛ

ப. ராமா நீவே கா^ᵛநி நந்நு
ரக்ஷிஞ்சே வாரெவரே (ரா)

அ. ஸோமஸூர்யலோசந
ஸுந்த^ᵛரவத^ᵛந ஸ்ரீ (ரா)

ச. 1. தாதவசந பரிபால புரு-
ஹூதாத்^ᵛயமர பாரி-
ஜாத ஸௌமித்ரிதோ
ஸீதாரமணிதோ வெலஸிந (ரா)

2. தா^ᵛராத^ᵛராப^ᵛ சரீர பா^ᵛவஜஸுகு-
மார ஸாகேதபுர விஹார நந்நேலுகோர (ரா)

3. நாக^ᵛசயந முநியாக^ᵛபாலந ப^ᵛக்த
பா^ᵛக்^ᵛதே^ᵛய பாவந த்யாக^ᵛராஜவிநுத (ரா)

இராம! உன்னைத் தவிர இவ்வுலகில் என்னைக் காப்பவர் யாருளர், சந்திர சூரியர்களைக் கண்களாக உடையவனே! அழகிய முகத்தோனே!

தந்தையின் ஆணையை நிறைவேற்றியவனே! இந்திரன் முதலிய தேவர்களின் கற்பகத்தருவே! இலக்ஷ்மணனுடனும் சீதா தேவியுடனும் விளங்கும் (உன்னைத் தவிர—யாருளர்?)

முகில் வண்ணனே! மன்மதனை நிகர்த்த அழகனே! அயோத்தியில் உறைபவனே! என்னை ஏற்றுக்கொள்.

பாம்பணைத் துயில்பவனே! முனிவரின் வேள்விகளைக் காப்பவனே! பக்தரின் பாக்கியமே! தூயவனே!

## 269

ப்ரதாபவராளி (மே. 28) ஆதி^ᵛ

ப. விந நாஸகொநி யுந்நாநுரா
விச்வருபுட^ᵛ நே (வி)

அ. மநஸாரகˇ வீநுல விந்துˇகாˇ
மது,ˇரமைந பலுகுல (வி)

ச. ஸீதா ரமணிதோ ஓமநகுˇண்ட-
லாடிˇ கெˇலுசுட
சேத நொகரி கொகரு ஜூசி
யா பா,ˇவமெரிகிˇ ஸா-
கேதாதி,ˇப நிஜமகுˇ ப்ரேமதோ
பˇல்கு கொம்ந முச்சட
வாதாத்மஜ ப,ˇரதலு விந்நடுல
த்யாகˇராஜஸந்நுத (வி)

*விசுவரூபனே! என் மனங்குளிரச் செவிகளுக்கு விருந்தாக அவ்வினிய மொழிகளைக் கேட்க ஆசை கொண்டுள்ளேன்.*

*அன்னை சீதையுடன் பல்லாங்குழி ஆடியபொழுது நீ வெற்றி பெறவும், நீங்கள் ஒருவரை யொருவர் நோக்கி உட்கருத்தை அறிந்துகொண்டு அன்பு ததும்பப் பேசிய இன்மொழிகளை அனுமனும் பரதனும் கேட்டு ஆனந்தித்ததுபோல் (நான் கேட்க ஆசை கொண்டுள்ளேன்).*

0

ப,லரஞ்ஜநி (மே. 28)* தேˇசாதிˇ

ப. ஸ்ரீநாரஸிம்ஹ மாம் பாஹி
க்ஷீராப்ˇதி,ˇ கந்யகா ரமண (ஸ்ரீ)

அ. தீˇநார்த்தி நிவாரண ப,ˇவ்யகுˇண
திˇதிதநயதிமிர ஸூர்ய த்ரிநேத்ர (ஸ்ரீ)

ச. ப்ரஹ்லாதˇ பராசர நாரதˇ ஹ்ருத்-
பங்கேருஹ நீரஜபˇந்தோ,ˇ
ஆஹ்லாதˇகரா[1] சுப,ˇரோகˇ ஸம்-
ஹார வரதˇ த்யாகˇராஜாதிˇவிநுத (ஸ்ரீ)

*ஸ்ரீ நரசிங்கப் பெருமானே! என்னைக் காப்பாற்று. பாற்கடலில் உதித்த திருமகளின் நாயகனே! எளியோரின் கஷ்டங்களைப் போக்குபவனே! மங்கள குணங்கள் படைத்தவனே! திதியின் புதல்வனான இரணியகசிபுவென்னும் இருட்டைப் பிளக்கும் சூரியனே! சூரியன், அக்கினி, சந்திரன் ஆகிய முக்கண்களையுடையவனே!*

---

1 ப,ˇவரோகˇஸம்ஹார *மேளம் 22 என்றும் சிலர்.

*பிரஹ்லாதன், பராசரர், நாரதர் ஆகியோரின் இதய கமலத்தை மலர்விக்கும் கதிரவனே! ஆனந்தமளிப்பவனே! அமங்களமெனும் வியாதியைப் போக்குபவனே! வரந்தருபவனே!*

## 271

ப³ஹு²தா⁴ரி (மே. 28) ஆதி³

ப. ப்³ரோவ பா⁴ரமா ரகு⁴ராம
புவ⁴னமெல்ல நீவை நந்நொகநி (ப்³ரோ)

அ. ஸ்ரீவாஸு²தே³வ அண்ட³கோட்ல கு-
க்ஷிநி உஞ்சுகோலேதா³ நந்நு (ப்³ரோ)

ச. கலசாம்பு³தி⁴லோ த³யதோ நம-
ருலகை யதி³கா³க கோ³பி-
கலகை கொண்ட³ லெத்தலேதா³
கருணாகர த்யாக³ராஜு²நி (ப்³ரோ)

*இரகுராமனே! புவனங்களனைத்திலும் நீயே நிரம்பியிருந்தும் இத்தியாகராஜன் ஒருவனைக் காப்பது உனக்கு பாரமா! ஸ்ரீ வாஸுதேவ! அண்டகோடிகளை உன் வயிற்றினுள் நீ அடக்கவில்லையா?*

*(ஒரு முறை) தேவர்களுக்காக மனமிரங்கிச் சமுத்திரத்தில் (மந்தர கிரியையும்) அதுவுமின்றி (மற்றொருமுறை) கோபியருக்காக (கோவர்த்தன) கிரியையும் நீ தாங்கவில்லையா? கருணாகர!*

## 272

மாளவி (மே. 28) ஆதி³

ப. நெநருஞ்சிநாநு அந்நிடிகி
நிதா³நுட³நி நேநு நீது³பை (நெ)

அ க⁴நாக⁴ ஜீமூதாசுக³ ஜலதி⁴ [1]
க³ம்பீ⁴ர நீ பாத³முலபை (நெ)

ச. கலிலோ மாடல நேர்சுகொநி
காந்தலநு த⁴நயுல ப்³ரோசுடகு
சிலாத்முடை³ பலுக நேரநுர
ஸ்ரீ த்யாக³ராஜாப்த நீயெட³ (நெ)

---

1 வநதி⁴

நீயே அனைத்திற்கும் ஆதிகாரணமானதால் நான் உனது திருவடிகளின் மீதே பிரேமை கொண்டேன். கனத்த பாவங்களென்னும் மேகத்தைச் சிதறவடிக்கும் காற்றைப் போன்றவனே! கடல்போல் கம்பீரமானவனே!

இக்கலியில் (மற்றவரைப்போல்) சில (பசப்பு) வார்த்தைகளைக்கற்றுக்கொண்டு மனைவி மக்களைக் காப்பாற்றுவதற்காக கல் மனம் படைத்துப் (பிறருடன்) பேசி ஜீவனம் செய்வது என்னாலாகாது.

## 273

ப³லஹம்ஸ (மே. 28) ஆதி³

ப. இக காவலஸிந தே³மி மநஸா
ஸுக₁முந நுண்ட³வ தே³மி (இ)

அ. அகி₁லாண்ட³கோடி ப்³ரஹ்மாண்ட³ நாது₁-
ட³ந்தரங்க³முந நெலகொநியுண்ட³க (இ)

ச. 1. முந்த³டி ஜந்மமுலநு ஜேஸிந யக₄-
ப்³ருந்த³விபிநமுல கா-
நந்த³ கந்து³டை³ந ஸீதாபதி
[1]நந்த³கயுதுடை³ யுண்ட³க³ (இ)

2. காமாதி³ லோப₄ மோஹமத³
ஸ்தோம தமம்முலகுநு
ஸோம ஸூர்ய நேத்ருடை³ந ஸ்ரீ
ராமசந்த்³ருடே³ நீயந்து³ண்ட³க³ (இ)

3. க்ஷேமாதி³ சுப₄முலநு த்யாக³ராஜ
காமிதார்த்த₂முலநு
நேமமுதோ நிச்சே த்³யாநிதி₄
ராமப₄த்³ருடு³ நீயந்து³ண்ட³க³ (இ)

*மனமே! அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகனை ஸ்ரீமந் நாராயணன் உன் உள்ளத்தில் குடி கொண்டிருக்கெயில் உனக்கு வேண்டுவது வேறென்ன? நீ மகிழ்ச்சியுடன் இராதேன்!*

*முற்பிறப்புகளில் செய்த பாவக்கூட்டமாகிய காட்டையழிக்க நந்தகமென்னும் வாளையேந்தி ஆனந்தம் தருபவனாகிய சீதாபதி இருக்கையில், காமம், லோபம், மோகம், மதம் இவற்*

---

1 நந்த³காயுது₄டை³

றின் சேர்க்கையாகிய இருட்டைப் போக்குவதற்கு சூரிய சந்திரர்களைக் கண்களாகவுடைய ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி உன் உள்ளத்தில் வசிக்கையில், க்ஷேமம், சுபம் ஆகியவற்றையும் தியாகராஜன் கோரும் மற்ற விருப்பங்களையும் நியமத்துடன் வழங்கும் தயாநிதியாகிய இராமபத்திரன் உன்னிடமே விளங்கும் பொழுது (நீ வேண்டுவது வேறென்ன?)

## 274

ப³லஹம்ஸ ஆதி³

ப. தலித³ண்ட்³ருலு க³ல பேரு கா³நி
இல நீ ஸரி தை³வமு லெவரே (த)

அ. இலு கலசஸமுத்³ரமு கா³கநு நீ-
கில்லாலு விதே³ஹதநய ப³ளி (த)

ச. கி³ரிசாதி³ விதீ³ந்த்³ரார்க்க சசாங்கா-
மர கோடுலு வாநருலை கொலுவ
த³ர சக்ர ப₁ணீந்த்³ருலு ஸோத³ருலை
தகி³ வேட³க³ த்யாக³ராஜ விநுத (த)

உனக்குத் தாய் தந்தையர் (கௌசல்யையும் தசரதனும்) உளரென்ற பெயரே தவிர உனக்கு நிகரான தெய்வம் வேறு ஏது? நீ வசிக்கும் இல்லம் பாற்கடல், உன் பத்தினி விதேஹ ராஜனான ஜனகன் மகள் (அயோநிஜையாகிய சீதை). இது என்ன ஆச்சரியம்!

சிவன், பிரமன், இந்திரன், சூரியன், சந்திரன் முதலிய தேவர்கள் (நீ இராமாவதாரம் எடுத்தபொழுது) வானரர்களாகப் பிறந்து உனக்குத் தொண்டு புரிய, சங்கு, சக்கரம், ஆதிசேடன் முதலியோர் உன் தம்பியராகப் பிறந்து உன்னைச் சேவிக்க (உனக்கு நிகரான தெய்வம் ஏது?)

## 275

ப³லஹம்ஸ ஆதி³

ப. த³ண்ட³மு பெ³ட்டெநுரா கோ-
த³ண்ட³பாணி ஜூட³ரா (த³ண்)

அ. அண்ட³ஜ ஸுவாஹந மார்த்-
தாண்ட³ சந்த்³ரலோசந
குண்ட³லிசயந ப்³ரஹ்-
மாண்ட³நாயக நீகு (த³ண்)

ச. பேருகா ப்ரதிஷ்ட,கா யூரகா நிந்நு நம்மிதி
ஊருவாரு வீதி,வாரு ஒகஜாதிவாரு காரு
[1]தாரிதி செயிப^ட்டி ப்^ரோவுமு
த்யாக^ராஜார்ச்சித நீகு (த^ண்)

*கோதண்டத்தை தரித்தவனே! உன்னை வணங்குகிறேன்; தயையுடன் என்னை நோக்கு. கருட வாகனனே! சூரிய சந்திரரைக் கண்களாக உடையவனே! பாம்பணைத் துயில்வோனே! பிரம்மாண்ட நாயக!*

*நற்பெயருக்காகவா, கீர்த்திக்காகவா, அல்லது ஊருக்காகவா நான் உன்னை நம்பினேன்? இவ்வூராரும் தெரு மக்களும் ஒரே ஜாதியை (இயல்பை) உடையவர்கள் அல்லர். உன்னை வந்தடைந்த என்னைக் கைதூக்கிக் காத்தருள்.*

## 276

ப^லஹம்ஸ ஆதி^

ப. நிநு பா^ஸி யெட்ல யுந்து^ரோ
நிர்மலாத்முலௌ ஜநுலு (நி)

அ. அநக^, ஸுபுண்ய அமரவரேண்ய
ஸநக சரண்ய ஸத்காருண்ய (நி)

ச. கநுலகு ஜலுவ செவுலகம்ருதமு
விநு ரஸநகு ருசி மநஸுகு ஸுக,மு
தநுவுகு யாநந்த^மு க^ல்க^ ஜேஸே
த்யாக^ராஜ ஹ்ருத்^தா^ம பூர்ணகாம (நி)

*நிர்மல இதயத்தையுடைய பக்தர்கள் உன்னைப் பிரிந்து எவ்வாறு உயிர் தரிப்பார்களோ? (இருக்கமாட்டார்கள் என்று பொருள்). களங்கமற்றவனே! புண்ணிய ஸ்வரூபனே! வானவரின் தலைவனே! சனகர் முதலியோரால் சரணடையப்பட்டவனே! கருணை நிரம்பியவனே!*

*கண்களுக்குக் குளிர்ச்சியையும், செவிகளுக்கு அமுதத்தையும், நாவிற்குச் சுவையையும், மனத்திற்குச் சுகத்தையும், உடலுக்கு ஆனந்தத்தையும் அளிப்பவனே! தியாகராஜனின் சித்தமிசை வாழ்பவனே! நிறைவேறிய விருப்பங்களையுடையவனே!*

---

1 தா^ரிறி

## 277

**ப˅லஹம்ஸ** **ஆதி˅**

ப. பருலநு வேட˅நு பதித பாவநுடா˅ (ப)

அ. கரிவரதா˅ நீவே காங்க்ஷதோ ப்˅ரோவுமிக (ப)

ச. அமரவர நீது˅ நாமாதிசயம்பே˅ ஜீவ-

நமு ஸேயுங்நாநு ஸ்ரீ த்யாக˅ராஜ விநுத (ப)

*எளியவரைக் காப்பவனே! நான் பிற தெய்வங்களை வேண்டேன். யானைக்குக்கூட வரமளித்தவனே! நீயே என்னைப் பரிவுடன் காத்தருளவேண்டும்.*

*தேவருள் சிறந்தவனே! அற்புதமான உன் திருநாமத்தையே என் சீவனமாகக் கொண்டுள்ளேன்.*

## 278

**ப˅லஹம்ஸ** **ஆதி˅**

ப. விராஜதுரக˅ ராஜராஜேச்வர

நிராமயுநி ஜேயவே (வி)

அ. ஜராதி˅ரோக˅யுத தநுவுசே

நராத˅முலு ஏமி ஸாதி˅ஞ்சிரி (வி)

ச. நிரந்தரமு ஸகல விஷய து˅:க,

பரம்பரலசே ஜிவுகக˅ மதி˅லோ

து˅ரந்த காம மத˅முநு பா˅தி˅ஞ்சக˅

து˅ர்மதுடே˅ த்யாக˅ராஜ ஸந்நுத (வி)

*கருடவாகனனே! மன்னர் மன்னனே! என்னை நோயற்றவனாகச் செய்வாயாக. மூப்பு, (மரணம்) முதலிய வியாதிகள் நிறைந்த சரீரத்துடன் கீழ் மக்கள் எதைச் சாதித்தனர்?*

*இடைவிடாமல் ஐம்புலன்களால் ஏற்படும் துக்கமென்னும் தலைமுறைக்கு ஆளாகி, பலவீனமடைந்து, எல்லையற்ற காமத்தின் விளைவான மதம் உள்ளத்தை வருத்த, மதிகெட்டவர்களாக ஆகிறார்கள்.*

## 279

**மோஹந (மே. 28)** **ஆதி˅**

ப. எந்து˅கோ பா˅க˅ தெலியது˅ (எங்)

அ. அந்த˅கா˅ட˅ ஸ்ரீராம யீ தநு-

வஸ்தி,ரமநி ஈ கலிமாநவுல (கெங்)

ச. 1. க³ட்டிக³ ராள்ளநு க³ட்டிந க்³ருஹமுல
மட்டு மிதமு லேநட்டி பரிஜநுலு
சுட்டுகொந்த நிஜ சுட்டால கொருல
பட்டுல கதிது,லகு
பெ³ட்டலேக தம பொட்ட ஸாகு கொங்-
நட்டி தே³ஹமுல ரட்டு ஸஞ்சுலநு
க³ட்டிந த,³நமுல பெட்டெல தோட³நு
பெ³ட்டி பொய்யே மட்டு கநுங்கொ³நி (எங்)

2. கல்லலாடி³ கடு³பு பல்லமு நிம்புட
கெல்லவாரி த,³நமெல்ல ஜேர்ச்சுகொநி
பல்லவாத³ருல நெல்ல க³நி சுநக
பில்லலவலெ தி³ரிகி³
ஒள்ள ரோக³முலு கொள்ளகா³ த³க³ல
தொல்லி பைகமுலு மெல்ல ஜார ஜநு-
லெல்ல தூ³ற ப³ரமெல்ல பா³ர பு,³வி
மள்ளி பு³ட்டி ப,லமெல்ல க³நுங்கொ³நி (எங்)

3. வஞ்சகுல யநுஸரிஞ்சிந யலமட
இஞ்சுகைந ஸைரிஞ்சலேக தம
ஸஞ்சித கர்மமுலஞ்சு தெ³லிஸி வே-
றெஞ்சுவாரல ஜூசி
மஞ்சுவலெ ப்ரதிப,லிஞ்சு ஸம்பத
லஞ்சு கோ³ரகநு மஞ்சி த்யாக³ரா-
ஜஞ்சிதமுக³ பூ³ஜிஞ்சி நுதிஞ்சு ப்ர-
பஞ்சநாது,நி ப³,ஜிஞ்சுதா³மநுசு (எங்)

*பேரழகனாகிய ஸ்ரீராமனே! இவ்வுடல் நிலையற்றதென்று இக்கலியுக மாந்தருக்கு ஏனோ நன்கு தெரியவில்லை?*

*கற்களைக்கொண்டு உறுதியான வீடுகளைக் கட்டிக்கொண்டு, கணக்கற்ற வேலைக்காரர்களுக்கும், தம்மை சூழ்ந்துகொண்ட உறவினர்களுக்கும், விருந்தாளிகளுக்கும் உணவளிக்க இஷ்டமில்லாமல், தம் வயிற்றை மாத்திரம் நிரப்பிக்கொண்டு, இரட்டுப் பைகளில் கட்டப்பெற்ற பணம் நிரம்பிய பெட்டிகளை*

விட்டு விட்டு இறந்துபோகும் மர்மத்தையறிந்தும் (இவர்களுக்கு ஏனோ நன்கு தெரியவில்லை?)

பொய்கள் பேசி, வயிறெனும் பள்ளத்தை நிரப்பப் பிறர் தனத்தைச் சேர்த்துக்கொண்டு, தளிர் போன்ற இதழ்களையுடைய மாதரின் பின் நாய்க்குட்டிகளைப் போல் திரிந்து, உடலைப் பலவித நோய்கள் வருத்த, சேர்த்து வைத்த செல்வமும் மெல்லக் கரைய, ஊர் ஜனங்கள் தூற்ற, பரலோக வாழ்வு முற்றிலும் அகன்றுவிட, மரணமடைந்து, திரும்பவும் இவ்வுலகில் பிறந்து பரதவிக்கும் முடிவை அறிந்தும் (இவர்களுக்கு ஏனோ நன்கு தெரியவில்லை?)

வஞ்சகர்களைப் பின்பற்றுவதால் ஏற்படும் ஆயாசத்தைச் சிறிதும் பொறுக்க முடியாமல், இது நமது பழவினைப் பயனென்று தெரிந்து, வேறு விதமாக எண்ணுபவர்களைப் பார்த்து, செல்வங்களனைத்தும் பனி போல் மறைபவையென்றறிந்து அவற்றை வெறுத்து, தியாகராஜன் சம்மதத்துடன் பூசித்து வணங்கும் உலகநாதனாகிய பகவானைத் துதிப்போமென்று (ஏனோ இவர்களுக்கு நன்கு தெரியவில்லை?)

## 280

மோஹந ஆதிˇ

ப. நநு பாலிம்ப நடˇசி வச்சிதிவோ
நா ப்ராணநாத, (ந)

அ. வநஜநயந மோமுநு ஜூசுட ஜீ-
வநமநி நெநருந மநஸு மர்மமு தெˇலிஸி (ந)

ச. ஸுரபதி நீலமணி நிபˇ தநுவுதோ
உரமுந முத்யபுஸருல சயமுதோ
கˇரமுந சர கோதˇண்ட காந்திதோ
தˇரணி தநயதோ த்யாகˇராஜார்ச்சித (ந)

*தாமரைக் கண்ணனே! உன் திருமுகத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதே என் வாழ்வென்று நான் மனத்தில் அன்புடன் எண்ணியிருக்கும் மர்மத்தையறிந்து என்னைப் பாலிக்க நடந்து வந்தனையோ! என் பிராணநாதனே!*

*இந்திரநீல மணியையொத்த தேகப் பொலிவுடனும், திருமார்பில் அசைந்தாடும் முத்துமாலைக்குவியலுடனும், கரத்தில் ஏந்தியுள்ள கோதண்டம், அம்புகள் இவற்றின் ஒளியுடனும், பூதேவியின் புதல்வியாகிய சீதையுடனும் (என்னைப் பாலிக்க நடந்து வந்தனையோ?)*

## 281

மோஹந ஆதி

ப. பவநுத நா ஹ்ருதயமுந ரமிம்புமு
படலிக தீற (ப)

அ பவதாரக நாதோ பஹு பல்கிந
படலிக தீற கமலஸம் (ப)

ச. 1. பவநஸுதப்ரிய தநகை திரிகிந
படலிக தீற
பவநமு ஜேரி நநு வெறபிஞ்சிந
படலிக தீற கமலஸம் (ப)

2. வரமகு நைவேத்யமுலநு ஸேயநி
படலிக தீற
பரவ லேக ஸரிபோயிநட்டாடிந
படலிக தீற கமலஸம் (ப)

3. ப்ரபல ஜேஸி நநு ப்ரோசே நநுகொங்ந
படலிக தீற
ப்ரபு நீவு த்யாகராஜுநிகி
படலிக தீற கமலஸம் (ப)

சிவபெருமானல் தொழப்படுபவனே! உன் களைப்புத்தீர என் இதயத்தில் விளையாடுவாயாக. சம்சாரக் கடலைத் தாண்டச் செய்பவனே! தாமரையில் தோன்றிய பிரமனல் வணங்கப் படுபவனே!

அனுமனுக்குப் பிரியமானவனே! என்னுடன் நீ வெகு நேரம் பேசியதாலும், எனக்காகத் திரிந்ததாலும், என் இல்லத்திற்கு வந்து என்னை அச்சப்படுத்தியதாலும், சிறந்த நைவேத்தியங்களை நீ அமுது செய்யாததாலும், விபத்து நேரி டாமல் சமயோசிதமாகப் பேசியதாலும், என்னைப் பிரபலப் படுத்திக் காப்பேனென்று கூறியதாலும் நீ அடைந்துள்ள களைப்புத்தீர (என் இதயத்தில் இரமிப்பாயாக). தியாக ராஜனைக் காக்கும் பிரபு நீயேயல்லவா?

## 282

மோஹந சாபு

ப. மாடி மாடிகி தெல்பவலெநா முநி
மாநஸார்ச்சித சரண ராமய்ய நீதோ (மா)

அ. [1]நூடிகொக்கடே மாட சாலதா<sup>v</sup>
நாடி மொத<sup>v</sup>லுகொநி ஸாடிலேநி நீதோ (மா)

ச. 1. பங்கஜவத<sup>v</sup>நா ஸரஸவிநோதா<sup>v</sup>
ஸங்கடமுலநு வேக<sup>v</sup>மே தீ<sup>v</sup>ர்ப்பராதா<sup>v</sup>
சங்கரப்ரிய ஸர்வாந்தர்யாமிவி கா<sup>v</sup>தா<sup>v</sup>
இங்க நாமதி<sup>v</sup>நீகு தெ<sup>v</sup>லியக<sup>v</sup> லேதா<sup>v</sup> (மா)

2. கருணுஸாக<sup>v</sup>ர பரிபூர்ண நீகு
ஸரி வேல்புலு லேரநுசு நீவறகு
மொற பெ<sup>v</sup>ட்டிந நாபை யேல பராகு
வருலு ஜ<sup>v</sup>துரு பா<sup>v</sup>ண்ட<sup>v</sup>முந கொக்க மெதுகு (மா)

3. ச்ருங்கா<sup>v</sup>ர சேக<sup>v</sup>ர ஸூரவைரி ராஜ
ப<sup>v</sup>ங்க<sup>v</sup> ஸூஜந ஹ்ருத்குமுத<sup>v</sup> ப<sup>v</sup>ராஜ
மங்க<sup>v</sup>ளகரரூப ஜிதரதிராஜ
க<sup>v</sup>ங்கா<sup>v</sup>ஜநக பாலித த்யாக<sup>v</sup>ராஜ (மா)

முனிவர் இதயத்தில் அருச்சனை செய்யப்படும் பாதனே! இராமய்ய! உன்னுடன் நான் திரும்பத் திரும்ப (என் விஷயத்தைக்) கூற வேண்டுமா? நூற்றிற்கு ஒரு வார்த்தை கூறினுல் போதாதா? ஆதிகாலம் முதல் இணையின்றி விளங்கும் தெய்வமே!

செந்தாமரை முகத்தவனே! சரச விநோதனே! என் சங்கடங்களைத் தீர்க்க விரைந்து நீ வரலாகாதா? சிவபெருமானுக்கு உகந்தவனே! நீ அனைத்திலும் நிறைந்தவனல்லவா? என் உள்ளத்தை நீ இன்னும் தெரிந்துகொள்ளவில்லையா?

கருணைக் கடலே! நிறைவு கொண்டவனே! உனக்கு நிகரான தெய்வங்கள் இலரென்று இதுவரையில் முறையிட்டுக் கொண்டிருக்கும் என்னிடம் ஏன் இப்பராமுகம? அறிஞர் ஒரு பானைச் சோற்றிற்கு ஒரு சோற்றையே பதம் பார்ப்பார்கள்.

சிங்கார நாயகனே! அரக்கர் மன்னனை இராவணனை வதைத்தவனே! நல்லோர் இதயமெனும் அல்லியை மலர்விக்கும் சந்திரனே! மங்கள ஸ்வரூபனே! அழகினுல் மன்மதனை வென்றவனே! கங்கை நதியைப் பிறப்பித்தவனே! தியாகராஜனைப் பாலிப்பவனே!

## 283

மோஹநு ஆதி<sup>v</sup>

ப. மோஹநராம முக,ஜிதஸோம
முத்<sup>v</sup>து<sup>v</sup>க<sup>v</sup> ப<sup>v</sup>ல்குமா (மோ)

---

1: ஸூடிகொக்கடே

அ. மோஹநராம மொத³டிதை³வமா
மோஹமு நீபை மொநஸியுந்நதி³ரா (மோ)

ச. த⁴ர மநுஜாவதார மஹிம விநி
ஸுர கிந்நர கிம்புருஷ வித்³யாத⁴ர
ஸுரபதி விதி⁴ விபா⁴கர சந்த்³ராது³லு
கரகு³சு ³ப்ரேமதோ
வர ம்ருக³ பக்ஷி வாநர தநுவுலசே
கி³ரிநி வெலயு ஸீதாவர சிரகாலமு
கு³றி தப்பக மைமறசி ஸேவிஞ்சிரி
வர த்யாக³ராஜ வரதா³கி₂ல ஜக³ந் (மோ)

(அனைவரையும் மயக்கும்) மோகன வடிவங்கொண்ட இராமனே! முகவழகினால் சந்திரனை வென்றவனே! இனிமையாக என்னுடன் பேசு. மோகன ராம! முழுமுதற் கடவுளே! எனக்கு உன் மீது மோகம் மேலிட்டிருக்கிறது.

இவ்வுலகில் நீ மானிட அவதாரம் எடுத்த மகிமையைக் கேள்வியுற்று தேவர், கின்னரர், கிம்புருஷர், வித்தியாதரர், தேவேந்திரன், பிரமன், சந்திர சூரியர் முதலியோர் உள்ளங் கரைந்து, அன்புடன், சிறப்புற்ற விலங்கு, பட்சி, வானரங் களாகப் பிறந்து (ருஷ்ய மூக) பர்வதத்தில் விளங்கிய சீதா நாயகனான உன்னை வெகு காலம் இலட்சியம் சிதறாமல் மெய் மறந்து சேவித்தனர். தியாகராஜனுக்கு வரமருளும் ஜகன் மோகன வடிவனே!

## 284

மோஹந ஆதி³

ப. ராமா நிநு நம்மிநவாரமு
கா³மா ஸகலலோகாபி⁴ (ரா)

அ. பாமரஜநதூ³ர வரகு³ண க்³ருணா-
பாங்க³ சுபா⁴ங்க³ முநிஹ்ருத³ப்³ஜ ப்⁴ருங்க³ (ரா)

ச. 1. வாலாயமுகா³நு ராநு ஜா-
கே³ல ஸுகு³ண ஸ்ரீத³சரத, ந்ரு-
பால ஹ்ருத³யாநந்த³கர ஸ்ரீ-
லோல பால வெலயு மிக

பா,லலோசந ஹ்ருதˇ
யாலயாப்த ஜநபால கநகமய
சேல இக பர॥கேல யிபுடுˇ மம்-
மேல நீதுˇ மநஸேல ராதுˇ (ரா)

2: நீவே கˇதியண்டிநி காˇநி
நேவேறேமி யெறுகˇநு முந்தˇர
ராவே நீ பதˇபங்கஜ பˇ,க்தி
நீவே பாˇ,வஜாரிநுத
தேˇவ நீதுˇ பதˇஸேவாப,லமு மமு
காˇவுநே பதித
பாவந த்ரிதˇச நாத,நீய முநி
ஜீவநாநிசமு ப்ˇரோவவேல ஸ்ரீராம (ரா)

3. தாˇ,ராதˇ,ர நிபˇ, தேˇஹ ஜநா-
தாˇ,ரா துˇரிதாகˇ, ஜலதˇ ஸ-
மீரா த்யாகˇராஜ ஹ்ருதˇயா-
காˇர ஸாரஹீந ஸம்-
ஸாரமந்துˇ வேஸாரி நிந்நு மந-
ஸார நம்முகொந நேரலேநி நே-
நூரக் யிக விசார மந்துˇடகு
மேரகாˇதுˇ ஸ்ரீராம (ரா)

*உலகத்தவரின் மனங்கவரும் இராம! நாங்கள் உன்னையே நம்பியுள்ளவர்களல்லவா? பாமரருக்கு எட்டாதவனே! உத்தம குணங்கள் நிரம்பியவனே! தயை பொழியும் கடைக்கண் பார்வையுடைவனே! மங்களஸ்வரூபனே! முனிவர் இதயமெனும் தாமரையை வட்டமிடும் வண்டு போன்றவனே!*

*தவறுமல் நீ வருவதற்குத் தாமதம் ஏன்? குணவானே! தசரத மன்னனின் உள்ளத்திற்கு மகிழ்ச்சியளிப்பவனே! திருமகளை உகப்பவனே! என் பக்கலில் காட்சியளிப்பாயாக. நெற்றிக் கண்ணனுகிய சிவனின் இதயத்தை இருப்பிடம் கொண்டவனே! ஆப்தர்களை இரட்சிப்பவனே! பீதாம்பரத்தை யணிந்தவனே! இன்னும் பராமுகம் ஏன்? இப்பொழுது எம்மைக் காக்க உனக்கு ஏன் மனம் வரவில்லை?*

*நீயே கதியென்று உரைத்தேனே தவிர நான் வேறு ஒன்றையும் அறியேன். என் எதிரில் தோன்றி உன் பாத*

பக்தியை அருள்வாய். மதனனை எரித்த பரமசிவன் வணங்கும் தேவனே! உன் திருவடி சேவையின் பலனை எங்களைக் காக்கலாகாதா? எளியோரைப் பாலிப்பவனே! தேவர்களின் தலைவனாக வரிக்கப்படுபவனே! முனிவரின் வாழ்விற்காதாரமே! என்னை என்றும் காக்கமாட்டாயா?

கருமுகிலையொத்த வண்ணனே! மாந்தருக்கு ஆதாரமானவனே! பாபக் கூட்டமென்னும் மேகத்தைக் கலைக்கும் பெருங்காற்றே! தியாகராஜனின் சித்தமிசை குடிகொண்டவனே! சாரமற்ற சம்சாரத்தில் உழன்று களைப்பெய்தி உன்னை மனமார நம்புவதற்கும் முடியாதவனாகிய நான் விசாரப்படுவது உனக்கு மரியாதையல்ல.

## 285

யது^v^குல காம்போ^v^ஜி (மே. 28) ஆதி^v^

ப. அதி^v^காது^v^ ப^v^ஜந மநஸா (அ)

அ. எத^v^லோ நெஞ்சுடொகடி பய-
யெத^v^லோ க^v^ல்கி^v^நசோ நொகடி (அ)

ச. கொ^v^ப்பதநமுகை யாஸ
குச்சித விஷய பிபாஸ
மெப்புலகை ப^v^ஹுவேஸமிடி^v^
உப்பதி^v^ல்லெத^v^ரு த்யாக^v^ராஜவிநுத (அ)

மனமே! அதுவல்ல பஜனை. உள்ளத்தில் நினைப்பது ஒன்றாகவும், புறத்தில் புரியும் காரியங்கள் ஒன்றாகவும் இருந்தால் (அது பஜனையல்ல).

பெரியதனம் படைக்கவேண்டுமென்ற ஆசைக்காகவும், வெறுக்கத்தக்க புலனின்ப வேட்கைக்காகவும், புகழிற்காகவும், அனேக வேடங்கள் பூண்டு மகிழ்ச்சியடைகிறார்களே (அது பஜனையல்ல).

## 286

யது^v^குல காம்போ^v^ஜி ஆதி^v^

ப எந்தநுசு ஸைரிந்துநு ஸீதா-
காந்து த^v^யராது^v^ (எந்)

அ. (முநி) சிந்தநீய ஸ்ரீராமசந்த்^v^ர நா
செந்தராநிங்க மநஸு^ு^ ராதா^v^ (எந்)

ச. 1. ஸமரஹி தாஸமாந நே தா^v^ஸு^ு^டா^v^
ஸமாநபாலந நா மொறலு வே-

ஸமாயெநா ஸுஜநாவந சுபக-
ரமாப்த பரிவாராமரவிநுத
ரமாரமண யிதரமா நீகு நே (நெந்)

2. ப்ராஜமுக, வ்ருஷப்ராஜப நுத யி-
ப்ராஜவரத ஸதா ப்க்தஸுல
ப்ராஜங்ய சுப்த ஸதத மௌ
நிராஜநுத யவநிராஜபரிசர
நிராதங்க நிராமய நே (நெந்)

3. விராஜவாஹந விராஜமாந க-
விராஜரக்ஷக நா தபமுலந்நி
விராஜஸமுலே நா ஜ்ஞாநமொஸ-
க்ராஜஜநக நகராஜத்ர த்யா-
க்ராஜநுத நாகராஜசயந (எந்)

எவ்வளவென்று நான் பொறுப்பேன்? சீதாநாயகனின் தயை இன்னும் வரவில்லை. முனிவரால் தியானிக்கப்படும் ஸ்ரீராமசந்திர! என்னருகில் வர உனக்கு இன்னும் மனம் வரவில்லையா?

நீ இணையற்றவன். உன் மீதுள்ள ஆசையை நான் விடேன். நீ அடியார்களின் மானங்காப்பவன். நான் முறையிட்ட தனைத்தும் வேஷமா? நல்லோரைக் காப்பவனே! நீ நன்மை புரிபவன். திருமகளுக்கு உகந்தவன். பரிசனங்களாகிற தேவரால் வணங்கப்பெறுபவன். இலக்ஷ்மி பதி. நான் உனக்கு அன்னியனா?

(நீ) மதிமுகத்தவன். சிவனால் வணங்கப்பெறுபவன். யானைக்கு வரமளித்தவன். பக்தர்களுக்கு எளிதில் கிடைப்பவன். க்ஷத்திரிய வீரன். மங்களம் தருபவன். (வால்மீகி, நாரதர் போன்ற) முனிசிரேஷ்டரால் துதிக்கப்படுபவன். மன்னரால் சேவிக்கப்படுபவன். தீங்கும், நோயும் அற்றவன்.

கருட வாகனனே! ஒளிபொருந்திய சடாயுவைக் காத்தவனே! என் தவமனைத்தும் ரஜோகுணம் நிரம்பியதா? எனக்கு ஞானம் அருள்வாய். பிரமனைப் பெற்றவனே! கோவர்த்தன கிரியைத் தாங்கியவனே! ஆதிசேடன் மீது துயில்பவனே!

287

யதுகுலகாம்போஜி தேசாதி

ப. ஏதாவுந நேர்ச்சிதிவோ ராம
எந்துகிந்த காஸி (ஏ)

அ. ஸீதா லக்ஷ்மண ப⁴ரத ரிபுக்⁴ந
வாதாத்மஜுலதோ நாடே³ நாடக (மே)

ச. ஆலு வஜ்ரால ஸொம்முலடி³கி³ரோ
அநுஜுலு தல்லிதண்ட்³ரு லந்நமடி³கி³ரோ
சீலுலைந வரப⁴கதுலு பிலிசிரோ சிர
காலமு த்யாக³ராஜநுத நீ (வே)

*சீதை, இலக்ஷ்மணன், பரதன், சத்ருக்கினன், அனுமன் ஆகியோருடன் கூடி நீ நடிக்கும் இந்நாடகத்தை எவ்விடத்தில், எத்தனை காலம் கற்றனையோ? ஏன் இவ்வளவு சிரமம்?*

*(இந்நாடகத்தில்) பெண்டிர் ஆபரணங்கள் வேண்டுமென உன்னைக் கேட்டார்களோ? தம்பியரும், தாய்தந்தையரும் உணவளிக்குமாறு கேட்டனரோ? சிலம் வாய்ந்த உத்தம பக்தர்கள் உன்னை அழைத்தனரோ! ஏன் இந்த நாடகம்?*

## 288

யது³குலகாம்போ⁴ஜி தே³சாதி³

ப. நீத³யசே ராம நித்யாநந்து³டை³தி (நீ)

அ. நாத³ப்³ரஹ்மாநந்த³ ரஸாக்ருதிக³ல (நீ)

ச. வரம்ருது⁴பா⁴ஷ ஸுஸ்வரமயபூ⁴ஷ
வரத்யாக³ராஜ வாக்சேலாவ்ருத (நீ)

*இராம! நாதமெனும் பிரம்மானந்தத்தின் ரசமே வடிவமாகவுடைய உன் தயையினால் நான் என்றும் ஆனந்தமடைபவனாக ஆனேன். இன்சொல் படைத்தவனே! இனிய சுரங்களையே அணிகளாக உடையவனே! சிறப்புற்ற தியாகராஜனின் சொல்லாகிய பொன்னுடையணிந்தவனே!*

## 289

ரவிசந்த்³ரிக (மே. 28) ஆதி³

ப. நிரவதி⁴ஸுக₂த³ நிர்மலரூப
நிர்ஜித முநிசாப (நி)

அ. சரதி⁴ப³ந்த⁴ந நதஸங்க்ரந்த³ந
சங்கராதி³ கீ³யமாந ஸாது⁴மாநஸ ஸுஸத³ந (நி)

ச. மாமவ மரகதமணிநிப⁴ தே³ஹ
ஸ்ரீமணிலோல ச்ரிதஜநபால
பீ⁴மபராக்ரம பீ⁴மகரார்ச்சித
தாமஸராஜஸ மாநவதூ³ர
த்யாக³ராஜ விநுதசரண (நி)

எல்லையற்ற ஆனந்தமளிப்பவன் நீ. நிர்மல வடிவத்தவன். (கௌதம) ரிஷியின் சாபத்தைப் போக்கியருளியவன். கடலுக்கு அணையமைத்தவன். இந்திரனால் வணங்கப்படுபவன். சங்கரன் முதலியோரால் துதிக்கப்பெறுபவன். சாதுக்கள் மனத்தில் உறைபவன்.

என்னைக் காப்பாயாக. நீ மரகதமணியை யொத்த தேகமுடையவன். இலக்ஷ்மியை உகப்பவன். சரணடைந்தவரைக் காப்பவன். (எதிரிகளுக்கு) அச்சம் விளைவிக்கத்தக்க வலிமையுடையவன். பரமசிவனால் அருச்சிக்கப்பெறுபவன். தமோகுணம், ரஜோகுணம் நிறைந்தவருக்கு எட்டாதவன். தியாகராஜன் வணங்கும் பாதன்.

## 290

ரவிசந்த்³ரிக தே³சாதி³

ப. மாகேலரா விசாரமு
மருக³ந்ந ஸ்ரீராமசந்த்³ர (மா)

அ. ஸாகேதராஜகுமார
ஸத்³ப⁴க்தமந்தா³ர ஸ்ரீகர (மா)

ச. ஜதகூ³ர்ச்சி நாடகஸூத்ரமுநு
ஜக³மெல்ல மெச்சக³ கரமுந நிடி³
க³தி தப்பகாடி³ஞ்சேவு ஸும்மீ
நத த்யாக³ராஜ கி³ரீசவிநுத (மா)

எங்களுக்கென்ன கவலை? மதனனைப் பெற்ற ஸ்ரீராமசந்திர! அயோத்தியா ராஜ்யத்தின் சக்கரவர்த்திக் திருமகனே! மெய்யடியாரின் மந்தார (கல்ப) விருட்சமே! திருவளிப்பனே!

நீ (உலக மாந்தரை) ஜதை சேர்த்து, நாடகத்தின் சூத்திரக் கயிற்றைக் கையில் பிடித்து, உலகம் புகழும் வண்ணம், நடை தவறாமல் ஆட்டிவைக்கிறாயல்லவா? (ஆகவே, எங்களுக்கென்ன கவலை?) சிவனால் தொழப்படுபவனே!

## 291

ராக³பஞ்ஜரம் (மே. 28) சாபு

ப. வரதா³நவநீதாசா பாஹி
வர தா³நவமத³ நாசாஏஹி (வ)

அ. சரதா³ப்³ கர வித்³ருத சரா-
சரதா³சுக³ ஸுமசரதா³சரஹித (வ)

ச. த்³விரதா³த்³பு³தக³மந புரத³ஹநநுத
ஸ்பு₂ரதா³ப்₄ரணஜரா வநபர
க²ரதா³சந துரக³ ரதா₂ த்³யுதிஜித
வரதா³ஸ ஜநாக்₄ரேஸர த்யாக³ராஜ (வ)

வரந்தருபவனே! வெண்ணெய் உண்ட மாயனே! என்னைக் காப்பாயாக. வலிமை மிக்க அரக்கரின் கொழுப்பை யடக்கிய வனே! வருக! முகில் வண்ணனே! கரத்தில் கணைகளை ஏந்திய வனே! இராக்கதரெனும் மேகத்தை சிதறவடிக்கும் பெருங் காற்றே! மன்மதன் தந்தையே! ஆசையற்றவனே!

யானையை யொத்த நடையுடையவனே! புரமெரித்த முக்கண்ணனால் போற்றப்படுபவனே! ஒளிவீசும் அணிகளையுடை வனே! தேவரைக் காப்பதில் ஊக்கமுடையவனே! கருடனை வாகனமாக உடையவனே! மெய்யடியார்களைத் தன் காந்தி யினால் மயக்கியவனே!

## 292

ராக³பஞ்ஜரம் தே³சாதி³

ப. ஸார்வபௌ₄ம ஸாகேதராம மந-
ஸார ப³ல்க ராதா³ தே³வதா (ஸா)

அ. பார்வதீரமணார்ச்சித பாத³ [1]ரமா–
[2]பதிவந்த்³ய பராத்பர தீ³நப³ந்தோ₄ (ஸா)

ச. முத்³து³ முத்³து³கா³ மாடலாடி³நதி³
முந்து³ ராக ஸதா³ [3]வெத ஜெந்து³சுநு
கத்³து³ கத்³த³நுசு ஜிரகாலமுநு
கறகுசுண்ட³ [4]வலெநா த்யாக³ராஜநுத (ஸா)

---

1 யுக³ 2 ப₄க்தவந்த்³ய 3 வெஸநம்³பு³ 4 வசமா

வானவரின் சக்ரவர்த்தியே! அயோத்தி ராமனே! மனமார என்னுடன் உரையாடலாகாதா? பார்வதிநாயகனுல் தொழப் படும் பாதனே! 1 விஷ்ணுவினுலும் வணங்கப்படுபவனே! பராத்பர! எளியோரின் துணைவனே!

இனிமையாக என்னுடன் பேசியும் நீ என்னெதிரில் தோன்ருததால் சதா நான் விசனமடைந்து, அப்பேறு என்றைக் காகிலும் எனக்கு உண்டா என்று மனமுருகிக்கொண்டே யிருக்க வேண்டுமா?

293

சஹாந (மே. 28) சாபு

ப. ஊரகே க᳚ல்கு᳚நா ராமுநி ப᳚க்தி (ஊ)

அ. ஸாரெகுநு ஸம்ஸாரமுந ஜொச்சி
ஸாரமநி யெஞ்சுவாரி மநஸு᳚ந (ஊ)

ச. 1. ஆலு ஸு᳚துலு சுட்டாலு வர ஸத᳚-
நாலு காய ப᳚லாலு கநக த᳚-
நாலு க᳚ல விப᳚வால கநி யஸ்தி-
ராலநே பா᳚க்᳚யசாலுலகு கா᳚க (ஊ)

2. மஞ்சிவாரிநி பொட᳚கா᳚ஞ்சி ஸந்ததமு ஸே-
விஞ்சி மநவிநாலகிஞ்சி யாத᳚ரி ஸா-
தி᳚ஞ்சி ஸர்வமு ஹரியஞ்சு தெ᳚லிஸி பா᳚-
விஞ்சி மதி᳚நி பூ᳚ஜிஞ்சுவாரிகி கா᳚க (ஊ)

3 ராஜஸகு᳚ணயுக்த பூஜல நொநரிஞ்ச-
காஜ ஸந்நுத த்யாக᳚ராஜு᳚நி ஜிஹ்வபை
ராஜில்லு வர மந்த்ர ராஜமுநநு ஸ-
தா᳚ ஜபிஞ்சே மஹராஜு᳚லகு கா᳚க (ஊ)

சதாகாலமும் சம்சாரத்தில் நுழைந்து (ஆழ்ந்து) அதுவே சிறந்ததென்று நினைப்பவர்களின் மனத்தில் காரணமின்றி இராமபக்தி உண்டாகுமா?

மனைவி, மக்கள், சுற்றத்தினர், சிறந்தவீடுகள், உடல் வலிமை, பொன் முதலிய செல்வம் நிறைந்த வைபவங்களைக் கண்டு அவை நிலையற்றவையென்று வெறுக்கும் பாக்கியசாலி களைத் தவிர மற்றவர்க்கு (எளிதில் கிடைக்குமா இராம பக்தி?)

---

1 மும்மூர்த்திகளும் ஸ்ரீராமனது அவதார தர்மத்தை அறிந்து அவரை வணங்கினரென்று இராமாயணத்தில் உள்ளது. ஆகவே இது பொருத்தமானதே.

நல்லோரைத் தரிசித்து, அவர்களை என்றும் சேவித்து, அவர்களின் உபதேசங்களுக்குச் செவிசாய்த்து, அவர்கள் நல்லுறவை விரும்பி, அனைத்தும் விஷ்ணுமயமென்பதை யறிந்து மனமாரப் பூசிப்பவர்களைத் தவிர மற்றவர்க்கு (இராமபக்தி எளிதில் கிடைத்துவிடுமா?

பிரமனால் துதிக்கப்படுபவனே! இரஜோகுணம் நிறைந்த பூசனை புரியாமல், இத்தியாகராஜனின் நாவின்மீது விளங்கும் மந்திர ராஜனாகிய இராமநாமத்தை சதா ஜபம் செய்யும் அதிர்ஷ்டசாலிகளைத் தவிர மற்றோர்க்கு (இராமபக்தி காரண மின்றிக் கிடைக்குமா?)

## 294

ஸஹாந — ரூபகம்

ப. ஏமாநதிச்சேவோ யேமெஞ்சிநாவோ (ஏ)

அ. நாமாடலு விநவோ ராம
நா தலவ்ராலேமோ (ஏ)

ச. யசமாயுவு ஸத்ᵛபᵛக்தியு
ஏகாந்த சித்தமு
ஸுசரீர மொஸங்கேᵛ பாᵛ-
ஸுர த்யாகᵛராஜநுத (ஏ)

நீ என்ன கட்டளையிட்டனையோ? மனத்தில் என்ன நினைத்தாயோ! என் பேச்சைக் கேளாயோ? இராம! இது என் தலையெழுத்தோ?

புகழ், ஆயுள், ஸத்பக்தி, உன்னிடமே லயித்த சித்தம், நல்லுடல் ஆகியவற்றை அருள்பவனே! ஒளி பொருந்திய சிவபெருமானால் வணங்கப் படுபவனே!

## 295

ஸஹாந — தேᵛசாதிᵛ

ப. [1]கிᵛரிபை நெலகொந்ந ராமுநி
குᵛறி தப்பக கᵛண்டி (கிᵛ)

அ. பரிவாருலு விரி ஸுரடுலசே நில-
பᵛடிᵛ விஸருசு கொᵛஸருசு ஸேவிம்பகᵛ (கிᵛ)

---

1 ஸ்வாமியவர்கள் சொப்பனத்தில் கண்ட அநுபவத்தைக் குறிக்கும் கிருதி. இதில் கூறப்பட்டிருக்கும் 'மலை' எது என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம். அது பத்ராசலம் என்பது கல்லூரி விரபத்திர சாஸ்திரியவர்களின் அபிப்பிராயம்.

ச, புலகாங்கிதுடை யாநந்தாச்ரு-
வுல நிம்புசு மாடலாடவலெநி
கலுவரிஞ்ச கநி பதிபூடலபை
காசெதநு த்யாகராஜவிநுதுநி (கி)

பரிசனங்கள் மலர் விசிறிகளைக் கையிலேந்தி நின்று ஒருவரை யொருவர் முந்திக்கொண்டு ஆலவட்டம் சேவிக்க, மலைமீது எழுந்தருளியிருக்கும் இராமனைக் குறி தவறாமல் கண்டேன்.

தேகம் புளகிதம் அடைய, ஆனந்தக் கண்ணீர் பெருக, ஏதோ கூறவேண்டுமென்று நான் குதூகல மடைந்ததைப் பார்த்துப் ''பத்து நாட்களில் உன்னைக் காப்பேன்'' என்று மொழிந்த (இராமனைக் குறி தவறாமல் நான் கண்டேன்).

## 296

சஹாந ஆதி

ப. தேஹி தவ பதபக்திம் வை-
தேஹீ பதிதபாவநீ மே ஸதா (தே)

அ. ஐஹிகாமுஷ்மிக பலதே
கமலாஸநாநங்யஜ வரஜநநீ (தே)

ச. 1. கலசவாராசி ஜநிதே கநகபூஷணலஸிதே
கலசஜ கீத முதிதே காகுத்ஸ்த, ராஜஸஹிதே (தே)

2. அகிலாண்டரூபிணீ அளிகுலநிபவேணீ
மக,ஸம்ரக்ஷகராணீ மம பாக்யகாரிணீ (தே)

3. சரணுகதபாலநே சதமுக,மதமநே
தருணாருணப்ஜ நயநே த்யாகராஜஹ்ருத் ஸதநே (தே)

விதேஹராஜனின் புதல்வியே! எளியோரைக் காப்பவளே! எங்களுக்கு உன் பாதபக்தியை என்றும் அருள்வாயாக. இம்மையிலும் மறுமையிலும் நற்பயன் அளிப்பவளே! பிரமனையும், மன்மதனையும் பெற்ற தாயே!

(நீ) பாற்கடலில் உதித்தவள். பொன்னணிகளால் பிரகாசிப்பவள். அகஸ்திய முனிவரின் துதியால் மகிழ்பவள். காகுத்ஸ்த வம்ச ராஜனான இராமனுடன் கூடியவள்.

அகிலாண்ட ரூபிணி. வண்டுக் கூட்டத்தையொத்த குழலுடையவள். வேள்வி காக்கும் இராமனின் பத்தினி. எமக்குச் சகல பாக்கியங்களையும் அளிப்பவள்.

சரணடைந்தவரைக் காப்பவள். நூறு தலைகளுள்ள (மஹி ராவண) அரக்கனை வதைத்தவள். செந்தாமரைக் கண்களை யுடையவள். தியாகராஜன் உள்ளத்தில் அமர்ந்தவள்.

## 297

சஹாந தே'சாதி'

ப. நிஜமுக' நீ மஹிம தெ'ல்பலேரு (நி)

அ. ப'ஜந ஸேயுமநி ப'லிகிரி கா'நி
அஜ க'ஜ ஸிம்ஹ ஸ்ருகா'லாந்தரமநி (நி)

ச. பு'த்'த்'யநு தல்லிநி விஷய விடுலகு
ப்ரொத்'து'நொஸகி' பைகமு லார்ஜிஞ்சே
ஸித்'து'லு ஸுஜநுல ஸப'கு ராநேரநி
பெத்'த'லு ஸ்ரீத்யாக'ராஜவிநுத ராம (நி)

உண்மையில் உனது மகிமையை எடுத்துரைக்க இம்மாந்தர் தகுதியற்றவர்கள். பஜனை செய்யவேண்டுமென்று (வாயினுல்) கூறுவார்களே தவிர, (இவர்களுக்கும் மெய்யடியார்களுக்கும்) யானைக்கும் ஆட்டிற்கும், (அல்லது) சிங்கத்திற்கும் நரிக்குமுள்ள வித்தியாசம் உள்ளது.

புத்தியென்னும் தாயைப் புலவின்பமாகிற விடபுருடர்களிடம் சதா காலமும் ஒப்படைத்துப் பணம் திரட்டும் [1]சித்தர்களும், நல்லோர் கூடியுள்ள சபையில் அடிவைக்கத் தகுதியற்ற [2]பெரியோர்களும் (உன் மகிமையை எடுத்துரைக்க ஏற்றவர் அல்லர்).

## 298

சஹாந ரூபகம்

ப. ரகு'பதே ராம ராக்ஷஸபீ'ம (ர)

அ. ப்'ருகு'ஸுத மத'ஹரண முநி
ப்'ருந்த' வந்தி'த சரண (ர)

ச. 1. ஸரஸீருஹ நயந ஸஜ்ஜந ஹ்ருத'ய நிகேதந
த'ரணீ த'ரதீ'ர ஸீதாமநோஹர
நிரவதி' ஸுக,தா' ப்ரமேய நிருபம நாரத' ஸுகே'ய
கரத்'ருத சரஜால நீலக'நவர்ணமரபால (ர)

1, 2 இவை கேலிச் சொற்கள்.

2. தருணாருண நிப˘சரண தரணிவம்ச விபூ˘ஷண
வருணாலய மத˘த˘மந வாரணாவந
கருணாகர கி˘ரீசசாபக˛ண்ட˘ந நிர்ஜிததாப
பரிபூர்ணாவதார பரபா˘மிநீ தூ˘ர (ர)

3. ஹரிஹய பங்கஜப˘வநுத புரவைரி பராசரஹித
நரவரவேஷ தாரகநாமதே˘ய
ஸ்வரஜித க˘நரவ பரேச சதபா˘ஸ்கர ஸங்காச
பரிபாலித த்யாக˘ராஜ பாஹி ப˘க்தஸமாஜ (ர)

இரகுகுலத்தோன்றலே! இராக்கதரை வதைப்பவனே! பரசுராமனின் கர்வத்தையடக்கியவனே! முனிவர் குழாங்களால் தொழப்படும் பாதனே!

(நீ) பங்கயக் கண்ணன். நல்லோர் சித்தமிசை வாழ்பவன். மகா பர்வதத்தை யொத்த தைரியசாலி. சீதையின் மனங்கவர்வோன். எல்லையற்ற ஆனந்தமளிப்பவன் ஒருவராலும் அறியப்படாதவன். இணையற்றவன். நாரத முனிவரால் துதிபாடப் பெற்றவன். அம்புகளையேந்தியவன். கருமுகில் வண்ணன். தேவரைக் காப்பவன்.

செந்தாமரைப் பாதன். சூரிய குலத்தையலங்கரித்தவன். சமுத்திரராஜனின் செருக்கடக்கியவன். யானையைக் காத்தவன். கருணாகரன். சிவதனுசை ஒடித்தவன். தாபங்களை வென்றவன். பரிபூர்ண அவதாரமெடுத்தவன். பிறர் பெண்டிரைக் கண்ணெடுத்தும் பாராதவன்.

இந்திரனாலும் பிரமனாலும் வணங்கப்படுபவன். சிவனுக்கும் பராசரருக்கும் இதந்தருபவன். சிறந்த மானிட அவதாரம் பூண்டவன். தாரக நாமத்தையுடையவன். மேகத்தின் கர்ஜனையொத்த குரலுடையவன். பரமாத்மா. நூறு சூரியரையொத்த ஒளிபொருந்தியவன். பக்தரிடையே வாழ்பவன். என்னைக் காத்தருள்வாயாக.

## 299

ஸரஸ்வதீமனோஹரி (மே. 28) தே˘சாதி˘

ப. எந்தவேடு˘கொந்து˘ ராக˘வ
பந்தமேலரா ஓ ராக˘வ (எந்)

அ. சிந்த தீ˘ர்ச்சுட கெந்த மோடி˘ரா
அந்தராத்ம நாசெந்த ராகநே (எந்)

ச. சித்தமந்து நிந்நு ஜூசு ஸௌக்,யமே
உத்தமம்ப்நுசு உப்பொங்குசுநு
ஸத்தமாத்ரமா சால நம்மிதிநி
ஸார்வபௌ,ம ஸ்ரீத்யாகராஜநுத (எந்)

நான் எத்தனை வேண்டிக்கொண்டும் ஓ ராகவ! உனக்கேன் இப்பிடிவாதம்? என் கவலையைத் தீர்ப்பதற்கு உனக்கு இத்தனை பிகுவா? ஆத்ம ரூபனே! என்னருகில் வராமல் (உனக்கேன் இப்பிடிவாதம்?)

என் சித்தமிசை உன்னைத் தரிசிக்கும் சுகமே மேலான தென்று மகிழ்ந்திருக்கிறேன். அனைத்திற்கும் சாரமானவனே! உன்னை முற்றிலும் நம்பினேன். ஒருவனைப் பணியாதுலகாள் பவனே!

## 300

ஸ்வராவளி (மே. 28) ஜம்ப

ப. ப்ராரப்த, மிட்லுண்டகா ஒருல நந
பநிலேது நீவுண்டக (ப்ரா)

அ. பால குணசீல ஜநபால வரத க்ருபால
வால கா்லாதீத சூலத,ரவிநுத நா (ப்ரா)

ச. உபகாரி நேனைதே அபகாருலேயேரு
க்ருப ஜூசிதே மிகுல நெபமு லெஞ்சேரய்ய
சபலசித்துலு ப,க்தவேஷுலைநு ஜூசி
சத்ருலேயேரு ஸ்ரீத்யாகராஜாப்த நா (ப்ரா)

என் பழவினை இவ்வாறிருக்கையில் (என்னைத் தவிர) வேறு ஒருவரைக் குறை கூறிப் பயனில்லை. இளங்குமரனே! குணசீலனே! மக்களைக் காக்கும் அரசே! வரமளிப்பவனே! கருணுநிதியே! காலத்தைக் கடந்தவனே! சூலமேந்திய சிவனுல் வணங்கப் படுபவனே!

நான் உபகாரம் செய்ய நினைத்தால் (மாந்தர்) எனக்குத் திங்கு புரிய நினைப்பர். நான் சிறிது இரங்கினுல் என் மீது குற்றம் சாட்டுகின்றனர். சபலசித்தமும் பக்தவேஷமும் உடையவர்கள் எனக்குப் பரம விரோதிகளாகி விடுகின்றனர். இது என் ஊழ்வினைப் பயன் போலும்!

## 301

சாம (மே. 28) சாபு

ப. எடுலைந ப,க்தி வச்சுடகே
யத்நமு ஸேயவே (எ)

அ. மடுமாய ப॑வமுநு மநத॑நி யெஞ்சக
வடபத்ரசயநுநி பாத॑யுக॑முநந்து॑ (எ)

ச. வித்॑யா க॑ர்வமுலேலே நீ வ-
வித்॑யா வசமு கா॑நேலே
க॑த்॑யோதநாந்வய திலகுநி புரமேலே
பு॑த்॑த்॑யாசுந தோசதே॑லே ஓ மநஸா (எ)

2. ராமநாமமு ஸேய ஸிக்॑கா॑ காரா-
தே॑மி ப॑ல்கவு புண்டிபு॑க்॑கா॑
பா॑மலகட॑ தா॑டகுமண்டே ஜக்॑கா॑
பாமரதநுவு நம்ம நீர்பு॑க்॑கா॑ (எ)

3 போ॑க்॑ பா॑க்யமுலயந்து॑ நிஜ
பா॑க॑வதுலுகா॑நி பொந்து॑ ரோஸி
த்யாக॑ராஜ வரது॑நி நீயந்து॑
பா॑கு॑கா॑ த்॑யாநிஞ்சு ப॑வரோக॑மந்து॑ (எ)

எவ்விதத்திலேனும் பக்தி வருவதற்கு முயற்சி செய்வாய், மனமே! கனத்த மாயை சூழ்ந்த இவ்வுலகை நமதென்று எண்ணமல், ஆலிலைமேல் துயில்பவனின் திருவடிகளில் (பக்தி உண்டாவதற்கு முயற்சி செய்).

கல்வி கற்றதன் கர்வம் உனக்கேன்? நீ அஞ்ஞானத்தின் வசமாவதும் எதற்கு? சூரியகுல திலகனின் பட்டணமாகிய அயோத்தியை அடையும் புத்தி உனக்கு விரைவில் தோன்ருததேன்?

இராம நாம சங்கீர்த்தனம் செய்ய வெட்கமா? இது உனக்குத் தகாது. ஒன்றும் பேசமாட்டாயா? உன் வாயில் புண்ணு? பெண்களிடம் முறை தவறி நடக்காதேயென்ருல் உனக்கு அவமானமா? இப்பாமர உடலை நம்பினுல் அது நீர்க்குமிழியாக முடியும்.

நீ பாக்கியங்களை அனுபவிக்கும்பொழுதும் கூட உண்மையான பாகவதர்களைத் தவிர மற்ருேர் உறவை ஒழித்து பகவானை நன்கு தியானம் செய். அதுவே சம்சாரமென்னும் வியாதிக்கு மருந்து.

## 302

சாம ஆதி॑

ப. சாந்தமு லேக ஸௌக்॑யமு லேது॑
ஸாரஸத॑ள நயந (சா)

அ. தா^ந்துநிகைந வேதா^ந்துநிகைந (சா)

ச. 1. தா^ர ஸுதுலு த^நதா^ந்யமு லுண்டி^ந
ஸாரெகு ஜபதப ஸம்பத^ க^ல்கி^ந (சா)

2. யாகா^தி^ கர்மமு லந்நியு ஜேஸிந
பா^கு^க^ ஸகல ஹ்ருத^பா^வமு தெ^லிஸிந (சா)

3. ஆக^ம சாஸ்த்ரமு லந்நியு ஜதி^விந
பா^க^வதுலநுசு பா^கு^க^ பே^ரைந (சா)

4. ராஜாதி^ராஜ ஸ்ரீராக^வ த்யாக^
ராஜவிநுத ஸாது^ரக்ஷக தநகுப (சா)

கமலக்கண்ணனே! இந்திரியங்களை வென்றவர்க்காயினும் வேதாந்திகளுக்காயினும் சாந்தம் (அமைதி) இல்லாவிடில் சுகம் இல்லை.

மனைவி, மக்கள், செல்வம் முதலியன இருந்தாலும், சதா சபம், தவம் முதலியன செய்யும் பேறு படைத்தாலும், யாகம் முதலிய சடங்குகளனைத்தும் செய்தாலும், சகல உள்ளக் கருத்துக்களையறிந்தாலும், வேத சாஸ்திரங்களனைத்தையும் கற்றாலும், பாகவதர்களென்று நற்பெயர் எடுத்தாலும், ஒருவனுக்கு உபசாந்தம் எனப்பெறும் மன அமைதி இல்லாவிடில் சுகம் கிடைக்காது. ராஜாதிராஜனே! இராகவனே! சாதுக்களைக் காப்பவனே!

## 303

ஸுபோஷிணி (மே. 28) ரூபகம்

ப. ரமிஞ்சுவா ரெவருரா
ரகூ^த்தமா நிநுவிநா (ர)

அ. சமாதி^ஷட்^கு^ணக^ண
ஸகல பு^வந ஜநுலலோ (ர)

ச. "ரம்"யநே ஸுமர்மமு ராமயநே சர்மமு லஸ
த^மரவருல கப்^பெ^நோ த்யாக^ராஜஸந்நுத (ர)

இரகு குலத்தில் தோன்றிய உத்தமனே! அடக்கம் முதலிய நற்குணங்கள் நிறைந்தவனே! சகல புவனங்களிலுமுள்ள மாந்தருள்ளத்தில் இரமிப்பவன் (விளையாடுபவன்) உன்னையன்றி வேறு யார் உளர்?

*''ரம்'' என்ற (வினைச்) சொல்லிலடங்கிய இரகசியமும், ''ராம'' என்ற பெயரிலடங்கிய இன்பமும் ஒளிபொருந்திய தேவருள் சிறந்தவர்களுக்கும் கிடைக்குமா?

## 304

ஸுரடி (மே. 28) தே^v^சாதி^v^

ப. கீ^v^தார்த்த,மு ஸங்கீ^v^தாநந்த^v^மு
நீ தாவுந ஜூட^v^ரா ஓ மநஸா (கீ^v^)

அ. ஸீதாபதி சரணுப்^v^ஜமு லிடு^v^கொங்ந
வாதாத்மஜுநிகி பா^v^க^v^ தெலுஸுரா (கீ^v^)

ச. ஹரிஹர பா^v^,ஸ்கர காலாதி^v^கர்மமு-
லநு மதமுல மர்மமுல நெறிங்கி^v^ந
ஹரிவர ரூபுடு^v^ ஹரிஹய விநுதுடு^v^
வர த்யாக^v^ராஜ வரது^v^டு^v^ ஸுகி,ரா (கீ^v^)

மனமே! பகவத் கீதையின் பொருளையும் சங்கீதத்தின் ஆனந்தத்தையும் உன்னிடமே (இவ்விடத்தில்) காண்பாயாக. சீதா நாயகனின் திருவடித் தாமரைகளைத் தன்னுள்ளத்தில் கொண்டிருக்கும் அனுமனுக்கு (இவ்வுண்மை) நன்கு தெரியும்.

திருமால், சிவன், சூரியன், காலம், கர்மம் ஆகிய ஐந்து அதிகார சொரூபங்களையும், மதங்களின் இரகசியங்களையும் அறிந்த வானர சிரேஷ்டனுகிய இவ்வனுமன் இந்திரனுல் வணங்கப்படுபவன். எப்பொழுதும் சுகித்திருப்பவன்.

## 305

ஸுரடி ரூபகம்

ப. ப^v^,ஜநபருல கேல த^v^ண்ட^v^-
பாணி ப^v^,யமு மநஸா (ப^v^,)

அ. அஜருத்^v^ர ஸுரேசுல-
காஸ்தா,ந மொஸங்கு^v^ராம (ப^v^,)

---

* ''ரம் க்ரிடா^v^ யாம்.'' என்பது வடமொழி தாது. ரம் என்ற வினைச்சொல்லுக்கு கிரிடை அல்லது விளையாட்டு என்று பொருள். இதிலிருந்து 'ராம' என்னும் சப்தம் பிறக்கிறது. 'சகல மாந்தர்களின் உள்ளத்தில் விளையாடுபவன்' என்ற பெருமை இராமனைத் தவிர மற்ற தெய்வங்களுக்கு இல்லை என்பது ஸ்வாமியின் திருவுள்ளம்.

ச. அண்ட³கோட்லு நிண்டி³ந கோ-
த³ண்ட³பாணி முக,முநு ஹ்ருத்-
புண்ட³ரீகமுந ஜூசி பூஜ ஸல்புசு
நிண்டு³ ப்ரேமதோ க³ரங்கு³
நிஷ்காமுலகு வர வே-
த³ண்ட³பாலு தா³ஸுடை³ந
த்யாக³ராஜு ஸேயு நாம (ப³)

பிரமன், உருத்திரன், தேவேந்திரன் ஆகியோருக்கு அவரவரின் பதவியை அளிக்கும் இராமபிரானின் பஜனையில் ஆழ்ந்திருப்பவர்களுக்கு யமபயம் எதற்கு?

அண்டகோடிகளில் நிறைந்திருக்கும் கோதண்டபாணியாகிய இராமனின் திருமுக மண்டலத்தை இதயத் தாமரையில் என்றும் தரிசித்துப் பூசை செய்து அளவற்ற பக்தியுடன் மனங்கரையும் பற்றற்ற துறவிகளுக்கும், கஜேந்திரனைக் காத்த பகவானின் தாசனாகிய தியாகராஜன் புரியும் நாம சங்கீர்த்தனத்தில் ஈடுபடுபவர்களுக்கும் (யம பயம் ஏது?)

## 306

ஸுரடி தே³சாதி³

ப. ராமசந்த்³ர நீத³ய ராம ஏல ராத³ய (ரா)

அ. காமகோடிஸுந்த³ர கரத்⁴ருதமந்த³ர
ப்ரேமமீற முந்த³ர பி³ல்வ ராகயுந்து³ர (ரா)

ச. 1. காநம்பு³ தாபமோ கைகமீத³ கோபமோ
நேநு ஜேயு பாபமோ நீகு சக்தி லோபமோ (ரா)

2. ஆட³ த³ங்ந ரோஸமோ அலநாடு³பாஸமோ
மேட³லேகி வாஸமோ மேமுஸேயு தோ³ஸமோ (ரா)

3. கல்லலைந நேயமா கண்டே நீகு ஹேயமா
தல்லடி³ல்ல ந்யாயமா த்யாக³ராஜ கே³யமா (ரா)

இராமசந்திர! உன் தயை எனக்கேன் கிடைக்கவில்லை? கோடி மன்மதரை நிகர்த்த அழகனே! மந்தரகிரியைத் தாங்கியவனே! மிக்க ஆசையுடன் அழைத்தால் யாரேனும் எதிரில் வராமலிருப்பார்களா?

(இதன் காரணம்) வனவாசத்தின் பொழுது நீ அனுபவித்த துன்பமோ? அல்லது கைகேயியின் மீது கோபமோ? நான் செய்த பாவமோ? அல்லது உனது சக்தியின்மையோ?

*(சீதை) உன்னைப் பெண்ணென்று பரிகாசம் செய்ததால் ரோஷமோ? அல்லது அன்று நீ மேற்கொண்ட உபவாசமோ? அரண்மனையில்லாத (வன) வாசமோ? நாங்கள் புரிந்த குற்றமோ?

என் சிநேகம் பொய் மயமானதோ? அல்லது என்னைக் கண்டாலே உனக்கு வெறுப்பா? என்னைத் தத்தளிக்கவிடுவது உனக்கு நியாயமா? தியாகராஜன் துதிபாடும் தெய்வமே!

## 307

ஸுரடி ரூபகம்

| | | |
|---|---|---|
| ப. | ராம தை᳚வமா ராக᳚ ராக᳚ லோப᳚மா | (ரா) |
| அ. | மோமு ஜூபுமா ஜக᳚ந்மோஹந கரமா | (ரா) |
| ச. | 1. தொ᳚ங்க᳚ ஜாட᳚லேல இல்லு ப᳚ங்க᳚ராயெநா<br>ரங்க᳚டா᳚ விபீ᳚ஷணுநிகி பங்க᳚நாமமிடி᳚நீதி | (ரா) |
| | 2. வெந்ந தா பு᳚ஜிஞ்சி கோ᳚ப கந்யமுக,முந<br>திந்நகா᳚ நலந்தி᳚நட்டு தீ᳚நரக்ஷக ஸீதா | (ரா) |
| | 3. நேர்ப்பு ஜூபுமா யங்க᳚லார்ப்பு பா᳚புமா<br>ஓர்ப்பு க᳚ல்கு᳚ த்யாக᳚ராஜு ஒகபாரி சரணண்டே | (ரா) |

இராமனெனும் எனது தெய்வமே! வர வர உனக்கேன் இக் கஞ்ஜத்தனம்? புவனத்தை மோகிக்கச் செய்யும் வடிவுடையவனே! உன் திருமுக தரிசனம் தருவாயாக.

கள்ளத்தனம் நிறைந்த சைகைகள் எதற்கு? இவற்றினால் உன் வீடு பொன்மயமாகி விட்டதா? இரங்கநாதனென்னும் உன் அர்ச்சா ரூபத்தில் நீ *விபீஷணனுக்குப் பட்டை நாமம் சாற்றினாய். கிருஷ்ணவதாரத்தில் வெண்ணெயை நீ விழுங்கிவிட்டு மிகுதியை கோபியரின் முகத்தில் தடவி அவர்களைக் காட்டிக் கொடுத்தாய். எளியவரைக் காப்பவனே!

என் துயரைப் போக்கியருளி உன் திறமையைக் காட்டுவாய். மிகுந்த பொறுமையுடைய இத்தியாகராஜன் ஒருமுறை சரணென்று கூறினால் போதாதா?

---

* இராமன் காட்டிற்குப் புறப்பட்டபொழுது சீதையை உடன் அழைத்துச் செல்ல மறுத்ததால் அவள் ''ராம! ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்'' (என் தந்தை ஆண் வடிவங்கொண்ட பெண்ணை மாப்பிள்ளையாகப் பெற்றார்) என்று பரிகாசம் செய்தது இங்கு குறிப்பிடப் பெறுகிறது.

* இராம பட்டாபிஷேகம் முடிந்த பின்னர் இரங்கநாதனுடைய விக்கிரஹத்தை விபீஷணன் இலங்கைக்கு எழுந்தருளப் பண்ணிய பொழுது பகவான் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தையடைந்ததும் தான் அங்கேயே பள்ளிகொண்ட சம்பவம் இங்கு குறிப்பிடப்படுகிறது.

## 308

ஸுரடி தேவசாதிவ

ப. வேறெவ்வரே கவதி வேமாருலகு ஸீதாபதி (வே)

அ. ஈரேடுவ லோகமுல கா-
தாவருடவகுவ நிநு விநா (வே)

ச. ப்வருந்தாவரகாராதிவ முனிப்வருந்தவ சுகஸநகஸ-
நந்தவந ஸ்ரீநாரதாவரவிந்தோவ த்வபவவ பு-
ரந்தவருலகு ஸ்ரீத்யாகவராஜுநிகி நிநு விநா (வே)

*சீதை மணாளனே! எத்தனை முறை நாங்கள் யோசித்துப் பார்த்தாலும், ஈரேழு புவனங்களுக்கும் ஆதாரமான உன்னைத் தவிர எங்களுக்கு வேறு யார் புகல்?*

*வானவர், முனிவர் குழாங்கள், சுகர், ஸநக ஸநந்தனர், ஸ்ரீ நாரதர், பிரமன், சிவன், இந்திரன் ஆகியோருக்கும் இத் தியாகராஜனுக்கும் (உன்னையன்றி வேறு யார் கதி?)*

## 309

சங்கராபவரணம் (மே. 29) ஆதிவ

ப. ஈவரகு ஜூசிநதிவ சாலதாவ
யிங்க ஈ ரீதியா (ஈ)

அ. பாவநமு ஸேயு சக்தி கணகவநி
பாபமு கவலதாவ கரிவரதவ நந் (நீ)

ச. 1. ஸ்ரீசரணுசுகாவசந சயந ப-
ரேச நீ பதவ குசேசயார்ச்சநமு
நே ஸேயக துவராஸசே பவவ
பாசபவத்வதுவடைவ காவஸி தாளநி நந் (நீ)

2. பரலோக பவய விரஹிதுலைந
நருலு நாதுவபை மரி யஸூயல
பவறசிந பாவதவலு தரமுகாவக நீ
சரண யுகவமுலநு சரணொந்திந நந் (நீ)

3. நாகா^சந ஸதா^க^மந க்^ருணா-
ஸாக^ர நிந்நுவிநா யெவரு நீ-
வே க^தியநி வேவேக^ மொறலநிடு^
த்யாக^ராஜுநி ராக^ரஹித நந் (நீ)

இதுவரையில் நீ என்னைக் (காப்பாற்ருமல் வேடிக்கை) பார்த்தது போதாதா? இனியும் உன் போக்கு அவ்விதந்தானு? அனைத்தையும் புனிதமாக்கும் உன் சக்தியைக் கண்டு விலகாத பாவமும் உண்டா? (விலங்காகிய) யானையையுங் காத்தவனே!

லக்ஷ்மிபதியே! காற்றைப் புசிக்கும் ஆதிசேடன் மீது துயில் பவனே! பரதெய்வமே! உன் திருவடிகளெனும் தாமரைகளை நான் அருச்சனை செய்யாமல் துராசை கொண்டு சம்சாரக் கட்டினுல் பிணைக்கப்பட்டுத் துன்பம் பொறுக்க முடியாமல் தவிக்கும் என்னை (இதுவரையில் வேடிக்கை பார்த்தது போதாதா?)

பரலோக பயம் சிறிதுமற்ற மாந்தர் என்மீது பொருமை கொண்டு இழைத்த கொடுமைகளைத் தாளமாட்டாமல் உன் சரணங்களையே தஞ்சமென்றடைந்த என்னை (இதுவரையில் வேடிக்கை பார்த்தது போதாதா?)

கருடவாகனனே! கருணைக்கடலே! பற்றில்லாதவனே! உன்னையன்றி வேறு புகல் யாருளர் என்று சதா முறையிடும் என்னை (இதுவரையில் வேடிக்கை பார்த்தது போதாதா?)

## 310

சங்கராப^்ரணம் ஆதி^

ப. எது^ட நிலிசிதே நீது^ ஸொம்மு
லேமி போ^து^ரா[1] (எ)

அ. நுது^டி வ்ராதகா^நி மட்டுமீரநு
நாதரமு தெ^லிஸி மோஸமு போ^து^நா (எ)

ச. ஸராஸரிக^ ஜூதுரா நாது^யவ
ஸரால தெ^லியுமு வராலடு^க^ ஜா-
லரா ஸகலதே^வராய மநவி வி-
நராக^்ஹர ஸுந்த^ராகார நா (எ)

2. விதே^ஹஜாரமண தே^வ ப்^ரோவக^
நிதே^ ஸமய மந்யதே^வதல வே-
டதே^ மநஸு தெ^லியதே^மி ராக^்வ
இதே^டி சௌர்யமு பதே^ பதே^ நா (எ)

---

1 போ^வுரா

3. தராந தொ^v^ரகநி பராகு நாயெட^v^-
நு ராம ஜேஸிதே ஸூரா ஸூருலு மெத்-
துரா யிபுடு^v^ ஈ ஹராமிதநமே-
லரா ப^v^க்த த்யாக^v^ராஜநுத நா (எ)

என் எதிரில் தோன்றினால் உன் செல்வம் ஏதாவது போய் விடுமா? என் தலையெழுத்தின்படியே எல்லாம் நடக்கும். என் சக்தி எனக்குத் தெரியுமாதலால் அளவுக்கு மீறி (உன்னை ஏதாவது கேட்டு) மோசம் போவேனா?

நேர்மையுடன் என்னைக் கண் பார்த்து என் கோரிக்கைகளை நீயே யறிந்துகொள். வரங்கள் கேட்க என்னாலாகாது. என் விண்ணப்பத்தைக் கேள். தேவர்களின் தலைவனே! பாவங்களை யகற்றுபவனே! வடிவழகனே!

வைதேஹி நாயகனே! என்னைக் காக்க இதுவே தருணம். என் மனம் வேறு தெய்வங்களை வேண்டாது. இராகவனே! இது உனக்குத் தெரியாதா? இது என்ன சூரத்தனம்?

உன்னிடம் என்றுமில்லாத இப்பராமுகத்தை என்மீது இப் பொழுது காட்டினால் தேவரேயன்றி அரக்கர்கூட மெச்சமாட் டார்கள். உனக்கு இவ்வநியாயம் ஏன்?

## 311

சங்கராப^v^ரணம் த்ரிபுட

ப. எந்து^v^கீ சலமு நேநெவரிதோ தெ^v^ல்புது^v^ (எந்)

அ. கந்தர்ப்பஜநக நீகேகாந்த ஜெப்பெநோ ஹரிஹரி (எந்)

ச. 1. கௌஸல்ய ஜெப்பெநோ நீகே ஸம்மதிலேதோ^v^
அஹல்ய ஜெப்பெநோ நந்நாத^v^ரிஞ்சலேவோ (எந்)

2. கப^v^ரீபா^v^ரிணி ஸீதாகாந்த ஜெப்பெநோ லேக
சப^v^ரி ஜெப்பெநோ நீது சாந்தமெந்து^v^போயெ (எந்)

3. பா^v^லயௌ ஸ்வயம்ப்ரப^v^ ஜெப்பெநோ
தாள நாதரமா த்யாக^v^ராஜுநிபை நீ (கெந்)

உனக்கேன் இந்த சஞ்சல புத்தி? இதை நான் யாரிடம் கூறு வேன்? மன்மதன் தந்தையே! இது எப்பெண்மணியின் போதனையோ? ஹரி, ஹரி!

அன்னை கோசலை ஏதேனும் கூறினளோ? அல்லது உனக்கே (என்னைக் காக்க) இஷ்டமில்லையோ? அகலிகை ஏதாகிலும் கூறினாளோ? அல்லது என்னை ஆதரிக்க உனக்குச் சக்தியில்லையோ? அழகிய கூந்தலுடைய சீதை ஏதேனும் உபதேசம் செய்தாளோ?

அல்லது சபரி ஏதேனும் உரைத்தாளோ? உன் அமைதி எங்குப் போயிற்று? சிறுமியாகிய சுயம்பிரபை ஏதாவது போதனை செய்தாளோ? இந்நிலைமையை என்னால் பொறுக்க முடியுமா?

### 312

சங்கராப⁴ரணம் தே³சாதி³

ப. எந்து³கு பெத்³த³லவலெ பு³த்³தீ⁴யவு
எந்து³ போது³நய்ய ராமய்ய (எந்)

அ. அந்த³றிவலெ தா³டி தா³டி வத³ரிதி
அந்த³ராநி பண்டா³யெ க³த³ரா (எந்)

ச. வேத³சாஸ்த்³ர தத்வார்த்த²முலு தெ³லிஸி
பே⁴த³ரஹித வேதா³ந்தமுலு தெ³லிஸி
நாத³ வித்³ய மர்மம்பு³லநு தெ³லிஸி
நாத² த்யாக³ராஜநுத நிஜமுக³ (எந்)

பெரியோர்களுடையதைப் போன்ற புத்தியை எனக்கு நீ அருளாததேன்? நான் எங்கே போவேன்? இராமய்ய! எல்லோரையும் போல் இறுமாப்படைந்து இங்குமங்கும் குதித்துப் பிதற்றினேன். (உன் அருள்) எட்டாத கனியாகி விட்டதே!

வேத, சாஸ்திரங்களின் உட்பொருளை நான் அறிந்தும், வேறுபாடில்லாத வேதாந்தங்களையறிந்தும், நாதோபாசனையின் இரகசியங்களையறிந்தும் உண்மையில் (மகான்களைப் போன்ற புத்தியை எனக்கு நீ அளிக்காததேன்?)

### 313

சங்கராப⁴ரணம் ஆதி³

ப. ஏமி நேரமு நந்நுப்³ரோவ
எந்த பா⁴ரமு நாவல்ல (ஏ)

அ. ஸாமஜராஜ வரது³ட³நி முநுல
[1]ஸத்கீர்த்தி கல்க³லேதா³ நாபை (ஏ)

ச தீ³நப³ந்து⁴வநி தே³வதே³வுடஸ[2]—
மாநக⁴நுடநி த³ர்மாத்முட³நுசுநு
ஜ்ஞாந த⁴நுலு கு³ணகா³நமு ஸேய பி³-
ராந ஜூட³வு த்யாக³ராஜார்ச்சித நாபை (ஏ)

---

1 லெஸ்ஸா 2 தே³வுட³நி

நான் புரிந்த குற்றம் என்னவோ? என்னைக் காக்க உனக்கு எவ்வளவு பாரமோ? கஜேந்திரனுக்கு அருள் புரிந்தவனென்று நீ முற்காலத்தில் புகழ் பெறவில்லையா?

நீ எளியவரின் நண்பனென்றும், தேவாதிதேவனென்றும், இணையற்ற பெருமானென்றும், தர்மாத்மாவென்றும் ஞானச் செல்வர்கள் உன் குணங்களைத் துதிபாடினால் நீ அவர்களை விரைவில் கண் பாராயோ? (ஆகவே, என் மீது என்ன குற்றம்?)

## 314

சங்கராப॒ரணம் சாபு

ப. பு³த்³தி⁴ராது³ பு³த்³தி⁴ராது³
பெத்³த³ல ஸுத்³து³லு விநக (பு³)

அ. பு³த்³தி⁴ராத³ பு³த்³தி⁴ராது³
பூ⁴ரி வித்³யல நேர்ச்சிந (பு³)

ச. 1 தா⁴ந்ய த⁴நமுலசேத
த⁴ர்மமெந்தயு ஜேஸிந ய-
நய சித்தப⁴க்துல வா-
க³ம்ருதபாநமு ஸேயக (பு³)

2. மாநக பா⁴க³வதாதி³ ரா-
மாயணமுலு சதிவிந
மாநுஷாவதார சரித
மர்மஜ்ஞுல ஜத கூ³டக (பு³)

3. யோக³முலப்⁴யஸிஞ்சிந
போ⁴க³மு லெநதோ கல்கி³ந
த்யாக³ராஜநுதுடௌ³ ராம-
தா³ஸுல செலிமி ஸேயக (பு³)

சிறந்த கல்வி கற்றாலும் (ஒருவனுக்கு)ப் பெரியோர்களின் உபதேச மொழிகளின்றி (விவேக) புத்தி வராது.

தானியங்கள், செல்வம் முதலியவற்றினால் ஏராளமாக தர்மங்கள் செய்தாலும், ஒரே சித்தமுடைய பக்தர்களின் நற்போதனையாகிய அமுதபானம் செய்யாதவனுக்கு (நல்லறிவு கை கூடாது).

விடாமல் பாகவதம், இராமாயணம் முதலிய நூல்களைப் படித்தாலும், பகவான் மானிட அவதாரமெடுத்த இரகசியத்தையறிந்தவர்களுடன் உறவாடாத போனால் (அறிவு பிறக்காது).

யோகமார்க்கத்தில் ஈடுபட்டாலும், போகங்கள் பலவற்றை யடைந்தாலும், தியாகராஜன் வணங்கும் இராமதாசர்களின் நட்பைப் பெருவிடில் (புத்தி வராது).

## 315

சங்கராப⁴ரணம் ரூபகம்

ப. ப⁴க்தி பி⁴ச்ச மீயவே
பா⁴வுகமகு³ ஸாத்விக (ப⁴)

அ. முக்தி ககி₁ல சக்திகி த்ரி
மூர்த்துல கதி மேல்மி ராம (ப⁴)

ச. ப்ராணமுலேனிவானிகி ப³ங்கா³ரு பாக³ ஜுட்டி
ஆணிவஜ்ர பூ⁴ஷண முரமந்து³ பெ³ட்டுரீதி
ஜாணலகு பு³ராணக³ம சாஸ்த்ர வேத³ ஜப ப்ரஸங்க³
த்ராண க³ல்கி³யேமி ப⁴க்த த்யாக³ராஜநுத ராம (ப⁴)

மங்களம் தருவதும் சத்துவகுணம் நிறைந்ததுமான இராம பக்தியை எனக்குப் பிட்சையாக அருள்வாய். அதுவே முக்தியையும், சகல சக்திகளையும், திரிமூர்த்திகளையும் காட்டிலும் மேன்மை வாய்ந்தது.

(அத்தகைய பக்தியில்லாவிடில்) பிணத்திற்குப் பொன்மயமான தலைப்பாகை சுற்றி, மார்பில் வைர நகைகளை அணிவிப்பது போல், துணிவும் கபடமும் நிறைந்த ஸ்திரீகளுக்குப் புராணம்' ஆகமம், சாத்திரம், வேதம், சபம் முதலியவற்றைக் குறித்துப் பிரசங்கம் செய்யும் சக்தியை அளித்து என்ன பயன்?

## 316

சங்கராப⁴ரணம் ரூபகம்

ப. மநஸு ஸ்வாதீ⁴நமைந யா க⁴நுநிகி
மரிமந்த்ர தந்த்ரமு லேல (ம)

அ. தநுவு தாநு கா³த³நி யெஞ்சுவாநிகி
தபஸு சேயநல த³சரத₁பா³ல (ம)

ச. 1. அந்நி நீவநுசு யெஞ்சிந வாநிகி
ஆச்ரம பே⁴த³மு லேல
கந்நு க³ட்டு மாயலநி யெஞ்சுவாநிகி
காந்தல ப்⁴ரமலேல த³சரத₁பா³ல (ம)

2. ஆஜன்மமு து³ர்விஷய ரஹிதுநிகி க³-
தாக³த மிகயேல
ராஜராஜேச நிரஞ்ஜந நிருபம
ராஜவத³ந த்யாக³ராஜவிநுத (ம)

மனம் தன் வசப்பட்ட ஞானிக்கு மந்திர தந்திரங்கள் எதற்கு? தயரதன் மைந்தனே! இவ்வுடல் ஆத்மாவல்ல (தானல்ல) என்று நினைப்பவனுக்குத் தவம் செய்யவேண்டிய அவசியம் ஏது?

அனைத்தும் நீயேயென்று எண்ணுபவனுக்கு (சந்நியாசம் முதலிய) ஆசிரம வேறுபாடுகள் ஏது? (உலகம்) கண்கட்டு மாயையென்று துணிந்தவனுக்குப் பெண்டிர் (பொருள்) முதலியவற்றின் மீது மோகம் ஏது? பிறந்தது முதல் கெட்ட விஷயங்களை நாடாமலிருப்பவனுக்கு இறந்தகால, எதிர்கால சிந்தனை எதற்கு? ராஜாதிராஜனே! நிர்விகாரனே! இணையற்றவனே! மதிவதனனே!

## 317

சங்கராப⁴ரணம் ஆதி³

ப. மரியாத³கா³து³ரா (ம)

அ. கருணாகர வாரிநி வீரிநி
ஸரிஜேஸி சூசுசுண்டே³தி³ (ம)

ச. ராக³மு தாளமு ரக்தி ப⁴க்தி ஜ்ஞாந
யோக³மு மறியநுராக³மு லேநி
பா⁴க³வது லுத³ரசயநுலே கா³நி
த்யாக³ராஜார்ச்சித தாரகசரித (ம)

கருணாகரனே! நீ அவர்களையும், இவர்களையும், (போலி பக்தரையும் மெய்யடியார்களையும்) சமமாகக் கருதுவது உனக்கு மரியாதையல்ல.

இராகம், தாளம், உணர்ச்சி, பக்தி, ஞானம், யோகம், அன்பு முதலியவையற்ற பாகவதர்கள் தங்கள் வயிற்றை நிரப்புவதிலேயே குறியுள்ளவர்களன்றோ? தியாகராஜன் அருச்சிக்கும் தாரகசரிதனே!

## 318

*சங்கராப⁴ரணம் ரூபகம்

ப. வல்லகா³த³நக ஸீதா-
வல்லபா⁴ப்³ரோவு நா (வ)

---

*ஹரிகாம்போஜியிலும் பாடப் பெறுகிறது.

அ. (நீ) வல்லநாடி ப¦க்தசரித
மெல்ல வ்ராயநேலரா நா (வ)

ச. ஸ்தம்ப¦முநு த்ருமருகு¨ந
டி¨ம்பு¦டை¨யசோத¨யொடி¨நி
ட¨ம்பு¦டை¨ந முசுகுந்து¨நி
டா¨ஸி மருகு¨சு
ஸம்ப¦விஞ்சி யுக¨யுக¨முந
ஸரஸ த்யாக¨ராஜவிநுத
கும்ப¦க ரேசக விது¨லநு
கோ¨ரி ப்¨ரோசிநாவு நா (வ)

சீதா நாயகனே! என்னால் முடியாதென்று கூறிவிடாமல் என்னைக் காப்பாற்று. (இல்லாவிடில்) நீ முன்பு பக்தர்களைக் காத்த வரலாறுகளையெல்லாம் எழுதி என்ன பயன்?

(பிரஹ்லாதனின் பொருட்டு) கம்பத்திலும், (சுக்கிரீவனுக்காக) மரத்தின் மறைவிலும், குழந்தையாக யசோதை மடியிலும், கர்வங் கொண்ட முசுகுந்தனுக்காக ஒளிந்து மறைந்திருந்தும் அருள் புரிந்தாய். ஒவ்வொரு யுகத்திலும் அவதாரமெடுத்து, கும்பகம், ரேசகம் முதலியவற்றை அப்பியாசம் செய்யும் (பிராணாயாமம் செய்யும்) யோகிகளை நீயாகவே தேடிச் சென்று காப்பாற்றினாய். (ஆகவே, என்னால் முடியாதென்று கூறிவிடாதே).

## 319

சங்கராப¦ரணம் ஆதி¨

ப. ஸ்வர ராக¨ ஸுதா¦ரஸயுத ப¦க்தி
ஸ்வர்கா¨பவர்க¨முரா ஓ மநஸா (ஸ்வ)

அ. பரமாநந்த¨மநே கமலமுபை
ப¨க பே¦கமு செலகே¨மி மநஸா (ஸ்வ)

ச. 1. மூலாதா¦ரஜ நாத¨மெறுகு¨டே
முத¨மகு¨ மோக்ஷமுரா
கோலாஹல ஸப்தஸ்வர க்¨ருஹமுல
கு¨றுதே மோக்ஷமுரா ஓ மநஸா (ஸ்வ)

2. மத்¨த¨ல தாளக¨துல தெலியகநே
மர்தி¨ஞ்சுட ஸுக,மா

சுத்^4த^4 மநஸுலேக பூஜ சேயுட
ஸூகர வ்ருத்திரா ஓ மநஸா (ஸ்வ)

3. ப^3ஹு ஜந்மமுலகு பைநி ஜ்ஞாநியை
ப^3ரகு^3ட மோக்ஷமுரா
ஸஹஜ ப^4க்திதோ ராக^3ஜ்ஞாந
ஸஹிதுடு^3 முக்துடு^3ரா ஓ மநஸா (ஸ்வ)

4. ரஜத கி^3ரீசுடு^3நக^3ஜகு தெ^3ல்பு ஸ்வ-
ரார்ணவ மர்மமுலு
விஜயமுக^3ல தயாக^3ராஜு டெ^3ருகே
விச்வஸிஞ்சி தெ^3லுஸுகோ மநஸா (ஸ்வ)

மனமே! ஸ்வரம், இராகம் ஆகியவற்றின் அமுதரசத்துடன் கூடிய பக்தியே சுவர்க்கம், மோட்சம் இரண்டையும் அளிக்க வல்லது. பரமானந்தமென்னும் தாமரை மீது கொக்கும், தவளையும் உட்கார்ந்து என்ன பயன்?

மூலாதாரத்தில் பிறக்கும் நாதத்தை அறிவதே மகிழ்ச்சி தரும் மோட்சமாகும். கோலாகலம் நிறைந்த (சப்த) ஏழு ஸ்வரங்களின் உற்பத்தி ஸ்தானங்களைத் தெரிந்துகொள்வதே ஒருவனுக்கு மோட்சமாகும்.

மத்தளத்தின் தாள கதிகளையறியாமல் அதை அடித்தால் சுகம் கிடைக்குமா? (அவ்விதமே) மனத்தூய்மையில்லாமல் பூசை செய்வது மிகவும் நீசமான (பன்றியின்) பிழைப்பாகும்.

*அனேக சன்மங்களுக்குப் பிறகு ஒருவன் ஞானியாக விளங்குவது மோட்சமடையும் வழியாகும். (ஆயினும்) இயற்கை யான பக்தியுடன் இராக ஞானம் படைத்தவன் அதிவிரைவில் முக்தன் ஆகிறான்.

கைலாசபதியாகிய சிவபெருமான் பார்வதிக்குரைத்த இந்த ''ஸ்வரார்ணவ'' இரகசியங்களையறிந்து வெற்றி பெற்ற தியாக ராஜனை நம்பி இவற்றை நீ தெரிந்துகொள்.

## 320

அடாண (மே. 29) ஆதி^3

ப. அட்ல ப^3லுகுது^3 நிட்ல ப^3லுகுது^3
வந்து^3 கேமி ஸேது ராம நீ (வ)

---

*''பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவான் மாம் ப்ரபத்யதே'' (அனேக சன்மங்களின் முடிவில் ஞானி என்னை வந்தடைகிறான்) என்பது கீதையில் கண்ணன் கூறிய மொழி.

அ. தொட்ல நர்ப்ˇ,குல நூதுவு மறிமறி
தோசிநட்லு கிˇல்லுதுவு ஸ்ரீராம நீ (வ)

ச. ஜீவுல சிக்ஷிஞ்சகˇ நேர்த்துவு சிரஞ்-
ஜீவுலுகாˇ ஜேய நேர்த்துவுரா
பாˇ,வமெறிகிˇ ப்ˇரோதுவு ஸத்ˇப,க்த
பாˇ,கˇதேˇ,ய ஸ்ரீ த்யாகˇராஜவிநுத (அ)

*நீ அவ்விதமும் பேசுவாய். இவ்விதமும் பேசுவாய். அதற்கு நான் என் செய்வேன், இராம? தொட்டிலில் குழந்தைகளை யிட்டு ஆட்டுவாய். பின்னர் உனக்குத் தோன்றும்பொழுது அவர்களைக் கிள்ளியும் விடுவாய்.*

*ஜீவர்களுக்கு சிட்சை விதிக்கவும் அறிவாய். அவர்களைச் சிரஞ்சீவிகளாக்கி ரட்சிக்கவும் அறிவாய். மாந்தரின் மனோபாவ மறிந்து அவர்களைக் காப்பதும் நீயே! நீ பக்தரின் பேரதிர்ஷ்ட மல்லவா?*

## 321

அடா,ண ஜம்ப

ப. அநுபம குˇணம்புˇதீˇ, யநி நிந்நு நெரநம்மி
யநுஸரிஞ்சிந வாடˇநைதி (அ)

அ. மநுபகயெ யுந்நாவு மநுபதீ வ்ராஸிமே
மநுப மாகெவரு விநுமா தˇய ராநி (அ)

ச. 1. ஜநக ஜாமாதவை ஜநகஜா மாதவை
ஜநக ஜாலமு சாலு சாலுநு ஹரி (அ)

2. கநகபடதˇ,ர நந்நு கந கபடமேல தநு
கநகபட,ந மு ஸேதுகாˇநி பூˇநி

3. கலலோந நீவே ஸகலலோக நாதா, கோ-
கல லோகுவகˇ நிச்சி காˇசிநதிˇ விநி (அ)

4. ராஜகுல கலசாப்ˇதிˇ, ராஜ ஸுரபால கˇஜ
ராஜரக்ஷக த்யாகˇராஜவிநுத (அ)

*நிகரற்ற குணக்கடல் நீயேயென்று திடமாக நம்பி உன்னைப் பின்பற்றுபவனாக ஆனேன். என்னைக் காப்பாற்றாமலே இருக்கிறாயே! மநுவம்சத்தின் நாயகனே! என் எளிமையை விவரித்து உனக்கு எழுதியனுப்ப எனக்கு யாருளர்? இதைக் கேள். உன் தயை வருமாறு செய்வாய்.*

ஜநக மகாராஜனின் மருகனே! ஜானகியின் தாயாகிய பூமி தேவியைப்போல் பொறுமையுள்ளவனே! என் தந்தையே! கால தாமதம் இனிப் போதும், போதும், ஐயனே!

பொன்னுடையணிந்தவனே! என்னைப் பார்த்து உனக்குக் கபடமேன்? இவ்வுடலென்னும் செல்வத்தையே நான் சதா நினைக்கிறேனென்று?

சகலலோகநாதனே! கனவிலும் நீயே என் தெய்வம். (திரௌபதிக்கும் கோபியருக்கும்) அவர்களது பக்திக்கு வசப் பட்டு நீ ஆடையளித்துக் காப்பாற்றியதை நான் கேள்வி யுற்றிருக்கிறேன்.

அரச வம்சமென்னும் கடலில் உதித்த சந்திரன் நீ. தேவ ரைக் காப்பவன். கஜேந்திரனை ரட்சித்தவன். தியாகராஜனால் வணங்கப்பெறுபவன்.

## 322

அடா,ண — த்ரிபுட

ப. ஏபாபமு ஜேஸிதிரா ராம நீ
கேபாடைந த^v யராது^v நே (நே)

அ. நீ பாத^v முலநு க^v ந மொறலிடி^v தே
நீ பாடுந விநி விநநட்லுண்டு^v டகு நே (நே)

ச. 1. நாத^v ருபுட^v வநி விநி நே ஸ்ரீ-
நாத, நிந்நு நம்மிதிநி
நா தா^v புரமுந நுண்டி^v யு நந்-
நாத^v ரிஞ்சக யூரகுண்டு^v டகு நே (நே)

2. எந்து^v கநுசு ஸைரிந்துநுரா ராம
முந்து^v வெநுக தோசது^v ரா
முந்த^v ர நிலிசி ப^v லுகுரா நா-
யந்து^v நீகு ஈவறகு மறபுரா (ஏ)

3. கா^v ரவிம்ப த^v யராதா^v பாலு-
கா^v ரு மோமு ஜூபராதா^v
யூரகுண்டு^v ட மரியாத^v நா-
தூ^v ரா தெ^v ல்புவா ரெவ்வரு லேரோ (ஏ)

4. கந்நவாரிநி வேடி^v நாநா நா-
யந்ந நிந்நாடு^v கொந்நாநா

நிந்நு நம்மிநவாட³நு கா³நா முநி
ஸந்நுத கபடமுலந்நி நாதோநா (ஏ)

5. விநவய்ய இநகுலத⁴நமா ராமா
நிந்நு நம்மி யிங்க து³ரிதமா ப⁴-
வநமுந நீ கிதி³ க⁴நமா நீ-
மந ஸிடுவண்டி த³நுசுநு தெ³லுபுமா (ஏ)

6. ஸத³யுடை³ யிங்க பராகா நா
ஹ்ருத³யவாஸுடு³ நீவே கா³க
இதி³ பு³த்³தி⁴யநுசு தெ³ல்பலேக நாடு³
மொத³லுகா³நு யூரகுந்நாவு கா³க (ஏ)

7. ராஜசேக²ர ஸந்நுதாங்க³ தயாக³-
ராஜ ஹ்ருதா³ப்ஜ ப்⁴ருங்க³
ராஜித கருணாபாங்க³ ரதி
ராஜ ஜநக பாபத்⁴வாந்தபதங்க³ (ஏ)

இராமனே! நான் என்ன பாவம் செய்தேன்? உனக்குச் சிறிதும் தயை வரவில்லையே! உன் திருவடிகளைக் காணவேண்டுமென்று நான் முறையிட்டால் நீ அதைக் கேட்டும் கேளாதது போல் உன் போக்குப்படி இருப்பதற்கு (நான் என்ன பாவம் செய்தேன்?)

லக்ஷ்மிபதியே! நீ நாதஸ்வரூபன் என்று கேள்வியுற்று உன்னை நம்பினேன். நீ என்னருகிலிருந்தும் என்னையாதரியாமல் இருப்ப தேன்?

நான் எதையென்று பொறுப்பேன்? எனக்கு முன்பின் தெரியவில்லை. நீ என் எதிரில் தோன்றி என்னுடன் பேசு. இது வரையில் நீ என்னை மறந்துவிட்டாயே!

என்னை கவுரவிக்க உனது தயை வராதா? பால் வடியும் முகத்தை நீ காட்டலாகாதா? நீ சும்மா விருப்பது மரியாதையா? இது என் சொந்த ஊரா? உன்னிடம் கூறுபவர் யாருமிலரா?

கண்டவரையெல்லாம் நான் இரந்தேனா? என் அண்ணலே! உன்னைக் குறை கூறினேனா? நான் உன்னையே நம்பியவனல்லவா? முனிவரால் தொழப்படுபவனே! உன் கபடமெல்லாம் என்னிடமேதானா?

தயை நிறைந்த உனக்கு இன்னும் பராமுகமா? என் இதயத்தில் வசிப்பவன் நீயேயல்லவா? நற்புத்தியை எனக்குப் புகட்டாமல் நான் பிறந்த நாள் முதல் சும்மாவிருக்கிறாயே!

பிறை சூடிய பெருமானால் வணங்கப்படுபவனே! தியாக ராஜனின் இதயத் தாமரையை வட்டமிடும் வண்டே! கருணை

நிறைந்த கடைக்கண் பார்வையுடையவனே! மன்மதன் தந்தையே! பாவமெனும் இருளையகற்றும் சூரியனே!

## 323

அடாணா ஆதிˇ

ப. ஏல நீ தˇயராதுˇபராகு ஜேஸே
வேல ஸமயமு காˇதுˇ (ஏ)

அ. பாˇல கநகமயசேல ஸுஜநபரி-
பால ஸ்ரீ ரமாலோல வித்ˇ,ருதசர
ஜால சுபˇ,தˇ கருணாலவால கˇ,ந
நீல நவ்ய வநமாலிகாபˇ,ரண (ஏ)

ச. ராரா தேˇவாதிˇதேˇவ ராரா மஹாநுபாˇ,வ
ராரா ராஜீவநேத்ர ரகுˇ,வரபுத்ர
ஸாரதர ஸுதாˇ,பூர ஹ்ருதˇ,ய பரி
வார ஜலதிˇ,கம்பீˇ,ரதˇநுஜஸம்-
ஹாரமதˇந ஸுகுமாரபுˇதˇ, ஜந வி-
ஹார ஸகலச்ருதிஸார நாதுˇபை (ஏ)

2. ராஜாதிˇ,ராஜ முநிபூஜிதபதˇ ரவி-
ராஜலோசந சரண்ய அதி லாவண்ய
ராஜதˇ,ரநுத விராஜதுரகˇ ஸுர
ராஜவந்திˇத பதாˇஜஜநக திˇந
ராஜகோடி ஸமதேஜ தˇநுஜ கˇஜ
ராஜ நிசய ம்ருகˇராஜ ஜலஜமுக, (ஏ)

3. யாகˇரக்ஷண பரமபாˇ,கவதார்ச்சித
யோகீˇந்த்ˇர ஸுஹ்ருத்ˇபாˇ,வித ஆத்ˇயந்தரஹித
நாகˇசயந வரநாகˇ வரதˇபுந்-
நாகˇஸுமதˇ,ர ஸதாˇகˇ, மோசந ஸ-
தாˇகˇதிஜ த்ˇ,ருதபதாˇகˇ மாந்தசர
ராகˇரஹித ஸ்ரீ த்யாகˇராஜநுத (ஏ)

உன் தயை ஏன் வரவில்லை? என்னைப் பராமுகம் செய்து விடுவாயோ? என்னைக் காக்க இது தருணமல்லவா?

பாலனே! பீதாம்பரம் அணிந்தவனே! நல்லோரைப் பாலிப்பவனே! திருமகளை உகப்பவனே! அம்புகளை ஏந்திய வனே! சுபம் தருபவனே! கருணைநிதியே! முகில்வண்ணா! வன மாலையணிந்தவனே!

தேவாதி தேவனே! வருக! மகானுபாவனே! வருக! தாம ரைக் கண்ணனே! வருக! ரகுகுலத் தோன்றலே! சிறந்த அமுதம் நிறைந்த உள்ளத்தவரைப் பரிஜனங்களாக உடையவனே! கடலையொத்த கம்பீரம் வாய்ந்தவனே! அரக்கரை மாய்ப்பவனே! மதனனை நிகர்த்த அழகனே! அறிஞருடன் உறவாடுபவனே! சகல வேதங்களின் சாரமே!

(நீ) ராஜாதிராஜன். முனிவர் தொழும் பாதன். சூரிய சந்திரரைக் கண்களாக உடையவன். தஞ்சம் புகத்தகுந்தவன். மிக்க எழிலுடையவன். பிறையணிந்த சிவனால் வணங்கப் படுபவன். பட்சிராஜனான கருடனை வாகனமாக உடையவன். தேவேந்திரன் வணங்கும் பாதன். பிரமனின் தந்தை. கோடி சூரியப்பிரகாசன். அரக்கரெனும் யானைக் கூட்டத்திற்குச் சிங்கம் போன்றவன். தாமரையொத்த முகத்தவன்.

நீ வேள்வி காப்பவன். பரம பாகவதர்களால் அருச்சிக்கப் படுபவன். ஆப்தராகிய யோகியரால் தியானிக்கப்படுபவன். ஆதியும் அந்தமும் அற்றவன். ஆதிசேடன் மீது துயில்பவன். கஜேந்திரனுக்கு வரமளித்தவன். புன்னை மலர்களையணிபவன். என்றும் பாவங்களையகற்றுபவன். வாயு புத்திரனான அனுமன் தாங்கும் பாதன். உபநிடதங்களில் சஞ்சரிப்பவன். ஆசை யற்றவன்.

## 324

அடாணா — ஆதி

ப. கட்டு ஜேஸிநாவு ராம ப³ந்து³ (க)

அ. மட்டு மிதமு லேநட்டி தே³வதா
மதமுலலோ ஜொரப³டு³தாமண்டே (க)

ச. மா மதமுலநு லலாடமுந பிதா
மஹுடு³வ்ராயலேத³நுசுநு மறி மறி
காம மத³முலகு ஹிதவநுசு நிஷ்-
காம த்யாக³ராஜுகு தோ³சே (க)

''எல்லையின்றிப் பரவியுள்ளவையும் மற்ற தெய்வங்களை உபாசனை செய்பவையுமாகிய மதங்களில் நுழைவோம்'' என்றால் (அவ்விதம் செய்ய முடியாமல்) இராமநாமம் என்ற பாசத்தி னால் என்னை இறுகப் பிணைத்துவிட்டாய்.

''நம்முடைய மதத்தைப் (பிறக்கும்பொழுதே) பிரமன் நம் நெற்றியில் எழுதிவிடவில்லை'' யென்றும், (துர்மதங்கள்) காமம், செருக்கு முதலியவற்றை விளைவிக்குமென்றும் பற்றில்லாத இத் தியாகராஜனுக்குத் தோன்றும் வண்ணம் (பாசத்தினுல் இறுகப் பிணைத்துவிட்டாய்).

## 325

அடா,ண ஆதி

ப. செடே புத்தி, மானுரா (செ)

அ. இடே பாத்ரமெவரோ ஜூட ரா (செ)

ச. பூ,வாஸிகி தகுப,லமு கல்குநனி
புது,லு பல்க வினலேதா மனஸா
ஸ்ரீ வாஸுதேவஸ் ஸர்வமநுசுநு
சிந்திஞ்சர த்யாகராஜ விநுதுனி (செ)

மனமே! நீ துர்ப்புத்தியை விட்டுவிடு. (சாசுவதமான பல னளிக்கக்கூடிய) தகுந்த பாத்திரம் (தெய்வம்) யாரென்பதை அறிந்துகொள்.

இப்பூவுலகில் பிறந்தவனுக்கு (பழவினைப்படி) தகுந்த பயன் கிடைக்குமென்று பெரியோர்கள் கூறி நீ கேட்டதில்லையா? ''இவ்வனைத்தும் ஸ்ரீ வாஸுதேவனே'' என்று சிந்தனை செய் வாயாக.

## 326

அடா,ண ரூபகம்

ப. நாரதகாந லோல நதஜநபரிபால (நா)

அ. நீரதஸமநீல நிருபமகுணசீல (நா)

ச. நீவுலேக யேதநுவுலு நிரதமுகா நடுசுநு
நீவுலேக யேதருவுலு நிக்கமுகா மொல சுநு
நீவுலேக யேவாநலு நித்யமுகா குரியுநு
நீவுலேக த்யாகராஜு நீகுணமுல நெடு பாடுநு (நா)

நாரதன் இசையில் விருப்பமுள்ளவனே! அடியார்களைப் பாலிப்பவனே! கருமுகில் வண்ணனே! இணையற்ற குணசீலனே!

நீயின்றி மனிதவர்க்கம் இவ்வுலகில் எப்படிப் பிழைக்க முடியும்? நீயின்றித் தாவரங்கள் எவ்விதம் முளைக்கக்கூடும்? நீயின்றி மழை எங்ஙனம் தவருமல் பொழியமுடியும்? நீயில்லா விடில் இத்தியாகராஜன் எப்படி உன் குணங்களைத் துதிபாட முடியும்?

327

அடா,ண ரூபகம்

ப. ப⁵ஜந ஸேயராதா³ ராம (ப⁵)

அ. அஜருத்³ராது³லகு ஸதத
மாத்ம மந்த்ரமைந ராம (ப⁵)

ச. 1. கறகு ப³ங்கா³ரு வல்வ
கடி நெந்தோ மெறயக³
சிறுநவ்வுலுக³ல முக,முநு
சிந்திஞ்சி சிந்திஞ்சி (ப⁵)

2 அருணுபா³த³ரமுநு
ஸுருசிர த³ந்தாவலிநி
மெறயு கபோலயுக³முநு
நிரதமுநநு த³லசி த³லசி (ப⁵)

3. பா³கு³க³ மாநஸ ப⁵வ-
ஸாக³ரமுநநு த³ரிம்ப
த்யாக³ராஜு மநவிநி விநி
தாரகமகு³ராமநாம (ப⁵)

*பிரமன், உருத்திரன் முதலியோருக்கு ஆத்ம மந்திரமாகிய இராமநாமத்தை பஜனை செய்யலாகாதா?*

*பத்தரை மாற்றுப் பொன்னுடை அரையில் அழகுடன் விளங்க புன்சிரிப்புத் தவழும் அவனுடைய திருமுகத்தை நினைத்து, (பஜனை செய்யலாகாதா?)*

*அவனுடைய சிவந்த உதடுகளையும், முத்துப்போன்ற பல்வரிசையையும், பளபளவென்று மின்னும் இரு கன்னங்களை யும் சதா எண்ணி, எண்ணி (பஜனை செய்யலாகாதா?)*

*மனக் கற்பனையிலுதித்த சம்சாரக் கடலைக் கடக்க உதவும் தாரக மந்திரமாகிய இராமநாமத்தை இத்தியாகராஜனின் விண்ணப்பத்தைக் கேட்டாவது (பஜனை செய்யலாகாதா?)*

328

அடா,ண தே³சாதி³

ப. மும்மூர்த்துலு கு³மிகூ³டி³ பொக³டே³
முச்சட விநுகோரே (மும்)

அ. ஸம்மதிகா<sup>v</sup> ராஜு<sup>ᵘ</sup> கொடுகநக<sup>v</sup> விநி

ஸம்சயமு தீரக ஸ்ரீராமுநி (மும்)

ச. ரோஸமுதோ ரகு<sup>v</sup>ராமுநி கு<sup>v</sup>ணமுல

ரூடி<sup>v</sup>,க<sup>v</sup> த<sup>v</sup>ம கு<sup>v</sup>ணமுல நடு வ்ராஸி

த்ராஸுᵘந நிட<sup>v</sup>ஸரி நில்வலேத<sup>v</sup>நி

த்யாக<sup>v</sup>ராஜநுது டெ<sup>v</sup>வடோ<sup>v</sup> யநுசுநு (மும்)

(அனைவரும்) சம்மதத்துடன் ''இவன் ராஜகுமாரன்'' என்று கூறவும், தங்களுடைய சந்தேகம் தீராமல் மும்மூர்த்திகளும் ஒன்று கூடி இராமனைப் போற்றும் இச் செய்தியைக் கேளிர்.

ரோஷத்துடன் இரகுராமனின் குணங்களையும் தங்கள் குணங்களையும் வேறு வேருக எழுதித் தராசில் வைக்கவும், அது சமமாக நிற்காததால் ''தியாகராஜன் வணங்கும் இத்தெய்வம் எவனோ'' என்று வியந்து (மும்மூர்த்திகள் இராமனைப் போற்றும் செய்தி கேளிர்).

329

அடாணு ஆதி<sup>v</sup>

ப. ஸ்ரீபப்ரிய ஸங்கீ<sup>v</sup>தோபாஸந

சேயவே ஓ மநஸா (ஸ்ரீ)

அ. தாபஸஜந மாநஸ த<sup>v</sup>நமு த்ரி

தாப ரஹித ஸப்தஸ்வரசாரி (ஸ்ரீ)

ச. ரஞ்ஜிம்ப ஜேஸெடு<sup>v</sup> ராக<sup>v</sup>ம்பு<sup>v</sup>லு

மஞ்ஜுᵘளமகு<sup>v</sup> நவதாரமுலெத்தி

மஞ்ஜீரமு க<sup>v</sup>,ல்லநி நடிஞ்சு

மஹிம தெ<sup>v</sup>லியு த்யாக<sup>v</sup>ராஜ நுதுட<sup>v</sup>கு (ஸ்ரீ)

மனமே! முனிவரின் மனத்திற்குப் பெருஞ் செல்வமாக விளங்குவதும், மூவகைத் தாபங்களை ஒழிப்பதும், சப்த ஸ்வரங்களில் சஞ்சரிப்பதும், லக்ஷ்மிபதியான பகவானுக்கு உகந்ததுமான சங்கீதத்தை உபாசனை செய்வாயாக.

மகிழ்ச்சியுண்டாக்கும் இராகங்கள் அழகிய தோற்றங்களையெடுத்து நூபுரங்கள் ''கல்''லென்று ஒலிக்க நடம் புரியும் மகிமையை யறிந்த தியாகராஜன் வணங்கும் தெய்வமாகிய (இலக்ஷ்மி நாயகன் உகக்கும் சங்கீத உபாசனை செய்வாயாக),

330

ஆரபி, (மே. 29) சாபு

ப. ஓ ராஜீவாக்ஷ ஓரஜூபுலு ஜூசே
வேரா நே நீகு வேரா (ஓ)

அ. நேரநி நாபை நேரமுலெஞ்சிதே
காராத^நி ப^ல்கேவாரு லேநி நந்நு (ஓ)

ச. 1. மக்குவதோ நிந்து ம்ரொக்கிந ஜநுலகு
தி^க்கு நீவை யதி க்^ரக்குந ப்ரோதுவநி
எக்குவ ஸுஜநுலயொக்க மாடலு விநி
சக்கநி ஸ்ரீராம த்^க்கிதி க^த்^ரா (ஓ)

2. மிதிமேரலேநி ப்ரக்ருதிலோந த்^கி^லிநே
மதிஹீநுடை^ஸந்நுதி ஸேயநேரக
ப^திமாலி நீவே க^தியநி நெர நம்-
மிதி கா^நி நிநு மறசிதிநா ஸந்ததமு (ஓ)

3. மாவரஸுகுண உமாவரஸந்நுத
தே^வர த்^யசேஸி ப்^ரோவக^ராதா^
பாவந ப^க்தஜநாவந மஹாநு
பாவ^ த்யாக^ராஜபா^வித இங்க நந்நு (ஓ)

ஓ தாமரைக் கண்ணு? என்னை நீ ஓரப்பார்வை பார்ப்ப தேன்? நான் வேற்று மனிதஞ? ஒன்றும் அறியாத என்மீது மாந்தர் குற்றங் கண்டு பிடித்தால் ''அப்படிச் செய்யலாகாது'' என்று கூற எனக்கு யாருமிலர்.

பக்தியுடன் உன்னை வணங்குபவர்களுக்கு நீயே தஞ்சமாகி விரைவில் அவர்களைக் காப்பாயென்று பெரியோர்கள் கூறக் கேட்டு நற்குணங்கள் நிறைந்த உன்னை நான் வந்தடைந்தேன்.

கங்கு கரையில்லாத இப்பிரபஞ்சத்தில் சிக்கி நான் மதி யிழந்து உன்னை நன்கு அருச்சனை செய்யாதபோதிலும், அடி பணிந்து நீயே எனக்குக் கதியென்று நம்பினேனே தவிர என் ருவது உன்னை மறந்தேனு?

இலக்குமி நாயகனே! சுகுணனே! சிவனுல் துதிக்கப்படு பவனே! தேவனே! தயையுடன் என்னைக் காக்கலாகாதா? தூய வனே! அடியாரைப் பாலிப்பவனே! மகானுபாவனே!

## 331

ஆரபி⁴ ஆதி³

ப. சால கல்லலாடு³ கொங்க
ஸௌக்₁யமேமிரா (சா)

அ காலமு போநு மாட நிலுசுநு
கல்யாணராம நாதோ

ச. தல்லி தண்ட்³ரி நேநுண்ட³
தக்கிந ப₁யமேலராயநி
பலுமாரு நீவெந்தோ பா⁴ஸலுசேஸி
இலலோ ஸரிவாரலலோ
எந்தெந்தோ ப்³ரோசுசுண்டி³ பெத்³-
த³லதோ ப³ல்கி மெப்பிஞ்சி த்யாக³ராஜுநிதோ (சா)

நிரம்பவும் பொய் உரைப்பதால் நீ அடையும் சுகம் என்ன? கல்யாணராம! காலம் கழிந்துவிடும், பேச்சு ஒன்றே நிலைத்து நிற்கும்.

''உனக்குத் தாய் தந்தையராக நானிருக்கையில் வீண் பயம் ஏனடா'' என்று பலமுறை நீ எத்தனையோ மொழிகளைக் கூறி, இவ்வுலகில் என் போன்றவர்களுள் பலரைக் காப்பாற்றியும், பெரியோர்களிடம் கூறி மெய்ப்பித்தும் வந்த நீ இத்தியாக ராஜனிடம் (மிகுந்த பொய்களைக் கூறி அடையும் சுகம் என்ன?)

## 332

ஆரபி⁴ ரூபகம்

ப. *சூதாமு ராரே ஸுத³துலார ரங்க³பதிநி (ஜூ)

அ. ஸீதாபதி பூஜ்யுட³ட
ச்ருங்கா³ர சேக₁ருட³ட (சூ)

ச. 1. ஸரிக³ஞ்சு சாலுவட சௌகட்ல போகு³லட
பருவம்பு ப்ராயமட பரமாத்முட³ட ரங்க³நி (சூ)

2. முக₁நிர்ஜித சந்த்³ருட³ட
முத்³து³மாடலாடு³நட
ஸுக₁மொஸங்கி³ ப்³ரோசுநட
ஸுந்த³ராங்கு³ட³ட ரங்க³நி (சூ)

* ஸ்ரீரங்கநாதனைக் குறித்து ஸ்வாமி பாடியுள்ள ஐந்து கிருதிகளுள் ஒன்று.

3. ஆகᵛம ஸஞ்சாருடᵛட
அகி,ல ஜகᵛத்பாலுடᵛட
த்யாகᵛராஜஸந்நுதுடᵛட
தருணுலார ரங்கᵛபதிநி (சூ)

அழகிய பற்களையுடைய பெண்மணிகளே! இரங்கநாதனைச் சேவிப்போம் வாரீர்! அவன் இராமபிரானால் பூசிக்கப்பட்டவன். சிருங்காரங்களுக்குத் தலைவன்.

சரிகை மயமான உத்தரீயமணிந்தவன். நான்கு முத்துக்கள் பொருத்தப்பட்ட கடுக்கன்களையணிந்தவன். பருவமான பிராய முள்ளவன். அவனே பரமாத்மா.

சந்திரனை வென்ற முகவழகுடையவன். இனிமையாகப் பேசுபவன். அனைவருக்கும் சுகமளித்துக் காப்பவன். அவன் வடிவழகன்.

வேதங்களில் சஞ்சரிப்பவன். சகல புவனங்களையும் காப்பவன். தியாகராஜனால் துதிக்கப்படுபவன். பருவமங்கை யரே! (இரங்கநாதனைச் சேவிப்போம் வாரீர்!)

## 333

ஆரபிᵛ, ரூபகம்

ப. நாதᵛஸுதாᵛ,ரஸம்பிᵛலநு
நராக்ருதாய மநஸா (நா)

அ. வேதᵛபுராணகᵛம சாஸ்த்-
ராதுᵛல காதாᵛ,ரமௌ (நா)

ச. ஸ்வரமுலு யாறுக கᵛ,ண்டலு
வரராகᵛமு கோதண்டᵛமு
துᵛரநய தேᵛச்யமு த்ரிகுᵛணமு
நிரத கᵛதி சரமுரா
ஸரஸ ஸங்கᵛதி ஸந்தᵛர்பᵛ,மு
கᵛல கிᵛரமுலுரா
தᵛ,ர பᵛ,ஜநே பாᵛ,க்ᵛயமுரா
த்யாகᵛராஜு ஸேவிஞ்சு (நா)

மனமே! வேதம், புராணம், ஆகம சாத்திரங்கள் இவற்றிற்கு ஆதாரமான நாதமென்னும் அமுதரசமே இவ்வுலகில் மானிட உருவத்துடன் அவதாரமெடுத்தது.

ஏழு சுரங்களும் (வில்லில் கட்டப்பெற்ற) சிறு மணிகளாகும். சிறப்புற்ற இராகமே கோதண்டமென்ற வில். கனம், நயம், தேசியம் ஆகிய மூவகை வேறுபாடுகள் அவ்வில்லின் நாண் கயிறுகவும், தாள கதிகள் அம்புகளாகவும், ரசம் நிறைந்த சங்கதிகள் சமயத்திற்கு உசிதமான மொழிகளாகவும் அமைவன. தியாகராஜன் சேவிக்கும் (நாதரூபமான) இவ்வவதாரத்தை பஜனை செய்வதே நமது பாக்கியம் ஆகும்.

## 334

ஆரபிᵛ, தேᵛசாதிᵛ

ப. நா மொறலநு விநி ஏமறவலெநா
பாமர மநுஜᵚலலோ ஓராம (நா)

அ. தோமர நாராசமுலை மநஸᵚகு
தோᵛசெநா பᵛ,கதபாப விமோசந (நா)

ச. 1. இபᵛ,ராஜேந்த்ᵛருடுᵛ யெக்குவைந
லஞ்சமிச்சிந தேᵛமிரா
ஸபᵛ,லோ மாநமு போᵛஸமயம்புᵛந
ஸதி யேமிச்செநுரா ஓராம (நா)

2. பாᵛ,கᵛவதாக்ᵛரேஸர ரஸிகாவந
ஜாகᵛருகுடᵛநி பேரே
ராகᵛஸ்வரயுத ப்ரேம பᵛ,க்தஜந
ரக்ஷக த்யாகᵛராஜவந்திᵛத (நா)

*ஓராம! என் முறையீடுகளைக் கேட்டும் இப்பாமர மக்களுக்கிடையே என்னை நீ அலட்சியம் செய்யலாமா? என் வார்த்தைகள் தோமரம் (எரிவல்லயம் என்ற ஆயுதம்) போலவும் அம்புகளைப் போலவும் உன் மனத்திற்குத் தோன்றுகின்றனவோ? நீ பக்தர்களின் பாவங்களையகற்றுபவனல்லவா?*

*யானைகளுக்கு அரசனான கஜேந்திரன் உனக்கு அதிகமாகக் கொடுத்த இலஞ்சம் என்னவோ? சபையில் மானம் போகும் சமயத்தில் பதிவிரதையாகிய திரௌபதி உனக்கு என்ன கொடுத்தாள்?*

*பாகவத சிகாமணிகளையும், ரசிகர்களையும் காப்பவனே! நீ (பக்தர்களைக் காப்பதற்கு) என்றும் விழித்திருப்பவனென்பது வெறும் பெயரளவில் தானே? இராகம், ஸ்வரம், பக்தி இவற்றுடன் கூடிய பக்தர்களை இரட்சிப்பவன் நீயல்லவா?*

## 335

ஆரபி⁴ சாபு

ப. நிந்நே நெற நம்மிநாநு
நீரஜாக்ஷ நநு ப்³ரோவுமு (நிந்)

அ. கந்ந கந்நவாரிநி வேடு³
கொந்நாநு ப₁லமுலேத³ நி நே (நிந்)

ச. 1. தா³ர தநயுல உத³ர
பூரணமு ஸேயு கொறகு
தூ³ரதே³சமுலநு ஸஞ்சாரமு ஜேஸி
ஸாரமிந்தைநலேக வேஸாரி யீ ஸம்-
ஸார பாராவாரமந்து³ க³லுகு³ ப₁லமீ
தா³ரியநி தெலிஸி ராம (நிந்)

2. ஸஞ்சித கர்மமு தொல-
கி³ஞ்சி நந்நேவேள கரு-
ணிஞ்சி ப்³ரோசே தை³வமு நீவஞ்சு யா-
ஸிஞ்சி கொஞ்செபு நருல நுதி-
யிஞ்சநு நாவல்லநு கா³த³ஞ்சுநு து³ஸ்ஸங்க³தி சா-
லிஞ்சு ஸந்ததமு ராம (நிந்)

3. பூ⁴தலமுந நொக்கரி
சேதி த⁴நமபஹரிஞ்சு
கா⁴தகுல பரலோக பீ⁴தியுலேநி
பாதகுல ப³ட்டி யம-
தூ³தலு கொ³ட்டெடி³வேள
ப்³ரோதுநநி நெவரி சேத கா³தநி ஸ்ரீராம (நிந்)

4. எந்து³நிண்டி³யுண்டே³ரகு⁴-
நந்த³ந வேக³ நாமநஸு
நந்து³ த³லசியந்தா³நந்த³மை தோசே
ஸுந்த³ரவத³ந யோகி³
ப்³ருந்த³வந்தி³த பதா³ர
விந்த³யுக³ த்யாக³ராஜ வந்த³நீய ஸந்ததமு (நிந)

பங்கயக் கண்ணனே! கண்டவர்களையெல்லாம் நான் வேண்டிக் கொண்டும் ஒன்றும் பயனில்லாததால் உன்னையே திடமாக நம்பினேன். என்னைக் காப்பாயாக.

மனைவி மக்களைக் காப்பாற்றுவதற்காக தூரதேசங்களில் திரிந்தும் பயன் சிறிதுமில்லாமல் களைத்து சம்சாரக் கடலில் மூழ்குபவர்களுக்குக் கிடைக்கும் பலன் இதுவேயென்று தெரிந்து (உன்னையே திடமாக நம்பினேன்.)

பழவினைகளையறுத்து, என்னிடம் சதா கருணைகாட்டிக் காக்கும் தெய்வம் நீயென்று ஆசைகொண்டு நீச மாந்தரைப் புகழ என்னாலாகாதென்று துணிந்து தீயவர்களின் உறவை விடுத்து, என்றும் (உன்னையே திடமாக நம்பினேன்).

இப்பூவுலகில் மற்றொருவரின் செல்வத்தைக் கவரும் பாவிகளையும், பரலோக பயமில்லாத பாதகர்களையும் யமதூதர்கள் பிடித்து வதைக்கும்பொழுது அவர்களைக் காக்க ஒரு தெய்வத்தாலும் முடியாதென்று (உன்னையே திடமாக நம்பினேன்).

எங்கும் நிறைந்துள்ள இரகுநந்தன! நினைத்தவுடனேயே என் மனத்தில் ஆனந்தக் காட்சியளிக்கும் முகவழகனே! யோகியர் குழாம் தொழும் பதவிணையுடையவனே! அனவரதமும் (உன்னையே திடமாக நம்பினேன்.)

## 336

ஆரபி⁴ ஆதி³

ப. *ஸாதி⁴ஞ்செநெ ஓ மநஸா (ஸா)

அ. போ³தி⁴ஞ்சிந ஸந்மார்க³வசநமுல

பொ³ங்கு ஜேஸி தா ப³ட்டிந பட்டு

ச. ஸமயாநிகி தகு³மாடலாடெ³நே (ஸம)

(ஸ்வர ஸாஹித்திய ஒத்துக்கடைகள்)

1. தே³வகீ வஸுதே³வுல நேகி³ஞ்சிநடு (ஸம)
2. ரங்கே³சுடு³ ஸத்³க³ங்கா³ஜநகுடு³
   ஸங்கீ³த ஸாம்ப்ரதா³யகுடு (ஸம)
3. கோ³பீஜந மநோரத, மொஸங்க³லேகநே
   கே³லியு ஜேஸேவாடு³ (ஸம)
4. வநிதல ஸதா³ஸொக்க ஜேயுசுநு
   ம்ரொக்கஜேஸே பரமாத்முட³தி³யுகா³க

* பஞ்சரத்தின கீர்த்தனைகளென்று பிரசித்திபெற்ற ஐந்து இருதிகளுள் ஒன்று.

யசோத³தநயுட³ஞ்சு முத³ம்பு³நநு
முத்³து³ பெட்ட நவ்வுசுண்டு³ ஹரி (ஸம)

5. பரம ப⁴க்தவத்ஸலுடு³ஸுகு³ண
பாராவாருண்டா³ ஜந்ம மநகு³டீ³
கலி பா³த⁴லு தீ³ர்ச்சுவாட³நுசு நே
ஹ்ருத³ம்பு³ஜமுந ஜூசுசுண்ட³க³ (ஸம)

6. ஹரே ராமசந்த்³ர ரகு⁴குலேச ம்ருது³ஸுபா⁴ஷ
சேஷசயந பரநாரீ ஸோத³ராஜ
விராஜதுரக³ ராஜராஜநுத நிராமயாபக⁴ந
ஸரஸீருஹ த³ளாக்ஷயநுசு
வேடு³கொந்ந நந்நு தா ப்³ரோவகநு (ஸம)

7. ஸ்ரீ வெங்கடேச ஸுப்ரகாச
ஸர்வோந்நத ஸஜ்ஜந மாநஸ
நிகேதந கநகாம்ப³ரத⁴ர
லஸந் மகுட குண்ட³ல விராஜித
ஹரேயநுசு நே பொக³ட³க³
த்யாக³ராஜ கே³யுடு³
மாநவேந்த்³ருட³யிந ராமசந்த்³ருடு³ (ஸம)

(சரணத்தின் மிகுதி)

ஸத்³ப⁴க்துல நட³தலிட்லநெநே
அமரிககா³ நாபூஜ கொநெநே
அலுக³ வத்³த³நெநே விமுகு₁லதோ
ஜேர போகுமநெநே
வெத க³ல்கி³ந தாளுகொம்மநெநே
த³மசமாதி³ ஸுக₁தா³யகுட³கு³ ஸ்ரீ
த்யாக³ராஜ நுதுடு³ செந்தராகநே (ஸா)

---

''ஸாராசாருடு³ ஸநகஸநந்த³ந ஸன்முநிகே³யுடு³ ஸகலாதா⁴ருடு³'' என்ற அதிக சரணம் சில சிஷ்ய பரம்பரைகளில் பாடப்பெற்றுவருகிறது. இதன் பொருள்; ''சாரமான ஒழுக்கமுடையவன். ஸனகர், ஸனந்தனர் முதலிய முனிவரால் துதிக்கப்பட்டவன். அனைத்திற்கும் ஆதாரமானவன்.''

தானே போதனை செய்த நல்வழிக்கான உபதேச மொழிகளை யெல்லாம் பொய்யாக்கி (அருகில் வராமலே) தான் பிடித்த பிடியைச் சாதித்தனனே!

சமயத்திற்கேற்றபடி பேசினன். தேவகியையும் வசுதேவரை யும் வருத்தத்திற்கு ஆளாக்கினன். (உலகமென்னும் விளையாட்டு) அரங்கத்திற்கு நாயகன் அவன். புனிதமான கங்கையைத் தோற்றுவித்தவன். சங்கீத சம்பிரதாயத்தை உகப்பவன்.

கோபியரின் மனவிருப்பங்களை அளிக்காமலே அவர்களைப் பரிகாசம் செய்தவன். மாதரை அனவரதமும் தன் மீது மோகிக்கச் செய்து இறுதியில் தன்னையே வணங்கச் செய்பவன். மேலும், யசோதை தன் மகனென்று எண்ணி மகிழ்ச்சியுடன் முத்தமிடவும் (கபடமாகச்) சிரித்தவன்.

பக்தரிடம் அளவில்லாத அன்புடையவன். நற்குணக்கடல். பிறப்பு முதல் களங்கமற்றவன். இக்கலியுகத்தின் துன்பங்களை அகற்றுபவனென்று எண்ணி என் இதயத் தாமரையில் அவனை தியானித்துக்கொண்டிருக்கையிலும்,

''ஹரே ராமசந்திர! ரகுகுலத் தோன்றலே! இனிய பேச்சை யுடையவனே! ஆதிசேடன்மீது துயில்பவனே! அன்னிய மாதருக்குச் சகோதரன் போல் திகழ்பவனே! பிறப்பற்றவனே! கருடவாகனனே! சக்கரவர்த்திகளால் தொழப்படுபவனே! பரிசுத்தமான சரீரத்தை யுடையவனே! செந்தாமரைக் கண்ணனே!'' என்றெல்லாம் துதித்து வேண்டிக்கொண்ட என்னை காப்பாற்ருமலும்,

''ஸ்ரீ வெங்கடேச! ஒளிபொருந்தியவனே! அனைத்திற்கும் உயர்ந்தவனே! நல்லோர் மனத்தை இருப்பிடங்கொண்டவனே! பொன்னுடை யணிந்தவனே! சொலிக்கும் மகுட குண்டலங் களுடன் பிரகாசிப்பவனே! ஹரி!'' யென்று நான் புகழ்ந்து கொண்டிருக்கையில், தியாகராஜனுல் பாடப்பெற்றவனும், மாந்தருள் இந்திரனையொத்தவனுமான இராமசந்திரன் (சமயத் திற்குத் தக்கபடி உரையாடினன்).

''சிறந்த பக்தரின் நடத்தை இப்படித்தான்'' என்று கூறினன். சம்மதத்துடன் நான் செய்த ஆராதனையை ஏற்றுக் கொண்டான். ''கோபம் கூடாது'' என்ருன். தன்னிடம் பக்தி யற்றவருடன் உறவாடாதே என்ருன். துன்பம் நேர்ந்தால் பொறுத்துக்கொள்ளும்படி உபதேசித்தான். அடக்கம், சாந்தம் முதலிய சுகங்களையளிக்க வல்லவனும் தியாகராஜனுல் துதிக்கப் பட்டவனுமாகிய (பகவான்) என்னருகில் வராமலே (தான் பிடித்த பிடியைச் சாதித்துவிட்டனன்).

## 337

கந்நட$^{v}$ (மே. 29) த்ரிபுட

ப. இதே$^{v}$, பா$^{v}$,க்யமு கா$^{v}$க

யேமி யுந்தி$^{v}$ரா ராம (இ)

அ. ஸதா˅ நீ பத˅பங்கஜமுலநு
ஸம்மதமுக˅ ஸேவிஞ்சுவாரி (கி)

ச. 1. ஸுந்த˅ர த˅சரத,நந்த˅ந ஹ்ருத˅யார
விந்த˅முந நிந்நுஞ்சி தா நெ ப்˅ரஹ்மா-
நந்த˅ மநுப˅விஞ்சி அதி˅யுகா˅க
இந்து˅த˅ரு மொத˅லந்த˅ரிநி ஸுர
ப்˅ருந்த பூ˅ஸுர ப்˅ருந்த˅முல தா-
நெந்து கநி யாநந்த˅முந நீ-
யந்து˅ பா˅வந ஜெந்து˅சுண்டு வாரி (கி)

2. ஆசபாசமுல தெ˅க˅கோஸி யந்நியு மதி˅
ரோஸி கர்மமு பா˅ஸி நிநு கருணு வா-
ராசியநி பூஜஜேஸி து˅ஸ்ஸங்க˅தி
ஜேஸி மேநு கா˅ஸி செந்த˅க
ஸ்ரீச தே˅வாதீ˅ச நிநு கா-
சீசநுதுட˅நி ஆச நீயெட˅
கீச ப˅க்தியு ஜேஸின்வாரி (கி)

3. போ˅கி˅சயந நீவே க˅தியநி ப˅ட்டி
ராகா˅து˅லதோடி˅ பூரித ப˅வ-
ஸாக˅ரமுந தா˅டி ஸந்ததமுநு
யாக˅பாலந ஜாக˅ருக ஸ-
தா˅க˅திஜ ஹித யோகி˅நுத வே-
தா˅க˅மாது˅ல வேக˅ நுதிநிடு˅
பா˅க˅வதுட˅கு˅த்யாக˅ராஜுநி (கி)

*இராமனே! அனவரதமும் உன் திருவடித் தாமரைகளைச் சம்மதத்துடன் சேவிப்பவர்களுக்கு இதுவே பேரின்பமே தவிர வேறு என்ன உள்ளது?*

*அழகனே! தயரதன் மைந்தனே! உன்னைத் தங்கள் இதயத் தாமரையில் அமர்த்தி பிரம்மானந்தம் அடைந்து, மேலும் பிறை சூடும் சிவபெருமான் முதலிய சகல தேவர்களையும் அந்தணர் குழாங்களையும் எங்கு கண்டாலும் அவர்களை நீயாகவே பாவனை செய்பவர்களுக்கு (வேறு இன்பம் ஏது?)*

திருமகள் நாயகனே! தேவாதி தேவனே! ஆசை பாசங்களை யறுத்து மனத்தில் அவற்றை வெறுத்து, கர்மங்களையொழித்து, குணக் கடலாகிய உன்னையே பூசை செய்து, தீயோர் இணக்கத் தினுல் உடல் சோராமல், காசிபதியாகிய சிவனுல் வணங்கப் படுபவன் நீயேயென்று உன்மீது ஆசை கொண்டு (உன் சைனிய மாகிய) குரங்குகளைப் போல் பக்தி செய்பவர்களுக்கு (வேறு இன்பம் ஏது?)

பாம்பணைப் பள்ளிகொண்டவனே! உன்னையே கதியென்று எண்ணி, ஆசை முதலியன நிறைந்த சம்சாரக் கடலைக் கடந்து, என்றென்றும் ''வேள்வி காப்பதில் கருத்துடையவனே! அனுமனுக்கு அருள் புரிபவனே! யோகியர் வணங்கும் பாதனே! வேத, ஆகமங்களால் துதிக்கப்படுபவனே'' என்று போற்றும் பாகவதனுகிய தியாகராஜனுக்கு (இதுவே பேரின்பமே தவிர வேறு என்ன உள்ளது?)

## 338

கந்நட$^{v}$ ஆதி$^{v}$

ப. நிந்நாட$^{v}$நேல நீரஜாக்ஷ (நிந்)

அ. கந்நவாரி பைநி காகஸேய நேல (நிந்)

ச. 1. கர்மாநிகி தகி$^{v}$நட்லு கார்யமுலு நடி$^{v}$சேநி
த$^{v}$ர்மாநிகி தகி$^{v}$நட்லு தை$^{v}$வமு ப்$^{v}$ரோசேநி (நிந்)

2. சித்தாநிகி தகி$^{v}$நட்லு ஸித்$^{v}$தி$^{v}$யு க$^{v}$லிகே$^{v}$நி
வித்தாநிகி தகி$^{v}$நட்லு வேடு$^{v}$க நடி$^{v}$சேநி (நிந்)

3. ஸத்யரூப நிந்நு ஸந்நுதி ஜேஸி
தத்வமு தெ$^{v}$லிஸிந த்யாக$^{v}$ராஜுநிகி (நிந்)

பங்கயக் கண்ணனே! உன்னை நொந்து என்ன பயன்? பெற்றோரிடம் மக்கள் கோபங்கொள்வது நியாயமா?

பழவினைப்படியே காரியங்கள் நடைபெறும். தர்மத்திற்குத் தகுந்தவாறு தெய்வம் காக்கும். உள்ளத்திற்குத் தகுந்தபடி சித்திகள் உண்டாகும். செல்வத்திற்கு ஏற்றபடி ஆனந்தம் ஏற்படும். சத்திய ஸ்வரூபனே! உன்னைத் தரிசித்துத் தத்துவங் களையறிந்த இத்தியாகராஜன் (உன்னைக் குறை கூறி என்ன பயன்?)

## 339

கந்நட$^{v}$ சாபு$^{v}$

ப. ப$^{v}$ஜரே ப$^{v}$ஜ மாநஸ ராமம் (ப$^{v}$)

அ. அஜமுக, சுக விநுதம் சுப$^{v}$சரிதம் (ப$^{v}$)

ச. 1. நிர்மிதலோகம் நிர்ஜிதசோகம்

பாலித முநிஜந மது<sup>v</sup>நா ந்ருபபாகம் (ப<sup>v</sup>)

2. சங்கரமித்ரம் ச்யாமல கா<sup>v</sup>த்ரம்

கிங்கர ஜநக<sup>v</sup>ண தாபத்ரய தமோமித்ரம் (ப<sup>v</sup>)

3. பூ<sup>v</sup>ஸம சாந்தம் பூ<sup>v</sup>ஜாகாந்தம்

வாரமகி,லத<sup>v</sup>ம் த்யாக<sup>v</sup>ராஜஹ்ருத்<sup>v</sup>பா<sup>v</sup>ந்தம் (ப<sup>v</sup>)

மனமே! இராமனை பஜனை செய்வாயாக, (அவன்) பிரமன் முதலியோராலும் சுகராலும் வணங்கப்படுபவன். மங்களகரமான சரிதையுடையவன்.

உலகைப் படைத்தவன். சோகத்தை வென்றவன். முனிவர்களைப் பரிபாலிப்பவன். இப்பொழுது அரச வடிவத்தில் விளங்குபவன். சிவபெருமானின் தோழன். கரியமேனியன். தன்னைச் சேவிப்பவர்களின் மூவகைத் தாபங்களென்னும் இருளை யகற்றும் சூரியன். பூதேவியையொத்த பொறுமையுடையவன். நிலமகளான சீதையின் நாயகன். அனைத்தையும் அருள்பவன். தியாகராஜன் உள்ளத்தில் பிரகாசிப்பவன்.

## 340

கந்நட<sup>v</sup> ரூபகம்

ப. ஸாகேத நிகேதந ஸாகேநக<sup>v</sup> லேதா (ஸா)

அ. நீகே மருலைதிநி நீகேல ஈகு<sup>v</sup>ணமு (ஸா)

ச ராகேந்து<sup>v</sup>முக,இந்த பராகேமி நெருந நீ

ராகே மிகு<sup>v</sup>ல கோரிதிரா கேசிஹரண

ராகேமைந செப்பகுரா கேகலு வேதுரு

ரா கேசவ ஸ்ரீத்யாக<sup>v</sup>ராஜநுத சுப<sup>v</sup>சரித (ஸா)

அயோத்தியில் விளங்குபவனே! என்னைக் காப்பேனென்று நீ கூறவில்லையா? நான் உன்மீதே மையல் கொண்டுள்ளேன். உனக்கேன் இக்குணம்?

பூர்ண சந்திரனையொத்த வதனனே! ஏன் இப்பராமுகம்? என் உள்ளம் உன் வரவையே மிக விரும்புகிறது. அரக்கனாகிய கேசியை வதைத்தவனே! நீ வராமல் ஏதாவது காரணம் கூறலாகாது. (அப்படிச் செய்தால் மற்ற பக்தர்கள்) முறையிடுவர். கேசவனே! சுபமளிக்கும் சரிதையுடையவனே!

## 341

கேதா<sup>v</sup>ரம் (மே. 29) ஆதி<sup>v</sup>

ப. மறசேவாட<sup>v</sup>நா ராம நிந்நு மத<sup>v</sup>நஜநக (ம)

அ. மரகதாங்க³மதி³நெஞ்சவலது³ (ம)

ச. காநி மாநவுலு கருணலேக நாபை
லேநி நேரமுலெஞ்சிந கா³நி
ஸ்ரீ நிஜமுக³ நா செந்த ஜேரிநகா³நி
ராநி நீத³ய த்யாக³ராஜநுத (ம)

மதனன் தந்தையே! உன்னை நான் மறக்கக்கூடியவனா? மரகத வண்ண! நீ உன் மனத்தில் அவ்விதம் எண்ணலாகாது.

தகாத மனிதர்கள் சிறிதும் இரக்கமின்றி என்மீது இல்லாத குற்றங்களையெல்லாம் சுமத்துகின்றனர். சகல சம்பத்துக்களும் என்னை நாடி வந்தடைந்தாலும், கிடைத்தற்கரிய உன் தயையை (நான் என்றுவது மறப்பேனா?)

## 342

கேதா³ரம் ஆதி³

ப. ராமா நீபை தநகு ப்ரேம போ³து³ ஸீதா (ரா)

அ. தாமரஸநயந நீதே³மோ மாயகா³நி (ரா)

ச. 1. மநஸுா நீ பத³முலநே ஜேர
க³நுலு நீ ரூபமுநே கோர
விநு நீ பேருலகே நோரூர
தநபை இதி³ நீ கருணேர (ரா)

2. ஜநநீ ஜநகாப்துலந்யுலு
த⁴ந கநக கு³ரு வேல்புலு
தி³நமு நீவே யநி மாடலு
அநக⁴ இவி நாபூ⁴ஷணமுலு (ரா)

3. போ⁴கா³நுப⁴வமுலந்து³
பா⁴கு³க³ பு³த்³தி⁴ நீயந்து³
த்யாக³ராஜுநி ஹ்ருத³யமந்து³
வாகீ³சா நந்த³மந்து³ (ரா)

தாமரைக் கண்ணனான சீதாராம! உன் மாயை என்னவோ அறியேன். உன் மீதுள்ள என்னாசை என்றும் அகலாது.

என் மனம் உன் திருவடிகளையே நாடுவதும், கண்கள் உன் திவ்விய வடிவத்தையே விரும்புவதும், நான் கேட்கும் உன் திரு நாமங்களைச் செபிக்க என் நாவு ஊறுவதும் உன் கருணையா லல்லவா?

களங்கமற்றவனே! தாய், தந்தை, தோழர்கள், மற்றோர், செல்வம், பொன், குரு, தெய்வம் முதலியன நீயேயென்று நான் தினந்தோறும் கூறும் மொழிகளே என் அணிகளாகும்.

போகங்களை நான் அனுபவிக்கும் பொழுதும் என் புத்தி உன்னிடமே லயிக்கிறது. இத்தியாகராஜன் இதயத்தில் பிரம்மானந்தம் பிறக்கிறது.

## 343

கோலாஹலம் (மே. 29) தே^v^சாதி^v^

ப. மதி^v^லோந யோசந பு^v^ட்டலேதா^v^
மஹாராஜ ராஜேச்வரா (ம)

அ. பதி^v^வேஸமுலலோ ராமவேஸமு
ப^v^ஹு பா^v^க^v^நுசு கோ^v^ரு நந்நு ப்^v^ரோவ (ம)

ச. இட்டிவேள நீ[1] கெட்டு[2] தோசுநநி
இல்லாலிதோ முச்சடா^v^டெ^v^து^v^
ரட்டு நீ மநஸு கெட்டு தோசெநோ
ரக்ஷிஞ்சுடகு த்யாக^v^ராஜநுத (ம)

மகாராஜர்களுக்கும் மேலான சக்கரவர்த்தியே! உன்னுடைய பத்து அவதாரங்களுள் இராமாவதாரமே மிகச் சிறந்ததென்று உன்னையே நாடும் என்னைக் காக்க உன் மனத்தில் இன்னும் யோசனையே பிறக்கவில்லையோ?

இத்தகைய தருணத்தில் உன் இல்லாளுடன் சல்லாபம் செய்ய உனக்கு எப்படி மனம் வந்ததோ? என் குழப்பம் உன் மனத்திற்கு எவ்வாறு தோன்றிற்றோ?

## 344

க^v^ருட^v^த்^v^வநி (மே. 29) தே^v^சாதி^v^

ப. ஆநந்த^v^ஸாக^v^ர மீத^v^நி தே^v^ஹமு
பூ^v^பா^v^ரமெ ராம (ஆ)

அ. ஸ்ரீநாயகாகி^v^ல நைக^v^மா-
ச்ரித ஸங்கீ^v^த ஜ்ஞாநமநு ப்^v^ரஹ் (மா)

---

1. நீது^v^ மட்டு ஜூபுமநி யில்லாலு நீதோ முச்சடா^v^டதோ^v^நா
2. நீது^v^ மெட்டு ஜூபட^v^நி இல்லாலிதோ முச்சடாடெ^v^தோ^v^

ச. [1]ஸ்ரீவிச்வநாத, ஸ்ரீகாந்த விதுலு
பாவந மூர்த்துலுபாஸிஞ்சலேதா
பாவிஞ்சி ராகலயாதுல
புஜியிஞ்சே ஸ்ரீத்யாகராஜநுத (ஆ)

இலக்குமி நாயகனே! சகல வேதங்களையும் அண்டியுள்ள சங்கீத ஞானமெனும் பிரம்மானந்தக் கடலில் நீந்தாத உடல் (மனிதன்) பூமிக்கு பாரமே!

சிவன், விஷ்ணு, நான்முகன் ஆகிய புனித (திரி) மூர்த்திகள் (நாதத்தை) உபாசனை செய்யவில்லையா? இதை மனத்தில் நன்கு அறிந்து ராகம், தாளம் முதலியவற்றை வழிபடும் தியாகராஜன் வணங்கும் இராமனே!

## 345

கருடத்வநி — ரூபகம்

ப. தத்வ மெறுக த்ரமா பர (த)

அ. தத்வமஸி யநு வாக்யார்த்தமு
ராம நீவநு பர (த)

ச: தாமஸ ராஜஸ குணமுல
தந்நுகோள்ளு போதயா
ராமபக்துடைந த்யாக-
ராஜவிநுத வேதசாஸ்த்ர (த)

இராம! ''தத்த்வமஸி'' யென்ற வேதவாக்கியத்தின் பொருள் நீயேயென்னும் பரதத்துவத்தை (மேலான உண்மையை) அறிவது சாத்தியமா? தாமச குணம், இராஜச குணம் இவற்றின் மாய விளையாட்டுகள் என்றும் அகலா. இராம பக்தனை தியாகராஜனல் வணங்கப்படுபவனே! வேத, சாத்திரங்களின் உட்பொருளை அறிவது எளிதா?

## 346

ஜநரஞ்ஜநி (மே. 29) — சாபு

ப. நாடாடிந மாட நேடுதப்பவலது
நா தண்ட்ரி ஸ்ரீராம (நா)

அ. ஏடாதி நாடுக எடபாயநிவாநி
போடிமிக காபாடு துவநி சிந்த (நா)

1. ஸ்ரீ விச்வநாதாதி

ச. தலகு வச்சிந பாத, தலபாககு ஸேது
வலசி நம்மிநவாநி வலலோந தகுலுது
இல பக்தி ஸாகரமீத ஜேதுநநி
தலபோஸி பல்கிதிவே த்யாகராஜார்ச்சித (நா)

நிரந்தரமாக (வருடம் முந்நூற்றறுபத்தைந்து நாட்களும்) விடாமல் உன்னை பக்தி செய்பவனை சௌக்கியமாகக் காப்பே னென்று சிறு வயதில் கூறிய வார்த்தைகளை இன்று நீ மீற லாகாது. என் தந்தையாகிய ஸ்ரீராம!

தலைக்கு வந்த ஆபத்தைத் தலைப்பாகையுடன் போகச் செய்வேனென்றும், உண்மையான பக்தியுடன் உன்னை நம்பிய வனின் வலையில் அகப்படுவேனென்றும், இவ்வுலகில் (என்னை) பக்திக் கடலில் நீந்தச் செய்வேனென்றும் மிகவும் ஆலோசித்த பின்னர் நீ கூறினையே! (அம்மொழிகளை இன்று நீ மறக்க லாகாது).

## 347

ஜநரஞ்ஜநி ஆதி

ப. விடஜாலதுரா நா மநஸு விநரா (வி)

அ. அடியாஸலசே தகிலி நே-
நார்த்தி படிநா பதம்புலநு (வி)

ச. தநுவே பநுலகு சநிநா மறி
கநராநிதி கநுகொநிநா
நிநுகா பாவிஞ்சி ஸந்தஸில்லிதி
ஸ்ரீத்யாகராஜநுத (வி)

துராசைகளில் சிக்கிக்கொண்டு நான் உடல் இளைத்தாலும் என் மனம் உன் திருவடிகளை என்றும் விடாது. என்னுடல் எப் பணியில் ஈடுபட்டாலும், புலன்கள் காணக்கூடாத காட்சிகளைக் கண்டாலும், அனைத்தும் நீயேயென்று உகப்படையும் தியாக ராஜனால் வணங்கப்பெறும் தெய்வமே!

## 348

ஜநரஞ்ஜநி தேசாதி

ப. ஸ்மரணே ஸுகமு ராம நாம
நருடை புட்டிநந்துகு நாம (ஸ்ம)

1 சாந்தோக்கிய உபநிஷத்தில் காணப்பெறும் "தத் த்வம் அஸி" (அது நீயாயிருக்கிறாய்) என்பது நான்கு மகாவாக்கியங்களுள் ஒன்று. ஜீவனும், பிரம்மமும் ஒன்றேயென்ற அத்துவைதக் கொள்கையை விளக்குவது.

அ. வர ராஜயோக$^{v}$ நிஷ்டு,லௌ
வாரி காநந்த$^{v}$ மந்தே$^{v}$டட்டு (ஸ்ம)

ச. ராமநாம ச்ரவணமுவல்ல
நாமரூபமே ஹ்ருத$^{v}$யமு நிண்டி$^{v}$
ப்ரேம புட்ட ஸேயக$^{v}$லேதா$^{v}$ நிஷ்-
காம த்யாக$^{v}$ராஜு ஸேயு நாம (ஸ்ம)

(இவ்வுலகில்) மானிடராகப் பிறந்ததற்கு இராமநாமத்தை நினைப்பதே இன்பமாகும். சிறந்த ராஜயோக நிஷ்டையிலிருப்பவர்களுக்கு ஆனந்தமளிப்பது அது.

இராமநாமத்தை சிரவணம் செய்வதன் மூலம் அப்பெயருக்கு உரியதான வடிவம் நம்து இதயத்தை நிரப்பி மனத்தில் பக்தி பிறக்குமாறு செய்யவில்லையா? பற்றற்ற தியாகராஜன் செய்யும் (இராமநாம ஸ்மரணமே இன்பம் தருவது).

## 349

தே$^{v}$வகா$^{v}$ந்தா$^{v}$ரி (மே. 29) ஆதி$^{v}$

ப. கருணாஸமுத்$^{v}$ர நநு
காவவெ ஸ்ரீராமப$^{v}$த்$^{v}$ர (க)

அ. சரணாக$^{v}$த ஹ்ருச்சித்$^{v}$ர
சமந நிர்ஜிதநித்$^{v}$ர (க)

ச. நா பாபமு நாதோ நுண்டே
ஸ்ரீப நீ பி$^{v}$ருது$^{v}$கேமி ப்$^{v}$ரதுகு
ஏபாபுல சாபமோ
எந்து$^{v}$கீ சலமு த்யாக$^{v}$ராஜநுத (க)

கருணைக் கடலே! ஸ்ரீராமபத்திர! என்னைக் காப்பாயாக. சரணடைந்தவர்களின் இதயதாபத்தை யகற்றுபவனே! (தமோ குணமெனும்) உறக்கத்தை ஒழித்தவனே!

என் வினை என்னுடனேயே இருந்துவிட்டால் உன் விருதிற்கு ஏது பிழைப்பு? திருமகள் நாயகனே! இது எந்தப் பாவிகள் இட்ட சாபமோ? என்மீது உனக்கேன் இக்கோபம்?

## 350

தே$^{v}$வகா$^{v}$ந்தா$^{v}$ரி ஆதி$^{v}$

ப. க்ஷீரஸாக$^{v}$ரசயந நந்நு
சிந்தல பெ$^{v}$ட்டவலெநா ராம (க்ஷீ)

அ. வாரணராஜுனு ப்ரோவநு வேகமே
வச்சிநதி விந்நானுரா ராம (கூஷீ)

ச. நாரீமணிகி ஜீரலிச்சிநதி
நாடே நே விந்நானுரா
தீருடௌ ராமதாஸுநி பந்தமு
தீர்ச்சிநதி விந்நானுரா
நீரஜாக்ஷிகை நீரதி தாடிந
நீ கீர்த்திநி விந்நானுரா
தாரகநாம த்யாகராஜநுத
தயதோ நேலுகோரா ராமா (கூஷீ)

பாற்கடலில் பள்ளிகொண்டவனே! இராம! என்னை நீ சோகத்தில் ஆழ்த்தவேண்டுமா? கஜேந்திரனைக் காக்க நீ விரைந்து வந்த வரலாற்றைக் கேட்டிருக்கிறேன்.

திரௌபதிக்கு நீ ஆடையளித்து (அவள் மானத்தைக் காத்ததை) நான் அன்றே கேள்வியுற்றிருக்கிறேன். தீரராகிய (பத்திராசல) ராமதாசரின் தளையை நீ நீக்கியதைக் கேட்டிருக்கிறேன். தாமரையொத்த கண்களையுடைய சீதைக்காக நீ கடல் கடந்த புகழையும் கேட்டிருக்கிறேன். தாரக நாமத்தாய்! தயையுடன் என்னை ஏற்றுக்கொள்.

## 351

தேவகாந்தாரி ஆதி

ப. கொலுவையுந்நாடே கோதண்டபாணி (கொ)

அ. ஸலலிதமதுலை ஸாரெகு சீலுலை
வலசுசு கோரி வச்சி [1]ஸேவிம்பக (கொ)

ச. 1. ஜநகஜ பரதாதுலதோ மஞ்சி நைவேத்யம்புல
சநுவுந வேடுக நாரகிஞ்சி மெறுபு கோட்லகேரு
கநகபடமு ஸொம்முலநு தரிஞ்சி வேதோக்தமைந
ஸநக வசநமுலசே தோஷிஞ்சி ச்ரிதுல போஷிஞ்சி (கொ)

2. வரமகுவாஸநலு பரிமளிம்ப ஸந்நிதிலோ வெலுகுசு
ஸுரவாரஸதுலு பாக நடிம்ப அதிகாக பரா-

1 ஸேவிம்பரே

சர நாரத^v^முநுலெல்ல நுதிம்ப எந்தெந்தோ நெநரு
ஸுரபதி வாகீ^v^சுலு ஸேவிம்ப மேநுபுலகரிம்ப (கொ)

3. உடு^v^ராஜமுகு,டு^v^ ஶேஷசய்யபைநி செலங்க^v^க^v^நி
புட^v^மிகுமாரி ஸுக^v^ந்த,^v^மு பூய நம்மிநவாரலகே
கட^v^க^v^ண்டிநி கோரிந வரமிய்ய த்யாக^v^ராஜு நெநரு
அடு^v^க^v^டு^v^கு^v^கு மடு^v^புல நந்தீ^v^ய ஸ்ரீராமய்யா (கொ)

நயமான சுபாவத்தையுடையவர்களும், என்றும் நல்லொழுக்கம் உடையவர்களும் பக்தியுடன் விரும்பி வந்து சேவிக்க கோதண்டபாணியாகிய இராமன் கொலு வீற்றிருக்கிறான்.

சீதை, பரதன் முதலியோருடன் இனிய நைவேத்தியங்களைப் பிரியத்துடனும் குதூகலத்துடனும் அமுது செய்து, கோடி மின்னல்களைப்போல் ஒளிவீசும் பீதாம்பரத்தையும் அணிகளையும் அணிந்துகொண்டு, வேதத்தில் கூறப்பட்டுள்ள ஸனகர் முதலியோரின் வார்த்தைகளினால் மகிழ்ச்சியடைந்து, தஞ்சமடைந்தவர்களை ஆதரித்துக்கொண்டு (கொலு வீற்றிருக்கிறான்).

நறுமணம் வீசும் வாசனைத் திரவியங்கள் பரிமளிக்க, சந்நிதியில் தேவலோகத்துக் கணிகையர் நன்கு நடம்புரிய, மேலும் பராசரர், நாரதர் முதலிய ரிஷிகள் துதிக்க, மிகுந்த நன்றியுடன் இந்திரன், நான்முகன் முதலியோர் சேவித்து உடல் புளகிதம் அடையுமாறு (கொலு வீற்றிருக்கிறான்).

சந்திரனை நிகர்த்த முகமுடைய இராமபிரான் ஆதிசேடனாகிய படுக்கையின் மீது விளங்குவதைக் கண்டு பூமிதேவியின் புதல்வியாகிய சீதை வாசனைத் திரவியங்களைப் பொழிய, நம்பியவர்கள் விரும்பிய வரங்களைக் கடைக்கண்ணால் அளித்து வர, தியாகராஜன் நன்றியுடன் ஒவ்வோரடிக்கும் வெற்றிலைச் சுருள்களை எடுத்தளிக்க (இராமன் கொலு வீற்றிருக்கிறான்).

## 352

தே^v^வகா^v^ந்தா^v^ரி ரூபகம்

ப. நா மொருகிம்பவேமி ஸ்ரீராம (நா)

அ. நீ மஹிமலு விநி விநி நே
நெந்தோ நெர நம்மிதி (நா)

ச. 1. ஒக வசநருட^v^லநாடு^v^ஸம்-
ஹோத^v^ரு பா^v^த,^v^லு தா-
ளக மொரலிட^v^ப்^v^ரோசிதிவி
தநகு ஸுக்^v^ரீவமு கா^v^தா^v^ (நா)

2. ஒக நிசிசருட'ங்நமாட

லோர்வக சரணநகா'

சுகவசநமுலோ நாது'

பலுகுலங்நி விபீ',ஷணமா (நா)

3. பூஸலு கூ'ர்ச்சிந யடுவலெ

பூநி ப',ஜிஞ்சக'

ஆஸலு க'ல த்யாக'ராஜு

தாஸுடௌ'நுசு தெ'லிஸி (நா)

ஸ்ரீராம! என் முறையீடுகளுக்குச் செவி சாய்க்கமாட்டாயோ? உன் மகிமையைக் கேட்டு நான் உன்னை மிகவும் நம்பியுள்ளேன்.

காட்டில் திரியும் ஒருவன் தன்னுடைய சகோதரன் இழைத்த துன்பத்தைப் பொறுக்கமுடியாமல் முறையிட, நீ அவனைக் காக்கவில்லையா? அது * உன் கழுத்திற்கு அணியாக ஆயிற்று?

இரவில் திரியும் அரக்கனொருவன் தன் அண்ணன் கூறிய வார்த்தைகளைப் பொறுக்காமல் ''நீயே சரணம்'' என்று முறையிட, அவனுடைய பேச்சு கிளிமொழியைப்போல் உனக்கு இனிமையாக இருந்ததோ? என் பேச்சு மாத்திரம் பயங்கரமானதா?

பொன் மணிகளை நூலில் கோப்பது போல் நிரந்தரமாக உன்னைத் துதிக்க ஆசை கொண்டுள்ள இத்தியாகராஜன் உனக்கு அடியவன் என்று தெரிந்தும் (என் முறையீட்டைக் கேளாயோ?)

## 353

தே'வகா'ந்தா',ரி — தே'சாதி'

ப. [1]விநராத' நாமநவி (வி)

அ. கநகாங்க' காவேடிரங்க' ஸ்ரீ-

காந்த காந்தலெல்ல காமிஞ்சி பிலிசிதே (வி)

---

* ''தநகு ஸுக்'ரீவமு க'ாதா''' என்பதற்கு ''எனக்கும் அழகிய கழுத்து (குரல்) இல்லையா?'' என்று பொருள் கூறுவாருமுளர். சுக்கிரீவன், விபீஷணன் ஆகியோரின் முறைகளைக்கேட்டு அவர்களை இராமன் காப்பாற்றியதை அவ்விருவரின் பெயர்களைக் குறிப்பிடாமலே சாமர்த்தியமாக இக்கிருதியை அமைத்துள்ளார் ஸ்வாமிகள்.

1 ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தைக் குறித்து ஸ்வாமி இயற்றியுள்ள ஐந்து கிருதிகளுள் ஒன்று.

ச. 1. தேஜி நெக்கி பா^க^ தெருவுந ராக^
ராஜஸதுலு சூசி ரம்மநி பிலிசிதே (வி)

2, பா^,க^தே^ய வைபோக^ரங்க^ ஸ்ரீ
த்யாக^ராஜநுத தருணுலு பிலிசிதே (வி)

*என் விண்ணப்பத்தைக் கேட்கலாகாதா? பசும்பொன் மேனியனே! காவேரி ரங்கனே! திருமகள் நாயகனே! மாதர்களனைவரும் உன்மீது மையல் கொண்டு உன்னை அழைக்கின்றனர்.*

*நீ குதிரை வாகனமேறி அழகாகத் தெருவில் பவனி வரும் பொழுது ராஜஸ்திரீகள் பார்த்து உன்னை அருகில் வருமாறு அழைக்கின்றனர். எங்கள் பேரதிர்ஷ்டமே! வைபோக ரங்க! பருவமங்கையர் உன்னை அழைத்தால் (என் விண்ணப்பத்தை நீ கேட்கலாகாதா?)*

## 354

தே^வகா^ந்தா^,ரி ஆதி^

ப. ஸ்ரீரகு^,வர கருணாகர நீ பத^
சிந்தநமே ஜீவநமு (ஸ்ரீ)

அ. வாரணரக்ஷக ப^,க்தஜநாக^,நி-
வாரண ஸம்ம்ருது^பா^,ஷண ஸத்^கு^ண (ஸ்ரீ)

ச. 1. மாரமாரநுத நா மநவிநி விநு
மா ரமாரமண மறவகுரா ஸு^கு-
மாரமா ரஸநமுந நீ நாமமு
மாறுமாறு ப^ல்கநு த^யஸேயுமு (ஸ்ரீ)

2. வாரி வாரி மஞ்சிகி த^கி^நட்டு
வாரி வாரி பா^,க்^யமு லீவா தே^-
வாரி வாரிதா^நில சம்ப^ரஜீ-
வாரி வாரிஜாஸநஜநக ஹரே (ஸ்ரீ)

3. ராஜராஜவந்தி^த பத^யுக^ தி^ந
ராஜராஜநயந பாலிதாமர
ராஜ ராஜபூஜிதஸ்ரீத்யாக^-
ராஜராஜ ராக^,வ நநு ப்^ரோவுமு (ஸ்ரீ)

ஸ்ரீ ரகுவர! கருணுகர! உனது பாதங்களை நினைப்பதே என் வாழ்வாகும். யானையைக் காத்தவனே! பக்த ஜனங்களின் பாவங்களையகற்றுபவனே! மென்மை பொருந்திய பேச்சை யுடையவனே! குணவானே!

மன்மதர்களுள் மன்மதனென்று புகழ்படைத்தவனே! என் வேண்டுகோளைக் கேள். லக்ஷ்மிபதியே! என்னை மறவாதே. பேரழகனே! என் நாவில் உனது திருநாமம் என்றென்றும் விளங்குமாறு அருள்புரி.

அவரவர்களின் நல்வினைக்குத் தகுந்தவாறு அவரவர்களுக்குச் சுகங்களை அளிக்கமாட்டாயா? அரக்கரென்னும் மேகத்தைச் சிதறவடிக்கும் பெருங்காற்றே! மன்மதனுக்கும் நான்முகனுக்கும் தந்தையே!

குபேரன் வணங்கும் பதவிணையுடையவனே! சூரிய சந்திரரைக் கண்களாக உடையவனே! தேவேந்திரனைப் பாலித்தவனே! அரசரால் தொழப்படுபவனே! தியாகராஜனின் பிரபுவே! இராகவ! என்னைக் காத்தருள்.

## 355

தே³வகா³ந்தா⁴ரி — தேசாதி³

ப. ஸீதாவர ஸங்கீ³த ஜ்ஞாநமு
தா⁴த வ்ராயவலெரா (ஸீ)

அ. கீ³தாத்³யகி, லோபநிஷத்ஸார,
பூ⁴த ஜீவந் முக்துடௌ³டகு (ஸீ)

ச. ஆகாச சரீரமு ப்³ரஹ்மமநே
ஆத்மாராமுநி தா ஸரிஜூசுசு
லோகாது³லு சிந்மயமநே ஸுஸ்வர
லோலுடௌ³ த்யாக³ராஜஸந்நுத (ஸீ)

சீதையின் நாயகனே! கீதை-முதலிய சகல உபநிஷத்துக்களின் சாரமாக (பொருளாக) விளங்கும் இராம! (ஒருவன்) ஜீவன்முக்தி நிலையை அடையவேண்டுமாயின் சங்கீத ஞானத்தை (அவன் பிறக்கும் பொழுதே) அவனுடைய நெற்றியில் பிரமன் எழுதவேண்டும்.

பிரம்மத்திற்கு (பரமாத்மாவிற்கு) ஆகாசமே சரீரம் என்பதையும், அவ்வாகாசத்தில் உலகங்கள் சின்மயமாக (சேதன வஸ்துக்களாக) விளங்குகின்றன என்பதையும் அறிந்து, இவற்றைத் தன் ஆத்மாவாக விளங்கும் ஆத்மாராமனுடன் சரியாகக் கண்டு (ஒன்ருக பாவித்து) ஸுஸ்வரத்துடன் கூடிய நாதோபாசனையின் மூலம் (ஜீவன் முக்தனுவதற்கு சங்கீத ஞானத்தை பிரமன் நமது நெற்றியில் எழுதவேண்டும்.)

## 356

நீலாம்ப³ரி (மே. 29) சாபு

ப. நீகே த³யராக நே ஜேயு பநுலெல்ல
நெரவேருநா ராம (நீ)

அ. ஏகோபிஞ்சக நேநு நீவநு ஜ்ஞாநி-
கேலாகு³ ஸுக²மிச்சுநே ஓராக⁴வ (நீ)

ச. 1. மநஸு நில்வநிவாரு மாயாஜாலமு ஜேஸி
மறி முக்தி கொநநௌநே
கநு ஸம்ஜ்ஞகு ராநி காந்தநு ப³லிமிநி
க³ரமிட³ வசமௌநே ஓராக⁴வ (நீ)

2. வாடி³கலேநி வித்³யலசேத ஸப⁴லோந
வாதி³ஞ்ச டோ³நௌநே
ஸாடி³ விநமாட மதிநி நில்வலேநி
ஸரஸுநி விதமௌநெ ஓ ராக⁴வ (நீ)

3. மெப்புலகை ப³ஹுத⁴ர்மமு ஜேஸிதே
மிகு³ல ப்³ரோவத³கு³நே
தப்புமாடலு கா³து³ தாரகநாம ஸ்ரீ
த்யாக³ராஜுநி பைநி ஓ ராக⁴வ (நீ)

இத் தியாகராஜன் மீது உனக்கே தயவு பிறக்கவில்லை யாகில் நான் செய்யும் காரியங்களனைத்தும் நிறைவேறுமா? இராம! உன்னுடன் இரண்டறக் கலந்து ஐக்கியமாகாமல் ''நான் வேறு, நீ வேறு'' என்ற வேறுபாடுள்ள ஞானிக்குச் சுகம் எவ்வாறு கிடைக்கும்? ஓ ராகவ!

மனத்தை ஒரிடத்திலும் நிறுத்த முடியாதவன் மாயாஜாலம் செய்து முக்தியடைந்துவிட முடியுமா? கண் ஜாடையைப் புரிந்துகொள்ளாத பெண்ணை பலாத்காரமாகக் கைப்பிடித்தால் அவள் வசமாகிவிடுவாளா?

பழக்கத்திலில்லாத கல்வியைக் கொண்டு சபையில் வாதம் புரிவது சாத்தியமா? இரகசியமாகக் கேள்வியுற்ற விஷயத்தை மனத்தில் வைத்துக்கொள்ள முடியாத அரசிகனைப்போல் ஆகிவிடுமே!

பெரியதனத்திற்காக அனேக தர்மங்கள் செய்தால் பகவான் காப்பாற்றுவாரா? தாரகநாமத்தாய்! இவையனைத்தும் தவறான மொழிகளல்ல. ஓ ராகவ!

## 357

நீலாம்ப³ரி ஆதி³

ப. மாடாட³வேமி நாதோ மாது⁴ர்ய பூர்ணத⁴ர (மா)

அ. ஸாடி தொ³ரகநி ராமஸ்வாமி மதி³ ரஞ்ஜில்ல (மா)

ச. எது³ரெது³ரெ ஜூசி யெந்து³ கா³நக நா
ஹ்ருத³யாநி கெந்தோ ஹிதவு லேக
ஸத³யுட³ நேனுண்ட³க³ ஸமுக,மு தொ³ரிகிதே நீ-
ரத³வர்ண ஸ்ரீத்யாக³ராஜார்ச்சித முத்³து³க³ (மா)

இனிமை ததும்பும் உதடுகளையுடையவனே! என்னுள்ளம் மகிழ என்னுடன் பேசமாட்டாயா? இணையேயில்லாத இராமனெனும் தெய்வமே! உன்னை எதிர்பார்த்துப் பார்த்து, எங்கும் காணமல், என் இதயம் சிறிதும் இதம் பெறுமல் நான் பரிதவித்துக்கொண்டிருக்கையில் உன் தரிசனம் (எப்படியாவது) கிடைத்தால் அழகாக (என்னுடன் பேசமாட்டாயா?) தயை நிரம்பியவனே! முகில்வண்ணனே!

## 358

பூர்ணசந்த்³ரிக (மே. 29) ஆதி³

ப. தெலிஸி ராமசிந்தநதோ நாமமு
ஸேயவே ஓ மநஸா (தெ)

அ. தலபுலந்நி நிலிபி நிமிஷமைந
தாரகருபுநி நிஜதத்வமுலநு (தெ)

ச. 1. ராமாயந சபலாக்ஷுல பேரு
காமாது³ல போருவாரு வீரு
ராமாயந ப³ரஹ்மமுநகு பே³ரு
ஆமாநவ ஜநார்த்துலு தீ³ரு (தெ)

2. அர்க்கமநுசு ஜில்லெடு³ தரு பேரு
மர்க்கட பு³த்³து⁴லெட்ல தீ³ரு
அர்க்குட³நுசு பா⁴ஸ்கருநிகி பேரு கு-
தர்க்கமநே அந்த⁴காரமு தீ³ரு (தெ)

3. அஜமநுசு மேஷமுநகு பேரு
நிஜகோரிக லேலா கீ'டே'ரு
அஜு"ட'நி வாகீச்வருநிகி பே'ரு
விஜயமு க'ல்கு'நு த்யாக'ராஜ நுதுநி (தெ)

மனமே! உனக்குள் தோன்றும் பலவித எண்ணங்களை நிறுத்திவிட்டு, ஒரு நிமிடமாவது தாரக நாம ஸ்வரூபனின் உண்மையான தத்துவத்தைத் தெரிந்து, இராமனிடம் சிந்தையை நிலைநிறுத்தி நாம சங்கீர்த்தனம் செய்வாயாக.

''ராமா'' என்ற சொல்லிற்குப் பெண் என்ற பொருள் உண்டு. இவ்விதம் பொருள் கூறுவோர் காமம் முதலிய வற்றுடன் போர் புரிவோர் ஆவர். ''ராமா'' என்றால் பரப் பிரம்மம் என்ற (உண்மையான) பொருளை உணர்பவனின் துன்பங்கள் விலகிப்போகும்.

(இவ்விதமே) ''அர்க்க'' என்பதற்கு எருக்கமரம் என்று பொருள் கூறுவோரின் குரங்குப்புத்தி எப்படித் திரும்? ''அர்க்க'' என்னும் சொல்லிற்குச் சூரியன் என்ற பொருளை அறிபவர் களுக்குக் குதர்க்கம் (விதண்டாவாதம்) என்ற இருள் அகன்று விடும்.

''அஜ'' என்ற பதத்திற்கு ஆடு என்று அர்த்தம் கூறுபவர் களின் கோரிக்கைகள் எங்ஙனம் ஈடேறும்? ''அஜ'' என்றால் பிரமன் என்ற சரியான பொருளை உணர்ந்தால் வெற்றி பெறலாம்.

## 359

பூர்ணசந்த்ரி'க ஆதி'

ப. பலுகவேமி நா தை'வமா
பருலு நவ்வேதி' ந்யாயமா (ப)

அ. அலுக' காரணமேமிரா ராம நீ-
வாடி'ஞ்சிநட்லு யாடி'ந நாதோ (ப)

ச. தல்லித'ண்ட்'ரி ப'க்திநொஸகி' ரக்ஷிஞ்சிரி
தக்கிநவார லெந்தோ ஹிம்ஸிஞ்சிரி
தெ'லிஸி யூரகுண்டே'தி' யெந்நாள்ளூரா
தே'வாதி'தே'வ த்யாக'ராஜு"நிதோ (ப)

இத் தியாகராஜனுடன் நீ பேசமாட்டாயோ? என் தெய்வமே! பிறர் நகைப்பது நியாயமா? இராம! நீ ஆட்டி வைத்தபடி ஆடும் என் மீது உனக்குக் கோபம் வரக் காரணமேன்?

தாய் தந்தையர் எனக்குத் தெய்வ பக்தியைப் புகட்டி என்னைக் காத்தனர். மற்றோர் என்னைப் பலவிதத்திலும் துன்பத்திற்காளாக்கினர். இவை அனைத்தையும் அறிந்தும் நீ எத்தனைக் காலம் சும்மா இருக்கப் போகிறாய்? தேவாதி தேவனே!

## 360

ப³ங்கா³ள (மே. 29) தே³சாதி³

ப. முநுபே தெலியக போயெநா
முநிநுத த³யலேதா³யெநா (மு)

அ. அநுவிஸு²மந்த லேத³நுசுநு நங்-
நலயிஞ்சி வேடு³க ஜூசுடகு (மு)

ச. ஆநாடி மஞ்சி நட³தநு ஜூசி நீ-
வத்யந்த க்ருப ஸேயலேதா³
ஈநாடு³ நாமதி³ இட்லெளநநி நீ-
கிநகுல திலக ஸ்ரீ த்யாக³ராஜநுத (மு)

''(உன்னைக் காப்பதற்கு) அனுகூலமான சமயம் இதுவல்ல'' வென்று கூறி என்னைச் சிரமப்படுத்துவதற்கு முன்பே என் நிலைமை உனக்குத் தெரியாமற் போய்விட்டதா? முனிவரால் தொழப்படுபவனே! என் மீது உனக்கு தயவு இல்லாமற் போய்விட்டதா?

முன்பு என் நன்னடத்தையைக் கண்டு நீ என்னிடம் அளவற்ற கிருபை காட்டவில்லையா? சூரியகுல திலகனே! இப்பொழுது என் மனம் இவ்வாறு தத்தளிக்கும் என்று (முன்பே உனக்குத் தெரியாமற் போய்விட்டதா?)

## 361

ப³ங்கா³ள தே³சாதி³

ப. ஸாக்ஷி லேத³நுசு ஸாதி⁴ம்பகே
ஸத்யஸந்த⁴ ஸத்³ப⁴க்தபாலக (ஸா)

அ. வீக்ஷகாது³லெல்ல நவ்வரா ஜக³த்-
ஸாக்ஷிவம்ச நீரதி⁴ பூர்ணசந்த்³ர (ஸா)

ச. சக்தி நீயெட³ நிண்டா³ர லேதா³ பரா-
சக்தி ப்³ரோவலேதா³ விஷயமந்து³ வி-
ரக்தி கல்கு³ ஸ்ரீ த்யாக³ராஜுநி நிஜ
ப⁴க்தி நீவெருக³ லேவ மாநவுல (ஸா)

(என் பக்தியை நிரூபிக்க) மனித சாட்சியம் இல்லையென்று சாதித்து விடாதே. சத்திய சந்தனே! மெய்யடியார்களைக் காப்பவனே! காண்பவரனைவரும் நகைக்க மாட்டார்களா? சகத்திற்கே சாட்சியாக விளங்கும் சூரியனின் குலமென்னும் கடலில் உதித்த சந்திரனே! (சாட்சியில்லை என்று நீ கூறலாமா?)

சக்தி உன்னிடம் நிறைந்திருக்கவில்லையா? (உன் வசமான) பராசக்தியும் என்னைக் காக்க மறுத்துவிட்டாளோ? உலக சுகங்களில் சிறிதும் பற்றில்லாத இத் தியாகராஜனின் உண்மையான பக்தியை நீ அறியாயோ?

## 362

பே^v^க^v^ட^v^ (மே. 29) ரூபகம்

ப. க்^v^ட்டிகா^v^ நநு ஜெயி
பட்டே தெ^v^ங்நடிகோ (க^v^)

அ. புட்டிந நாடநுண்டி^v^
இட்டி வித^v^முலேகா^v^நி (க^v^)

ச. 1. கொ^v^ப்பதநமு மநத^v^நி மத^v^
மெப்படிகிநி த^v^லகெக்கி
தப்பு பலுகுலாடு^v^சு தாநுப்பதில்லுசுநு
தெப்புநயிங்கி^v^த மெறுக^v^க
மெப்புந காஸிஞ்சே யா
சப்பநி ப்ரபு^v^வுல கட^v^குநு
த்ரிப்பட லேலரா யநுசுநு (க^v^)

2. வரமைந ஸஜ்ஜநுலநு பரி-
சாரகுல நெல்லநு
ஸரிஜேஸி தா^v^ந மொஸக்^v^ பரமெஞ்சகநு
கரி த^v^ந மத^v^முலு க^v^லிகி^v^ந
நருலநு பூ^v^ஜிஞ்சே யா-
தர மெறுக^v^நி த^v^நிகுல யநு-
ஸரண ஏலரா யநுசுநு (க^v^)

3. சிவபூஜலு மறியுநு மா-
த்ᵛவபூஜல நொநரிஞ்சுசு
புᵛவி நாஸரி ஜேஸேவாரெவ ரநுசுநு யெஞ்சே
அவிவேக தᵛநமத்துல
சிவசிவ வேடᵛகᵛ வᵛத்ᵛதᵛநி
குவலயதᵛளலோசந
ஸுᵛவிபᵛவ த்யாகᵛராஜவிநுத (கᵛ)

நான் பிறந்தது முதல் இவ்விதமே இருக்கிருயே தவிர நீ கெட்டியாக என்னைக் கைப்பிடித்து (என் பொறுப்பை ஏற்றுக் கொள்வது) எந்நாளோ?

பெரியதனம் தங்களுடையதென்ற கொழுப்பு எப்பொழுதும் தலைக்கேறித் தகாத வார்த்தைகளைப் பேசி இறுமாப்புற்று (விரைவில்) இங்கித மறியாமல் புகழிற்காசைப்படும் பயனற்ற (சக்கை போன்ற) பிரபுக்களின் அருகில் நீ திரிவானேன் என்று கூறி நீ (என்னைக் கைப்பிடிப்பது எந்நாளோ?)

மேன்மையுடைய நல்லோர்களையும் வேலைக்காரர்களையும் சமமாகக் கருதி தானம் வழங்கி, பரலோக சிந்தனையற்று, யானை, செல்வம் முதலியன படைத்த மாந்தரைத் துதிபாடும் தரம் அறியாத செல்வர்களை நீ ஏன் பின்பற்றுகிருயென்று கூறி நீ (என்னைக் கைப்பிடிப்பது எந்நாளோ?)

சிவ பூசை, விஷ்ணு பூசை முதலியன செய்துகொண்டு, இவ்வுலகில் தமக்கு நிகராகப் பூசை செய்பவர் யாரென்று எண்ணும் விவேகமற்ற பணச் செருக்குள்ளவர்களை நீ (சிவ, சிவ) இரக்கவேண்டாமென்று கூறி நீ (என்னைக் கைப்பிடிப்பது எந்நாளோ?) குவளையிதழை நிகர்த்த கண்ணனே! வைபவம் நிறைந்தவனே!

## 363

பேᵛகᵛடᵛ தேசாதிᵛ

ப. தநவாரிதநமு லேதாᵛ
தாரகாதிᵛபாநந வாதாᵛ (த)

அ. இநவம்ச ராஜுᵛல கீகுணமு
லெந்நடைᵛ ந கᵛலதாᵛ நாதுᵛபை (த)

ச. 1. அலநாடுᵛ அந்நமாரகிᵛஞ்சுவேள
பᵛலுவாநருல பங்க்தி நுஞ்சலேதாᵛ (த)

2. பேர பேர பிலிசி ஹாரமுநு ப்ரேம
மீற மீரொஸகᵛலேதாᵛ நாதுᵛபை (த)

3. ராம ராம ராம ரச்ச ஸேபகவே
தாமஸம்பு$^{v}$ யேல த்யாக$^{v}$ராஜநுத (த)

தன்னைச் சேர்ந்தவன் என்ற அபிமானம் உனக்கு என்மீது இல்லையா? சந்திரவதனனே! என்னுடன் வாதா? சூரிய குலத்தைச் சேர்ந்த அரசர்களுக்கு இக் குணம் என்றாவது உண்டா?

அன்றொரு நாள் (பட்டாபிஷேக சமயத்தில்) உணவு அருந்தும் பொழுது நீ பல குரங்குகளைப் பந்தியில் வைத்துக் கொள்ளவில்லையா? ஒவ்வொருவரையும் பெயர் கூறி அழைத்துக் கனிவுடன் நீ மாலை அணிவிக்கவில்லையா? என்னுடன் (வாது) கலகம் செய்யாதே. (அருள் புரிய) இன்னும் தாமதமேன்?

## 364

பே$^{v}$க$^{v}$ட$^{v}$ தே$^{v}$சாதி$^{v}$

ப. நாதோ$^{v}$பாஸநசே சங்கர
நாராயண விது$^{v}$லு வெலஸிரி யோமநஸா (நா)

அ. வேதோ$^{v}$த்$^{v}$த$^{v}$ருலு வேதா$^{v}$தீதுலு
விச்வமெல்ல நிண்டி$^{v}$யுண்டே$^{v}$ வாரலு (நா)

ச. மந்த்ராத்முலு யந்த்ர தந்த்ராத்முலு மறி மந்
வந்த்ரமு லெந்நோ க$^{v}$லவாரலு
தந்த்ரீ லய ஸ்வர கா$^{v}$நவிலோலுரு
த்யாக$^{v}$ராஜ வந்த்$^{v}$யுலு ஸ்வதந்த்ருலு (நா)

நாத உபாசனையினால் (நாதத்தின் வழிபாட்டினால்) சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகிய திரிமூர்த்திகள் ஒளிபெற்று விளங்கினர். (இவர்கள்) வேதங்களை உத்தாரணம் செய்தவர்கள் (நிலை நிறுத்தியவர்கள்). மறைகளுக்கு மேற்பட்டவர்கள். புவனங்கள் அனைத்திலும் நிறைந்திருப்பவர்கள்.

மந்திர மயமானவர்கள். யந்திர தந்திரங்களை (மந்திர சக்கரங்களையும், கிரியைகளையும்) சொரூபமாக உடையவர்கள். எத்தனையோ மன்வந்தரங்களை (மனுவின் ஆயுள் காலங்களை)க் கடந்தவர்கள். வாத்தியம், தாளம், ஸ்வரம், கானம், இவற்றில் திளைப்பவர்கள். தியாகராஜனால் வணங்கப்படுபவர்கள். பிறர் ஆணைக்குக் கட்டுப்படாத சுதந்திரம் உள்ளவர்கள்.

## 365

பே$^{v}$க$^{v}$ட$^{v}$ த்ரிபுட

ப. நீகு த$^{v}$நகு ருணருணிபா$^{v}$வமு லேத$^{v}$நேரு (நீ)

அ. லேக நீகே த$^{v}$யலேதோ$^{v}$ ஸ்ரீராம (நீ)

ச. 1. சிஂந நாடா^v^தி^v^க^v^ ஜித்தமந்து^v^ நெல
கொஂந வாட^v^வை நா கோரிக ஸாக^v^குண்டெ (நீ)
2. கரகி^v^ கரகி^v^ பாத^v^கமலமந்து^v^ வ்ரால
க^v^ருணிஞ்செத^v^ நநி நாபை கஂநட^v^ ஜேஸிதே (நீ)
3. ஈ ஜந்மமுந நாது^v^ பூஜலு கை^v^கொநி
ராஜில்லு த்யாக^v^ராஜு^ம^நி மறசிதே (நீ)

உனக்கும் எனக்கும் ஒருவித சம்பந்தமும் இல்லையென்று (மாந்தர்) கூறிவிடுவார்கள்; அல்லது உனக்கே (என்மீது) தயவில்லையோ? ஸ்ரீராம!

சிறு வயது முதல் என் சித்தத்தில் நீ குடிகொண்டிருப்பினும் என் கோரிக்கை நிறைவேறுவிட்டாலும், (அல்லது) நான் உருகி உருகி உன் பாத கமலங்களைப் பணியும்பொழுது ''கருணை காட்டுவேன்'' என்று நீ கூறியும் என்னை அலட்சியம் செய்தாலும், இச்சன்மத்தில் என் பூசைகளை நீ ஏற்றுக்கொண்டு இத் தியாகராஜனை நீ மறந்தாலும் (உனக்கும் எனக்கும் சம்பந்தமில்லையென்று மாந்தர் கூறிவிடுவர்.;

## 366

பே^v^க^v^ட^v^ ஆதி^v^

ப. நீ பத^v^பங்கஜமுலநு நே நெற நம்மிநாநு (நீ)

அ. பூ^v^பாலுல க^v^ர்வம்பு^v^ லணசு கொற
கா பரமேச்வரு சாபமு த்^v^ருஞ்சிந (நீ)

ச. 1. கோபமுதோ முநு தாபஸியிச்சிந
சாபமுந அஹல்ய அநுதி^v^நமு
சாபராதி தநுதாப மோர்வலே
நாபெநு க^v^நி பரிதாபமு தீ^v^ர்ச்சிந (நீ)
2. வநருஹதுலித நயந ஸங்க்ரந்த^v^ந
தநயுநி பா^v^த^v^ ஸஹிம்பநி விரோ-
சந ஸு^ம^து மதி க^v^லிகி^v^ந ப^v^ய மெக^v^யக^v^
க^v^நதம து^v^ந்து^v^பி^v^ பெநுதல த^v^ந்நிந (நீ)
3. ஜ்யாவரநுத ஜ்யாஜாவர பி^v^டௌ^v^
ஜாவர ஜாச்ரித த்யாக^v^ராஜ
ஜ்யாவராஜ ருத்^v^ரரவநீஸு^ம^ர
பா^v^வநீய முநி ஜீவந அநிசமு (நீ)

தாமரையை யொத்த உன் பாதங்களை நான் திடமாக நம்பியுள்ளேன். (மிதிலையில் கூடியிருந்த) அரசர்களின் கர்வத்தை அடக்குவதற்காக நீ சிவ தனுசை ஒடித்தபொழுது உதவியது உன் திருப்பாதம்.

கோபத்துடன் (கௌதம) ரிஷியிட்ட சாபத்தினால் கல்லுருவான அகலிகை உடல் நொந்து பரிதவிப்பதைக் கண்டு அவளுடைய துயரத்தை அகற்றியது உன் பொன்னடி.

செந்தாமரைக் கண்ணனே! இந்திர குமாரனாகிய வாலி இழைத்த கொடுமையைத் தாளாமல் சூரிய புத்திரனாகிய சுக்கிரீவன் உள்ளத்தில் ஏற்பட்ட அச்சத்தைப் போக்குவதற்காக மிகுந்த கனமுள்ள துந்துபியின் உடலை எற்றியது உன் திருவடி.

வில்லாளிகளால் வணங்கப்படுபவனே! பூமி தேவியின் புதல்வியாகிய சீதையின் நாயகனே! இந்திரன் தம்பியாகத் தோன்றிய வாமனனே! தியாகராஜனால் சரணடையப்பட்டவனே! ராஜசிரேஷ்டர்கள், பிரமன், ருத்திரன், பிராம்மணர் ஆகியோரால் தியானிக்கப்படுபவனே! முனிவர் வாழ்விற்கு ஆதாரமே! எப்பொழுதும் (உன் திருவடிகளையே திடமாக நம்பினேன்.)

## 367

பேˇகˇ,டˇ சாபு

ப. நீவேரா குலதˇ,நமு ஸந்ததமு
நீவேரா ஜீவ(ந)மு (நீ)

அ. ஈவறகுநு தெலியகுந்த நேரமு
தேˇவர க்ஷம சேஸி தˇயதோ நேலுகோரா (நீ)

ச. 1. மாதˇ,வ [1]ஸீதாநுஜ வரஸஹித
மங்கˇளகர பரமார்த்த, பூˇ,தசரித
காˇதிˇ,யாகˇஸம்ரக்ஷக ஸததá
கˇதிஜாப்த நதஜநாவ்ருத விதிˇ,விநுத (நீ)

2. ஸுஜந நிசய பாபஹிம சண்டˇஸூர்ய
ஸுஸ்வரஜித கˇ,நரவமாதுˇ,ர்ய
அஜமுகா,ரி ஸமர நிருபம சௌர்ய
ஆநந்தˇ கந்தˇ ஸுந்தˇர ஸுவர்ய (நீ)

1. ஸுதாவர அநுஜஸஹித

3. ராக⁴வ ஸர்வோந்நத ஸுப்ரகாச
ரமணீயகர பாடித லங்கேச
த்யாக³ராஜ வரஹ்ருத³ய நிவேச
தரணி சசாங்க லோசந ஜாநகீச (நீ)

நீயே அனவரதமும் எங்கள் குலதனம் (குலதெய்வம்). நீயே எங்கள் வாழ்வு (உயிர்). தேவனே! இதுவரையில் இதைத் தெரியாமலிருந்த என் பிழைகளைப் பொறுத்தருளி தயவுடன் என்னை ஏற்றுக்கொள்.

மாதவனே! சீதை, இலக்குவன் ஆகியோருடன் கூடியவனே! மங்களந்தருபவனே! சத்தியமே உருவான சரிதை யுடையவனே! விசுவாமித்திரனின் வேள்வி காத்தவனே! வாயு குமாரனாகிய அனுமனின் ஆப்தனே! சரண் புகுபவர்களால் சூழப்பட்டவனே! பிரமனால் தொழப்படுபவனே!

நல்லோரின் பாவமென்னும் பனியை விலக்கும் சண்ட (கொடிய) சூரியனே! மேக முழக்கத்தை வெல்லும் குரலுடைய வனே! அரக்கருடன் போரிடுவதில் இணையற்ற பராக்கிரமம் வாய்ந்தவனே!

இராகவனே! அனைவரிலும் உயர்ந்தவனே! ஒளி பொருந் தியவனே! இலங்கை மன்னனாகிய இராவணனைக் கையினால் (எளிதில்) வதைத்தவனே! தியாகராஜனின் தூய இதயத்தில் குடிகொண்டவனே! சூரிய சந்திரரைக் கண்களாக உடையவனே! ஜானகி நாயகனே!

## 368

பே³க³ட³ ஆதி³

ப. ப⁴க்துநி சாரித்ரமு விநவே மநஸா ஸீதாராம (ப⁴)

அ. (ஆ)ஸக்திலேக தா கோ³ருசு ஜீவந்-
முக்துடை³யாநந்த³மு நொந்து³ (ப⁴)

ச. 1. ஜபதபமுலு தா ஜேஸிதி நநராது³ அதி⁴கா³க மறி
கபடாத்முடு³மநமை ப³ல்கராது³
உபம தநகு லேக யுண்ட³வலெநநி
யூர யூர திருக³க³ராது³
சபல சித்துடை³யாலு ஸுதுலபை
ஸாரெகு ப்⁴ரம காராத நே ஹரி (ப⁴)

2. ப,ˇவவிப,ˇவமு நிஜமநி யெஞ்சகˇராதுˇ அதிˇகாகமறி
சிவமாத,ˇவ பே,ˇதˇமு ஜேயகˇராதுˇ
பு,ˇவநமந்துˇ தாˇநே யோக்ˇயுடˇநநி
பொˇங்கி பொட்ட ஸாககˇராதுˇ
பவநாத்மஜ த்,ˇருதமௌ ஸீதாபதி
பாதˇமுலநு யேமற ராதˇநு ஹரி (ப,ˇ)

3. ராஜஸ தாமஸ குணˇமுலு காˇராதுˇ அதிˇகாˇகநு அ-
வ்யாஜமுநநு ராலேதˇநகாˇராதுˇ
ராஜயோகˇமார்கˇமு நீ சித்தமு
ராஜசூட விடˇவகˇ ராதுˇ
ராஜசிகா,மணியைந த்யாகˇ-
ராஜ ஸகு,நி மறவராதˇநே ஹரி (ப,ˇ)

மனமே! சீதாராமனின் (உண்மையான) பக்தனின் நடத்தையைக் (கூறுகிறேன்) கேள். ஒரு விஷயத்திலும் பற்றில்லாமல் ஜீவன்முக்தனாக விளங்கி ஆனந்தமடைபவன் அவன்.

(ஹரி பக்தன்) தான் ஜபதபங்கள் செய்வதாகப் பெருமை கொள்ளலாகாது. கபடம் நிறைந்த உள்ளத்துடன் பேசக்கூடாது, தனக்கு நிகராக ஒருவரும் இருக்கக்கூடாதென்று ஊருராக விளம்பரம் செய்துகொண்டு திரியக்கூடாது. ஆசை நிறைந்த மனத்துடன். மனைவி மக்கள் மீது சதா மோகம் கொள்ளலாகாது.

இல்லற வாழ்வில் கிடைக்கும் இன்பங்களே சதமென்று எண்ணலாகாது. சிவன், விஷ்ணு என்ற வித்தியாசம் பாராட்டலாகாது. உலகில் தான் ஒருவனே யோக்கியனென்று எண்ணிப் பொய்கள் பல பேசி வயிறு நிரப்பலாகாது. அனுமனால் தாங்கப் பெறும் இராமனின் திருவடிகளை என்றும் மறக்கலாகாது.

இராஜஸ தாமச குணங்கள் (பக்தனுக்கு) இருக்கலாகாது. காரணமின்றித் தனக்கு இலாபம் ஒன்றும் கிடைக்கவில்லையென்று எண்ணலாகாது. ராஜயோக மார்க்கத்தையும், பகவானின் சித்தம் தன்னிடம் வர வழி தேடுவதையும் விடலாகாது. பிறைசூடிய பெருமானின் தோழனாகிய ஹரியை ஒரு பொழுதும் மறக்கலாகாது.

369

பேˇகˇடˇ ஆதிˇ

ப. லோகாவநசதுர பாஹி மாம் (லோ)

அ. ஸாகேதாதி⁴ப ஸரஸகு³ணப்ரமேய
ஸரஸிஜாஸந ஸநந்த³ந வந்தி³தாங்க⁴ரி
யுக³ பத³நிர்ஜித முநிசாப (லோ)

ச. 1. ராகாப்³ஜமுக₂ பராகா செந்தகு
ராக தநகோர்வ த³ரமா
பாகாரிவிநுத நீகாசிஞ்சிதி
கா³க நேநந்ய மெஞ்சநு நீது³ வாட³ நய்ய ராம (லோ)

2. நீலாக்ருதிக³ல நீலாவண்யமு
நீலாக³நி கநுபிம்பவே
பா³லார்க்காப₄ ஸுசேலாவ்ருத நந்-
நேலுகோ மநஸு ராதி³க
தாளஜால ந்யாயமா ராம (லோ)

3. சேபாதி³க³ பதி³ரூபாலநு கொ³நு
சாபாலங்க்ருத ஸுந்த³ர அவ-
நீபாத்³பு₄தமகு³ நீபாத³மெ க³தி
ஸ்ரீபதே வரத³பாலித-
த்யாக³ராஜ ஸார்வபௌ₄மாகி₂ல (லோ)

*புவனங்களைக் காத்து இரட்சிப்பதில் நிபுணனே! என்னைக் காப்பாற்று. அயோத்திக்கு அதிபனே! சரசகுணம் நிறைந்தவனே! அறியப்படாத மகிமையுடையவனே! பிரமன், சனந்தனர் முதலியோர் தொழும் பதவிணையுடையவனே! பாதமகிமையால் (கௌதம) ரிஷியின் சாபத்தை வென்றவனே!*

*பூர்ண சந்திர வதனனே! என்னிடம் பராமுகமா? நீ என்னருகில் வராமலிருந்தால் என்னால் தாளமுடியுமா? இந்திரனால் வணங்கப்படுபவனே! நான் உன்னையே விரும்பினேனே தவிர வேறு ஒன்றையும் மனத்தினாலும் நினைக்கவில்லை. நான் உன்னைச் சேர்ந்தவன், இராம!*

*நீல வண்ணம் செறிந்த உன் அழகு இத்தகையதென்று எனக்குக் காட்டுவாயாக. இளஞ்சூரியனின் காந்தியுடைய ஆடையை அணிந்தவனே! என்னை ஏற்றுக்கொள்ள இன்னும் மனம் வரவில்லையா? நான் இனிப் பொறுக்கேன். இது நியாயமா, இராம!*

*மச்சம் (மீன்) முதலிய பத்து அவதாரங்களை எடுத்தவனே! வில்லை ஏந்திய அழகனே! உலகாளும் அரசே! அற்புதமான உன் திருவடியே எனக்குத் கதி, திருமகள் நாயகனே! வரதனே! ஈகராஜனைக் காக்கும் சக்கரவர்த்தியே!*

## 370

பே<sup>v</sup>க<sup>v</sup>ட<sup>v</sup> ரூபகம்

ப. ஸாமிகி ஸரி ஜெப்பஜால வேல்புல ராம (ஸா)

அ. நா மநஸதநிபை நாடியுண்ட<sup>v</sup>க<sup>v</sup> நொருல (ஸா)

ச. 1. ஏடி யோசந சாலு எவரி கெடுலோ வ்ராலு
மாடலாடே<sup>v</sup>தெ<sup>v</sup> மேலு மதி<sup>v</sup>கிதெ<sup>v</sup> பதி<sup>v</sup>வேலு (ஸா)

2. தநகண்டி கெந்தோமுத்<sup>v</sup>து<sup>v</sup> தப்படா<sup>v</sup>டி<sup>v</sup>ந பத்<sup>v</sup>து<sup>v</sup>
சநவுசேயு நேப்ரொத்<sup>v</sup>து<sup>v</sup> சல்லநி சூபுகத்<sup>v</sup>து<sup>v</sup> (ஸா)

3. அந்நி வேல்புலலோந அதநிகி ஸரிகா<sup>v</sup>ந
தந்நு ப்<sup>v</sup>ரோசிந க<sup>v</sup>ந த்யாக<sup>v</sup>ராஜ ஸகு<sup>v</sup>டை<sup>v</sup>ந (ஸா)

என் தெய்வமாகிய இராமனுக்குச் சமானமாகக் கூறுவதற்குக் கடவுளர்களுள் ஒருவரும் இலர். என் மனம் அவனுடனே ஒன்றிவிட்டது. வேறு யோசனை எதற்கு? இதுவே போதும். அவரவர் விதிப்படி எல்லாம் நடக்கும். என் தெய்வம் பேசினல் அதுவே எனக்குப் பெரும் பேறு. என் மனத்திற்குப் பதிணுயிரம் (பாக்கியம்).

என் கண்களுக்கு அவன் தோற்றமே அழகு தருகிறது. கொடுத்த வாக்கை மீருதவன் அவன். என்றும் அன்பு காட்டுபவன். குளிர்ந்த பார்வையுடன் நோக்குபவன். தேவர்கள் அனைவரிலும் அவனுக்கு இணை இல்லை. அவனே என்னைக் காக்கும் பெருமான்.

## 371

பி<sup>v</sup>லஹரி (மே. 29) ரூபகம்

ப. இந்த கந்நாநந்த<sup>v</sup>மேமி ஓ ராம ராம (இந்)

அ. ஸந்த ஜநுலகொல்ல ஸம்மதியுண்டே கா<sup>v</sup>நி (இந்)

ச. 1. ஆடு<sup>v</sup>சு நாத<sup>v</sup>முந பா<sup>v</sup>டு<sup>v</sup>சு எது<sup>v</sup>ட ரா-
வேடு<sup>v</sup>சு மநஸுந கூ<sup>v</sup>டி<sup>v</sup>யுண்டே<sup>v</sup>தி<sup>v</sup>சாலு (இந்)

2. ஸ்ரீஹரிகீர்த்தநசே தே<sup>v</sup>ஹாதி<sup>v</sup> இந்த்<sup>v</sup>ரிய ஸ-
மூஹமுல மரசி ஸோஹமைநதே<sup>v</sup> சாலு (இந்)

3. நீ ஜபமுலவேள நீ ஜக<sup>v</sup>முலு நீவை
ராஜில்லுநய த்யாக<sup>v</sup>ராஜநுத சரித்ர (இந்)

ஓ ராம ராம! சதா ஹரி கீர்த்தனம் செய்யும் பாகவதர்களின் கூட்டத்தில் மனம் ஒன்று பட்டால் இதைக்காட்டிலும் பேரானந்தம் உண்டா? மெய்மறந்து ஆடியும், நாதவெள்ளத்தில் மிதந்து பாடியும் பகவானை எதிரில் வருமாறு வேண்டியும்

மனத்தை அவனிடமே லயிக்கச் செய்வதுமே போதும். ஸ்ரீஹரியின் நாம சங்கீர்த்தனத்திஞல் தேகம் முதலிய புலன்களின் கூட்டங்களை மறந்து ''ஸோஹம்'' (அவனே நான்) என்ற அத்துவைத உணர்ச்சி ஏற்படுவதே போதும். உன் திருநாமத்தை நான் ஜெபம் செய்யும் வேளையில் இவ்வுலகங்களனைத்தும் நீயாகவே காட்சியளிக்கின்றன. ஐயனே! தியாகராஜனுல் துதிக்கப்பெறும் சரிதனே!

## 372

பி'லஹரி — ஆதி'

ப. கோரி வச்சிதிநய்ய கோத'ண்ட'பாணி நிந்நு (கோ)

அ. ஜூசுட கெந்தோ நீவு ஸுந்த'ரமூர்த்திவநுசு (கோ)

ச. 1. சித்தாநிகி நீ க்ருப வித்தமநுசு ஜால (கோ)

2. மெண்டு' கு'ணமுலசே நிண்டு' குண்ட'யநுசு (கோ)

3. ராஜாதி'ராஜ த்யாக'ராஜநுதசரித (கோ)

கோதண்டத்தை ஏந்திய இராமனே! காண்பதற்கு எவ்வளவோ பேரழகு படைத்தவன் நீயென்று உன்னையே விரும்பி வந்தடைந்தேன். உன் கிருபையே பெருஞ் செல்வமென்று உள்ளத்தில் துணிந்தேன். அதிசயமான குணங்களின் நிறைகுடம் நீ. ராஜாதிராஜன். தியாகராஜன் போற்றும் சரிதையுடையவன்.

## 373

பி'லஹரி — ஜம்ப

ப. தொலிஜந்மமுநு ஜேயு
து'டு'கு தெ'லிஸெநு ராம (தொ)

அ. (நீ மஹிம) ப'லமேமோ அரசேதி
புண்டிகத்'த'மு வலெநா (தொ)

ச. ராகி'பைருல செந்த ரம்யமௌ வரிமொலக
ராஜில்ல நேர்ச்சுநடரா
நாக'சயந த்யாக'ராஜு பாபமுதோநு
நாம புண்யமு செலகு'நா-நேநு (தொ)

இராம! நான் பூர்வ சன்மங்களில் செய்த தீவினையின் பயனை இன்று அறிந்தேன். உன் மகிமையின் பயன் என்னவோ (அறியேனே தவிர) என் தீவினைப் பயன் நன்கு தெரிகிறது. கைப்புண்ணிற்குக் கண்ணுடி வேண்டுமா?

(வறண்ட பூமியில் விளையும்) கேழ்வரகுப் பயிருக்கருகில் சிறந்த நெற்பயிரை நட்டால் அது விளையுமா? ஆதிசேடன் மீது பள்ளி கொண்டவனே! இத்தியாகராஜனின் பாவங்களுடன் சேர்ந்தால் உன் நாம சங்கிர்த்தனத்தின் பயன் பிரகாசிக்குமா?

## 374

பி³லஹரி — ஆதி³

ப. தொ³ரகுநா இடுவண்டி ஸேவ (தொ³)

அ. தொ³ரகுநால்ப தப ஸொநரிஞ்சிந* பூ⁴-
ஸுரவருலகைந ஸுரலகைந (தொ³)

ச. 1. தும்பு³ரு நாரது³லு ஸுகு³ண கீர்த்த-
நம்பு³ல நாலாபமு ஸேயகா³
அம்ப³ரீஷ முக்²யுலு நாமமு ஸே-
யக³ஜாஜுல பை சல்லகா³
பி³ம்பா³த⁴ரலகு³ ஸுரவார யலி-
வேணுலு நாட்யமுலாட³கா³
அம்பு³ஜப⁴வ பாகாரு லிருக³ட³ல
நங்வய பி³ருதா³வளிநி பொ³க³ட³கா³
அம்ப³ரவாஸ ஸதுலு கர கங்க-
ணம்பு³லு க⁴ல்லநி விஸரக³ மணிஹா-
ரம்பு³லு க³த³லக³ நூசே ப²ணிதல்-
பம்பு³ந நெலகொந்ந ஹரிநி க³நுகொ³ந (தொ³)

2. மரகத மணி ஸந்நிப⁴ தே³ஹம்பு³ந
மெருகு³ கநகசேலமு சோபி⁴ல்ல
சரணயுக³ நகா²வளி காந்துலு
ஜந்து³ரு பில்லலநு கே³ர
வர நூபுரமு வெலுக³ க³ரயுக³முந
வஜ்ரபு பூ⁴ஷணமுலு மெறய
நுரமுந முக்தாஹாரமுலு மறியு
உசிதமைந மகரகுண்ட³லம்பு³லு

---

* தபமொநரிஞ்சிந

சிறு நவ்வுலுக³ல வத³நம்பு³ந முங்-
கு³ரு லத்³த³ம்பு க³போலமு முத்³து³
கு³ரியு தி³வ்ய பா, லம்புந தி³லகமு
மெறஸே பு³வி லாவண்யநிதி³,நி க³ந (தொ³)

3. தாமஸகு³ண ரஹிதமுநுலுகு பொ³க³ட³
த³ரமுகா³கநே ப்³,ரமஸி நில்வக³
ஸ்ரீமத் கநகபு தொ³ட்லபைநி
செலுவந்த³க³ கொ³லுவுண்ட³க³
காமித ப,லதா³யகியௌ ஸீதா-
காந்துநி க³நி யுப்பொங்க³க³
ராமப்³ரஹ்ம தநயுடௌ³ த்யாக³-
ராஜூ³ தா பா³டு³சு நூசக³
ராமுநி ஜக³து³த்தா³,ருநி ஸுரரிபு
பீ³,முநி த்ரிகு³ணாதீதுநி பூ³ர்ண
காமுநி சிந்மயரூபுநி ஸத்³கு³ண
தா³,முநி கநுலார மதி³நி க³நுகொ³ந (தொ³)

இதைப்போன்ற சேவை (எங்காகிலும்) கிடைக்குமா? அற்பமான தவம் புரிந்த அந்தண சிரேஷ்டர்களுக்கும் தேவருக்கும் (இத்தகைய சேவை) கிடைக்குமா?

தும்புரு. நாரதர் முதலியோர் உன்து நற்குணங்களை இசை பாடவும், அம்பரீஷன் போன்ற பிரமுகர்கள் நாம சங்கீர்த்தனம் செய்யவும், சாதி மலர்களைப் பொழியவும், கோவைக் கனியொத்த அதரங்களையுடைய தேவலோகத்துக் கணிகையர் நாட்டியமாடவும். பிரமன், இந்திரன் முதலியோர் இருபுறமும் நின்று (பகவானின்) வம்ச விருதுகளைத் துதிபாடவும், வானுலக மங்கையர் கைகளில் அணிந்த கங்கணங்கள் கல்லென்று ஒலிக்குமாறு விசிறவும், இரத்தின மாலைகள் அசைந்தாடவும், ஆடும் சேஷசயனத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந் நாராயணனைக் காணும் (இச் சேவை வேறு எங்காகிலும் கிடைக்குமா?)

நீல மணியைப்போல் ஒளி வீசும் திருமேனியின் மீது மின்னுகிற பீதாம்பரம் விளங்க, இரு பாதங்களிலுள்ள நகங்களின் பிரகாசம் சந்திர பிம்பங்களைப் பழிக்க, சிறந்த காற் சிலம்புகள் விளங்க, இரு கரங்களிலும் வைர நகைகள் சுடர் விட, திருமார்பில் முத்துமாலைகளும், செவிகளில் மகர குண்டலங்களும், புன்னகை அரும்பிய முகத்தில் முன்னுச்சி மயிரும் கண்ணாடியை யொத்த கன்னங்களும் அழகு பொழியும் நெற்றி

யின் மீது திலகமும் மிளிர. இவ்வுலகில் அழகின் திரளாக விளங்கும் (பகவானின் இச்சேவை எங்காகிலும் கிடைக்குமா?)

தாமச குணங்களை யொழித்த முனிவர்களும் (இக் காட்சியை) வருணிக்கச் சத்தியில்லாமல் பிரமித்து நிற்கவும், திரு மிகுந்த பொன்மயமான ஊஞ்சலின் மீது வனப்புடன் அவன் கொலுவீற்றிருக்கையில் விரும்பிய பலன்களையளிக்கும் அன்னையாகிய சிதை தன் நாயகனைப் பார்த்து உளம் பூரிக்கவும். இராமபிரம்மத்தின் புதல்வனுன தியாகராஜன் தானே பாடிக் கொண்டு (ஊஞ்சலை) ஆட்டவும் புவனங்களைக் காப்பவனும் அரக்கரை அழிப்பவனும், முக்குணங்களைக் கடந்தவனும் நிறைவேறிய விருப்பங்களையுடையவனும், சின்மய ஸ்வரூபனும் நற்குணங்களுக்குக் கருவூலமாகிய இராமனைக் கண்ணுர (மனத்தில்) காணும் (இச்சேவை வேறு எங்காகிலும் கிடைக்குமா?)

## 375

பி<sup>v</sup>லஹரி — த்ரிபுட

ப. நரஸிம்ஹா நநு ப்<sup>v</sup>ரோவவே ஸ்ரீலக்ஷ்மீ (ந)

அ. கொறமாலிந நருல கொ<sup>v</sup>நியாட<sup>v</sup>நு நேநு
பரமபாவந நாபாலி ஸ்ரீலக்ஷ்மீ (ந)

ச. 1. நீது<sup>v</sup> ப<sup>v</sup>க்தாக்<sup>v</sup>ரேஸருடு<sup>v</sup> ப்ரஹ்-
லாது<sup>v</sup> ட<sup>v</sup>புடொ<sup>v</sup>க கநககச்யபு
வாது<sup>v</sup> கோர்வக நிந்நு சரணநி
யாது<sup>v</sup>கோமந காசிநாவு (ந)

2. எந்து<sup>v</sup>கநி ஸைரிந்து நீ மந-
ஸந்து<sup>v</sup> தெலியநிதே<sup>v</sup>தி<sup>v</sup> லோகுல
நிந்த<sup>v</sup> கோர்வக நிந்நு கோ<sup>v</sup>ரி
நந்து<sup>v</sup> கெந்தநி கருண ஜூதுவோ (ந)

3. நீ ஜபமு நீ ஸ்மரண நீ பத<sup>v</sup>
பூஜ நீவாரி செலிமிபொஸகி<sup>v</sup>
ராஜிக<sup>v</sup> த்<sup>v</sup>யசேயு த்யாக<sup>v</sup>-
ராஜஸந்நுத தரமுகா<sup>v</sup>து<sup>v</sup> (ந)

ஸ்ரீலக்ஷ்மி நரசிம்மப் பெருமானே! என்னைக் காத்தருள். பயனற்ற மாந்தரைப் புகழ என்னுலாகாது. தூயவனே! என்னைக் காக்கும் தெய்வமே!

உன் பக்தருள் தலைசிறந்தவனான பிரஹ்லாதன் அன்றொரு நாள் (தன் தந்தையாகிய) இரணிய கசிபுவின் கொடிய மொழிகளைப் பொறுக்க முடியாமல் உன்னைத் தஞ்சமடைந்து "ஆட்கொள்வா"யென்று முறையிட அவனைக் காப்பாற்றினாய்.

நான் எவ்வளவென்று பொறுப்பேன்? உன் திருவுள்ளத்திற்குத் தெரியாததும் உண்டோ? உலக மாந்தரின் நிந்தைதைத் தாள முடியாமல் உன்னை வேண்டும் எனக்கு எவ்விதத்தில் கருணை காட்டப்போகிறாயோ?

உனது நாம சபம், உனது நினைவு, உனது பாதபூஜை, உன் அடியார்களின் நல்லுறவு இவற்றையளித்துச் சம்மதத்துடன் தயை புரிவாயாக. இனி நான் பொறுக்கேன்.

## 376

பிᵛலஹரி ஆதிᵛ

ப. நாஜீவாதாᵛ,ர நாநோமு ப,லமா (நா)

அ. ராஜீவலோசந ராஜராஜ சிரோமணி (நா)

ச. நா சூபு ப்ரகாசமா

நா நாஸிகா பரிமளமா

நா ஜபவர்ண ரூபமா

நாதுᵛ பூஜா ஸுᵘமமா த்யாகᵛராஜநுத (நா)

என் உயிருக்கு ஆதாரமே! நான் நோற்ற நோன்புகளின் பயனே! பங்கயக் கண்ணனே! ராஜாதி ராஜருள் முதல்வனே! என் பார்வையின் ஒளி நீயே! என் நாசி நுகரும் நறுமணமும் நீயே! நான் சபம் செய்யும் அட்சரங்களின் உருவம் நீயே! நான் செய்யும் பூசைக்கு மலரும் நீயே!

## 377

பிᵛலஹரி சாபு

ப. நீவேகாᵛநி நந்நெவரு காᵛதுருரா

நீரஜதᵛளநயந (நீ)

அ. காவலஸிந கோரிகலிச்சி நந்நு

கᵛருணிஞ்சி ப்ᵛரோசே தல்லிதᵛண்ட்ᵛரிவி (நீ)

ச. 1. முநு மா வம்சமுந கᵛலுகுᵛ பெத்ᵛதᵛலு தப

முலநு ஜேஸி யார்ஜிஞ்சிந தᵛ,நமு

விநவய்யா பᵛஹுᵘ ஜந்மமுலநு நிண்டாᵛரு

விருல வேல்புலநு பூᵛஜிஞ்சிந ப,லமு (நீ)

2. சரணுக³தஜந பாபஜ்வலநமுநு
சமநஜேயு ஜலபூரித க⁴நமு
ஸுரமுநிஜந யோகி³க³ணமுல ஹ்ருத³யமு
ஸுக்³ருஹமௌ ஸச்சிதா³நந்த³ க⁴நமு (நீ)

3. ஸாக³ரசயந நது³லலோ மேடைந
ஸ்வர்ணதீ³ ஸ்நாநாநிகி க³ல்கு³ ப²லமு
த்யாக³ராஜு வரமநி ப்³ரஹ்மாது³லகு ஸ-
த்யமு ஜேஸி பல்கிந தாரகமு (நீ)

செந்தாமரையிதழை யொத்த கண்களையுடையவனே! உன்னையல்லால் வேறு யார் என்னைக் காப்பாற்றுவார்? வேண்டிய வரங்களையளித்து என்னைக் கருணை கூர்ந்து பாலிக்கும் தாயும் தந்தையும் நீயேயல்லவா?

இதைக் கேள். முன்பு என் வம்சத்திலுதித்த பெரியோர்கள் கடுந்தவங்கள் புரிந்து சம்பாதித்த செல்வம் நீயே. அனேக சமயங்களில் பல தெய்வங்களை மலர் கொண்டு நான் பூசித்ததன் பயனும் நீயே.

உன்னைச் சரணமடைந்தவர்களின் பாவமென்னும் தீயை அணைக்கும் நீருண்ட மேகம் நீயே. தேவர், முனிவர், யோகியர் ஆகியோரின் உள்ளத்தைச் சிறந்த இருப்பிடமாகக் கொண்ட சத்து, சித்து, ஆனந்தத்தின் (சச்சிதானந்தத்தின்) நிறைவும் நீயே.

பாற்கடல் துயின்றவனே! நதிகளுள் சிறந்ததான கங்கையில் நீராடும் பலனுக்கீடான புண்ணியத்தையளிப்பது உன் தாரக நாமமேயென்று சத்தியம் செய்து சிவன், பிரமன் முதலியோருக்குக் கூறவில்லையா?

## 378

பி³லஹரி ஏகதாளம்

ப. வாஸுதே³வ வரகு³ண மாமவ (வா)
அ. வாஸவ ஹ்ருத³ய நிவாஸ சித்³விலாஸ (வா)
ச. 1. ஸாக³ரசயந ப⁴வஸாக³ர தாரக (வா)
2. நீரஜநயந க⁴நநில ஸுஜநபால (வா)
3. பா⁴கவதப்ரிய த்யாக³ராஜார்ச்சித (வா)

வாசுதேவனே! உத்தம குணங்கள் நிறைந்தவனே! என்னை இரட்சிப்பாயாக! இந்திரனின் சித்தமிசை வாழ்பவனே! சித் விலாசனே! (ஞானஸ்வரூபனே!) அலை கடலில் பள்ளிகொண்

டவனே! சம்சாரமெனும் கடலைத் தாண்டச் செய்பவனே! தாமரைக் கண்ணனே! முகில் வண்ணனே! நல்லோரைக் காப்பவனே! பாகவதர்களிடம் அன்பு பூண்டவனே!

## 379

பி³லஹரி தே³சாதி³

ப. கநுகொ³ண்டிநி ஸ்ரீராமுநி நேடு³
(கநுலார நா காமிதம்பு³ தீ³ர) (க)

அ. [1]இநகுலமந்து³ இம்புகா³நு பு³ட்டிந
[2]இலலோந ஸீதாநாயகுநி நேடு³ (க)

ச. [3]ப⁴ரத லக்ஷ்மண சத்ருக்⁴நுல கொலுவ
ப³வமாந ஸுதுடு³ பாத³முல ப³ட்ட
தீ⁴ருலைந ஸுக்³ரீவ ப்ரமுகு²லு
விநுதிஸேய த்யாக³ராஜநுதுநி நேடு³ (க)

ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியை இன்று நான் (கண்களார என் விருப்பங்கள் நிறைவேறும்படி) கண்டுகொண்டேன்.

சூரிய குலத்தில் இனிது அவதரித்து இப்பூவுலகில் ஸீதா நாயகனாக விளங்கும் (ஸ்ரீ ராமனை தரிசித்தேன்).

பரதன், இலக்ஷ்மணன், சத்துருக்கினன் ஆகிய தம்பியர் சேவிக்கவும், வாயு தனயனாகிய அனுமன் திருவடிகளைப் பற்றவும், தீரனான சுக்கிரீவன் முதலிய பிரமுகர்கள் துதிக்கவும் எழுந்தருளியிருக்கும் தியாகராஜனின் இஷ்ட தெய்வத்தை (இன்று கண்டு கொண்டேன்).

## 380

விவர்த⁴நி (மே. 29) ரூபகம்

ப. விநவே ஓ மநஸா
விவரம்பு³க³ நே தெ³ல்பெத³ (வி)

அ. மநஸெறிங்கி³ குமார்க³முந
மறி பொறலுசு ஜெட³வலதெ³ (வி)

---

1. இநவம்சமுந
2. ஜநகாத்மஜ ஸம்யுதமைந ராமுநி
3. ப⁴ரத லக்ஷ்மண சத்ருக்⁴நாநிலஜ பா⁴ஸ்கராத் மஜாஜ
தநயாது³லதோ த⁴ரணிசுலு விபீ⁴ஷணுடு³கொ³லுவ
தத்வமஸி யநுசு த்யாக³ராஜு பாட³

ச. ஈ நட<sup>v</sup>தலு பநிகிராது<sup>v</sup>
ஈச்வர க்ருப கலுக<sup>v</sup>போ<sup>v</sup>து<sup>v</sup>
த்<sup>v</sup>யாநப<sup>v</sup>ஜந ஸேயவெ வர
த்யாக<sup>v</sup>ராஜு மநவி (வி)

மனமே! இத் தியாகராஜனின் விண்ணப்பத்தைக் கேள். விவரமாகக் கூறுகிறேன், மனமறிந்து தீய வழிகளில் புரண்டு கெட்டுப்போகாதே இத்தகைய நடத்தைகள் உபயோகப் படா. இவற்றினுல் ஈசுவரனின் கிருபை உண்டாகாது. ராம தியானத்துடன் கூடிய நாம சங்கீர்த்தனத்தை என்றும் செய்வாயாக.

## 381

சுத்<sup>v</sup>த<sup>v</sup>ஸாவேரி (மே. 29) ஆதி<sup>v</sup>

ப. ஒருலநாடுகோ வலஸிநதே<sup>v</sup>மி
பரமபாவந ஸ்ரீராம (ஒ)

அ. பரிதாபமு தாளக மொறலிட<sup>v</sup>கா<sup>v</sup>
கருணலேக நீவே நநு ஜூட<sup>v</sup>க<sup>v</sup> (ஒ)

ச. 1. மஞ்சிவாரி ஸஹவாஸமு பா<sup>v</sup>ஸி
கொஞ்செபு நருலகொரகு நுதிஜேஸி
யெஞ்சிந கார்யமு கூ<sup>v</sup>ட<sup>v</sup>நி கா<sup>v</sup>ஸி ஸ-
ஹிஞ்சகுண்டெ<sup>v</sup>டி<sup>v</sup>தி<sup>v</sup> நா பேரு வாஸி (ஒ)

2. *ராசியநுசு நருலநு சேபூ<sup>v</sup>நி
வாஸி யுண்டெ<sup>v</sup>டி<sup>v</sup>தி<sup>v</sup> ப<sup>v</sup>வாநி
ஆசப்ரிய நே முந்து<sup>v</sup>ராநி
ஜேஸிந கர்மமநுகோவலெ கா<sup>v</sup>நி (ஒ)

3 தே<sup>v</sup>வ த்யாக<sup>v</sup>ராஜவிநுத ஸநக
பா<sup>v</sup>வநீய ரகு<sup>v</sup>குலதிலக
ஈவறகுநு நாது<sup>v</sup> தநு வலயக
நீவே தெலுஸுகோவலெ கா<sup>v</sup>க (ஒ)

பரமபாவன! ஸ்ரீராம! துயரம் தாள முடியாமல் நான் முறையிட்ட போதிலும் கருணை சிறிதுமின்றி நீ என்னைப் பார்த்துக் கொண்டிருப்பதால் நான் பிறரைக் குறை கூறி என்ன பயன்?

---

* சிதைவுற்ற இச்சரணத்தின் பொருள் தெளிவாக விளங்காததால் அது இங்கு சேர்க்கப்படவில்லை.

நல்லோர் உறவை விட்டு அற்ப மனிதர்களைப் புகழ்ந்தும் நான் நினைத்த காரியங்கள் கைகூடாததால் ஏற்பட்ட சிரமத்தைப் பொறுக்க முடியாமல் நான் வருந்துவது என் பெயரின் வாசி போலும்;

தேவனே! தியாகராஜனுல் வணங்கப்படுபவனே! சனகரால் தியானிக்கப்படுபவனே! ரகு குல திலகனே! இதுவரையிற்கூட என்னுடல் வருத்தமடையாதபடி நீயே நிலைமையைத் தெரிந்து கொண்டு என்னைக் காக்க வேண்டுமே தவிர (பிறரைக் குறை கூறி என்ன பயன்?)

## 382

சுத்^v த,^v ஸாவேரி — ரூபகம்

ப. காலஹரணமேலரா ஹரே ஸீதாராம (கா)

அ. காலஹரணமேல ஸுகு^v ண
ஜால கருணாலவால (கா)

ச. 1. சுட்டி சுட்டி பக்ஷுலெல்ல
செட்டு வெத^v குரீதி பு,^v விநி
புட்டுலேக நீ பத^v முல
ப^v ட்டுகொந்த நந்நு ப்^v ரோவ (கா)

2. பொட^v வுந எந்தாடு^v கொந்ந
பூ,^v மிநி த்யாக^v ம்பு^v ரீதி
கடு^v வேல்புல முந்ந நீவு
கா^v க யெவரு நந்நு ப்^v ரோவ (கா)

3. தி^v ந தி^v நமுநு தி^v ரிகி திரிகி^v
தி^v க்குலேக சரணுஜொச்சி
தநுவு த,^v நமு நீதே^v யண்டி
த்யாக^v ராஜவிநுத ராம (கா)

4. *இஷ்டதை^v வமா மநோ
பீ,^v ஷ்ட மீயலேக இங்க
க^v ஷ்டமா த்யாக^v ராஜு
காமிதார்த, ப,ல மொஸங்க^v (கா)

---

* சில பிரதிகளில் இந்த நான்காவது சரணமும் காணப்படுகிறது. இதிலும் 'தியாகராஜ' முத்திரை அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது.

ஹரே ஸீதாராம! என்னைக் காப்பாற்ற இன்னும் தாமதமேன்? நற்குண நிதியே! கருணையின் உறைவிடமே! பறவைகள் சுற்றிச் சுற்றிப் பறந்து (உட்காருவதற்கு) மரத்தைத் தேடுவது போல, உலகில் மறு பிறப்பைத் தவிர்க்க உதவும் உன் பாதங்களைப் பற்றியுள்ள என்னைக் காக்க (இன்னும்) தாமதமேன்?)

உலகில் மற்ற தர்மங்களை எவ்வளவு புகழ்ந்தாலும் (அவற்றுள்) தியாகமே தலைசிறந்து விளங்குவதுபோல் (சிறு பலன்களையளிக்கும்) இதர தெய்வங்களை விடச் சிறந்த உன்னைத் தவிர என்னைக் காப்பவர் வேறு யாருளர்?

அனுதினமும் இங்குமங்கும் திரிந்து திரிந்து திக்கற்று உன்னையே சரணமடைந்து என்னுடலும் பொருளும் உனதே யென்று துணிந்தேன்.

என் இஷ்ட தெய்வமே! என் விருப்பங்களையளிப்பது உனக்குக் கஷ்டமா? இத்தியாகராஜனின் மனோரதங்களையளிக்க (இன்னும் தாமதமேன்?)

## 383

சுத்ᵛதᵛஸாவேரி — ஆதிᵛ

ப. நீகெவரி போᵛதᵛந (நீ)

அ. ஸாகேதராம ஸந்முநிஸ்தோம (நீ)

ச. கலகலமநி நாதோ பᵛலுககுந்நாவு
தலபு வேறைநதிᵛ த்யாகᵛராஜநுத (நீ)

உனக்கு இது யார் செய்த போதனை? அயோத்தி ராமனே! மாமுனிவரால் சூழப்பட்டவனே! கலகலவென்று என்னுடன் பேசாமலிருக்கிறாய். உன் எண்ணமே மாறிவிட்டது போலும்!

## 384

சுத்ᵛதᵛஸாவேரி — ஆதிᵛ

ப. லக்ஷணமுலு கᵛல ராமுநிகி ப்ᵛர-
த்ᵛக்ஷிண மொநரிந்தாமு ராரே (ல)

அ. குக்ஷிநி ப்ᵛரஹ்மாண்டᵛமு லுந்நவட வி-
சக்ஷணுடᵛட தீᵛக்ஷாகுᵛருடᵛட சுபᵛ (ல)

ச. லக்ஷண லக்ஷ்யமுகᵛல ச்ருதுலகு ப்ரத்-
யக்ஷம்பௌᵛநட
சிக்ஷபᵛடிᵛ ஸபᵛநு மெப்பிஞ்சு பᵛக்த
ரக்ஷகுண்டௌᵛநட

அக்ஷரஸ்துலைந ப்ஜநபருலகே
அந்தரங்குடௌநட
ஸாக்ஷியை வெலயு த்யாகராஜ
பக்ஷுண்டௌநட முப்பதிரெண்டு (ல)

முப்பத்திரண்டு சுப இலட்சணங்களும் (பூர்ணமாக) அமைந்துள்ள இராமபிரானைப் பிரதட்சிணம் செய்வோம், வாரீர். அண்ட சராசரங்களும் அவன் உதரத்தில் அடங்கியுள்ளனவாம். (விவேகம் நிறைந்த) வல்லவன் அவன். தீட்சை (உபதேசம்) அருளும் சற்குருவும் அவனே.

இலக்கணமும் இலக்கியமுமுள்ள வேத வசனங்களாலேயே அறியக்கூடிய ஸ்வரூபமுள்ளவன். பலவித சிட்சைகளுக்கு ஆளாகி (பொறுமைக்காக) உலகோரால் மெச்சப்படும் பக்தர்களைக் காப்பவன். அழிவில்லாத பிரமத்தை உபாசித்து பஜனை செய்யும் ஞானிகளுக்கு உற்ற நண்பன், உலக சாட்சியாக விளங்கும் அப்பரம்பொருள் இத்தியாகராஜனிடமும் அன்பு பூண்டவன்.

## 385

ஹம்ஸத்வநி (மே. 29) தேசாதி

ப. ரகுநாயக நீ பாதயுக
ராஜீவமுல நே விடஜால ஸ்ரீ (ர)

அ. அகஜாலமுல பாறத்ரோலி நந்-
நாதரிம்ப நீவே கதிகாத ஸ்ரீ (ர)

ச. பவ ஸாகரமு தாடலேக நே
பலுகாஸி படி நீ மறுகு ஜேரிதிநி
அவநிஜாதிபாச்ரித ரக்ஷக
ஆநந்தகர ஸ்ரீ த்யாகராஜநுத (ர)

ரகுகுலத் தோன்றலே! உன் திருவடித் தாமரைகளை நான் என்றும் விடேன். கனத்த என் பாவங்களையகற்றி என்னை ஆதரிக்க நீயே புகல் அல்லவா? சம்சாரமென்னும் இக்கடலைத் தாண்ட முடியாமல் நான் பெருந்துயரடைந்து உன் அருகை வந்தடைந்தேன். சீதா நாயகனே! தஞ்சமடைந்தவரைக் காப்பவனே! ஆனந்தம் தருபவனே!

## 386

ஹம்ஸத்⁴வநி (மே. 29) தே³சாதி³

ப. [1]ஸ்ரீரகு⁴குலமந்து³ பு⁴ட்டி
ஸீதநு ஜெயிகொநிந ராமசந்த்³ர (ஸ்ரீ)

அ. ஆராமமந்து³ முநுலகோரிக
லீடே³ர ஸேய பூ³நுகொந்ந ராம (ஸ்ரீ)

ச. வர ரத்நபீட₂மந்து³ மஜ்ஜநமு
புட³மிஸு³ருலசேத கை³கொந்ந ராம
பரமப⁴க்துலநு பா³லநமு ஸேயு
ஸாகேதவாஸ த்யாக³ராஜநுத (ஸ்ரீ)

திருமிகுந்த இரகு குலத்தில் பிறந்து சீதையைக் கைப்பிடித்த இராமசந்திர! வனத்தில் முனிவர்களின் விருப்பங்களை நிறைவேற்ற விரதம் பூண்டவனே! இரத்தின மயமான சிங்காதனத்தில் மீது அமர்ந்து அந்தண சிரேஷ்டர்களால் பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டவனே! பரமபக்தர்களைப் பாலிக்கும் அயோத்தி மன்னனே!

## 387

நாக³நந்தி³நி (மே. 30) ஆதி³

ப. ஸத்தலேநி தி³நமுலு வச்செநா (ஸ)

அ. ஸத்தமாத்ரமா ஸச்சித்தசாயி
ஸாகேதநிலயா தை³வ (ஸ)

ச. கலிலோந ப்ரத₂ம பாத³முலோ
தலி த³ண்ட்³ரி கு³ரு ப⁴க்தியுலேக
பலுமாரு து³ஷ்க்ருத்யம் பொ³நர்ப்ப-
வலெநா த்யாக³ராஜநுத தை³வ (ஸ)

தெய்வ சக்தி (பலம்) இல்லாத (சாரமற்ற) நாட்கள் வந்தனவே! அனைத்திற்கும் சாரமானவனே! நல்லோர் சித்தமிசை சயனித்திருப்பவனே! கலியுகத்தின் முதல் பாதத்திலேயே (காற்பகுதியிலேயே) அன்னை, பிதா, குரு ஆகியோரிடம் பக்தியில்லாமல் (மாந்தர்) பன்முறை தீச்செயல்களைப் புரியும் நிலைமை வரவேண்டுமா?

---

1 இக்கீர்த்தனத்தில் யதி, பிராஸம் முதலிய யாப்பிலக்கணம் சரியாக அமையாததால் இது ஸ்வாமியின் கீர்த்தனம் அல்ல என்று சிலர் கூறுவர்.

388

காᵛங்கேᵛயபூᵛ,ஷணி (மே. 33) தேᵛசாதிᵛ

ப. எவ்வரே ராமய்ய நீ ஸரி (எ)

அ. ரவ்வகு தாᵛவுலேக ஸுஜநுலகு
ராஜிகᵛ ரக்ஷிஞ்சேவா (ரெ)

ச. பகᵛவாநிகி ஸோதᵛருடᵛநி யெஞ்சக
பᵛ,க்திநெறிகிᵛ லங்கா பட்ட[1] மொஸகᵛகாᵛ
நகᵛதᵛ,ர ஸுர பூᵛ,ஸுர பூஜித வர
நாகᵛசயந த்யாகᵛராஜவிநுத ஸரி (எ)

*இராமனே! உனக்கிணை யார் உளர்? (பக்தரைக் காப்பதில்) உன் புகழிற்கு இழுக்கின்றி நல்லோரை முறையாகக் காப்பாற்றுவதில் உனக்கு நிகர் ஏது? பகைவனின் தம்பியென்பதையும் பொருட்படுத்தாமல் (விபீஷணனின்) பக்தியை அறிந்து அவனுக்கு இலங்கை ராச்சியத்தை அளித்தனை. கோவர்த்தன கிரியைத் தாங்கியவனே! தேவராலும், மறையவராலும் பூசிக்கப் பெறுபவனே! சிறப்புற்ற ஆதிசேடன் மீது துயில்பவனே!*

389

வாகᵛதீᵛ,ச்வரி (மே. 34) ஆதிᵛ

ப. பரமாத்முடுᵛ வெலிகேᵛ முச்சட
பாᵛகᵛ தெலுஸுகோரெ (ப)

அ. ஹரியட ஹருடᵛட ஸுரலட நருலட
அகி,லாண்டᵛ கோடுலட யந்தᵛறிலோ (ப)

ச. கᵛகᵛநாநில தேஜோ ஜல பூᵛ,மயமகுᵛ
ம்ருகᵛ க,கᵛ நகᵛ தரு கோடுலலோ
ஸகுᵛணமுலலோ விகுᵛணமுலலோ ஸததமு
ஸாதுᵛ, த்யாகᵛராஜாதிᵛ யாச்ரிதுலலோ (ப)

*அனைத்திலும் பரம்பொருள் விளங்கும் (அழகிய) காட்சியை நன்கு அறிந்துகொள்வீர்! அவனை அரியென்பர். அரனென்பர். தேவரென்றும். மனிதரென்றும், அண்டசராசரமென்றும் கூறுவர். வானவெளியிலும் காற்றிலும், தீயிலும், நீரிலும், மண்ணிலும், விலங்கு, பட்சி, மலைகள், மரங்கள் ஆகியவையிலும், உயிருள்ளவையிலும், உயிரற்றவையிலும் அவனைச்*

---

1 பட்டண

சரணடைந்த தியாகராஜன் போன்ற சாதுக்களிடையிலும் (பரம் பொருள் விளங்கும் அற்புதக் காட்சியை அறிந்து கொள்வீர்!)

390

சா,யாநாட (மே. 34) தே^v^சாதி^v^

ப. இதி^v^ ஸமயமுரா இநகுலதிலக (இ)

அ. வித^v^ளித கலி து^v^ர்மத^v^ க^v^ஜக^v^மந

மொத^v^ட ப^v^ல்கிநதி^v^ நிஜமுக^v^ ஜேய (இ)

ச. கலிபுருஷுடு^v^ நாடகமுந க^v^ட்ட

த^v^லசிநாடு^v^ ஸ்ரீ த்யாக^v^ராஜநுத

க,ல மதமுலநெ யாக^v^முலகு மே-

கலுக^v^ நருல ஜேஸூநே த^v^யஜூட^v^ (இ)

சூரியவம்சத்தின் திலகனே! நீ முன்பு உரைத்ததை மெய்ப் பித்துக் காட்ட இதுவே தருணம். கலியின் திமிரை அடக்கு பவனே! யானையையொத்த கம்பீரமான நடையுடையவனே! கலி புருடன் ஒரு நாடகம் நடிக்கத் திட்டமிட்டிருக்கிறான். துஷ்ட மதங்களென்னும் (சமயங்களென்னும்) வேள்விகளில் மனிதரை ஆடுகள் போல் பலியிட்டுவிடுவான். நீ தயை புரிய (இதுவே தருணம்)

391

சூலிநி (மே. 35) தே^v^சாதி^v^

ப. ப்ராணநாத, பி^v^ராந ப்^v^ரோவவே (ப்ரா)

அ. வேணுகா^v^ நமுசே ப^v^தி^v^யாரு

வேல கோ^v^பிகல பாலிஞ்சி ஏலே (ப்ரா)

ச. வெந்ந மீக^v^ட^v^ல வேட்^v^க மீறக^v^நு

கந்ந பிந்ந வாண்ட்^v^ல கடு^v^பு நிஞ்சி

திந்நகா^v^ வெலயு தி^v^வ்யரூபமா

சிந்நி க்ருஷ்ண த^v^யசேஸி த்யாக^v^ராஜ (ப்ரா)

புல்லாங்குழலின் இன்னிசையால் பதினாறாயிரம் கோபிய ரைப் பாலித்து ஆண்டருளும் பிராணநாதனே! விரைவில் என்னைக் காப்பாயாக. வெண்ணெயையும் பாலேட்டையும் வேடிக்கையாகத் திருடிச் சிறு பிள்ளைகளுக்கு வயிறு நிறைய வழங்கி (ஒன்றுமே தெரியாதது போல்) யோக்கியனாக நடிக்கும் திவ்விய ரூபனே! பாலகிருஷ்ணனே! தயையுடன் (என்னைக் காப்பாயாக)

### 392

கா^v^நவாரிதி^v^ (மே. 35) ஆதி^v^

ப த^v^ய ஜூசுட கிதி^v^ வேளரா தா^v^சரதீ (த^v^)

அ. [1]ப^v^வ வாரண ம்ருகே^v^ச ஜலஜோத்^v^-

ப^v^வார்த்திஹர மஞ்ஜுளாகார நநு (த^v^)

ச. முநு நீவாநதிச்சிந

பநுலாஸகொநி நே

மநஸாரக^v^ நிதா^v^நமுக^v^ ஸல்

பிநாநு வர த்யாக^v^ராஜாப்த நநு (த^v^)

*தயரதன் மைந்தனே! என்னைத் தயவுடன் நீ கண் பார்ப்பதற்கு இதுவே தருணம். சம்சாரமென்னும் யானையின் மதத்தையடக்கும் சிங்கம் போன்றவனே! பிரமனின் துயரைக் களைந்தவனே! மனோகர வடிவங்கொண்டவனே! நீ முன்பு எனக்குக் கட்டளையிட்ட திருப்பணிகளை நான் ஆசையுடன், மனமார, நிதானமாக நிறைவேற்றி விட்டேன், (என்னைக் கண் பார்க்க இதுவே தருணம்)*

### 393

நாட (மே. 36) [2] ஆதி^v^

ப. ஜக^v^தா^v^நந்த^v^ காரக

ஜய ஜாநகீ ப்ராண நாயக (ஜ)

அ. க^v^க^v^நாதி^v^ப ஸத்குலஜ ராஜராஜேச்வர

ஸுகு^v^ணகர ஸுரஸேவ்ய ப^v^வ்யதா^v^யக ஸதா^v^ஸகல (ஜ)

ச. 1. அமர தாரக நிசய குமுத^v^ஹித

பரிபூர்ணநக^v^ ஸுரஸுர பூ^v^-

ஜ த^v^தி^v^ பயோதி^v^ வாஸஹரண

ஸுந்த^v^ரதர வத^v^ந ஸுதா^v^மய வசோ

ப்^v^ருந்த^v^ கோ^v^விந்த^v^ ஸாநந்த^v^

மாவராஜராப்த சுப^v^கராநேக (ஜ)

2. நிக^v^ம நீரஜாம்ருதஜ போஷகா-

நிமிஷவைரி வாரித^v^ஸமீரண

---

1 ப^v^யவாரண

2 பஞ்சரத்தின கிருதிகளுள் ஒன்று

கˌகˇதுரங்கˇ ஸத்கவிஹ்ருதாˇலயா–
கˇணித வாநராதிˇˌப நதாங்க்ˇˌரியுகˇ (ஜ)

3. இந்த்ˇர நீலமணி ஸந்நிபாˇˌபகˇˌந
சந்த்ˇர ஸூர்ய நயநாப்ரமேய வா-
கீˇந்த்ˇர ஜநக ஸகலேச சுப்ˇˌர நா-
கேˇந்த்ˇரசயந சமநவைரி ஸந்நுத (ஜ)

4. பாதˇவிஜித மௌநிசாப ஸவபரி-
பால வர மந்த்ர க்ˇரஹணலோல
பரமசாந்த சித்த ஜநகஜாதிˇˌப
ஸரோஜபˇˌவ வரதாˇகிˌல (ஜ)

5. ஸ்ருஷ்டி ஸ்திˌத்யந்தகார காமித
காமிதபˌலதாˇஸமாநகாˇத்ர
சசீபதிநுதாப்ˇதிˇˌமதˇஹரா நுராகˇ
ராகˇ ராஜித கதாˌஸாரஹித (ஜ)

6. ஸஜ்ஜந மாநஸாப்ˇதிˇˌ ஸுதாˇˌகர கு-
ஸுமவிமாந ஸுரஸாரிபுகராப்ˇஜ
லாலித சரணுவகுˇ ணுஸுரகˇண
மதˇஹரண ஸநாதநாஜநுத (ஜ)

7. ஓங்கார பஞ்ஜரகீர புர-
ஹர ஸரோஜபˇˌவ கேசவாதிˇ-
ரூப வாஸவரிபுஜநகாந்தக கலா-
தˇˌர கலாதˇˌராப்த க்ˇருணுகர
சரணுகˇத ஜநபாலந ஸுமநோ-
ரமண நிர்விகார நிகˇமஸாரதர (ஜ)

8. கரத்ˇˌருத சரஜாலாஸுர மதாˇப
ஹரணுவ நீஸுர ஸுராவந
கவிந பிˇலஜமௌநி க்ருத சரித்ர
ஸந்நுத ஸ்ரீத்யாகˇராஜநுத (ஜ)

9. புராண புருஷ ந்ருவராத்ம ஜா-
ச்ரித பராதீ்ந க்ர விராத்ராவண
விராவணுநக் பராசர மநோ-
ஹராவிக்ருத த்யாக்ராஜ ஸந்நுத (ஜ)

10. அக்ணித கு்ண கநகசேல
ஸால வித்ளநாருணப் ஸமாந சரணு-
பார மஹிமாத்பு்த ஸுகவிஜந
ஹ்ருத்ஸத்ந ஸுரமுநி க்ணவிஹித
கலச நீரநிதி்ஜா ரமண பாபக்ஜ
ந்ருஸிம்ஹ வர த்யாக்ராஜாதி்நுத (ஜ)

அகில சகத்திற்கும் சதா ஆனந்தம் விளைவிப்பவனே! சீதா பிராட்டியின் பிராணநாதனே! நீ வெற்றியுடன் விளங்கு வாயாக! சூரிய பகவானின் நற்குலத்தில் பிறந்தவனே! ராஜாதி ராஜனே! நற்குணக்கடலே! தேவரால் வணங்கப்படுபவனே! மங்களம் தருபவனே!

(நீ) தேவர்களென்னும் நட்சத்திரக் கூட்டத்தினிடையே விளங்கும் சந்திரன் போன்றவன். நிறைவு கொண்டவன். களங்கமற்றவன். வானவர்களுக்குக் கற்பகத்தருவைப் போன்ற வன். தயிர், பால் நிறைந்த பானைகளைத் திருடுபவன். முக வழகன். அமுதூறும் வாக்கையுடைவன். ஆநிரை மேய்ப்பவன். மகிழ்ச்சி நிறைந்தவன். திருவின் நாயகன். என்றும் இளமையோ டிருப்பவன். நேசர்களுக்கு நன்மை புரிபவன்.

வேதங்களாகிற தாமரைகள் பொழியும் அமுதத்தினுல் வளர்க்கப்பட்டவன். தேவர்களின் சத்துருக்களாகிற மேகங் களைச் சிதறவடிப்பதில் காற்றைப் போன்றவன். கருடவாகனன். நற் கவிகளின் இதயத்தை இருப்பிடங்கொண்டவன். கணக்கற்ற வானரத் தலைவர்கள் வணங்கும் பாதன்.

இந்திர நீல மணியைப்போல் ஒளி பொருந்திய சரீர முடையவன். சூரிய சந்திரரை விழிகளாக உடையவன். ஊகிக் கவும் முடியாத மகிமையுடையவன். வாகீசனுகிய பிரமனின் தந்தை. சர்வேசுவரன். வெள்ளிய ஆதிசேடன் மீது துயில்பவன். காலனை வென்ற பரமசிவனுல் வணங்கப் பெறுபவன்.

திருவடி மகிமையால் (கௌதம) ரிஷியின் சாபத்தைத் தீர்த்தவன். வேள்வி காப்பவன். (பலா, அதிபலா என்ற இரு) உத்தமமான மந்திரங்களைக் கற்றவன். சாந்தம் நிறைந்த உள் ளத்தவன். சீதை நாயகன். தாமரையில் தோன்றிய பிரமனுக்கு வரமளித்தவன்.

ஆக்கல், அளித்தல் (காத்தல்), அழித்தல் ஆகிய முத் தொழில் புரிபவன். எண்ணற்ற கோரிக்கைகளை ஈடேற்றுபவன்.

இணையற்ற வடிவழகன். இந்திரனால் துதிக்கப்பெறுபவன். சமுத்திர ராசனின் செருக்கை யடக்கியவன். பக்தியினாலும் இசையினாலும் பிரகாசிக்கும் (இராமாயணக்) கதையின் சாரமானவன். இதந்தருபவன்.

நல்லோர் மனமென்னும் கடலில் முளைத்தெழும் சந்திரன். புட்பக விமானமுடையவன். (அரக்கியாகிய) சுரசையை வென்ற அனுமனின் தாமரைக் கைகளால் வருடப்பெறும் திருப்பாதன். துஷ்டகுணமுடைய அரக்கரின் கொழுப்பையடக்குபவன். அழிவற்றவன். நான்முகனால் வணங்கப் பெறுபவன்.

ஓங்கார (பிரணவ) மென்னும் கூட்டில் வசிக்கும் கிளி. (புரமெரித்த) சிவன், (தாமரையானாகிய) பிரமன், விஷ்ணு ஆகிய உருவங்களையுடையவன். இந்திரசித்தின் தந்தையான இராவணனை வதைத்தவன். பிறை சூடிய சிவபெருமானின் நேயன். கருணை புரிபவன். சரண்புகுந்த மாந்தரைப் பாலிப்பவன். நன்மனத்தவரை மகிழ்விப்பவன். வேறுபாடற்றவன், வேதங்களின் சாரம்.

கரங்களில் அம்புகளை ஏந்தியவன். அரக்கரின் வெறியை அடக்குபவன். தேவரையும், அந்தணரையும் காப்பவன். கவிகளுள் சூரியன் போன்ற வால்மீகியால் இயற்றப்பெற்ற சரித்திரத்தினால் நன்கு போற்றப்பட்டவன். தியாகராஜனால் வணங்கப்பெறுபவன்.

ஆதிபுருடன். சக்கரவர்த்தித் திருமகன். அண்டியவரின் வசமாகுபவன். கரன், விராதன், இராவணன் ஆகியோரை வதைத்தவன். பாவமற்றவன். பராசரரின் உள்ளங் கவர்ந்தவன். விகாரமற்றவன். தியாகராஜனால் துதிக்கப்பெறுபவன்.

அனந்த கல்யாண குணங்களுடையவன். பீதாம்பரம் அணிந்தவன். மராமரங்களைப் பிளந்தவன். சிவந்த திருப்பாதன். அளவிலா மகிமையுடையவன். அற்புத நற்கவிகளின் இதயத்தில் அமர்பவன். *தேவருக்கும் முனிவர்களுக்கும் ஆப்தன். பாற்கடலில் உதித்த இலக்ஷ்மி தேவியின் நாயகன். பாவங்களென்னும் யானைகளையழிக்கும் நரசிங்கம். தியாகராஜன் முதலிய பக்தரால் துதிக்கப்பெறுபவன்.

## 394

நாட ஆதி^v

ப. நிங்நே ப^vஜந ஸேயுவாட^vநு (நிங்)

அ. பங்கக^vசாயீ பருல வேட^vலேநு (நிங்)

---

* "ஸுரமுநிக^vண விஹித கலச" என்று பதம் பிரித்து "தேவராலும் முனிவர்களாலும் கலச தீர்த்தத்தினால் அபிஷேகம் செய்விக்கப் பட்டவன்" என்று கல்லூரி ஸ்ரீ வீரபத்திர சாஸ்திரியவர்கள் உரை எழுதியிருக்கிறார். இங்கு "ஸுரமுநிக^vண விஹித" என்றும், "கலச நீரநிதி^vஜா ரமண" என்றும் பதம் பிரிக்கப்பட்டுள்ளது. "விஹித:" என்றால் ஆப்தன் என்று பொருள்.

ச. ஸ்நாநாதி³ ஜப தப யோக³
த்⁴யாந ஸமாதி⁴ ஸுக²ப்ரத³ ஸீ-
தாநாத², ஸகலலோக பாலக
த்யாக³ராஜ ஸந்நுத (நிந்)

நான் என்றும் உன்னையே பஜனை செய்பவன். பாம்பணைத் துயில்பவனே! பிற தெய்வங்களைத் தொழுவது என்னாலாகாது. ஸ்நானம், சபம், தவம், யோகம், தியானம், சமாதி முதலிய நல்வழிகளில் செல்பவர்களுக்குச் சுகம் அளிப்பவன் நீயே! சீதை நாயகனே! உலகமனைத்தையும் காப்பவனே!

395

வராளி (மே. 39) ஆதி³

ப. ஈ மேநு க³லிகி³நந்து³கு ஸீதாராம
நாமமே ப³ல்கவலெநு (ஈ)

அ. காமாதி³ து³ர்கு³ண ஸ்தோம பூரிதுலைந
பாமரத்வமே கா³நி நேமமுந லேநட்டி (ஈ)

ச. 1. ஸம்ஸாரமுநு ப்³ரோவ தாரி³நி பர-
ஹிம்ஸ ஜெந்து³ கிராதுடு³
ஹம்ஸ ரூபுல க³திநடு³க³ ராமநாம ப்ர-
சம்ஸ ஜேஸி யுபதே³சிஞ்ச த⁴ந்யுடு³ கா³தா³ (ஈ)

2. தாபஸி சாபமிட³கா³ ஜலோரக³
ரூபமு கொ³நியுண்ட³கா³
தாபமு ஸைரிஞ்சக தல்லடி³ல்லக³ சர
சாபத⁴ருநி நாம ச்ரவணமு ப்³ரோவலேதா³ (ஈ)

3. கரிராஜு தெலியலேக ப³லுடை³ந ம-
கரிசேத கா³ஸி ஜெந்த³கா³
அரலேக நிஜமுந நாதி³மூல மநக³
வரது³டு³ வேக³மெ வச்சி ப்³ரோவக³லேதா³ (ஈ)

4. ஆக³ம வேத³முலநு தா³நவுடு³ கொ³ம்போ-
வகா³ சதுராநநுடு³
த்யாக³ராஜநுத தாரகநாமயநி
பா³கு³க³ நுதிம்ப ப⁴யமு தீர்ப்பக³லேதா³ (ஈ)

காமம் முதலிய துர்க்குணக் கூட்டம் நிறைந்து, அஞ்ஞானத்தினால் ஏற்படும் மோகத்தைத் தவிர நியமம் சிறிதுமில்லாத இவ்வுடலை அடைந்ததற்கு, ஸீதாராமனின் திருநாமத்தை நாவினால் உரைப்பதே நற்கதியாகும்.

குடும்பத்தைக் காப்பாற்றும் பொருட்டு வழிப்பறி செய்து பிறரைத் துன்புறுத்தி வந்த வேடன் (வால்மீகி) (நாரதர் போன்ற) முனிவர்களைத் தன் கதியைக் குறித்து வினவ (அவர்கள்) இராமநாமத்தைப் புகழ்ந்து அதை உபதேசிக்கவும், அவன் தீவினை நீங்கியவனாக ஆகவில்லையா?

[1]முனிவர் கொடுத்த சாபத்தினால் (நீரில் வாழும்) அட்டை உருவத்தையடைந்து துயர் பொறுக்கமுடியாமல் தத்தளிக்கவும், வில்லாளியாகிய இராகவனின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே சாபம் தீர்ந்து சுகம் பெறவில்லையா?

(ஒன்றும் அறியாத) கஜேந்திரன் முதலையால் கதுவப்பட்டுத் துயரமடைந்து, சந்தேகம் சிறிதுமின்றி மனமார ''ஆதிமூலமே!'' என்று கதற, வரதனாகிய மகாவிஷ்ணு விரைவுடன் வந்து காப்பாற்றவில்லையா?

ஆகமங்களையும் வேதங்களையும் (ஸோமகாசுரன் என்ற) அரக்கன் கவர்ந்து செல்லவும், நான்முகன் ''தியாகராஜனால் வணங்கப்படுபவனே! தாரக நாமத்தாய்!'' என்று நன்கு துதிக்க அவன் அச்சத்தை (பகவான்) போக்கியருளவில்லையா?

## 396

வராளி — ஆதி³

ப. [2]கநக ருசிரா கநகவஸந நிந்நு (க)

அ. தி³நதி³நமுநு மநஸுந சநுவுந நிந்நு (க)

ச. 1. பாலுகா³ரு மோமுந ஶ்ரீயபார
மஹிம த³நரு நிந்நு (க)

2. கலகலமநு முக,ள க³லிகி³ந ஸீத
குலுகுசு நோரகந்நுலநு ஜூசே நிந்நு (க)

3. பா³லார்க்காப, ஸுசேல மணிமய
மாலாலங்க்ருத கந்த,³ர ஸரஸிஜாக்ஷ வரக–
போல ஸுருசிர கிரீடத,³ர ஸததம்பு³ மநஸாரக³ (க)

---

1. இங்கு குறிப்பிடப்பெறும் வரலாறு எது என்பது ஆராய்ச்சிக்குரியது. இது கபந்தனுடைய வரலாறு என்று ஸ்ரீ பமிடிபாடி காமேசுவர ராவு உரையெழுதியிருப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை.

2. ஸ்வாமியின் பஞ்சரத்தின கிருதிகளுள் ஒன்று.

4. ஸாபத்நி மாதயௌ ஸுருசிசே
கர்ணசூலமைந மாட வீநுல
சுருக்கந தாளக ஶ்ரீ ஹரிநி த்₄யாநிஞ்சி
ஸுகி₂ம்பக₃லேதா₃ யடு (க)

5. ம்ருக₃மத₃லலாம சுப₄ நிடல
வரஜடாயு மோக்ஷப₂லத₃ பவமாநஸுதுடு₃
நீது₃ மஹிம தெ₃ல்ப ஸீத தெலிஸி
வலசி ஸொக்கலேதா₃ரீதி நிந்நு (க)

6. ஸுகா₂ஸ்பத₃ விமுகா₂ம்பு₃த₄ர பவந
விதே₃ஹ மாநஸவிஹாராப்த ஸுரபூ₄ஜ
மாநித கு₃ணங்க சிதா₃நந்த₃ க₂க₃துரங்க₃
த்₄ருத ரதா₂ங்க₃ பரமத₃யாகர கருணாரஸ
வருணாலய ப₄யாபஹரா ஶ்ரீரகு₄பதே (க)

7. காமிஞ்சி ப்ரேம மீற கரமுல நீது₃
பாத₃கமலமுல ப₃ட்டுகொநுவாடு₃ ஸாக்ஷி
ராமநாம ரஸிகுடு₃ கைலாஸ ஸத₃நுடு₃ ஸாக்ஷி
மறியு நாரத₃ பராசர சுக சௌநக
புரந்த₃ர நக₃ஜா த₄ரஜ முக்₂யுலு
ஸாக்ஷிகா₃த₃ ஸுந்த₃ரேச ஸுக₂
கலசாம்பு₃தி₄ வாஸாச்ரிதுலகே (க)

8. ஸததமு ப்ரேமபூரிதுட₃கு₃ த்யாக₃ராஜ
நுத முக₂ஜித குமுத₃ஹித வரத₃நிந்நு (க)

அனுதினமும் என் மனத்தில் அன்பு பெருகி உன்னைக் காணக் காண ருசி (சுவை) அதிகரிக்கிறது. பால்வடியும் உன் முகத்தில் திரு (அழகு) அபார மகிமையுடன் விளங்க, தளதள வென்று முகப்பொலிவு படைத்த சீதை ஒய்யாரத்துடன் கடைக் கண்ணால் பார்க்கும் உன்னைக் காணக்காண ருசி பெருகு கிறது.

இளஞ் சூரியனின் ஒளியை நிகர்த்த ஆடையணிந்தவனே! மணிகள் நிறைந்த மாலைகளால் அணி செய்யப்பெற்ற கழுத்தை யுடையவனே! தாமரைக் கண்ணனே! அழகிய கன்னங்களை யுடையவனே! அந்தமுள்ள மகுடத்தையணிந்தவனே! எப்

பொழுதும் உன்னை மனமாரக் (காணக் காணச் சுவை அதிகரிக்கிறது).

மாற்றுந்தாயாகிய சுருசி உரைத்த கர்ணகடோரமான மொழிகள் செவிகளில் சுருக்கெனப் பாயவும், அவற்றைப் பொறுக்கமாட்டாமல் (துருவன்) ஸ்ரீ ஹரியை தியானஞ் செய்து சுகம் பெறவில்லையா?

கஸ்தூரிப் பொட்டு விளங்கும் அழகிய நெற்றியுடையவனே! சடாயுவிற்கு மோட்ச பலனையளித்தவனே! வாயுகுமாரனை அனுமன் உன் மகிமையை எடுத்துரைக்க சீதை (அசோக வனத்தில்) அதையுணர்ந்து மையல் கொண்டு மயக்குறவில்லையா?

இன்பத்திற்கு இருப்பிடமானவனே! உன்னிடம் வெறுப்புக் கொள்ளும் மாந்தரென்னும் மேகங்களைச் சிதறவடிக்கும் பெருங்காற்றே! சிவன் முக்தராகிய யோகியரின் சித்தமிசை விளையாடுபவனே! ஆப்தர்களின் கற்பகத்தருவே! கவுரவமான குணங்களை அடையாளமாக உடையவனே! சிதானந்த சொருபனே! கருடவாகனனே! சக்ராயுதத்தை ஏந்தியவனே! தயை புரிபவனே! கருணைக்கடலே! அச்சத்தை அகற்றுபவனே! ஸ்ரீ ரகுபதி!

உன் மீது ஆசையும் பக்தியும் பூண்டு உன் திருவடித் தாமரைகளைத் தன் கைகளில் தாங்கிக்கொண்டிருக்கும் அனுமன் சாட்சி. இராமநாமத்தைச் சுவைக்கும் கைலாயபதியாகிய பரமசிவன் சாட்சி. மேலும், நாரதர், பராசரர், சுகர், சௌனகர். இந்திரன், பார்வதி, சீதை முதலிய (பக்த) சிரேஷ்டர்களும் சாட்சிகளல்லரா? ஆனந்தக்கடலில் ஆழ்ந்திருப்பவனே! உன்னையே தஞ்சமடைந்தவர்களுக்கு (உன்னைக் காணக் காண எல்லையற்ற இன்பமே).

அனவரதமும் அன்பு நிறைந்த உள்ளத்தவனாகிய தியாகராஜனால் வணங்கப்பெறுபவனே! சந்திரனைப் பழிக்கும் முகவழகனே! வரமளிப்பவனே!

## 397

வராளி — ஆதிˇ

ப. கருண ஏலாகˇண்டே[1] நீ விதˇ;மெ
கல்யாண ஸுந்தரˇ ராம (க)

அ. பரமாத்முடுˇ ஜீவாத்முடுˇ யொகடைˇ
பˇரகுˇசுண்டுˇ பக்தபராதீˇ;நுநி (க)

ச. 1. அங்ருதம் பாˇடˇடுˇ அல்புல வேடˇடுˇ
ஸுங்ருபுல கொˇலுவடுˇ ஸூர்யுநி மறவடுˇ (க)

---

1. ஏலாகˇதிந

2. மாம்ஸமு முட்டடு^v மது^vவுநு த்ராக^vடு^v
பரஹிம்ஸல ஸேயடு^v யெறுகநு மறவடு^v (க)

3. மூடீ^vஷணமுல வாட^vடு^v ஜீவந்-
முக்துடை^v திருகு^v மத^vமுநு ஜ^vபடு^v (க)

4. வஞ்சந ஸேயடு^v வருலதோ பொ^vங்கடு^v
சஞ்சல சித்துடை^v ஸௌக்,யமு விடு^vவடு^v (க)

5. ஸாக்ஷியநி தெ^vலிஸியந்து^v லக்ஷ்யமு விடு^vவடு^v கஞ்-
ஜாக்ஷுநி த்யாக^vராஜ ரக்ஷகுடை^vநவாநி (க)

பரமாத்மாவும் சீவாத்மாவும் ஒன்றேயென்ற துணிபுடன் (அத்துவைத நம்பிக்கையுடன்) நடக்கும் பக்தர்களுக்கு வசப் படும் கலியாணசுந்தர ராமனின் கருணை எவ்வாறு கிடைக்கு மெனில் அது (கீழ்க்கண்ட) இவ்விதமே.

(அத்தகைய பக்தன்) ஒருகாலும் பொய் பேசமாட்டான். அற்பர்களை இரக்கான். நல்லரசர்களிடம் கூட சேவை புரியான். இறைச்சியைக் கையினுலும் தொடமாட்டான். மது அருந்தான். (பெண்டிர், மக்கள், செல்வம்) ஆகியவை மீது உண்டாகும் மூவகை ஆசைகளை மேற்கொள்ளான். சீவன் முக்தன் நானே யென்ற அகம்பாவத்துடன் திரியமாட்டான். பிறரை வஞ்சனை செய்யான். பெரியோரிடம் அசத்தியம் பேசமாட்டான். மனக் கவலை மிகுந்து சுகத்தை இழக்கமாட்டான். (செயல்கள் அனைத் திலும்) தன் ஆத்மா வெறும் சாட்சியேயென்று தெரிந்தும் இலட்சியத்தைக் கைவிடான். தாமரைக் கண்ணனும், தியாக ராஜனை எப்பொழுதும் காப்பவனுமான (இராமனின் கருணை எவ்வாறெனில் இவ்விதமே).

## 398

வராளி ஆதி^v

ப. நோரேமி ஸ்ரீராம நிந்நாட^v (நோ)

அ. ஸாரெ ஸாரெகுநு பா^vப கர்மமுலு
ஸல்புசுநுண்டே^v நாவண்டிவாநிகி (நோ)

ச. பாபுலாருகு^vரு வச்யுலு கா^vக
பண்ட்^vலிகி^vலிஞ்சுசு த^vருணுலகை ஸீ-
தாபதி நிஜப^v,க்தி தெலியநி
த்யாக^vராஜுநிகி ஒருலகைந (நோ)

அனவரதமும் பாவச் செயல்கள் புரிந்துகொண்டிருக்கும் என் போன்றவர்களுக்கு உன்னைக் குறைகூற வாய் ஏது? (காமம்,

குரோதம் முதலிய) ஆறு சத்துருக்கள் தங்களுக்கு வசப்படாமல், பருவமங்கையரைப் பார்த்துப் பற்களை இளித்து, சீதைநாயகனுகிய இராமபிரானின் உண்மையான பக்தியை அறியாத மற்றவர்க்கும் (உன்னைக் குறைகூற வாயேது?)

## 399

வராளி    ஆதிᵛ

ப.    பᵛ¦வஸம்நுத நாதᵛகᵛ¦மெந்த கᵛ¦நீபᵛ¦வமோ    (பᵛ¦)

அ.    பᵛ¦வநீரதிᵛ¦தாரக ஸுகுண நாக
பᵛ¦ய மிய்யநு தோᵛசநந்துᵛ கப்ᵛஜ    (பᵛ¦)

ச. 1. பாபஹரண ஸ்ரீரகுᵛ¦வர மதுᵛ¦ரா-
லாப தீᵛநஜநதᵛ¦ந பாவந நீ
தாᵛபு கᵛலுகᵛகோᵛரி தொᵛரகநி பரி-
தாபமு கᵛநி மநஸு கரகᵛநந்துᵛகு    (பᵛ¦)

2. கருணுகர நீசரணமு சிலநு
வரநாரிகᵛ¦ ஜேஸிநதிᵛ காகᵛநு
சர மஸுருநி காᵛசெநே நீகு நா-
துᵛரிதமுலநு போᵛகொᵛட்டி ப்ᵛரோசுடகு    (பᵛ¦)

3. இவ்விதᵛ¦முந நுண்டுᵛநநு ஜூசி
யௌவந கᵛர்வமு மிஞ்சிந நருலு
நவ்வகாᵛநு ரோஸ மேல ராதோᵛ
யெவ்வரிதோடᵛநு விந்நவிந்துநு ராதᵛநி    (பᵛ¦)

4. ஈ ஜந்மமுநநு மோஸபோᵛகநு
நீ ஜபமுலகு விகாᵛ¦தமைந பᵛ¦வ
வ்யாஜமு லெல்லநு ரோஸிந த்யாகᵛ-
ராஜுநிபைநி தᵛயராநந்துᵛகு    (பᵛ¦)

சிவனால் போற்றப்படுபவனே! சம்சாரக் கடலைத் தாண்டச் செய்பவனே! நற்குண நிதியே! பிரமனால் வணங்கப்படுபவனே! எனக்கு அபயம் அளிக்கவேண்டுமென்று உனக்குத் தோன்றாமலிருக்கும் அளவிற்கு நான் செய்த பாவங்கள் இறுகிப் பாறையாகி விட்டனவோ?

பாவங்களை அகற்றுபவனே! இரகு குலத் தோன்றலே! இனிய பேச்சையுடையவனே! எளிய மக்களின் செல்வமே!

தூய்மையாக்குபவனே! உன் அருகாமை கிடைக்கவேண்டுமென்று ஏங்கும் எனக்கு அது கிடைக்காததால் ஏற்படும் பரிதாபத்தைக் கண்டும் உன் மனம் இரங்காத வகையில் (என் பாவங்கள் இறுகிவிட்டனவோ?)

கருணைபுரிபவனே! உனது திருவடி ஒரு கல்லையும் சிறந்த பெண்மணியாக (அகலிகையாக) மாற்றியதுடன், உன் அம்பு ஓர் அரக்கனை (காகாசுரனை)க் காப்பாற்றவில்லையா? என் பாவங்களையொழித்து என்னைக் காக்கலாகாதா?

இவ்வாறு பரிதவிக்கும் என்னைப் பார்த்து, இளமையின் முறுக்குடைய மாந்தர் நகைக்கும்பொழுதாவது உனக்கு ரோஷம் வராதா? இதை நான் யாரிடம் முறையிடுவேன்?

இப்பிறப்பிலாவது மோசம் போகாமல், உன் நாமத்தை சபம் செய்வதற்கு இடைஞ்சலாக உள்ள சம்சாரக் கட்டுகளை அறுத்த இத்தியாகராஜனின் மீது தயை வராதபடி (என் பாவங்கள் பாறையாக இறுகிவிட்டனவோ?)

## 400

வராளி ஆதி^v

ப. மரகதமணிவர்ண ராம நந்நு
மறவக நாயந்ந (ம)

அ. பரமபுருஷ பி^vந்ந ப்^vரோவுமு தே^v-
வர சரணநுகொந்ந (ம)

ச. வர ப^vக்த ஸுபர்ண வாஹந
கருணாரஸபூர்ண
த^vரணி தநயகுந்ந ப்ரேமரஸமு
த்யாக^vராஜுகீவந்ந (ம)

மரகத மணியை நிகர்த்த வண்ணனே! இராம! என்னை மறந்துவிடாதே. என் தந்தையே! பரமபுருஷனே! உன்னையே சரணடைந்த என்னை விரைவுடன் காப்பாயாக. தேவனே! சிறந்த பக்தனாகிய கருடனை வாகனமாகக் கொண்டவனே! கருணைரசம் நிறைந்தவனே! பூமிதேவியின் புதல்வியாகிய சீதையிடம் நீ கொண்டுள்ள காதலை இத்தியாகராஜனுக்கும் அருள் புரிவாய்.

## 401

நவநீதம் (மே. 40) ஆதி^v

ப. லேமி தெ^vல்ப பெத்^vத^vலெவரு லேரோ (லே)

அ. ஆமஹிம லெல்ல மாநி
ஈ மஹிலோ பு^vட்டிரோ (லே)

ச. நீ ரூபமுந பூ³நி மநஸு³

நிர்மலுலை யுண்ட³லேதா³

தா⁴ராத⁴ராப⁴ சரீர

த்யாக³ராஜவிநுத (லே)

என் எளிமையை உனக்கு எடுத்துரைக்கப் பெரியோர்கள் எவரும் இலரோ? (உன்னருகிலிருந்த அவர்கள்) தங்கள் மகிமையைத் துறந்து இப்பூவுலகில் பிறந்துவிட்டார்களோ? அவர்கள் உன் உருவத்தையடைந்து (சாருப்பிய சித்தி பெற்று) தூயவர்களாக விளங்கவில்லையா? மேகத்தையொத்த காந்தியுடைய சரீரனே!

## 402

நபோ⁴மணி (மே. 40) ஆதி³

ப. நாயெட³ வஞ்சந ஸேயகுரா ஓராக⁴வ

நலுகு³ரிகை நம்மலேது³ரா ஸ்ரீராமசந்த்³ர (நா)

அ. மாயபு மாநவுலநு ஜேரி

மத்ஸருடை³ திரிகி³திநா

தா³யாது³ல போரைந கா³நி

தா³ஸுட³நை வேடு³கொந்ந (நா)

ச. வாதா³டு³சு பா³லுரு யெச்சடி

வாடௌ³ நிலுரா பு³த்³தி⁴

லேதா³யந தாளிமி க³லவாரை

தலி த³ண்ட்³ருலு ஜூசி

மோத³முதோ த³நயு லநுசுநு

முத்³து³ பெ³ட்டி கௌ³கி³லி கூ³ர்ச்ச

லேதா³ யடுநே கா³தா³ ப்³ரோவவே

த்யாக³ராஜஸந்நுத (நா)

என்னை வஞ்சனை செய்யாதே. இராகவ! நான்கு பேர் மெச்சுவதற்காக நான் உன்னை நம்பவில்லை. ஸ்ரீராமசந்திர! வஞ்சகம் நிறைந்த மனிதர்களுடன் உறவாடிப் பிறர் மீது பொறுமை கொண்டு திரிந்தேனு? என் பங்காளிகளுடன் (இவ் விஷயத்தில்) நான் சண்டையிட்டாலும், உன் அடியவனென்ற முறையிலேயே உன்னை வேண்டிக்கொள்ளும் (என்னை வஞ்சனை செய்யாதே).

(பெற்றோருடன்) வாக்குவாதம் புரியும் சிறுவர்கள் ''நீ எங்கிருந்து வந்தவன்? நில். உனக்குப் புத்தியில்லையா?'' என்று

பேசியபோதிலும் மிகுந்த பொறுமையுடன் தாய் தந்தையர் அவர்களை நோக்கி ''இவர்கள் நமது மக்கள்'' என்று முத்த மிட்டு அணைத்துக்கொள்வரல்லவா? நானும் உனக்கு அப்படிப் பட்டவன் (மைந்தன்) அல்லவா? என்னைக் காத்தருள்.

## 403

**சந்ᵛரஜ்யோதி (மே. 41)** — **ஆதிᵛ**

ப. சசிவதᵛந பᵛக்தஜநாவந
சங்கர நே தாᵛளகᵛலநா (ச)

அ. பஸிதநமந்தேᵛ முநியாகᵛமுந நீ
பாᵛஹு பராக்ரமமுநு நெறுங்கᵛநா ராகா (ச)

ச. திᵛநதிᵛந மௌபாஸந ஜபதப த்ᵛயாந
மநு யாகᵛமுவேள மநஸுந புᵛட்டிந
கᵛந டᵛம்புᵛநிதோடᵛநு மாரீசுநி
பநி செறசிந யா த்யாகᵛராஜார்ச்சித (ச)

பூர்ண சந்திரனை நிகர்த்த வதனனே! பக்தர்களைக் காப்பவனே! நலம் புரிபவனே! என்னால் இதைத் தாளமுடியுமா? பிள்ளைப்பருவத்திலேயே (விசுவாமித்ர) முனிவரின் வேள்வியைக் காப்பதில் நீ காட்டிய புயவலிமையை நான் அறியேனு?

தினந்தோறும் நான் ஔபாசனம், சபம், தவம், தியானம் முதலிய வேள்விகள் புரியும்பொழுது என் மனத்தில் பிறக்கும் டம்பம் (இறுமாப்பு) என்ற மாரீசனின் தீச்செயல்களை ஒழித்து என்னைக் காத்தருள்.

## 404

**சந்ᵛரஜ்யோதி** — **தேᵛசாதிᵛ**

ப. பாᵛகாᵛயெ நய்யா நீ மாயலெந்தோ
ப்ᵛரஹ்மகைந கொᵛநியாடᵛ தᵛரமா (பாᵛ)

அ. ஈ காᵛரடᵛமுநு நொநரிஞ்சுசுநு
[1]நேகாᵛ தᵛநுசு பᵛல்கேதிᵛயுந (பாᵛ)

---

1. ''ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம்
த்ரிஷு லோகேஷு கிஞ்சந'' (கீதை)
''அர்ஜுன! இம்மூவுலகிலும் எனக்கு
ஆகவேண்டிய காரியம் ஒன்றுமில்லை.''

ச. அலநாடு^v கௌரவுல நணசமந
அலரி தோ^vஸமநே நருநி ஜூசி பாப
ப_்லமு நீகு தநகு லேத^vநி சக்கக^v
பா^vலநமு ஸேயலேதா^v த்யாக^vராஜநுத (பா^v)

உன் மாயங்களனைத்தும் வெகு அழகுதான், ஐயனே! இதை பிரமனும் அறிந்து புகழமுடியுமா? இந்த செப்படி வித்தைகளை (மாயைகளை) நீயே செய்துவிட்டு, செய்தது ''நான் அல்ல'' வென்றும் சாதித்துவிடுகிறாய்.

அன்றொரு நாள் கௌரவர்களை ஒழித்துவிடுமாறு நீ கூறியதைக் கேட்ட (நரனாகிய) அருச்சுனன் ''இது பெரும் பாவம்'' என்று முறையிட, (நாராயணனாகிய) நீ அவனை நோக்கி ''இப்பாவத்தின் பலன் உன்னையோ என்னையோ சேராது'' என்று உறுதி கூறி அவனைக் காத்தருளவில்லையா?

## 405

விஜயஸ்ரீ (மே. 41) ஆதி^v

ப. வரநாரத^v நாராயண
ஸ்மரணாநந்தா^v நுப^vவமு க^vல (வ)

அ. சரதிந்து^v நிபா^vபக^v நாநக^v
ஸாரமுகா^vநு ப்^vரோவு மிக (வ)

ச. ஸகலலோகமுலகு ஸத்^vகு^vருவநுசு
ஸதா^v நே நதட^vநுசு ஹரியு
ப்ரகடம்பு^vக^v கீர்த்தி நொஸங்கெ^vநே
பா^vவுக த்யாக^vராஜநுத (வ)

மகிமை வாய்ந்த நாரத முனிவரே! ஸ்ரீமந் நாராயணனை சதா தியானிக்கும் ஆனந்தமயமான அனுபவத்தையுடையவரே! சரத் காலத்துச் சந்திரனை நிகர்த்த தேக காந்தியுடையவரே! (தத்துவ ஞானம் வழங்கி) இப்பொழுதே என்னைக் காத்தருள்வீர்.

உலகங்கள் அனைத்திற்கும் சற்குருவென்றும் 1 ''நானே அவர்'' என்றும் பகவான் பகிரங்கமாக உம்மைப் போற்றிப் புகழ் அளித்தனன். மங்களம் தருபவரே! தியாகராஜனால் வணங்கப் பெறுபவரே!

---

1. ''தேவர்ஷீணாம் ச நாரத:'' (தேவரிஷிகளுள் நான் நாரதன்) என்று கண்ணன் கீதையில் கூறியுள்ளது இங்கு குறிப்பிடப்பெறுகிறது.

## 406

ப[4]வப்ரிய (மே. 44) தே[3]சாதி[3]

ப. ஸ்ரீகாந்த நீயெட[3] ப[3]லாதிப[3]ல
செலங்க[3]க[3] லேதா[3] வாதா[3] (ஸ்ரீ)

அ. பாகாரிநுத நீவாரி ப[3]லா[3]-
ப[3]லமுநு தெ[3]லியக[3] லேதே[3]மி (ஸ்ரீ)

ச. [1]காக தை[3]த்யுநேக சரமுநநேய
கஞ்ஜஜாஸ்த்ரமை பர[3]க[3]லேதா[3]
ஸ்ரீகர த்[3]விஜுலே தா[3]ரெருங்க[3]லேநி
சிந்த நீகு தோ[3]சதே[3]மி த்யாக[3]ராஜநுத (ஸ்ரீ)

இலக்ஷ்மி நாயகனே! உன்னிடம் (விசுவாமித்திரர் உபதேசித்த) பலா, அதிபலா என்ற இரு வித்தைகள் சித்திபெற்று விளங்கவில்லையா? இந்திரனுல் வணங்கப்பெறுபவனே! உன் பக்தர்களின் பலமும், பலவீனமும் உனக்குச் சிறிதும் தெரியாமற் போய்விட்டதா?

காகாசுரனின் மீது நீ ஒரு தருப்பையை (புல்லே) அம்பாக எய்ய அது பிரம்மாஸ்திரமாக மாறவில்லேயா? திருவளிப்பவனே! அந்தணராய்ப் பிறந்தும் நல்வழி அறியாமலிருப்பவரைப் பற்றிய கவலே உனக்கேன் தோன்றவில்லே?

## 407

[2]சுப[4]பந்துவராளி (மே. 45) சாபு (த்ரிபுட)

ப. எந்நாள்ளூரகே யுந்து[3]வோ ஜூதாமு
யெவரடி[3]கே[3] வாரு லேதா[3] ஸ்ரீராம (எந்)

அ. கொந்நாள்ளு ஸாகேதபுர மேல லேதா[3]
கோரிக முநுலகு கொ[3]நஸாக[3] லேதா[3] (எந்)

ச. ஸதி மாடல நாலகிஞ்சி ஸத்[3]ப[4]க்த கோடுல
ஸம்ரக்ஷிஞ்சக[3]லேதா[3]
மதிமந்துல ப்[3]ரோசே மதமு மாத[3]நலேதா[3]
ஸததமு ஸ்ரீத்யாக[3]ராஜு நம்மக[3]லேதா[3] (எந்)

---

1 காக தை[3]த்யுநிகை சர த்ருணமுநேய

2 பந்துவராளி

எத்தனை காலம் நீ (என்னைக் காப்பாற்றாமல்) சும்மா இருக்கப் போகிறாயோ, பார்த்துவிடுவோம். உன்னை (ஏனென்று) கேட்பதற்கு ஒருவரும் இலரா? சில காலம் நீ அயோத்தியா நகரத்தைப் பரிபாலனம் செய்யவில்லையா? பின்னர் (வனத்தில்) முனிவர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றி வைக்கவில்லையா?

சீதாபிராட்டியின் வார்த்தைகளைக் கேட்டு பக்தகோடிகளை நீ பாலித்தருளவில்லையா? ''ஞானமும் விவேகமும் படைத்த அறிவாளிகளைக் காப்பது என் பொறுப்பு'' என்று நீ கூற வில்லையா? இத்தியாகராஜன் உன்னை சதா நம்பியவனல்லவா?

## 408

[1]ஷட்ᵛவித₄மார்கி³ணி (மே. 46) ரூபகம்

ப. ஜ்ஞாந மொஸக³ ராதா³
க³ருட³க³மந வாதா³ (ஜ்ஞா)

அ. நீ நாமமுசே நாமதி³ நிர்மலமைநதி³ (ஜ்ஞா)

ச. பரமாத்முடு³ஜீவாத்முடு³ பது³நாலுகு³ லோகமுலு
நர கிந்நர கிம்புருஷுலு நாரதா³தி³முநுலு
பரிபூர்ண நிஷ்களங்க நிரவதி⁴ ஸுக₂தா³யக
வர த்யாக³ராஜார்ச்சித வாரமு தாநநே (ஜ்ஞா)

எனக்கு (நீ) ஞானம் அளிக்கலாதா? (வேதாத்மாவாகிய) கருடனை வாகனமாக உடையவனே! என்னுடன் வாதமா? உனது நாமசங்கீர்த்தனத்தின் மூலம் என் சித்தம் களங்கமற்ற தாக ஆயிற்று. (ஆகவே) பரமாத்மா, சீவாத்மா, பதினான்கு உலகங்கள், மனிதர், கிந்நரர் கிம்புருடர், நாரதர், போன்ற முனிவர்கள் ஆகிய அனைத்தும் நானேயென்ற (அத்துவைத) ஞானத்தை அருளலாகாதா? நிறைவு கொண்டவனே! களங்க மற்றவனே! எல்லையற்ற ஆனந்தமளிப்பவனே!

## 409

தீவ்ரவாஹிநி (மே. 46) தே³சாதி³

ப. ஸரிஜேஸி வேடு³க ஜூசேதி³
ஸாகேதராம ந்யாயமா (ஸ)

அ. த₄ரலோந நீ [2]பரிவாருலநு [3]கந்-
த³ர்ப்பகாது³ல நிஜதா³ஸுலநு (ஸ)

---

1. இக்கீர்த்தனத்தின் இராகம் க³மனச்ரமம் என்றும், பூர்வி கல்யாணி என்றும் சில பிரதிகளில் காணப்படுகிறது.

2 நிஜதா³ஸுலநு 3 த³ர்ப்பகாது³ல

ச. கொக்க சாஸ்த்ர விது^வ^லு நரஸந்நுதிசே
கொ^வ^ப்ப ப^வ^ஹுமதுல நந்தே^வ^ரய்ய
சக்ககா^வ^நு ப^வ^க்தி சாஸ்த்ர விது^வ^ல
சால க^வ^நி நவ்வேறு த்யாக^வ^ராஜவிநுத (ஸ)

அயோத்தி வாழ் ராமனே! உலகில் உன்னடியார்களையும் காமம் முதலியவற்றின் அடிமைகளையும் சமமாகக் கருதி நீ வேடிக்கை பார்ப்பது நியாயமா? கொக்கோக (காம) சாத்திரம் பயின்றவர்கள் நரஸ்துதி செய்து (மானிடரைப்) புகழ்ந்து பெரிய வெகுமதிகளைப் பெறுகின்றனர். பக்தி சாத்திரம் கற்ற மெய்யடியார்களைக் கண்டு (மாந்தர் ஏளனம் செய்து) நகைக்கின்றனர். (இவ்விரு வகுப்பினரையும் நீயும் சமமாகக் கருதுவது நியாயமா?)

## 410

திவ்யமணி[1] (மே. 48) தே^வ^சாதி^வ^

ப. லீலகா^வ^நு ஜூசே [2]குலசீலுல நா-
பால க^வ^ல்க^வ^ ஜேஸி [3]பாலிந்துவய்ய (லீ)

அ. பாலுமாலிந பாமருல நொல்ல
பரமாத்மா ஈ லோகமுலநு (லீ)

ச. நர கிந்நர கிம்புருஷாஸுர நிர்-
ஜரராஜ சிவாதி^வ^ ரமாபதுல
தரு பூ^வ^த^வ^ரா நேகாண்ட^வ^முல
த்யாக^வ^ராஜநுத ஸ்ரீராம நீ (லீ)

பரம்பொருளே! இவ்வுலகங்களனைத்தையும் உனது (லீலையாக) திரு விளையாடலாகக் கருதும் நற்குலத்தவரின் உறவை எனக்கருளி என்னைப் பாலிப்பாயாக. சோம்பேறிகளான பாமரர் சேர்க்கையை நான் விரும்பேன்,

மானிடர், கிந்நரர், கிம்புருஷர், அரக்கர், தேவந்திரன், சிவன், திருவின் நாயகனாகிய திருமால், மரங்கள், பற்பல அண்டங்கள் ஆகியவனைத்தையும் (உனது லீலையாகக் காணும் நல்லோர் உறவை எனக்கருள்)

1 து^வ^ந்து^வ^பி^வ^ 2 குண^வ^சீலுல 3 பாலிம்ப

## 411

[1] விஜயவஸந்த (மே. 48) தே^v^சாதி^v^

ப. நீ சித்தமு நா பா^v^,க்^v^யமய்யா
நிருபாதி^v^,க நீவாட^v^நய்யா (நீ)

அ. யோசிஞ்சி கார்யமு லேத^v^நுசு
ஒகபாரி சரணநுகொண்டிநய்ய (நீ)

ச. பரதை^v^வமுல ஜூசிநந்தநே
பா^v^,வமந்து^v^ நீவை ப^v^ரகெ^v^த^v^வய்ய
த்^v^,ரலோந நா ஸரிவாரலலோ
த^v^ய ஜூட^v^வய்ய த்யாக^v^ராஜநுத (நீ)

உன் சித்தமே எனது பாக்கியம். காரணமின்றித் தோன்றியவனே! நான் உன்னைச் சேர்ந்தவன். (முடிவைக் குறித்து) யோசித்துப் பயனில்லையென்று ஒரேயடியாக உன்னையே சரணடைந்தேன்.

மற்ற தெய்வங்களை நான் தரிசிக்கும்பொழுது என் உள்ளத்தில் நீயே காட்சியளிக்கிறாய். இவ்வுலகில் எனக்கு இணையானவர்களுக்கெதிரில் என்னைப் பரிவுடன் நோக்கி அருள்புரி.

## 412

பந்துவராளி (மே. 51) ரூபகம்

ப அப்ப ராமப^v^,க்தி யெந்தோ கொ^v^ப்பரா மா- (ய)

அ. த்ரிப்படலநு நில்பி கண்டி
ரெப்பவலெநு கா^v^சுநா மா (ய)

ச. 1. லக்ஷ்மிதே^v^வி வலசுநா
லக்ஷ்மணுண்டு^v^ கொ^v^லுசுநா
ஸூக்ஷ்ம பு^v^த்^v^தி^v^,க^v^ல ப^v^,ரதுடு^v^
சூசி சூசி ஸொலஸுநா மா (ய)

2. சப^v^ரி யெங்கி^v^லிச்சுநா
சந்த்^v^ரத^v^,ருடு^v^ மெச்சுநா
அப^v^ல ஸ்வயம்ப்ரப^v^,கு தை^v^வ
மசல பத^v^வி நிச்சுநா மா (ய)

---

1. ஜீவந்திநி

3. கபி வாரிதி^v^ தா^v^டுநா
கலிகி ரோட க^v^ட்டுநா
அபராதி^v^ த்யாக^v^ராஜு-
காநந்த^v^மு சாடுநா மா (ய)

1 என் அப்பனே! இராமபக்தி எவ்வளவோ பெரியது (சிறந்தது). (அது) மனத்தின் அலைதல்களை நிறுத்தி, இரு கண்ணிமைகளைப் போல் நம்மைக் காக்கும்.

(அப்படியில்லாவிடில்) இலக்ஷ்மிதேவி (பகவானையே) கோரித் தவமிருப்பாளா? இலக்ஷ்மணன் தொண்டு புரிவானா? கூரிய அறிவுடைய (ஞானியாகிய) பரதன் பார்த்துப் பார்த்து மயங்குவானா? சபரி உண்ட எச்சிலை அளிப்பாளா? பிறை சூடிய சிவபெருமான் கொண்டாடுவானா? பெண்ணாகிய சுயம்பிரபைக்கு தெய்வம் அசைவற்ற பதவியை அளிக்குமா? குரங்குகள் ஆழ்கடலைத் தாண்டமுடியுமா? யசோதை (கண்ணனை) உரலில் கட்ட முடியுமா? கனத்த அபராதங்கள் புரியும் இத்தியாகராஜனுக்குப் பேரானந்தம் கிடைத்ததே இராமபக்தியின் பெருமைக்குச் சான்றாகும்.

## 413

பந்துவராளி ரூபகம்

ப. நின்னே நெற நம்மினானுரா
ஓ ராம ராமய்ய (நி)

அ. அந்நி கல்லலநுசு ஆடி^v^ பாடி^v^ வேடி^v^
பந்நக^v^சயநநே சிந்நதநமு நாடே^v^ (நி)

ச. 1. வேத^v^சாஸ்த்ர புராண வ்த்^v^யலசே பே^v^த^v^
வாத^v^முலு தீ^v^ரக ப்^v^ரமஸே வாரல ஜூசி (நி)

2. போ^v^க^v^முல கொறகு பு^v^விலோ ராஜஸமுந
யாகா^v^து^v^லொநரிஞ்சி யலயுவாரல ஜூசி (நி)

3. ஈ ஜந்மமுந நிந்நு ராஜி ஜேஸுகோலேக
ராஜில்லரநி த்யாக^v^ராஜ வந்த்^v^ய ராக^v^வ (நி)

இராம! இராமய்ய! உன்னையே நான் முற்றிலும் நம்பினேன். அனைத்தும் பொய் (மாயை) யென்பதை உணர்ந்து (உன்னைப் புகழ்ந்து) ஆடிப்பாடி, வேண்டிச் சிறு வயது முதலே உன்னை நம்பினேன். ஆதிசேடன் மீது துயில்பவனே!

---

1 "எங்கள் தந்தையாகிய இராமனின் பக்தி எவ்வளவோ பெரியது" என்று பொருள் கூறுவதற்கும் இடமுண்டு.

வேதம், சாத்திரம், புராணம், கல்வி ஆகியவற்றைக் கற்றும் முரண்பாடான வாதுகள் தீராமல் மயங்குபவர்களைப் பார்த்தும், போகங்களை அனுபவிப்பதற்காக உலகில் ராஜச குணம் படைத்து யாகங்கள் முதலியவை புரிந்து வருந்துபவர்களைக் கண்டும் நான் உன்னை நம்பினேன். இப்பிறப்பில் உன் அருள் பெறுதவர் உய்யமாட்டார்களென்று தெரிந்து நான் உன்னையே திடமாக நம்பினேன்.

## 414

பந்துவராளி ஆதி^v

ப. ரகு^!வர நந்நு மறவத^vகு^!நா (ர)

அ. நக^vத^!ர ப^vக்த ஜநாக^!நிவாரண (ர)

ச. 1. தல்லி த^vண்ட்^vரு லந்ந தம்முலு உந்ந
பொலதிகி ஒகடு^v புருஷுண்டௌ^vநா (ர)

2. பர தை^vவமுலு பா^vகு^v ஸொம்முலு
ஸூரநுத மங்க^vள ஸூத்ரமு லௌநா (ர)

3. சேஸிந புண்ய சய்மு ப்^vரஹ்மண்ய
ஆஸ நொஸங்கி^vதி அநுபம லாவண்ய (ர)

4. மநஸூந நீகே மருலுகொந்நாநு ஸஜ்-
ஜநஹித த்யாக^vராஜவிநுத சுபா^!கர (ர)

ரகுகுல சிரேஷ்டனே! நீ என்னை மறப்பது நியாயமா? கோவர்த்தன கிரியைத் தாங்கியவனே! பக்தர்களின் பாவங்களை யகற்றுபவனே!

ஒரு பெண்ணிற்குத் தாய் தந்தையரும், அண்ணன் தம்பிகளும் இருந்தாலும், அவர்களுள் யாராவது அவள் புருடனுக்கு ஈடாகமுடியுமா? பிற தெய்வங்களும், சிறந்த நகைகளும் மாங்கலியத்திற்கு (தாலிக்கு) ஈடாகுமா? தேவரால் வணங்கப்படுபவனே! அந்தணரின் அடைக்கலமே! இணையற்ற அழகனே! நான் செய்த புண்ணியங்களனைத்தையும் ஆசையுடன் உனக்கே அர்ப்பணம் செய்தேன். என் காதலனைத்தையும் உன் வசமே ஒப்படைத்தேன். நல்லோர்க்கு இதம் தருபவனே!

## 415

பந்துவராளி ஆதி^v

ப. வாடே^vரா தை^vவமு மநஸா (வா)

அ. ஆடி^vந மாடலு தப்பட^vநுசுநு
ஆசந்த்^vரார்க்கமுக^v கீர்த்தி க^vல்கி^vந (வா)

ச. 1. த்ᵛண்டிᵛ ரக்கஸுᵛல மத்ᵛமணசநு ஆ-
க,ண்டᵛலாதிᵛ ஸுᵛரகோடுலநு பூ,ᵛ-
மண்டᵛல ஸுᵛஜநுல பாᵛலிம்பநு கோ-
த்ᵛண்டᵛபாணி ரூபமுதோ வெலஸிந (வா)

2. தாᵛரி தெலியலேநி அஜ்ஞுலகு ப,ᵛவ
நீரதிᵛ, தாᵛடி மோக்ஷமந்துᵛடகு
நீரஜாரி த்ᵛ,ரு டுᵛபதேᵛசிஞ்சே
தாரக நாமமுதோநு வெலஸிந (வா)

3. தாᵛ,த்ரு விநுதுடைᵛந த்யாக்ᵛராஜுᵛநி
சேதி பூᵛஜலந்திᵛ பாᵛகுᵛகᵛ ப்ர-
த்ᵛயோத நாந்வயமுநநு ஜநிஞ்சி
ஸீதாபதியநி பேரு கலிகிᵛந (வா)

மனமே! அவனே தெய்வம். ''கொடுத்த வாக்கை மீரு தவன்'' என்று சந்திர சூரியர் உள்ளளவும் புகழ்பெற்ற அவனே பரதெய்வம்.

வலிமை மிக்க அரக்கரின் கொழுப்பையடக்கவும், தேவேந் திரன் முதலிய தேவர்கள், பூவுலகில் வாழும் நல்லோர் ஆகி யோரைக் காப்பாற்றவும், பருத்த வில்லையேந்திய கோதண்ட பாணியின் உருவத்துடன் விளங்கும் அவனே தெய்வம்.

நல்வழியறியாத அஞ்ஞானிகள் சம்சாரக் கடலைக் கடந்து மோட்சம் பெறுவதற்காக சந்திரனை சிரத்திலணிந்த பரமசிவன் உபதேசிக்கும் தாரகமந்திரத்தைப் பெயராகக் கொண்ட அவனே தெய்வம்.

நான்முகன் வணங்கும் தியாகராஜனுல் (பரமசிவனுல்) அளிக்கப்பெறும் பூசனையை நன்கு ஏற்றுக்கொண்டு, சூரிய வம்சத்தில் பிறந்து, சீதையின் நாயகனென்ற திருநாமத்துடன் விளங்கும் அவனே பரதெய்வம்.

## 416

பந்துவராளி சாபு

ப. ஸாரமேகாᵛநி யந்யமார்கᵛ வி-
சார மேடிகே ஓமநஸா (ஸா)

அ. வாரு வீரு தெᵛலியலேக பᵛல்கு
வார்த்தலு விநநேலே ராமநாமமு (ஸா)

ச. 1. மாரகோடி லாவண்யுடை^v^ன ரகு^v^-
வீருநி நாமஸு^v^தா^v^ ரஸமுநு
ஸாரெகு பா^v^நமு ஜேஸி ஜக^v^த்^v^வி-
ஹாருடை^v^ வெலயு நாராயண
நாராயண யநுசுநு வாரமு
சரத^v^ம்பு^v^த^v^ நிபு^v^டௌ^v^ ஸ்ரீ
நாரத^v^முநி வல்மீகஜாதுநிகி
கூ^v^ரிமி நுபதே^v^சிஞ்ச லேதா^v^ (ஸா)

2. பரமபாவநுநி சரணுக^v^தஜந
பரிபாலந பி^v^ருதா^v^ங்குநி ஸீதா
வருநி நாம ஸு^v^தா^v^ரஸபாநமு
நிரதமுநநு ஜேஸி ஹரிஹரி
ஹரியநுசு ஸந்ததம்பு^v^நு
ஸரியுலேநி கீர்த்திகா^v^ஞ்சி தே^v^ஹமு
பரவசம்பு^v^ ஜெந்தி^v^ சுக ப்^v^ரஹ்ம
பரீக்ஷித்து கொஸக^v^ லேதா^v^ வாதா^v^ (ஸா)

3. ஸாமகா^v^ந லோலுடௌ^v^ ரஜதகி^v^ரி
தா^v^முடை^v^ந த்யாக^v^ராஜ சிவுட^v^தி
நேமமுதோ நாமாம்ருதபாநமு
ஏமறகநு ஜேஸி ராம ராம
ராமயநுசு ஸததமு
ஸ்ரீமதா^v^தி^v^ கௌ^v^ரிகி ச்ருங்கா^v^ரிகி
யாமஹிமல நாரஹஸ்யமுல நதி
ப்ரேமநு நுபதே^v^சிஞ்ச லேதா^v^ (ஸா)

மனமே! இராமநாமம் ஒன்றே (வடித்தெடுத்த) சாரமே தவிர மற்ற வழிகளைக் குறித்த சிந்தனை நமக்கேன்? கண்ட மனிதர்கள் அறியாமல் பேசும் வார்த்தைகளை நாம் கேட்பானேன்?

கோடி மன்மதரை நிகர்த்த அழகுடைய இரகுராமனின் திருநாமமாகிய அமுதரசத்தை அனவரதமும் பருகி, புவனங்

களைச் சுற்றிவந்து, ''நாராயண, நாராயண, நாராயண'' என்ற சபத்துடன், சரத்காலத்து மேகத்தின் ஒளி படைத்த ஸ்ரீ நாரத முனிவர் புற்றில் தோன்றிய வால்மீகிக்கு நேசத்துடன் உபதேசிக்கவில்லையா?

தூயவனும், தஞ்சமடைந்தவரைக் காப்பவனென்ற விருதுடையவனும், சீதா நாயகனுமாகிய இராமனின் திருநாமமாகிய அமிர்தத்தை இடைவிடாமல் பருகி ''ஹரி, ஹரி, ஹரி'' யென்று எப்பொழுதும் கூவி, இணையற்ற புகழ்பெற்று, உடல் பரவசமடைந்து, சுகப்பிரம்மம் பரீட்சித்து மகாராஜனுக்கு அவ்வுபதேசத்தை அருளவில்லையா?

சாமகானத்தில் திளைப்பவனும், கைலாசத்தில் என்றும் வதிபவனுமாகிய தியாகராஜன் (சிவபெருமான்) மிகுந்த நியமத்துடனும் கருத்துடனும் திருநாமமாகிய அமுத ரசத்தைப் பருகி ''இராம, இராம, இராம'' என்று சதாகாலமும் சபம் செய்து, ஆதிகௌரியும் பேரழகியுமாகிய பார்வதிக்கு அந்த மகிமையையும், இரகசியத்தையும் அன்புடன் உபதேசிக்கவில்லையா?

## 417

பந்துவராளி ஆதி<sup></sup>

ப. ஸுந்த³ரதர தே³ஹம் வந்தே³ஹம் ராமம் (ஸு)

அ. குந்த³ரத³ந மாப்த குமுத³ சசாங்கம்
கந்த³ர்ப்ப சதகோடி காந்தி மதிநிஷ்களங்கம் (ஸு)

ச. 1. பதிதஜந பாவநம் பரிபாலித பு⁴வநம்
ச்ருதிநிகர ஸத³நம் சுப⁴கர வத³நம்
யதிவர ஜீவநம் இப⁴ராஜ பாலநம்
தி³திஜமத³ த³மநம் தீ³நஜநாவநம் (ஸு)

2 நவ தூ³ர்வ த³ள நீலம் நந்தி³தாமரஜாலம்
அவநத ஸுரபாலம் அத்³பு⁴தலீலம்
ப⁴வப⁴யஹரணகாலம் ப⁴க்தஜநவத்ஸலம்
சிவமத்³வைத மமலம் ஸ்ரீமத் கநகாப⁴சேலம் (ஸு)

3. ஆக³ம ஸஞ்சாரம் அகி²ல லோகாதா⁴ரம்
வாக³தி⁴ப குமாரம் வரவீர வீரம்
ராகா³தி³ ஸம்ஹாரம் ராக⁴வமுதா³ரம்
த்யாக³ராஜ ஹ்ருத்ஸஞ்சாரம் காருண்ய பாராவாரம் (ஸு)

மிக்க எழில் அமைந்த மேனியுடைய இராமனை நான் வணங்குகிறேன். அவன் முல்லையை நிகர்த்த பற்களையுடையவன். ஆப்தர்களென்னும் ஆம்பல் மலர்களை மலர்விக்கும் சந்திரன். நூறு கோடி மன்மதர்களையொத்த ஒளியுடையவன். நிர்மலசொரூபன்.

எளிய மாந்தரைப் புனிதமாக்குபவன். புவனங்களைக் காப்பவன். சகல வேதங்களையும் இருப்பிடமாகக் கொண்டவன். மங்களம் தரும் வதனன். சிறந்த யோகியரின் வாழ்விற்கு ஆதாரம். கஜேந்திரனைக் காத்தவன். அரக்கரின் செருக்கையடக்குபவன். அகதிகளைக் காப்பவன்.

இளம் அறுகம்புல்லை நிகர்த்த நீலவண்ணன். சகல தேவர்களுக்கும் ஆனந்தமளிப்பவன். இந்திரன் முதலியோரால் வணங்கப்படுபவன். அற்புதத் திருவிளையாடல்கள் புரிபவன். சம்சார பயத்தை ஒழிப்பதில் காலனை நிகர்த்தவன். பக்தர்களிடம் அன்பு பூண்டவன். மங்கள சொரூபன். ஒரே பொருளானவன். அமலன். ஒளிவீசும் பொன்னுடையணிந்தவன்.

வேதங்களில் சஞ்சரிப்பவன். புவனங்கள் அனைத்திற்கும் ஆதாரமானவன். பிரமனைப் புத்திரனாக அடைந்தவன். வீராதி வீரன். ஆசை முதலியவற்றை ஒழித்தவன். இராகவனென்னும் கொடையாளி. தியாகராஜனின் சித்தமிசை விளையாடுபவன். கருணைக்கடல்.

## 418

[1]மந்தாˇரி (மே. 51) தேˇசாதிˇ

ப. பரலோக ப'யமுலேகநே
ப'வபாச பˇத்ˇது'லையேரு (ப)

அ. கரி வாஜி ச்ருங்காˇராராம சிபிˇ-
காதுˇலெல்ல மநகெ கல்கெˇநநி (ப)

ச. கொம்ந காந்தலநு கோணபிˇட்ˇடˇலநு
வம்நெ சீரலநு வாந குˇடிˇஸெலநு
திம்நகாˇ கˇநி தைˇவலோகமநி
தந்நுகோள்ளலோ த்யாகˇராஜநுத (ப)

பரலோகத்தைப் பற்றிய பயம் சிறிதுமின்றி சம்சாரக் கட்டுக்களால் பிணைக்கப்பட்டவர்களாக (மாந்தர்) ஆவார்கள். யானை, குதிரை, விநோதப் பூஞ்சோலைகள், பல்லக்குகள் முதலியவை நமக்கே கிடைத்தனவென்று (பெருமையடைந்து சம்சாரத்தில் உழல்வர்).

விலைக்கு வாங்கிய மாதரையும், விஷமம் நிறைந்த மக்களையும், பல நிற ஆடைகளையும், கட்டிய வீடுகளையும் மகிழ்ச்சியுடன் பார்த்து ''இதுவே தெய்வலோகம்'' என்று மயங்கும் நிலையில் அகப்பட்டு (சம்சாரத்தில் உழல்வர்).

---

1 நாமநாராயணி

## 419

தீ$^{v}$பகம் (மே. 51) தே$^{v}$சாதி$^{v}$

ப. களல நேர்ச்சிந முநு ஜேஸிநதி$^{v}$
கா$^{v}$க நேமி யரவை நாலுகு$^{v}$ (க)

அ. கலிமி லேமுலகு கா$^{v}$ரணம்பு$^{v}$ நீவே
கருண ஜூட$^{v}$வே கடு$^{v}$புகோஸமை (க)

ச. கோரி நூல கொண்ட$^{v}$ தீஸி சிங்கி$^{v}$லிமுநி
கூர்மி பு$^{v}$ஜிஞ்செநா வைரி தம்முடு$^{v}$
ஸாரமைந ரங்க$^{v}$நி இல்லு ஜேர்ச்செநா
ஸரஸ த்யாக$^{v}$ராஜவிநுத ப்$^{v}$ரோவவே (க)

வயிறு வளர்ப்பதற்காக அறுபத்துநான்கு கலைகளைக் கற்றாலும் (ஒருவனுக்கு) ஊழ்வினைப் பயனைத் தவிர வேறு என்ன நிகழும்? செல்வம் வறுமை ஆகிய இரண்டிற்கும் காரணம் நீயே. கருணையுடன் என்னைக் கண் பார்.

1 மிகுந்த விருப்பத்துடன் எள்ளுருண்டையைப் பெற்ற சிங்கிலி முனிவர் தன்னிச்சைப்படி அதை உண்ண முடிந்ததா? (வேதசாரமாகிய) ஸ்ரீரங்கநாதனை விபீஷணன் இலங்கைக்கு எழுந்தருளச் செய்ய முடிந்ததா? (ஆகவே) சரசகுணம் படைத்த நீயே என்னைக் காக்கவேண்டும்.

## 420

ராமப்ரிய (மே. 52) தே$^{v}$சாதி$^{v}$

ப. ஸந்தே$^{v}$ஹமுநு தீ$^{v}$ர்ப்பவய்ய
ஸாகேதநிலய ராமய்ய (ஸங்)

அ. நந்தார்ச்சித பத$^{v}$யுக$^{v}$முலு மேலோ
நாக$^{v}$ரிகமகு$^{v}$ பாது$^{v}$காயுக$^{v}$மு மேலோ (ஸங்)

ச. வரமௌநுலெலல ஜரணம்முலநு
ஸ்மரியிம்ப நீது$^{v}$பத$^{v}$ மொஸங்கெ$^{v}$நே
ப$^{v}$ரதார்ச்சநசே பா$^{v}$து$^{v}$கலு
த$^{v}$ர நிங்நொஸங்கெ$^{v}$ த்யாக$^{v}$ராஜ பா$^{v}$க்$^{v}$யமா (ஸங்)

அயோத்தியை இருப்பிடமாகக் கொண்டவனே! இராம! எனது சந்தேகத்தை தீர்த்துவைப்பாயாக. (வைகுந்தத்தில்)

---

1 இங்கு குறிப்பிடப்பெறும் வரலாற்றைப்பற்றி வெவ்வேறு அபிப்பிராயங்கள் வழங்கிவருகின்றன.

நந்தன் (ஸுநந்தன்) முதலியோரால் அருச்சனை செய்யப்பெறும் உனது திருவடிகள் உயர்ந்தனவா? (அல்லது) அயோத்தியா பட்டணத்துடன் சம்பந்தமுடைய உனது பாதுகைகள் மேலானவையா?

சிறந்த தவமுனிவர்கள் உன் பொன்னடிகளைத் தியானிக்க அவர்களுக்கு அவை (வைகுந்த) பதவியளித்தன. பரதன் புரிந்த அருச்சனையின் மூலம் அவை உலகிற்கு உன்னையே அளித்தன. தியாகராஜனின் பேரதிர்ஷ்டமே! (என் சந்தேகத்தைத் தீர்ப்பாயாக).

## 421

ராமமனோஹரி (மே. 52) தே᳐சாதி᳐

ப. ஸீதாமனோஹர ச்ருங்கா᳐ரசேக,ர (ஸீ)

அ. வாதாசனாரி வரவாஹந
வாரிஜாஸநாதி᳐ வந்தி᳐தபத᳐ (ஸீ)

ச. 1. தொலிஜன்மமுலனு ஜேஸிந பூஜா
ப,லமோ லேக நீது᳐ கடாக்ஷ
ப᳐லமோ நீவாட᳐நு நேநநி லோகுலு
ப᳐ல்ககா᳐ த்,ந்யுட᳐நைதிநி (ஸீ)

2. தீ᳐நலோக ஸம்ரக்ஷக தை᳐வா-
தீ,᳐நமுகா᳐ நீ ரூபமு நாது᳐
மாநஸாப்᳐ஜமுந நாடியுண்ட᳐கா᳐
நே நெந்தடி பா᳐க்யசாலினோ (ஸீ)

3. தி᳐ட்டதநமுநு ப,᳐க்தி ஸ்திரமௌ-
நட்டுகா᳐ ஸ்ரீராம யெந்நடிகி
க᳐ட்டிகா᳐நு த்யாக᳐ராஜுநி செயி
ப᳐ட்டி ரக்ஷிம்சேலுகோவய்ய (ஸீ)

சீதையின் மனங்கவர்வோனே! சிங்காரத்திற்கு நிதி போன்றவனே! சர்ப்பங்களுக்கு எதிரியான கருடனை வாகனமாக உடையவனே! பிரமன் முதலியோரால் தொழப்படும் பாதனே!

நான் முற்பிறப்புக்களில் செய்த பூசையின் பயனோ? அல்லது உன் அருள்நோக்கின் பலனோ? நான் உன்னைச் சேர்ந்தவனென்று உலகோர் கூற அதைக்கேட்டு நான் பாக்கியசாலியானேன்.

எளியோரைக் காப்பவனே! தெய்வத்தின் அருளால் உன்னுருவம் என்னுள்ளமென்னும் தாமரையில் நிலைகொண்டிருப்பதற்கு நான எவ்வளவு பாக்கியம் செய்தேனோ?

ஸ்ரீராம! உறுதியாக உனது பக்தி என்னிடம் நிலைத்து நிற்குமாறு சதாகாலமும் நீ கெட்டியாக இத்தியாகராஜனைக் கைப்பிடித்துக் காப்பாற்றி ஏற்றுக்கொள்வாயாக.

## 422

பூரிகல்யாணி (மே. 53) தே᳴சாதி᳴

ப. பரலோக ஸாத᳴நமே மநஸா (ப)

அ. ஸ்மர லோப᳴ மோஹாதி᳴ பாபுலநு
ஸ்மரியிஞ்சகே ஸ்ரீராமப᳴ஜந (ப)

ச. ஜநநாதி᳴ ரோக᳴ ப᳴யாது᳴லசே
ஜக᳴மந்து᳴ க᳴ல்கு᳴ து᳴ராஸலசே
த᳴நயாதி᳴ பா᳴ந்த᳴வுல ப்᳴ரமசே
த᳴க᳴ல நீது᳴ த்யாக᳴ராஜநுதுநி ப᳴ஜந (ப)

ஓ மனமே! தியாகராஜன் வணங்கும் (தெய்வமாகிய) ஸ்ரீராமனின் பஜனையே உத்தம கதியளிக்கும் சாதனமாகும். (ஆகவே) காமம், உலோபம், மோகம் முதலிய பாவங்களை மனத்தினாலும் நினைக்காதே. பிறப்பு (இறப்பு) நோய் ஆகியவற்றைக் குறித்த பயத்தையும், இவ்வுலகில் உண்டாகும் துராசைகளையும், மக்கள், உறவினர் முதலியோர் மீதுண்டாகும் பெருமோகத்தையும் அண்டவிடாமல் செய்யும் (இராம பஜனையே நல்வழிக்கான சாதனமாகும்.)

## 423

பூரிகல்யாணி ரூபகம்

ப. பரிபூர்ணகாம பா᳴வமுந மறசிநாம (ப)

அ. பரம காருணிகோத்தம
ப᳴வ ஜீவநஜ ப᳴வார்ச்சித (ப)

ச. ஸாகேதாதி᳴ப நீமுக᳴ ஸரஸீருஹமுநு ஜூபி
ஸாகே மதி᳴ லேதே᳴டி ஸவரணரா ராம
ஈ கலிநுஸரிஞ்சிந ஹீநஜாதி மர்த்யுல சீ-
காகு ப᳴ட᳴க᳴ த᳴ரமே ஸ்ரீகர த்யாக᳴ராஜவிநுத (ப)

நிறைவேறிய விருப்பங்களையுடையவனே! எங்கள் உள்ளத்தில் உன்னை என்றாகிலும் நாங்கள் மறந்தோமா? இரக்கமுள்ளவர்களுள் சிறந்தவனே! சிவன், பிரமன் ஆகியோரால் துதிக்கப் பெறுபவனே! அயோத்திக்கரசே! தாமரையொத்த உன் முகத்தைக் காட்டியருளி எம்மைக் காக்கத் திருவுள்ளம் உனக்கில்லையா? இராம! இக்கலியுகத்தின் தீய வழக்கங்களைக் கடைப்பிடிக்கும் கீழ் மக்களால் ஏற்படும் இடர்களைப் பொறுக்க என்னாலாகுமா? மங்களம் தருபவனே!

## 424

ஷண்முக,ப்ரிய (மே. 56) ஆதி

ப. வத்ᵛதᵛநேவாரு லேரு (வ)

அ. அத்ᵛதᵛம்பு மோமுநு ஜூட ᵛநே-
நய மங்கᵛலார்ச்சிதே ஜூசி (வ)

ச. கோரிக லிலலோ திᵛவிலோ
கொᵛஞ்செமைந லேநி நாமநஸு
தாᵛரி தெலிய தைᵛவமு நீவு ஸுமீ
த்யாகᵛராஜ ஹ்ருத்ᵛபூ,ᵛஷண நிநுவிநா (வ)

கண்ணுடியையொத்த உன் திருமுகத்தைக் காண வேண்டுமென்று நான் எந்நேரமும் முறையிடுவதைப் பார்த்து "அங்கலாய்க்கவேண்டாம்" என்று கூறுவதற்கு (உன்னைத் தவிர) ஒருவரும் இலர். இகத்திலும் பரத்திலும் ஒரு வித விருப்பமும் சிறிதும் இல்லாத என் மனத்தின் போக்கையறியும் தெய்வம் நீ ஒருவனேயல்லவா? தியாகராஜனின் இதயத்திற்கு அணியானவனே! உன்னையன்றி (வருந்தவேண்டாமென்று கூறுவதற்கு ஒருவருமிலர்)

## 425

ரஞ்ஜநி (மே. 59) ரூபகம்

ப. துᵛர்மார்கᵛ சராதᵛ,முலநு
தொᵛர நீவந ஜாலரா (துᵛர்)

அ. தᵛ,ர்மாத்மக தᵛ,ந தாᵛ,ந்யமு
தைᵛவமு நீவை யுண்டᵛகᵛ (துᵛர்)

ச. பலுகுபோᵛடிநி ஸபᵛ,லோந
பதித மாநவுல கொஸகேᵛ
க,லுல நெச்சட பொᵛகடᵛநி ஸ்ரீ-
கர த்யாகᵛராஜவிநுத (துᵛர்)

தப்பு வழிகளில் செல்லும் நீசர்களை ''நீங்கள் பிரபுக்கள்'' என்று புகழ என்னுலாகாது. தர்மமே சொரூபமாக உடையவனே! செல்வம். தானியம் முதலியவற்றை வழங்கும் தெய்வம் நீயாக இருக்கையில் (கீழ்மக்களைப் புகழ என்னுலாகாது.) கவிதையென்னும் சரசுவதி தேவியைச் சபையில் ஒழுக்கமற்ற மாந்தருக்கு அடிமையாக்கும் துஷ்டர்களை ஒரு காலும் புகழாத இத்தியாகராஜன் வணங்கும் பெருமானே! திருவளிப்பவனே!

## 426

கைகவசி (மே. 60) தே'சாதி

ப. வாசாமகோ'சரமே மநஸா
வர்ணிம்ப த்'ரமே ராம மஹிம (வா)

அ. ரேசாரி மாரீசுநி ப'ட'க' பெ'ட்டி
ரெண்டோ'வாநி சிகி, கொஸகெ'நே (வா)

ச. மாநவதீ மதெ'றிங்கி' சா-
மரமௌட கஸ்த்ரமு நேய க'நி
மாநம்பு'கை மெட' தா'சக'
மாத,'வுண்டு' கநி கரகி' வேக'மெ
தீ'நார்த்திப,'ஞ்ஜநுடை' ப்ராண
தா'நம் பொ'ஸக' முந்நு சநிந
பா'ணம்பு' நடு செத'ரஸேயலேதா'
கா'நலோல த்யாக'ராஜநுது மஹிம (வா)

மனமே! ஸ்ரீராமனின் மகிமை வாக்கிற்கு எட்டாதது. அதை வருணிக்கவும் முடியுமா: இரவில் சஞ்சரிக்கும் அரக்கனை மாரீசனைக் கடலில் தள்ளி, இரண்டாமவனை சுபாகுவின் தலையை (இரகுவீரன்) அறுத்தெறியவில்லையா?

(ஒரு வேடன்) சாமரத்திற்கு உபயோகப்படுமென்று பெண் மானின் மீது அம்பை எய்யவும், (தன்னுயிரை விட) மானத்தையே மேலாகக் கருதிய அந்த மான் (வாலிற்குப் பதிலாக) தன் கழுத்தைக் காட்ட அதன் உள்ளத்தை அறிந்த இராமன் மனமிரங்கி எளியவர் துயர் நீக்குபவனாக அதற்கு உயிர்ப்பிச்சையளிக்கக் கருதி விரைவுடன் மற்றொரு கணையை எய்து (வேடனின்) முதல் அம்பைச் சிதறவடிக்கவில்லையா? சங்கீதப் பிரியனாகிய இராமபிரானின் மகிமை (வாக்கிற்கு எட்டாதது)

## 427

ஹம்ஸநாத³ம் (மே. 60) தே³சாதி³

ப. ப³ண்டுரீதி கொ³லுவிய்யவய்ய ராம (ப³)

அ. துண்டவிண்டிவானி மொத³லைந மதா³-
து³ல ப³ட்டி நேல கூ³ல ஜேயு நிஜ (ப³)

ச. ரோமாஞ்சமனே க₄நகஞ்சுகமு
ராமப₄க்துட³னே முத்³ரபி³ள்ளயு
ராமநாமமனே வரக₂ட்³க³மிவி
ராஜில்லுநய்ய த்யாக³ராஜுனிகே (ப³)

இராம! உனது சமுகத்தில் சேவகனுகப் பணிபுரியும் பேற்றை அளிப்பாயாக. (கரும்பை வில்லாகவுடைய மன்மதனின் சேஷ்டையாகிய) காமம் முதலிய எதிரிகளைப் பிடித்து நிர்மூலமாக்கும் ஆற்றல் கொண்ட உன் (சேவகனுகும் வாய்ப்பை அருள்வாயாக). (உனது பக்தியின் மூலம் ஏற்படும்) உடல் சிலிர்ப்பு என்ற கவசமும், இராமபக்தன் என்ற முத்திரை வில்லையும், இராமநாமமென்னும் சிறந்த போர்வாளும் இத் தியாகராஜனிடம் விளங்குகின்றன. ஐயனே! ஆகவே என்னைச் சேவகனுக ஏற்றுக்கொள்!

## 428

காந்தாமணி (மே. 61) தே³சாதி³

ப. [1]பாலிந்துவோ பாலிம்பவோ
பா³கை³ந ப³ல்கு ப³ல்கிநு (பா)

அ. ஏலாகு³ நிந்நாடு³கொந்ந நேர
மெஞ்ச ப³நிலேது³ நாபைநி (பா)

ச. பரமார்த்த₂மகு³ நிஜமார்க³முநு
வர தே³சிகுண்டா³ந தியக³
பரிபூர்ணமகு³ ப₄க்திமார்க³மே யநி
பா₄விஞ்சிந த்யாக³ராஜுனி (பா)

அழகிய மொழிகளை நீ என்னுடன் பேசியபோதிலும் என்னைக் காப்பாயோ, காக்கமாட்டாயோ? எவ்விதத்திலேனும் நான் உன்னைக் குறை கூறியிருப்பினும் அதை நான் செய்த பிழையாக நீ கருதலாகாது. பரமார்த்தத்தையளிக்கும் உண்மை

---

1 பாலிந்துவய்ய பாலிஞ்ச ராவோ

யான வழியைச் சிறந்த ஞானகுரு (ஒருவர்) எனக்கு உபதேசித்திருப்பதால் அதையே பரிபூரணமான பக்தி மார்க்கமாக எண்ணியுள்ள இத்தியாகராஜனைக் (காப்பாயோ காக்கமாட்டாயோ?)

429

[1]ச்ருதிரஞ்ஜநி (மே. 61) தே^v^சாதி^v^

ப. ஏதா^v^ரி ஸஞ்சரிந்துரா இக ப^v^ல்கரா (ஏ)

அ. ஸ்ரீதா^v^தி^v^ மத்^v^யாந்தரஹித
ஸீதாஸமேத கு^v^ணாகர நே (நே)

ச. அந்நி தாநநு மார்க^v^முநநு [2]ஜநிதே
நந்நு வீடெ^v^நு பா^v^ரமநி யநேவு
தந்நு ப்^v^ரோவரா[3] ஸதா^v^யண்டே
த்^v^வைதுட^v^நேவு த்யாக^v^ராஜநுத (ஏ)

நான் எவ்வழியைப் பின்பற்றிச் செல்வேன்? இதை நீ கூறுவாய். செல்வங்களை வழங்குபவனே! ஆதியும் நடுவும் முடிவும் அற்றவனே! சீதாதேவியுடன் கூடியிருப்பவனே! நற்குணங்களின் உறைவிடமே! ''அனைத்தும் நானே'' யென்ற (அத்துவைத) வழியில் நான் செல்ல முயன்றால் ''உன்னை விட்டுவிடுவது எனக்குப் பெரிய பாரம்'' என்று கூறுவாய். 'சதா என்னை நீ காப்பாய்.' என்று நான் முறையிட்டால் ''நீ துவைத வாதத்தைப் பின்பற்றுபவன்'' என்பாய். (ஆகவே நான் எவ்வழியில் செல்வது?)

430

ரிஷப^v^ப்ரிய (மே. 62) தே^v^சாதி^v^

ப. மஹிம த^v^க்கிஞ்சுகோவய்ய
மஹிநி ஸத்யஸ்வரூபுட^v^நு
மஹாராஜ ராஜேச்வர நீ (ம)

அ. விஹிதமார்க^v^ ப^v^க்துலுகா^v^ மஹாத்முலு
வெலயக^v^ விநலேதா^v^ ஸ்வகீயமகு^v^ (ம)

ச. பநிகிராநி பநுலுஜேஸி சரணநு
வாரி வெதலு தீ^v^ர்ச்சி ப்^v^ரோசிதிவே
தநிவி தீ^v^ற நம்மிநாட^v^நுசு ஸ்ரீ
த்யாக^v^ராஜநுத தப்புலாட^v^கு (ம)

---

1. காந்தாமணி 2. ஜநக^v^ 3. தா^v^ஸவரதா^v^

மகாராஜ ராஜேச்வர! இவ்வுலகில் சத்தியமே உருவான வன் என்ற உன் சொந்த மகிமையை நீ (சற்றே) குறைத்துக் கொள்வாயாக. பரமஞானிகள் வேத சாத்திரங்களில் விதிக்கப் பெற்றுள்ள அறநெறியைப் பின்பற்றிய பக்தர்களென்பதை நீ கேட்டிலேயோ? கவைக்குதவாத காரியங்களைச் செய்த பின்னர் உன்னைச் சரணடைந்தவர்களின் துயரங்களை நீ களைந்து அவர்களைக் காப்பாற்றினையே! ஆசை தீர உன்னை நம்பியவன் என்பதற்காக நீ என்மீது பிழைகளைச் சுமத்தாதே.

## 431

லதாங்கி^v (மே, 63) தே^vசாதி^v

ப. கண்ட ஜூடு^vமீ ஒகபாரி க்ரீ (கண்)

அ. ப^vண்டுடை வெலயு பா^vகு^vகா^vநி தப்பு
தண்டலெல்ல மாநுகொந்த நந்நு க்^vரீ (கண்)

ச. அலநாடு^v ஸௌமித்ரி பாத^vஸேவ
செலரேகி^v ஸேயுவேள ஸீததோ
ப^vலிகி ஜூசிநந்த புலகாங்கிதுடை^v
ப^vரகி^vந யடு த்யாக^vராஜுநி க்ரீ (கண்)

உனக்கு அடியவனாக இருப்பதே மேலென்று எண்ணி தப்பு தண்டாக்களை அறவே துறந்திருக்கும் என்னை ஒரு முறையாவது கடைக்கண்ணால் பார்க்கலாகாதா? அன்றொரு நாள் இலக்குவன் முகமலர்ச்சியுடன உன் பொன்னடி சேவையில் ஈடுபட்டிருக்கும் பொழுது நீ அதை சீதையிடம் புகழ்ந்து பேசி அவனைப் பார்த்த வுடனேயே அவன் மெய் சிலிர்த்தது போல் இத்தியாகராஜனையும் கடைக்கண்ணால் நோக்கியருள்.

## 432

ஸரஸ்வதி (மே. 64) ரூபகம்

ப. அநுராக^vமு லேநி மநஸுந
ஸுஜ்ஞாநமு ராது^v (அ)

அ. க^vநுலோ யந்தர்ஜ்ஞாநுல-
கெறுகே கா^vநி (அ)

ச. வக^vவக^vகா^v பு^vஜியிஞ்சே
வாரிகி த்ருப்தௌரீதி
ஸகு^vணத்^vயாநமுபைநி
ஸௌக்^vயமு த்யாக^vராஜநுத (அ)

பக்தியில்லாத (மாந்தரின்) மனத்தில் நல்லறிவு பிறக்காது. மகான்களாகிய தத்துவஞானிகள் இதை நன்கு அறிவர். நிதானமாக உண்ணப் புகுபவர்களுக்குத் திருப்தி ஏற்படுவதைப்போல் (பகவானின் கல்யாண குணங்களை தியானித்து) சகுண உபாசனை செய்பவர்களுக்கே சுகம் கிடைக்கும்.

## 433

பூ᳚ஷாவளி (மே. 64) தே᳚சாதி᳚

ப. தநமீத᳚நே ஜெப்புகொநவலெ கா᳚-
கநு நிந்நாட᳚ ப᳚நிலேது᳚ரா (த)

அ. சநுவுந கொந்த ப᳚ல்கேவு யீ
ஸுந கொநத ப᳚ல்கேவநு நேரமெல்ல (த)

ச. ஒகவேள நிந்நு ப்ரேமமீற மதி᳚
நுஞ்சி மஞ்சி பூல பூஜிம்புசு
ஒகவேள கோபகி᳚ஞ்சி நிந்நு தூ᳚ரு-
சுண்டிகா᳚நி ராம த்யாக᳚ராஜநுத (த)

குற்றங்களனைத்தையும் என் மீதே நான் கூறிக்கொள்ள வேண்டுமே தவிர உன்னைக் குறைகூற இடம் சிறிதும் இல்லை. மிகப் பரிவுடன் நீ என்னுடன் சில மொழிகள் பேசுவாய், பின்னர் கோபத்துடன் உரையாடுவாய் என்று கூறி என்ன பயன்? நான் ஒரு சமயம் உன்மீது பக்திபூண்டு உன்னை என் மனத் திருத்தி நன்மலர் கொண்டு பூசிக்கிறேன். மற்றொரு சமயம் கோபத்துடன் உன்னைத் திட்டுகிறேன். (ஆகவே குற்றம் என்னுடையதே தவிர உன்னைக் குறைகூற வகையேது?)

## 434

கல்யாணி (மே. 69) ஜம்ப

ப. அம்ம ராவம்ம துளஸம்ம நநு பாலிம்ப
வம்ம ஸததமு பத᳚முலே நம்மிநாநம்ம (அ)

அ. நெம்மதி᳚நி நீ விஹம்பரம்மு லொஸகு᳚து᳚வநுசு
கம்ம வில்துநி தண்ட்᳚ரி கலநைந பா᳚யட᳚ட (அ)

ச. நீ ம்ருது᳚ தநுவுநு க᳚நி நீ பரிமளமுநு கநி
நீ மஹத்வமுநு க᳚நி நீரஜாக்ஷி
தாமரஸத᳚ளநேத்ருடு᳚ த்யாக᳚ராஜுநி மித்ருடு᳚
ப்ரேமதோ சிரமுநநு பெ᳚ட்டுகொந்நாட᳚ட (அ)

அன்னையே! வருக! துளசி அன்னையே! என்னைப் பாலித்தருள்வாய். சதா உன் திருவடிகளையே நம்பியுள்ளவன் நான். மனவமைதியுடன் நீ இக, பர சுகம் அருள்பவளென்று அறிந்து மன்மதன் தந்தையாகிய ஹரி உன்னைக் கனவிலும் விட்டுப் பிரிவதில்லை. மென்மை பொருந்திய உன் தேகத்தைக் கண்டும், உனது நறுமணத்தை நுகர்ந்தும், உன் மேன்மையை அறிந்தும், தாமரைக் கண்ணனும், தியாகராஜனின் நேயனுமான ஹரி அன்புடன் உன்னைத் தன் சிரத்தில் அணிந்துகொண்டுள்ளான்.

## 435

கல்யாணி ஆதி^v

ப. எந்து^vகோ நீ மனஸு^u கரக^vது^v
ஏமி நேரமோ தெலிய (எங்)

அ. எந்து^v ஜூசிநகா^vநி த^vசரத,
நந்த^vநுகா^v பா^vவிஞ்சிந நாபை (எங்)

ச. 1. ஸு^uமுகு,லை ந யீ லோகுலு நந்ந-
ஸூயலசே ஜூசெத^vரு
விமுகு,லை யெந்தடிவாட^vநி ப^vஹு^u
வித^vமுல தூ^vறெத^vரு
ஸ,முகமுநகு யோக்^vயுடு^v கா^vட^vநி
மறி ஜூட^vக^v நெஞ்செத^vரு
க^vமகமுநநு ரக்ஷிஞ்செடி^vவாரலு
கா^vரநி நிந்நே கோரிந நாபை (எங்)

2. த^vந தநய களத்ராது^vல ஜூசி
தமத^vநி ப்^vரமஸெத^vரு
வெநுக முந்து^v தெலியநி யா த^vநிகுல
வெம்ப^vடி^v திரிகெ^vத^vரு
இநகுல ஜலநிதி^vஸோம ராம நந்-
நிடுல ஸேயக நீ வெய்யாரு
மநவுலடு^vகு^v நாபைநி கருணதோ
மந்நிஞ்சி காபாட^vநு ராம (எங்)

3. ராக^v^ரஹித ஸ்ரீராம இந்த ப-
ராகு ஜேயக சர-
ணுக^v^த வத்ஸல நம்மிதி தாரக
நாம பராத்பர
த்யாக^v^ராஜ ஹ்ருத^v^ய ஸத^v^நுட^v^நி
யத்யந்தமு வேடி^v^திரா நீ
வே க^v^தியநுசு ரேயு ப^v^க^v^லு
வெய்யிவேல மொறலு பெ^v^ட்டிந நாபை (எந்)

எக்காரணத்தினுலோ உன் மனம் இரங்கவில்லை. (நான்) செய்த பிழை என்னவோ அறியேன், எங்கு (எதை) நோக்கினும் (அதை) தயரதன் மைந்தனுன இராமனுக எண்ணும் என்னிடம் (உன் மனம் இளகவில்லை).

என்னிடம் அன்பு பூண்டவர்கள் கூட என்மீது பொருமை கொள்கின்றனர். என்னை வெறுப்பவர்களோ ''இவன் எம்மாத் திரம்'' என்று பல விதங்களில் என்னைத் திட்டுகின்றனர். ''இவன் ஆதரவிற்குத் தகுந்தவனல்லன்'' என்று திரும்பிப் பார்க்கவும் யோசித்தனர். நியமமாக என்னைக் காப்பவர் யாரு மிலரென்று உன்னையே வேண்டி நிற்கும் என் மீது (உன் மனம் இரங்கவில்லை).

செல்வம், மக்கள், பெண்டிர் ஆகியவை கண்டு ''இவை நம்மைச் சேர்ந்தவை'' யென்று மயங்கினர். முன்பின் தெரியாத பணக்காரர்களின் பின்னுல் சுற்றித் திரிந்தனர். இரகு வமிச மென்னும் கடலில் உதித்த சந்திரனே! ஸ்ரீராம! என்னையும் அக்கதிக்கு ஆளாக்காமல், உன்னை ஆயிரக்கணக்கில் கோரிக்கை கள் கேட்கும் என்னைக் கருணையுடன் நீ காப்பாற்ற வேண்டும்.
பற்றில்லாத இராமபிரானே! இவ்வளவு அலட்சியம் நீ செய்யலாகாது. சரணடைந்தவர்களைக் காப்பவனே! உன்னையே நம்பினேன். தாரக நாமத்தாய்! பராத்பர! இத்தியாகராஜனின் சித்தமிசை வசிப்பவன் நீயே யென்று தெரிந்து மிகவும் வேண்டி னேன். நீயே கதியென்று இரவு பகலாக ஆயிரம் தடவை முறை யிட்ட என் மீது (உன் மனம் ஏனோ இரங்கவில்லை).

## 436

கல்யாணி ஆதி^v^

ப. ஏதாவுநரா நிலுகட^v^ நீகு
எஞ்சிசூட^v^ நக^v^பட^v^வு (ஏ)

அ. ஸீதா கௌ^v^ரீ வாகீ^v^ச்வரி யநு
ஸ்ரீரூபமுலந்தா^v^ கோ^v^விந்தா^v^ (ஏ)

ச. பூ³கமலார்க்கானில நப⁴முலந்தா³
லோக கோடுலந்தா³
ஸ்ரீகருட³கு³ த்யாக³ராஜ கரார்ச்சித
சிவ மாத⁴வ ப்³ரஹ்மாது³ல யந்தா³ (ஏ)

எவ்விடத்தில் உனது இருப்பிடம்? எண்ணிப் பார்த்தால் நீ எங்குமே அகப்படுவதில்லை. சீதை (இலக்குமி), பார்வதி, சரசுவதி யென்னும் திருவின் உருவங்களிலா? அல்லது பூமி (பிருதிவி), ஜலம் (அப்பு), சூரியன் (தேயு), காற்று (வாயு), ஆகாயம் இவற்றிலா? பல கோடி உலகங்களிலா? கோவிந்த! மங்களம் தருபவனே! தியாகராஜனால் அர்ச்சிக்கப்படுபவனே! சிவன், விஷ்ணு, பிரமன் என்னும் (மும்மூர்த்திகளின்) தோற்றங்களிலா? (எவ்விடத்தில் உனது உறையிடம்?)

## 437

கல்யாணி ரூபகம்

ப. ஏவர மடு³கு³து³ரா ஸ்ரீராம நிந் (நே)

அ. பாவநமகு³ நீ பாத³ ப⁴ஜநமு ஸேயுடகைந
தோ³வ லேப³ரமைநதி³ தே³வரா இந்து³நே (நே)

ச. 1. ஸ்ரீரகு⁴வீர ஸகலாதா⁴ர நீ மநஸுந
கோ³ரிந பநுலநு பத³ ஸாரஸமுல நா மந-
ஸாரக³ விட³வநநே ஸாரதர வைராக்³யமு
ஸாரெகு ஸததக³தி குமாருநி பாலிநதி³ (ஏ)

2. நீலக⁴நாப⁴ ஸதா³காலமு நீ ப⁴க்துல
ஜாலமுலநு கநி பரிபாலந ஜேயுசு நீ
வோலிககா³ ஜூசே மேலுநக³ல ஸௌக்²யமு
பா³லுட³கு³ ரிபுக்⁴நுநி பாலி யுண்ட³க³ நிந் (நே)

3. நீ மஹிமல விநகா³ நாமமுநு த³லசகா³
பூ⁴மிநி ப³த³ரேக²ல நேமரகநு கநக³
தாமரஸநயந கு³ணதா⁴ம மநஸுந கரகே³
ப்ரேமரஸமு ப⁴ரதஸ்வாமி பாலியுண்ட³க³ (நே)

4. வாரமு நீது³ மநஸுந தா³ரி நநுஸரிஞ்சுசு
நேரமுலேகநு யாஹார ஸுஷுப்துலநு நி-

வாரணமு ஜேயு பரிசாரக பா᳴க்᳴யமலங்-
காரியகு᳴ ஸுமித்ர குமாருநி பாலேநதி᳴ (ஏ)

5. ஸ்ரீஹரி ப᳴ரிதசரஸமூஹ ஸதா᳴ நிநு ஹ்ருத்᳴-
கே᳴ஹமுநநுகநி து᳴ர்தா᳴ஹமுலநு ரோஸி வி-
வாஹநுடு᳴ நீவநு மோஹம்பு᳴நநு மறசி
ஸோஹமநு ஸுக,மு வைதே᳴ஹி பாலேயுண்ட᳴க᳴ (ஏ)

6. ஈ ஜக᳴திநி க᳴ல ஸுக,ராஜிநி மறி நிர்ஜர
ராஜபத᳴ம்பு᳴நு ஈ ஜந்மமுந நடு᳴க᳴நு
ராஜவத᳴ந ஸ்ரீத்யாக᳴ராஜுநி மதி᳴கெப்புடு᳴
ராஜபத,முலேதே ஜயமௌ கா᳴நி (ஏ)

ராம! எவ்வரம் வேண்டுமென்று உன்னை நான் கேட்பேன்? தூய்மை பொருந்திய உனது திருவடியில் சதா சேவை செய்து கொண்டிருப்பதற்கும் வழியில்லாமற் போயிற்று;

ரகுவீரனே! அனைத்திற்கும் ஆதாரமானவனே! உன் மனத்தில் நீ விரும்பும் காரியங்களனைத்தையும் (முடித்து) உன் பாதத் தாமரைகளையும் மனமார என்றும் விடேன் என்ற உயர்ந்த வைராக்கியம் வாயு குமாரனான அனுமனின் உரிமையாயிற்று.

கருமுகில் வண்ணனே! இடைவிடாமல் உன் பக்தர்களின் கூட்டங்களைக் கண்டு, அவர்களைப் பாலித்து, ஒய்யாரமாக நீ பார்க்கும் கடைக் கண் பார்வையின் இன்பம் சிறுவனான சத்துருக்கினனின் வசமாயிற்று;

செந்தாமரை கண்ணனே! நற்குணங்களுக்கு இருப்பிடமே! உன் மகிமையைக் கேட்டும், திருநாமத்தைச் சிந்தித்தும், புவியில் உன் பாதச் சுவடுகளை (பாதுகைகளை) மறவாமல் தரிசித்து மனங்கரையும் பக்திரசம் பரதாழ்வானின் சொத்தாயிற்று.

ஒவ்வொரு நாளும் உனது திருவுள்ளத்தின் போக்கை அனுசரித்து, பிழை செய்யாமல் ஊண், உறக்கம் தவிர்த்து உனக்குத் தொண்டு புரியும் வாய்ப்பு உன்னை அலங்காரம் செய்யும் இலக்குவனின் பேரதிர்ஷ்டமாக அமைந்தது.

ஸ்ரீஹரி! நெடுங்கணை வீரனே! உன்னை எப்பொழுதும் தன் இதயமாகிய கோவிலில் தரிசித்துக் கொடிய தாபங்களை ஒழித்து கருடவாகனனான மகாவிஷ்ணு நீயென்பதை மோகத்தில் மறந்து ''அவனே நான்'' (ஸோஹம் என்ற அனுபூதி) சீதையின் வசமாயிற்று.

சந்திரவதனனே! இவ்வுலகில் சிற்றின்பக் கூட்டத்தையும், தேவேந்திர பதவியையும் கூட (அருளுமாறு) நான் இச்சன்மத்தில் உன்னை வேண்டேன். இத்தியாகராஜனின் உளத்திற்கு எப்பொழுதும் பக்தியெனும் ராஜமார்க்கமே வெற்றி தருமாதலின் (எவ்வரம் வேண்டுமென்று உன்னை நான் கேட்பேன்?)

## 438

கல்யாணி ஆதி

ப. காரு வேல்புலு நீகு ஸரி (கா)

அ. காருகு ஜீலகர ஸம்பா
கந்தரமை நட்டு கானி (கா)

ச. 1. தீவடிகி தீபமுல ரீதி
காவேடிகி காலுவல ரீதி கானி (கா)

2. தம்மவைரிகி தாரகல ரீதி
கம்மவில்துனி காந்தி நருலரீதி கானி (கா)

3. ஸாகராநிகி ஸரஸு ரீதி
த்யாகராஜநுத தரலோ ராம நீகு ஸரி (கா)

பிறதெய்வங்கள் உனக்கு நிகர் அல்லர். (உனக்கும் அவர்களுக்கும்) கார் அரிசிக்கும் சீரகச் சம்பாவிற்கும் உள்ள வித்தியாசம் உள்ளது. அது தீவட்டிக்கும் சிறு விளக்கிற்கும் உள்ள வேறுபாட்டையும், காவேரிக்கும் கால்வாய்க்குமுள்ள தாரதம்மியத்தையும், சந்திரனுக்கும் நட்சத்திரங்களுக்குமுள்ள வித்தியாசத்தையும், மன்மதனின் அழகிற்கும் சாமானிய மனிதரின் அழகிற்குமுள்ள ஏற்றத்தாழ்வையும், சமுத்திரத்திற்கும் ஏரிக்குமுள்ள வித்தியாசத்தையும் ஒக்கும். தியாகராஜன் வணங்கும் இராமனே! இப்புவியில் உனக்கு நிகர் யாருமிலர்.

## 439

கல்யாணி த்ரிபுட

ப. நிதி, சாலா ஸுக,மா ராமுநி ஸந்-
நிதி,ஸேவ ஸுக,மா நிஜமுக பல்கு மநஸா (நி)

அ. த்தி, நவநீத க்ஷீரமுல ருசோ தாச-
ரதி, த்யாந பஜந ஸுதா,ரஸமு ருசோ (நி)

ச. தம சமமநு கங்காஸ்நாநமு ஸுக,மா கர்-
தம துர்விஷய கூபஸ்நாநமு ஸுக,மா
மமத பந்த,நயுத நரஸ்துதி ஸுக,மா
ஸுமதி த்யாகராஜநுதுநி கீர்த்தந ஸுக,மா (நி)

செல்வம் முதலியவை மிகுந்த இன்பத்தை அளிக்கக் கூடியவையா? அல்லது ஸ்ரீராமனின் ஸந்நிதியில் சேவை புரிவது சுகம் தருமா? மனமே! உண்மையாக இதைக் கூறுவாய். தயிர்,

வெண்ணெய், பால் முதலியன சுவை தருமா? அல்லது தயரதன் மைந்தனைத் தியானித்து பஜனை செய்வது ருசி தருமா? அடக்கம், சாந்தம் எனப்படும் கங்கா ஸ்நானம் சுகமா? அல்லது சிற்றின்பமென்னும் சேறு நிறைந்த கிணற்றில் நீராடுவது சுகமா? அகம்பாவத்தினுல் பிணைக்கப்பெற்ற நரஸ்துதி (மனிதரைப் பாடுதல்) சுகமா? அல்லது நன்மனத்தவனுகிய தியாகராஜன் வணங்கும் தெய்வத்தைத் துதி பாடுதல் இன்பமா?

## 440

கல்யாணி — சாபு.

ப. நிந்ந வலஸிந தேᵛமி ராம
நந்நவலெ காᵛக (நிந்)

அ. கந்நதண்ட்ᵛரி நீகந்ந வேல்புலெவ-
ருந்நாருரா யாபந்நரக்ஷக நே (நிந்)

ச. 1. கந ஸைரிஞ்சநி துᵛர்ஜநுல பாᵛ,ஷணலேக
மநஸுந நெருந நிநு ஜூசிநாநா
அநுதிᵛநமுநு நிநுகᵛந ஸஜ்ஜநஸேவ
விநயமுநநு நிஜமுந ஜேஸிநாநா (நிந்)

2. விநவய்ய மநவிநி ஸநகாதிᵛவிநுத நே
த,ᵛநமுநு கொநிந பாᵛ,மநு ப்ரேமமீற
யெநயக மநஸநு வநஜமுந நதி வே-
கᵛந பாதᵛமுந பூஜ நொநரிஞ்சிநாநா (நிந்)

3 கலிமாநவுலு ஸேயு சல கார்யமுலநு நே-
நிலலோநு தெᵛலியக வலசிதிகாᵛநி
கலலோநு கᵛலிகிᵛந கலுமுலவகலெ நெஞ்சி
வலசக பᵛலு தபமுநு ஜேஸிநாநா (நிந்)

4. ஜலஜாப்தகுல வரதிலக வீநுல நீ க-
த,லு விந்ந பᵛலுபாபமுலு போநுகாᵛநி
கலுமுல பலுகுல செலுலு வச்யுலுகாᵛநி
தொலி ஜந்மமுல பூஜா ப,லமேமோ தெலிய (நிந்)

5. சரசாபத,ᵛர யோகிᵛவரநுத பரிபூர்ண
நரரூப நிரதமு வர தயாகᵛராஜ
பரிபால ஸுர பூ,ᵛமிஸுருலநு ஸ்தி,ரமுகᵛ
கருணிஞ்சே பிᵛருதுᵛ நீ கரமுந மெறய (நிந்)

இராம! உன்னைக் (குறை) கூறுவதற்கு இடம் ஏது? என்னையே நான் நொந்துகொள்ள வேண்டும். என்னைப்பெற்ற தந்தையே! தஞ்சமடைந்தவரைக் காப்பவனே! உன்னை விட மேலான தெய்வங்கள் எங்குளர்?

காண்பதற்கும் சகியாத (அசூயை கொண்ட) கொடியவர் களின் பேச்சையும் உறவையும் ஒழித்து என் சித்தமிசை அன் புடன் உன்னைக் கண்டு தரிசித்தேனா? அல்லது அனவரதமும் உன்னைக் காணும் பொருட்டு வினயத்துடன் மெய்யடியார் களுக்கு உண்மையான தொண்டு புரிந்தேனா?

சனகர் முதலியோரால் வணங்கப்பெறுபவனே! என் இதயமெனும் தாமரையில் உன்னை விரைவில் காணும் பொருட்டு உன் பாதங்களில் பூசை செய்தேனா?

இக்கலியுக மாந்தர் பேராசையினால் செய்யும் காரியங்களில் நான் அறிவிழந்து ஆசை கொண்டேனே தவிர இல்வாழ்க்கைக் கனவில் (ஒருவன்) அடைந்த செல்வத்தை யொக்கும் என் றெண்ணி அதன் மீது மோகங்கொள்ளாமல் கடுந்தவம் புரிந்தேனா?

தாமரையின் நண்பனான சூரியனின் வமிசத்திற்கு திலகம் போன்றவனே! செவிகளார உன் சரித்திரத்தைக் கேட்டால் கொடிய பாவங்களும் அகன்றுவிடுவதுடன். திருமகள், கலைமகள் ஆகியவரின் அருளும் கிடைக்கும். ஆயினும், முற்பிறப்புக்களில் நான் செய்த வினையின் பயன் என்னவோ அறியேன்.

வில்லையும் அம்புகளையும் அணிந்தவனே! மானிட அவ தாரம் எடுத்தவனே! சதா தியாகராஜனைப் பாலிப்பவனே! தேவரிடமும் அந்தணரிடமும் என்றென்றும் கருணை காட்டுபவ னென்ற விருது உன் அபயகரத்தில் விளங்குவதால் (உன்னைக் குறை கூற இடம் ஏது?)

## 441

கல்யாணி ரூபகம்

ப. பˇ,ஜந ஸேயவே மநஸா
பரம பˇ,க்திதோ (பˇ,)

அ. அஜ ருத்ˇராதுˇலகு பூˇ,ஸுர
ராதுˇல கருதைˇந ராம (பˇ,)

ச. நாதˇப்ரணவ ஸப்தஸ்வர
வேதˇவர்ண சாஸ்த்ர புரா-
ணாதிˇ சதுஷ்ஷஷ்டி கள
பேˇ,தˇமு கலிகேˇ

மோத³கர சரீரமெத்தி
முக்தி மார்க³முநு தெ³லியநி
வாத³தர்க்கமேல ஸ்ரீம-
தா³தி³ த்யாக³ராஜநுதுநி (ப³)

மனமே! பிரமன், உருத்திரன் ஆகியோருக்கும் அந்தணர் முதலியோருக்கும் கிடைத்தற்கரிய ஸ்ரீராமனின் பஜனையை பரம பக்தியுடன் செய்வாயாக.

நாதம், பிரணவம் ஏழு சுரங்கள், வேதம், (மந்திர) வர்ணங்கள், சாத்திரங்கள், புராணங்கள் ஆகிய அறுபத்து நான்கு கலைகளின் வேறுபாடுகளை உணரக்கூடிய இன்பமயமான மனிதப் பிறவியை அடைந்தும் முக்தி மார்க்கத்தை அறியக் கூடாமற் செய்யும் வாதங்களும் தர்க்கங்களும் உனக்கேன்? ஆதிசிவன் வணங்கும் ஸ்ரீராமனின் பஜனையைச் செய்வாயாக.

## 442

கல்யாணி ஆதி³

ப. ராம நீ வாது³கொந்து³வோ கொநவோ தொ-
லி மா நோமு ப₁ல மெடுலதோ³ (ரா)

அ. நா மநஸுந நீயந்து³ ப்ரேம மீறக³நு
நம்மிநாமநுசு சால திரிகே³மு கா³நி நிஜமநுசு (ரா)

ச. 1. ப₄வஸாக³ரமுந க³லுகு³ பா³த₄லண்டக யுண்டு³ட
கவிவேக மாநவுல செலிமி யப்³ப³ குண்டு³டகு³
அவநியந்து³க³லுகு³ வேதா³க³ம மர்மமு தெ³லிஸி
நவநீரத³ நிப₄ தே³ஹ நம்மிநதி³ சாலுநநுசு (ரா)

2. ப₄க்து³ தப்பகநு யுண்டே³ ப₄க்துலகு நித்யஸுக₂மு
க₃த்³த₃நுசு ப³லிகிந பெத்³த³ல நம்மி
முத்³து³கா³ரு நீ ரூபமுநு மோத³முந த்₄யாநிஞ்சுசுநே
ப்ரொத்³து³ பொக³டி³நாமு கா³நி பூர்ணசசிவத³ந ஸ்ரீ (ரா)

3. நீ ஜபமே தி₃க்கு கா³நி நீரஜலோசந மாகு
வாஜி கரி த₄நமுலு வரமு கா³து³ரா
ஜாஜி ஸுமத₄ர பூ₄ஜாமநோஹர ஸ்ரீத்யாக³-
ராஜநுத ப₄ஹுவிதேஜ நா தப்புலெஞ்சக (ரா)

இராம! நீ என்னை ஆட்கொள்வாயோ, கொள்ளமாட்டாயோ! முன்பு நாங்கள் நோற்ற நோன்புகளின் பயன் எத்தகையதோ? மனத்தில் உன் மீது பக்தி மிகுந்து உன்னையே நம்பினேமென்று கூறித் திரிந்தோமே தவிர அதை உண்மையென்று கருதி (நீ ஆட்கொள்வாயோ கொள்ளாயோ?)

சம்சாரக் கடலில் தோன்றும் இன்னல்கள் எங்களை அணுகாமலிருப்பதும், விவேகமற்ற மாந்தரின் நட்பை நாங்கள் விரும்பாமலிருப்பதும், இவ்வுலகில் வேதம், ஆமகம் முதலியவற்றின் மர்மங்களைத் தெரிந்து நாங்கள் உன்னை நம்பியிருப்பதும் போதுமென்றெண்ணி (நீ ஆட்கொள்வாயோ? கொள்ளாயோ?) கார்முகில் வண்ணனே!

நியமம் தவறாமல் வாழும் பக்தர்களுக்கு நிலையான சுகம் உண்டென்று உரைக்கும் பெரியோர்களை நம்பி, அழகு ததும்பும் உன் வடிவத்தை ஆனந்தத்துடன் தியானித்துக் கொண்டு அனவரதமும் உன்னைப் போற்றினேம். பூர்ணசந்திர வதனனே!

உன் சபமே எங்களுக்குக் கதியாதலால், தாமரைக் கண்ணனே! குதிரை, யானை, செல்வம் முதலியன பெரிதல்ல. சிதையின் உள்ளங் கவர்வோனே! சாதி மலரையணிந்தவனே! பல சூரியர்களின் ஒளி பெற்றவனே! என் பிழைகளைப் பொருட் படுத்தாமல் (என்னை ஆட்கொள்வாயோ, கொள்ளாயோ?)

## 443

ஸாரங்க^ᵛ (மே. 65) தே^ᵛசாதி^ᵛ

ப. எந்த பா^ᵛக்யமு மாபால க^ᵛல்கி^ᵛதிவி
எவரீடு^ᵛ முஜ்ஜக^ᵛமுலலோ த^ᵛந (கெந்)

அ. செந்த ஜேரி ஸௌஜந்யுடை^ᵛ பலிகி
சிந்த பா^ᵛக^ᵛ தொலகி^ᵛஞ்சி ப்^ᵛரோசிதிவி (எந்)

ச. முந்நு நீ ஸமீபமுந வெலயு ஸந்-
முநுல நெல்ல நணிமாதி^ᵛ லீலலசே
தி^ᵛந்நகா^ᵛநு பாலந ஜேஸிநடு
நந்நு கா^ᵛசிதிவி த்யாக^ᵛராஜநுத (எந்)

இது என்ன பேரதிர்ஷ்டம்? நீ எங்களுக்குப் புதலாக அமைந்துள்ளாய். மூவுலகிலும் எங்களுக்கு நிகர் யார் உளர்? என்னருகில் வந்து, இன்முகத்துடன் பேசி என் கவலையைத் தீர்த்துக் காத்தருளினாய்.

முன்பு உன் அருகையடைந்த முனிவர்களை அணிமா முதலிய அஷ்ட சித்திகளால் நீ பாலித்தது போல் என்னையும் காப்பாற்றினாய். (ஈதென்ன பாக்கியம்?)

444

ஸாரங்க$^{v}$ ஆதி$^{v}$

ப. ஏமி தோ$^{v}$வ பல்குமா இகநுநே
நெந்து$^{v}$ போது$^{v}$ ஸ்ரீராம (ஏ)

அ. ராம தா$^{v}$ஸுவலெ நைதே ஸீதா
பா$^{v}$ம மந்த$^{v}$லிஞ்சுநு த$^{v}$ந (கே)

ச. த$^{v}$ட்டி க$^{v}$ட்டி கரமுந சரசாபமு
ப$^{v}$ட்டி மூலப$^{v}$லமுநு ராவணு தல
கொ$^{v}$ட்டி நில்வ நாவேள த்ரிமூர்த்துலு
கோரி நுதிம்பகா$^{v}$
நட்டிவாரி கெது$^{v}$ரு ப$^{v}$ல்கி ராஜுகு
பட்டியநக$^{v}$ நீகு நாது$^{v}$பை த$^{v}$ய
பு$^{v}$ட்ட காரணம் பே$^{v}$மி தெ$^{v}$லிஸெ வர
போ$^{v}$கி$^{v}$சயந த்யாக$^{v}$ராஜநுத தந (கே)

எனக்கு வழி என்னவென்பதைக் கூறுவாய் ஸ்ரீராம! இப்பொழுது நான் எங்கு போவேன்? நான் இராமதாசரைப் போன்ற பக்தனுக இருந்தால் ஒரு வேளை சீதாதேவி எனக்காகச் சிபாரிசு செய்திருப்பாள்.

நீ கச்சை கட்டிப் போர்க்கோலம் பூண்டு கரத்தில் வில்லை யும் அம்புகளையும் பிடித்து மூலபத்தையும் இராவணனின் தலைகளையும் நிர்மூலமாக்கி நின்றபொழுது மும்மூர்த்திகளும் உன்னையடைந்து துதிக்க, அவர்களுக்கும் எதிர்மொழி பேசும் (வீரத்தில் மிஞ்சும்) உன்னை நான் இராஜகுமாரன் என்றழைத் தால் என்மீது உனது தயை எவ்வாறு பிறக்கும்? உன் உள்ளத்தை நான் அறிவேன். பாம்பணைத் துயில்பவனே! (எனக்கு வேறு வழி என்ன கூறுவாய்).

445

ஸாரங்க$^{v}$ ஆதி$^{v}$

ப. *கருண ஜூட$^{v}$வய்ய மாயய்ய
காவேடி ரங்க$^{v}$ய்ய (க)

அ. பரமபுருஷ விநு மாபாலி [1]பெநுத$^{v}$நமா
வரத$^{v}$ நலுகு$^{v}$ரிலோ வரமொஸகி$^{v}$ கரமிடி$^{v}$ (க)

* ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தைக் குறித்து ஸ்வாமி இயற்றியுள்ள ஐந்து கிருதிகளுள் ஒன்று.

1 பெந்நிதா$^{v}$நமா

ச. சேரடே^v^ஸி கநுலசே ஜெலங் கு^v^ப^v^ய நாச்-
சாருலதோநு மரி ஸத்^v^ப^v^க்துலதோ யாள்-
வாருலதோ நீவு வர நைவேத்^v^யமுல
நாரகி^v^ஞ்சு வேளல ஹரி த்யாக^v^ராஜுநிபை (க)

கருணை கூர்ந்து என்னைப் பார், என்னய்யனே! காவேரி ரங்கனே! பரமபுருஷனே! கேள். என்னைக் காக்கும் பெருஞ் செல்வமே! வரந்தருபவனே! நால்வருக்கிடையே வரமளித்துக் கைப்பிடித்துக் (கருணை கூர்ந்து என்னை நோக்கு).

மலர்ந்த கண்களையுடைய (இரு) நாச்சியார்களுடனும் (ஸ்ரீதேவி, பூதேவி), சிறந்த பக்தர்களான ஆழ்வார்களுடனும் நீ பரிசுத்தமான நைவேத்தியங்களை அமுது செய்யும்பொழுது இத்தியாகராஜன்மீது (கருணை கூர்ந்து நோக்கு).

## 446

ஸாரங்க^v^ ஜ,ம்ப

ப. நீவாட^v^ நே கா^v^ந நிகி,லலோகநிதா^v^ந
நிமிஷ மோர்வக^v^ கலநா (நீ)

அ. தே^v^வாதி^v^தே^v^வ பூ^v^தே^v^வவரபக்ஷ ரா-
ஜீவாக்ஷ ஸாது^v^ஜநஜீவந ஸநாதந (நீ)

ச. ஸத்யம்பு^v^ நித்யம்பு^v^ ஸமரமுந ஸௌர்யம்பு^v^
அத்யந்த ரூபம்பு^v^ அமிதப^v^லமு
நித்யோ த்ஸவம்பு^v^க^v^ல நீகு நிஜதா^v^ஸுட^v^நி
தத்,யம்பு^v^ ப^v^ல்கு ஸ்ரீத்யாக^v^ராஜார்ச்சித (நீ)

உலகங்கள் அனைத்திற்கும் ஆதிகாரணமானவனே! நான் உன்னைச் சேர்ந்தவன் அல்லவா? (உன்னைப் பிரிந்து) ஒரு நிமிடமாவது என்னால் தாளமுடியுமா? தேவாதிதேவனே! அந்தணரின் சிறப்புற்ற நண்பனே? தாமரைக் கண்ணனே! சாதுக்களின் ஆதாரமே! சாசுவதமானவனே!

சத்தியமும், அழியாமையும், போர்க்களத்தில் வீரமும், திவ்விய மோகன உருவமும், அளவற்ற வலிமையும, நித்திய உற்சவங்களுமுடைய உனக்கு மெய்யடிவனென்ற உண்மையை உரைக்கும் இத்தியாகராஜனல் அர்ச்சனை செய்யப்படுபவனே!

## 447

யமுநாகல்யாணி (மே. 65) ஆதி^v^

ப. ஹரி தா^v^ஸுலு வெட^v^லே முச்சட
ஆநந்த^v^மாயெ த^v^யாளோ (ஹ)

அ. ஹரி கோவிந்த^ᵛ நரஹரி ராம க்ருஷ்ணயநி
வருஸக^ᵛ நாமமு கருணதோ ஜேயுசு (ஹ)

ச. ஸங்க^ᵛதிகா^ᵛநு ம்ருத^ᵛங்க^ᵛ கோ^ᵛ,ஷமுலசே
பொ^ᵛங்கு^ᵛசு வீது,ல, கேகு^ᵛசு மெறயுசு (ஹ)

2. சக்கநி ஹரிசே ஜிக்கிதிமநி மதி^ᵛ
ஜொக்குசு நாமமே தி^ᵛக்கநி பொக^ᵛடு^ᵛசு (ஹ)

3. தி^ᵛட்டமுகா^ᵛ நடு^ᵛ சட்டுதோ நடு^ᵛகு^ᵛலு
பெ^ᵛட்டுசு தாளமு ப^ᵛட்டி க^ᵛல்^ᵛ க^ᵛல்லநக^ᵛ (ஹ)

4. ஜ்ஞாநமுதோ ராம த்^ᵛயாநமுதோ மஞ்சி
கா^ᵛநமுதோ மேநு தா^ᵛந மொஸங்கு^ᵛசு (ஹ)

5. ராஜராஜுநிபை ஜாஜுலு சல்லுசு
ராஜில்லுசு த்யாக^ᵛராஜுநிதோ கூ^ᵛடி^ᵛ (ஹ)

தயாளனே! தியாகராஜனுடன் சேர்ந்து ஹரிதாசர்கள் (வீதியில்) எழுந்தருளும் காட்சி பேரானந்தம் அளிக்கிறது. ''ஹரி! கோவிந்த! நரஹரி! இராமகிருஷ்ண!'' என்று வரிசையாகத் திருநாமங்களை மனங்கரைந்து சங்கீர்த்தனம் செய்து கொண்டு, ஒன்று கூடி மிருதங்கத்தின் பேரொலியுடனும், பொங்கும் மகிழ்ச்சியுடனும் வீதிகளில் வலம் வந்து விளங்கும் (ஹரிதாசர்களின் காட்சி ஆனந்தமளிக்கிறது).

பகவானுடன் நன்கு ஒன்றுகூடினேமென்று மதி மயங்கி, அவன் நாமமே திக்கென்று புகழ்ந்து, திட்டமாக உத்தரியத்தை இடையில் அணிந்து, காலடிகளை மெல்ல வைத்து தாளத்தை ஏந்தி ''கல் கல்''லென்று ஒலிக்கச் செய்து, ஞானத்துடனும், இராம தியானத்துடனும். இனிய சங்கீதத்துடனும் சரீரத்தை பகவானுக்கு அர்ப்பணம் செய்து மன்னர் மன்னனை அவன்மீது சாதி மலர்களைப் பொழிந்து விளங்கும் (ஹரிதாசர்கள் பவனி வரும் காட்சி பேரானந்தம் தருகிறது).

## 448

ஹமீருகல்யாணி (மே. 65) தே^ᵛசாதி^ᵛ

ப. நீ தா^ᵛஸாநுதா^ᵛஸுடௌ^ᵛநநி பேரே ஏமி ப,லமு (நீ)

அ. பேத^ᵛ ஸாது^ᵛ,லந்து^ᵛ நீகுப்ரேமலேக போயெ (நீ)

ச. 1. ஸரிவாரிலோ நந்நு சௌக ஜேஸிதிவி கா^ᵛநி
கருணிம்பலேக நீது^ᵛ கர்மமநெத^ᵛவு கா^ᵛநி (நீ)

2. ரோஸமு லேதா^ᵛயெ ருசிர வாக்குலு போயே
தா^ᵛஸுல ப்ரோசிதிவட த்யாக^ᵛராஜிலலோ (நீ)

இவ்வுலகில் தியாகராஜன் உனது தாசானுதாசன் என்பது பெயரளவில்தான் போலும்! அதனுல் என்ன பயன்? எளியவர்களான சாதுக்களின் மீது உனக்கு அன்பில்லாமற் போய் விட்டது. எனக்குச் சமானமானவர்களிடையே என்னை இழிவு செய்தாய். கருணை காட்டாமல் ''இது உன் வினைப்பயன்'' என்ருய். உனக்கு ரோஷம் சிறிதும் இல்லாமற் போய் விட்டது. உன் அழகிய மொழிகள் மறைந்துவிட்டன. (ஆயினும்) நீ பக்தர்களைக் காப்பாற்றுபவன் என்ற பெயரை எப்படியோ படைத்திருக்கிருயே!

## 449

ஹமீருகல்யாணி — தே³சாதி³

ப. மாநமு லேதா³ தநவாட³நி யபி⁴,
மாநமு லேதா³ (மா)

அ. காநமுரா நீவலெ நிர்மோஹிநி
கா³நருசி தெலியு குசலவஜநக (மா)

ச. நீ ஸமுகா₂ந ரவிதநயுடு³ நிந்து
பா³ஸலு ப³ல்கக³ ரோஸமுதோ ஸிம்-
ஹாஸநாதி⁴பதி ஜேஸிந நீகு
தாஸுடை³ந த்யாக³ராஜ கரார்சித (மா)

உனக்கு மானம் இல்லையா? அல்லது உன்னைச் சேர்ந்தவர்களின் மீது அபிமானமாவது இல்லையா? இசையின் சுவையறியும் குச, லவர்களின் தந்தையே! உன்னைப்போல் தாட்சண்ணியமற்றவனை நாங்கள் எங்குமே கண்டதில்லை!

உனது சமுகத்தில் சூரிய குமாரனுன சுக்கிரீவன் (உன் பிரதாபத்தைப் புகழ்ந்து) போற்றவும், ரோஷத்துடன் நீ அவனை (கிஷ்கிந்தை இராச்சியத்தின்) சிங்காதனம் ஏறச் செய்யவில்லையா? உன்னை சதா அருச்சனை செய்யும் தியாகராஜன் மீது உனக்கு அபிமானம் இல்லையா?

முதற்பாகம் முற்றிற்று



ஸ்ரீ

# தியாகராஜஸ்வாமி கீர்த்தனைகள்

---

## இரண்டாம் பாகம்

---

### 450

தோடிˇ

ரூபகம்

ப. [1]எவரு தெலியகˇ பொˇய்யேரு நீ மஹிமல (நெ)

அ. புˇ,விலோ வரமௌ நாகˇபுரமுந கˇநுகொˇண்டி
லவலேசமைநநு நீலாயதாக்ஷி [2]ஸாமத்ˇ,யமே (எ)

ச. 1. கருகு பˇங்காˇரு வல்வ கˇட்டி ஸொகˇஸு மீற
கரமுந ஜிலுகநு பˇட்டி நிர்ஜர தரு
விருலநு கொப்புநிண்டˇ ஜுட்டி அதிˇயுகாˇக
ஹருநி யட்டிட்டாடிˇஞ்சிநட்டி நீ லீலலநு (எ)

2. ஹரி ப்ˇரஹ்மாதுˇலு நிநு கொˇல்வ ஆவேளநு
விரிபோˇணு லந்தˇமுதோ நில்வ அமரவர
தருணுலு நாட்யமுசே கொˇல்வ அந்நியு ஜூசி
கருணாரஸமு ஜில்க பிˇல்வ அட்டி நீதˇய (எ)

3, நாகˇபூˇ,ஷணுநிகி ராணிவைந நிந்நு வி-
நா கˇதி எவரு நீலவேணி பˇ,க்துல
பாˇ,கதேˇ,யமைந சர்வாணி ஸந்ததமுநு
த்யாகˇராஜு பˇல்கிந வாணி ப்ˇரியமைந நிந் (நெ)

---

1. நாகப்பட்டினத்தில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நீலாயதாட்சி அம்மனைக் குறித்த கீர்த்தனம். 2, ஸாமர்த்,யமு.

உன் மகிமைகளைச் சிறிதேனும் யார் அறிவார்? இப்புவியில் சீர்மிகுந்த நாகப்பட்டினத்தில் (நான் அவற்றைக்) கண்டு கொண்டேன். நிலாயதாட்சி அம்மையே! நல்லிடையாளே!

பசும்பொன் ஆடைகளையணிந்து, எழில் ததும்பக் கையில் கிளியை ஏந்தி, தேவ பாரிஜாத மரத்தின் மலர்களைக் குழல் நிறைய அணிந்து, மேலும் சிவபெருமானை அங்குமிங்கும் ஆட்டி வைத்த (உன் பெருமையை யார் அறிவார்?)

திருமால், நான்முகன் முதலியோர் உன்னை வணங்க, அச்சமயம் மலரணிந்த மாதர் குழாம் அழகுடன் நிற்க, வானுலகக் கணிகையர் நடம்புரிந்து உன்னைச் சேவிக்க, அனைத்தையும் நீ பார்த்துக் கருணை ரசம் தெளித்தது போல் அழைக்கும் தயையை (யார் அறிவார்?)

சர்ப்பத்தையணிந்த சிவபெருமானின் பத்தினியான உன்னையன்றி வேறு யார் கதி? கருங்குழலாளே! பக்தர்களின் பேரதிர்ஷ்டம் போன்ற பார்வதி தேவியே! தியாகராஜனின் வாக்கில் சதா அன்பு கொண்ட உன் (மகிமையை யார் அறிவார்?)

## 451

தோடி<sup>v</sup> ஆதி<sup>v</sup>

ப. [1]கருண ஜூட<sup>v</sup>வம்ம கமலவைரி
கலாத<sup>v</sup>,ருநி கொம்ம (க)

அ. த<sup>v</sup>,ரநு ஸரியு தொ<sup>v</sup>ரகநி பஞ்சநு-
த<sup>v</sup> நக<sup>v</sup>ர நாயிக த<sup>v</sup>,ர்மஸம்வர்த<sup>v</sup>,நி (க)

ச. 1. அநேக ஜக<sup>v</sup>தா<sup>v</sup>தா<sup>v</sup>,ரிவி நீ-
வநே மதி<sup>v</sup>நி நெறநம்மிதிகா<sup>v</sup> நே
மநே வாட<sup>v</sup>நோ யநி நீமதி<sup>v</sup> நெஞ்-
சநே வத்<sup>v</sup>த<sup>v</sup>நுசு நாதநி வேடு<sup>v</sup>-
து<sup>v</sup>நே நாது<sup>v</sup>பை விநேசாடி<sup>v</sup> சா-
லுநே நீது<sup>v</sup> த<sup>v</sup>யகு நே பாத்ருடௌ<sup>v</sup>-
து<sup>v</sup>நே குவலயநயநே ஸு<sup>v</sup>வஸந ஜ-
க<sup>v</sup>,நே விது<sup>v</sup>,நிப<sup>v</sup>,வத<sup>v</sup>நே ஸந்ததமு (க)

2. மதா<sup>v</sup>ந தெ<sup>v</sup>லியக ஜேஸிந கர்ம-
விதா<sup>v</sup>ரி நீவநி நம்மிதிநே நீ

---

1. திருவையாறு தர்மஸம்வர்த்தனி அம்மனைக் குறித்த கீர்த்தனம்.

பதார^v^விந்த^v^ யுக^v^ள ப^v^க்திம்ம-
நி தா^v^நமடி^v^கி^v^திநே தோசதே^v^மி
உதா^v^ரி நீ த^v^யநு தா^v^சராது^v^ த^v^-
ரிதா^v^பு லேகநு ஸதா^v^ மொறலிட^v^ வி-
நதா^v^ செவுலு எவருதா^v^ ப்^v^ரோதுரிக
ஸதா^v^சிவஹிதே முதா^v^ந ஸததமு (ஸ)

3. பராசக்தி நாயொக சித்தமு தா-
மராகு நீரு விதமு தல்லடி^v^ல்-
லராது^v^ அந்து^v^ந கேமி ப^v^லமு சம்-
ப^v^ராரி வைரிகி யர்த^v^சரீரி
புராணபுருஷு^v^ட^v^கு^v^ ராமுநிகி யா
புராரிகிநி நீகு ராஜத^v^ரி மச்-
சராந வேரெஞ்சராது^v^ அநு த்யா-
க^v^ராஜு^v^நிக விட^v^வராது^v^ ஸததமு (ஸ)

கருணையுடன் என்னைக் கண் பார் அன்னையே! சந்திர கலை சூடிய சிவ பெருமானின் பத்தினியே! இவ்வுலகில் ஈடில்லாத பஞ்சநத புரத்தின் (திருவையாற்றின்) அதிதேவதையே! தர்ம ஸம்வர்த்தனி! நீ அநேக புவனங்களுக்கு ஆதாரமானவள் என்று என் மனத்தில் நான் நிச்சயமாக நம்பவில்லையா?

''இவன் எப்படிப்பட்டவனோ?'' என்று நீ எண்ணக் கூடா தென்று நான் அவனை (இராமனை) வேண்டுகின்றேன். என்னைப் பற்றிக் கூறப்படும் கோள்கள் போதாதா? உன் தயைக்கு நான் மிகவும் பாத்திரமானவன். கருங்குவளை விழியாளே! நல்லாடை யணிந்த இடையுடையவளே! சந்திரனை யொத்த முகத்தவளே!

மதத்தினால் அறியாமற் செய்த கருமங்களைப் போக்கடிப்ப வள் நீயென்று நம்பினேன். உன்னிரு பாதத் தாமரைகளின் பக்தியை எனக்களிப்பாயென்று தானம் கேட்டேன். இது உனக்குத் தோன்றவில்லையா? உதார குணமுடையவளே! உன் கருணையை நீ ஒளிக்கலாகாது. இடைவிடாமல் நான் முறையிட, அது உன் செவிகளில் விழவில்லையா? இவ்வுலகில் என்னை வேறு யார் காப்பாற்றுவார்கள்? சிவபிரானுக்கு இதந்தருபவளே! மகிழ்வுடன் சதா (கருணை புரிவாயம்மா.)

பராசக்தி! என் மனம் தாமரையிலைத் தண்ணீர் போல் தத்தளிக்கக் கூடாது. அதனால் யாருக்கென்ன பயன்? சிவனுக் குப் பாதி சரீரமாக அமைந்தவளே! பிறை சூடியவளே! (மாந்தர்) பொறுமை காரணமாக (ஏதோ கூறுகின்றனர்.) பரம புருடனான இராமனுக்கும், புரமெரித்த சிவனுக்கும்,

உனக்கும் வித்தியாசம் பாராட்டலாகாதென்று பறைசாற்றும் இத்தியாகராஜனை நீ என்றும் கைவிடலாகாது.

## 452

தோடிᵛ ஆதிᵛ

ப. *கᵛதி நீவனி நே கோᵛரி வச்-
சிதி தல்லி பராகா (கᵛ)

அ. மதிநி யெந்தோ வெதᵛகி ஸம்-
மதிநி ஸ்ரீ ப்ரவ்ருத்ᵛதᵛ ஸ்ரீ-
மதி நீ பதᵛயுகᵛமுலநே நெற நம்-
மிதிநி ப்ᵛரோவுமிக நிஜதாᵛஸுலகு (கᵛ)

ச. 1. பரமௌ ஸ்ரீ தபஸ்தீர்த, ந-
கᵛரமந்துᵛ நெலகொந்ந பரமாநந்தீᵛ பொகᵛடᵛ
த்ᵛரமா ப்ᵛரஹ்மகைநு
தᵛரலோ நீ ஸரிகாᵛந தல்லி நீ வாடᵛநுகாᵛநா
பரிதாபமுலெல்ல தொᵛலகᵛ யாரக
*புரநாதுᵛல ஜதகூᵛடிᵛ யபீᵛஷ்ட
வரமுலிச்சு தைᵛவமு நீவநு மநு
ஸ்திᵛரமதுலை காᵛசிநாரு கᵛநுக (கᵛ)

2. ஈ புரமுந பாᵛகுᵛ காபுரமு ஸேயுவா-
ரே புண்யமு ஜேஸிரோ
ஸ்ரீபுரநிலயே ப்ராபு கோரியுந்நாநு
அம்பᵛ பருலநேநு வேடᵛகᵛலேநு
ஜூபு ஜாகுᵛ ஸேயக நீவே தᵛரி
தாᵛபு காᵛநி அந்யுலெவரு நாயெடᵛ
ரேபு மாபநக நீ மஹிமலு பᵛலு
கோᵛபுரம்புᵛ காᵛநி ஸுஜநி (கᵛ)

---

* ஸ்ரீ தபஸ்தீர்த்தபுரமெனப்படும் லால்குடி க்ஷேத்திரத்தைக் குறித்து ஸ்வாமி இயற்றியுள்ள ஐந்து கிருதிகளுள் ஒன்று.

* தபஸ்தீர்த்தபுரம் அல்லது திருத்தவத்துறையென்று அழைக்கப் பெறும் லால்குடி க்ஷேத்திரத்திற்கு ஸ்ரீபுரம், யாரகபுரம் என்ற பெயர்களும் உண்டென்று தெரிய வருகிறது.

3. ராகா சசிவத³னே ஸர்வ
லோகநாயகி விநு மாய நே வேல்பு-
ல காதி³யௌ நீ கடாக்ஷமுசேத
யேக சித்தமை மநந்து³கு அம்ப³
இங்க நிர்த³ய எந்து³கு
நீ கனி த³ந தா³ந்யமுல கொறகு யீ
லோகுலநே மாடி மா-
டிகடு³கு³ட சௌககா³நி நீ கீர்த்-
திகி நெந்தா³க விநவிந்து த்யாக³ராஜுநி (க³)

உண்மையான பக்தர்களுக்குக் கதி நீயேயென்று (நம்பி) உன்னை வேண்டி வந்தடைந்தேன் தாயே! என்னிடம் அலட்சியமா? என்னுள்ளத்தினுள் எவ்வளவோ தேடிச் சம்மதத்துடன் உன் பாதாரவிந்தங்களை நான் மிகவும் நம்பினேன். [1]ஸ்ரீ பிரவிருத்த ஸ்ரீமதி! என்னை இன்று காப்பாயாக.

புனிதமான லால்குடி நகரத்தில் கோயில் கொண்டெழுந்தருளியிருந்து (அனைவருக்கும்) பரமானந்தத்தையளிப்பவளே! உன் பெருமையை பிரமனாலும் புகழ முடியுமா? இவ்வுலகில் உனக்கு நிகர் எவருமிலர். அன்னையே! நான் உன்னைச் சேர்ந்தவன் அல்லவா? (தங்கள்) துயர்களை ஒழிக்கும் பொருட்டு திக்பாலர்கள் ஒன்றுகூடி விரும்பிய வரங்களை யளிக்கும் தெய்வம் நீயே யென்று (துணிந்து) நிச்சயமான மனத்துடன் காத்திருக்கின்றனர். ஆதலால் (உன்னை வந்தடைந்தேன்).

இவ்வூரில் நன்கு வசிப்பவர்கள் என்ன புண்ணியம் செய்தார்களோ? ஸ்ரீபுரத்தில் வசிப்பவயே! உன்னைத் தஞ்சமடைந்தேன். தாயே! பிறரை நான் ஒன்றும் வேண்டேன். உன் கடைக்கண் பார்வையளிக்கத் தாமதம் செய்யாதே. நீயே எனக்குப் புகலே தவிர வேறு யாருளர்! என்னிடம் ''நாளை, நாளன்று (பார்ப்போம்)'' என்று கூறாதே. உன் மகிமை கோபுரத்தைப்போல் உயர்ந்தது. சிறப்புற்றவளே!

பௌர்ணமி தினத்துச் சந்திரனையொத்த முகத்தவளே! உலகமனைத்திற்கும் நாயகியே! இதைக் கேள். மகாமாயே! தெய்வங்களனைத்திற்கும் நீயே ஆதி தெய்வம். உன் கடாட்சத்தினாலேயே (நான்) ஒருமனப்பட்டிருக்கையில் தாயே! இன்னமும் தயவு வராததேன்? உன்னைப் பார்த்து நான் திரும்பத் திரும்ப செல்வம், தானியம் இவற்றிற்காகக் கேட்பது கௌரவமில்லையாதலின், உன் புகழளவிற்கு நான் எவ்வளவுதான் வேண்டிக் கொள்வேன்?

1. லால்குடி க்ஷேத்திரத்தின் அம்பிகையின் திருநாமம் ஈசுவரனின் திருநாமம் ஸப்தரிஷீசுவரர்.

## 453

தோடிˇ | ஆதிˇ

ப. நீவண்டி தைˇவமுநு ஷடாˇநந நே
நெந்துˇ காˇநரா (நீ)

அ. பாˇ,விஞ்சி சூடˇ தˇரமுகாˇநி
ப்ˇரஹ்மபுரிநிலய கிˇரிஜா தநய (நீ)

ச. 1. ஸரிபாˇலுரதோ கைலாஸ
கிˇரிநி சுபாˇ,க்ருதிதோ நாடˇகˇநு
வெறபுலேக ப்ரணவார்த,மு தாநநு
விதிˇ,நி கோபகிஞ்சி
ஸரகுˇந நவ வீருலந்தொˇக கிங்-
கருநி கˇநி மும்மாரு ஸெலவிச்சி
ஸூரலு முரபுராருலு விநி மெச்சகˇ
வருஸகாˇநு ஸ்ருஷ்டி சக்தி நொஸகிˇந (நீ)

2. ஹரிஹராதுˇலகு திˇக்பாலுல
கல சசி ஸூர்யுலகு
மறி வித்ˇயாதˇ,ருலகு ப்ˇரஹ்மாண்டˇமுலநு
வெலஸே வரவீராதுˇலகு
தˇரமுகாˇக நிந்நு ஜதகூˇடˇக
சரணநகாˇ விநி ஸைரிஞ்சக
பரம த்ˇரோஹியைந சூரபத்ˇமா-
ஸூருநி கீர்த்திகாˇநு கˇர்வமணசிந (நீ)

3. மாரகோடுலந்துˇ கˇல்கிˇந ச்ருங்காˇர
மெல்ல இந்துˇமுக, நீ கொந-
கோˇருநு போˇலுநெ யடுவண்டி சுபா-ˇ
காரமு ஸந்ததமு
ஸாரெகு நாமதிˇநி நில்பிந கு-
மார தˇயாபர நீரஜலோசந
தாரகாதிˇ,ப கலாதˇ,ருடˇகுˇ ஸ்ரீ-
த்யாகˇராஜ ஸந்நுதாச்ரித ஹித (நீ)

ஆறுமுகனே! உன்னை யொத்த தெய்வத்தை நான் எங்கும் காணேன். (உன் மகிமையை) மனத்தினுல் கற்பனை செய்து பார்க்கத்தான் முடியும். 1 பிரம்மபுரத்தில் வசிப்பவனே! மலைமகள் தனயனே!

சம வயதுப் பிள்ளைகளுடன் நீ கைலையங்கிரியில் உன் அழகிய வடிவுடன் விளையாடும்பொழுது அச்சம் சிறிதுமின்றி ''பிரணவத்தின் பொருள் நானே''யென்று கூறிய நான்முகனை நீ கோபித்து, உடனே உனது ஒன்பது வீரர்களுள் ஒரு வேலைக் காரனை நோக்கி மும்முறை உத்தரவிட்டு, தேவர்களும், திருமாலும், சிவனும் மெச்சும்படி வரிசையாக சிருஷ்டி செய்யும் சக்தியை யளித்த (உனக்கு நிகரான தெய்வம் எங்கும் கண்டிலேன்).

அஷ்ட திக்பாலகர்களும், தொன்மை பொருந்திய சந்திர சூரியர்களும், வித்தியாதரர்களும், இந்த பிரம்மாண்டத்தில் விளங்கும் சுத்த வீரர்களும் ஒன்றும் செய்ய முடியாமல் ஒன்று கூடி உன்னைச் சரண் அடைய அதைக்கேட்டுப் பொறுக்காமல் பரம துரோகியாகிய சூர பத்மாசுரனின் கர்வத்தை யடக்கிப் பெரும் புகழ்பெற்ற உன்னைப் போன்ற (தெய்வத்தை எங்கும் காணேன்).

மதிவதனனே! கோடி மன்மதரிடையேயுள்ள எழில் அனைத்தும் உன் நகத்தின் நுனியை யொக்கும். அப்படிப்பட்ட அழகுடைய உன் வடிவத்தை எப்பொழுதும் நிலையாக என் சித்தமிசை நிறுத்திய குமரப் பெருமானே! தயாபர! தாமரைக் கண்ணனே! சந்திர கலையணிந்த சிவபெருமானுலேயே வணங்கப் பட்டவனே! அண்டினவர்க்கு நலம் புரிபவனே!

## 454

**தே^ʋ^சிய தோடி^ʋ^** சாபு

ப. இந்நாள்ளவலெ விந்தஸேயகே நீவாட^ʋ^
நிபுடை^ʋ^தி த^ʋ^,ர்மாம்பி^ʋ^கே (இங்)

அ. அந்யுல நெரநம்முடவல்ல ப,லமு லே-
த^ʋ^ம்ம ஓ த^ʋ^,ர்மாம்பி^ʋ^கே ஓ ஜநநி (இங்)

ச. 1. எந்நராநி ஜநநமுலெத்த நாதரமா
வத்^ʋ^த^ʋ^நராதா^ʋ^ த^ʋ^,ர்மாம்பி^ʋ^கே
மநஸுந விஷயாது^ʋ^லண்டநீக நந்நு
மந்நிஞ்சு த^ʋ^,ர்மாம்பி^ʋ^கே ஓ ஜநநி (இங்)

1: சீர்காழிக்குப் பிரமபுரம் என்ற பெயர் வழங்குகிறது; அங்கு கோயில் கொண்டிருக்கும் முருகக் கடவுளைக் குறித்து அருணகிரிநாதர் பல திருப்புகழ்களைப் பாடியிருக்கிறுர்.

2. காமாதி^v^குணமுல சேத கா^v^ஸி லேக
கருணிஞ்சு த^v^ர்மாம்பி^v^கே
நீமாயலசேத த^v^கி^v^லிம்பகே ஓ
நிருபம த^v^ர்மாம்பி^v^கே ஓ ஜநநி (இங்)

3. கலுவரிஞ்சிந நந்நு ஜூசி நீ மநஸேல
கருக^v^தே^v^ த^v^ர்மாம்பி^v^கே
அலருசு வச்சு நர்ப^v^குநி தல்லிரீதி
யாது^v^கோ த^v^ர்மாம்பி^v^கே (இங்)

4. மலயஜக^v^ந்தி^v^ ஸந்த^v^டி^v^யநி மநஸுந
மறவகே த^v^ர்மாம்பி^v^கே ஓ ஜநநி
கி^v^லுகு ஸொம்முலதோ நு சிசுவுகு பா^v^லு தா-
கி^v^ஞ்சிந த^v^ர்மாம்பி^v^கே ஓ ஜநநி (இத்)

5. கலகலமநி பால வெலஸி நீ முக,முநு
கநுபிம்பு த^v^ர்மாம்பி^v^கே
லலித கு^v^ணமு க^v^ல்கு^v^ லலித வித்^v^யா வி-
லாஸிநி த^v^ர்மாம்பி^v^கே ஓ ஜநநி (இங்)

6. ஆடலகை ப^v^லிகிநாட^v^நி யெஞ்ச
காம்பி^v^கே த^v^ர்மாம்பி^v^கே
நாடி மொத^v^லுகொநி நம்மிநவாட^v^நு
நளிநாக்ஷி த^v^ர்மாம்பி^v^கே ஓ ஜநநி (இங்)

7. பாத^v^முலகு நேநு ப^v^லுமாரு ம்ரொக்கிதி
பாவநி த^v^ர்மாம்பி^v^கே
பேத^v^ ஸாத^v^ல பாக்^v^யமு நீவநுசு
யெஞ்சிதி த^v^ர்மாம்பி^v^கே ஓ ஜநநி (இங்)

8. ராஜீவப^v^வுநகு பொ^v^க^v^ட^v^ தரமா நி-
ரஞ்ஜநி த^v^ர்மாம்பி^v^கே
ராஜசேக,ரி த்யாக^v^ராஜுநி ஸததமு
ரக்ஷிஞ்சு த^v^ர்மாம்பி^v^கே ஓ ஜநநி (இங்)

இத்தனை காலமாக நீ செய்ததுபோல் என்னை இனியும் வேருக நினைக்காதே. தர்மாம்பிகே! நான் இப்பொழுது முதல்

உன்னைச் சேர்ந்தவன் ஆனேன். பிறரை நம்புவதால் ஒரு பயனும் இல்லை, தாயே!

எண்ணற்ற சன்மங்கள் எடுக்க என்னாலாகுமா? ''வேண்டாம்'' என்று நீ கூறலாகாதா? என் மனம் சிற்றின்பங்களைத் தேடிச் செல்லாதிருக்குமாறு அருள்புரி.

காமம் முதலிய தீய குணங்களால் நான் வருந்தாமலிருக்க வரமருள். உன் மாயையால் என்னைப் பிணைத்துவிடாதே. ஒப்பற்ற தர்மாம்பிகையே!

மனங்கலங்கும் என்னைக் கண்டு உன் மனம் உருகாததேன், தாயே? ஆசையுடன் வரும் குழந்தையை அன்னை பரிவுடன் ஏற்றுக்கொள்வதுபோல் என்னை ஆட்கொள்வாய்.

சந்தனத்தின் நறுமணம் கொண்டவளே! இது ஏதோ இரைச்சலென்று என்னை மறந்துவிடாதே. 1 கிலுகிலென்று ஒலிக்கும் நகைகளுடன் (வந்து) குழந்தைக்குப் பால் அருத்திய தர்மாம்பிகையே!

கலகலவென்று எங்களிடையே வந்து உனது திருமுகத்தைக் காட்டலாகாதா தர்மாம்பிகையே! நயமான குணங்களுடன் லலித கலைகளில் திளைக்கும் அன்னையே!

ஏதோ விளையாட்டாக நான் பேசினேன் என்று எண்ணாதே தாயே! நான் வெகு காலமாக உன்னையே நம்பியவன். தாமரைக் கண்களையுடைய அன்னையே!

உன் திருவடிகளில் நான் பன்முறை பணிந்தேன். தூய்மை பொருந்திய தர்மாம்பிகையே! உன் உபாசனையறியாத எளிய நல்லோர்களின் பாக்கியம் நீயேயென்று எண்ணினேன்.

உன் மகிமையை பிரமனும் புகழமுடியுமா? மாசற்றவளே! பிறை சூடிய பெருமானின் பத்தினியே! இத்தியாகராஜனை என்றும் நீ காக்கவேண்டும் அன்னையே!

## 455

*ஸாவேரி ஆதிˇ

ப. கந்ந தல்லி நீவு நாபால கˇலுகˇ
காˇஸி செந்தˇநேல நம்ம (க)

அ. வெந்நயுண்டˇநேதி கெவரைந
வெஸங பˇடுˇதுˇரா த்ரிபுரஸுந்தˇரி (க)

---

1 இக்கீர்த்தனம் எவ்வூரைக் குறித்ததென்பதும், இங்கு குறிப்பிடப் பெறும் வரலாறு எதுவென்பதும் நிச்சயமாக விளங்கவில்லை. இது சீர்காழி திருஞானசம்பந்தப் பெருமானுக்குப் பார்வதி தேவியார் திருமுலைப்பால் அருத்திய வரலாறு என்றே தோன்றுகிறது. ஆயினும், ஒரு சமயம் பரமசிவனையே குழந்தையாகச் செய்து அம்பிகை பால் அருந்தச் செய்த கதை தேவி பாகவதத்தில் உள்ளதென்று கல்லூரி வீரபத்திர சாஸ்திரியவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்.

* திருவொற்றியூரைக் குறித்து ஸ்வாமி இயற்றியுள்ள ஐந்து கிருதிகளுள் ஒன்று.

ச. 1. எல்லவாரி த்ᵛ,நமு லச்வமுலு மறி
எக்குவைந க‌ᵛட்டி மித்ᵛதெᵛலந்நியு
கல்லகாᵛநி கந்நவாரலு
காᵛஞ்சு ஸுᵘக,மு ஸுᵘந்யநுசுநு
உல்ல முநநு பாᵛகᵛ தெலிஸிகொண்டிநி
ஊரகே த்ᵛ,நிகல ஸம்பாᵛ,ஷணமு நே
நொல்ல மாயலநி தெᵛலிஸி ரஜ்ஜுᵘபை
யுரகᵛ புᵛத்ᵛதிᵛ,செந்தᵛநேல நம்மா நநு (க)

2. பலுகு மஞ்சிகாᵛநி பாᵛந்தᵛ,வுலு மறி
பாᵛவமறதுᵛ லக்க லந்நதᵛம்முலு
கலிமி ஜூᵘசுவாரு லேமிநி
கᵛநுல காᵛநராரு அநுசுநு
தᵛலசு கொங்ந வெநுக வாரி மாயல
தகுᵛல ஜாலநம்ம மரு மரீசி-
கலநு ஜூᵘசி நீரநி ப்ᵛரமஸி
கந்துᵛரா ஆதிᵛபுர விஹாரிணி நநு (க)

3. கநக பூஷᵛ,ணமுல பெᵛட்டி மறியு ஸொᵘ-
கᵛ,ஸுᵘ ஜேஸி பாலு போᵛஸி பெஞ்சிந
தநுவு ஸதமுகாᵛதுᵛநிர்மல
தந மிஞ்சுகலேதுᵛ அநுசுநு
அநுதிᵛநமொநரிஞ்சு ஸத்க்ரியல நீ-
கநி பᵛல்கிந த்யாகᵛராஜரக்ஷகி
விநு மந்நிட நீவ நெறிகிᵛவேல்புல
வேறநி யெஞ்சுதுᵛரா த்ரிபுரஸுᵘந்தᵛரி நநு (க)

என்னைப் பெற்ற தாயே! நீ என் பக்கலில் இருக்கையில் நான் ஏன் சிரமம் அடையவேண்டும்? அன்னையே! வெண்ணெ யிருக்கும்பொழுது நெய்க்காக யாரேனும் கவலைப்படுவார்களா? திரிபுரசுந்தரி!

அனைவருடைய செல்வமும், குதிரைகளும் மேலான உப் பரிகைகளும் பொய்யென்றும், காண்பவர்கள் அடையும் இன் பம் பூஜ்யமென்றும் மனத்தில் நன்கு தெரிந்து கொண்டேன், வீணுக பணக்காரர்களுடன் பேசும் பேச்சு முழு மாயையென்று

தெரிந்தும் ''கயிற்றைப் பார்த்துப் பாம்பு'' என்ற எண்ணம் உண்டாவதேன்? அம்மா!

இனிமையாகப் பேசினும் உறவினர்களும், மைத்துனரும் தமக்கையரும், அண்ணன் தம்பியரும் செல்வத்தையே கருது வார்களே தவிர வறுமையைக் கண்ணுலும் காணமாட்டா ரென்று தெரிந்த பிறகும் அவர்களின் மாய வலையில் அகப்பட் டுக்கொள்ள முடியுமா? தாயே! பாலை வனத்தின் கானலை நீரென்று எண்ணி பிரமித்து வருந்துவேனு? ஆதிபுரமெனும் திருவொற்றியூரில் விளங்குபவளே!

''பொன் அணிகளையணிவித்துப் பலவித அலங்காரங்கள் செய்து பால் வார்த்து வளர்த்த இவ்வுடல் சதமல்ல, அது தூய்மை சிறிதுமற்றது'' என்று (துணிந்து) ஒவ்வொரு நாளும் புரியும் நற்கருமங்களை உனக்கே அர்ப்பணம் செய்யும் இத்தியாக ராஜனை இரட்சிப்பவளே! கேள். அனைத்தும் நீயேயென்று தெரித்து வேறு தெய்வங்களை மனத்தினுலும் நினைப்பேனு? அன்னை திரிபுரசுந்தரியே!

## 456

ஸாவேரி — ஆதி

ப. *பராசக்தி மநுபராத நாபை
பராகேல நம்மா (ப)

அ. புராணி த்ர்மஸம்வர்த்நி ஸ்ரீ
புராதீச்வரி ராஜசேகரி (ப)

ச. 1. வராஹித்ர தேவராஜ ஜலஜப-
வ ராக்ஷஸாருலு வராலுகோரு
வராநந நகவராத்மஜ முநி
வரார்ச்சித நநு ப்ரோவராத ஓ (ப)

2. விசாலநயந குசாலுகா நீ-
துஸேவ ஜேஸி த்ரிதசாதிபாது-
லு சாச்வதுலை பரவசால நதி ஸே-
ய சாந்தமுந ஜேசு சாம்பவீ ஓ (ப)

* திருவையாறு தர்மஸம்வர்த்தனி அம்மனைக் குறித்த கீர்த்தனை

3. நிரபராது⁴ல நிராகரிஞ்சே
   து³ராத்மகுல நிந்து³ ராக ஸேய-
   க³ராது³ வர த்யாக³ராஜநுத சுப⁴
   த³ ராமஸோத³ரி த⁴ராத⁴ரஸுதே (ப)

ஓ பராசக்தி! நீ என்னைக் காக்கலாகாதா? என்னிடம் ஏன் இந்த அசட்டை! தாயே! தொன்மை பொருந்தியவளே! தர்ம ஸம்வர்த்தனி! ஸ்ரீபுரத்தின் அதிதேவதையே! சந்திரனை (முடியில்) அணிந்தவளே!

பாம்பையணிந்த சிவன், இந்திரன், நன்முகன், தேவர் முதலியோர் வரங்களை இரக்கும் அழகிய முகத்தவளே! இமவானின் புதல்வியே! சிறந்த முனிவரால் பூசிக்கப்படுபவளே! என்னைப் பாலிக்கலாகாதா?

மலர்ந்த கண்களையுடையவளே! உற்சாகத்துடன் உன்னைச் சேவித்து இந்திரன் முதலியோர் நிரந்தரமாகப் பரவசத்துடன் வணங்க அமைதியுடன் அவர்களைக் குளிர்ந்து நோக்கும் பரமேசுவரி!

ஒருவித அபராதமும் புரியாத சாதுக்களை வெறுக்கும் துஷ்டர்களை இங்கு வரவொட்டாமல் செய்யலாகாதா? தியாகராஜன் போற்றும் அன்னையே! நன்மை தருபவளே! இராமனின் சோதரியே! பருவதராஜன் மகளே!

## 457

ஸிந்து⁴ராமக்ரிய — தே³சாதி³

ப. தே³வாதி³தே³வ ஸதா³சிவ
   தி³நநாத, ஸுதா⁴கர த³ஹந நயந (தே³)

அ. தே³வேச பிதாமஹ ம்ருக்³ய சமா-
   தி³ கு³ணாப⁴ரண கௌ³ரீரமண (தே³)

ச. ப⁴வ சந்த்³ரகலாத⁴ர நீலக³ள
   பா⁴நுகோடி ஸங்காச ஸ்ரீசந்த
   தவ, பாத³ப⁴க்திம் தே³ஹி தீ³நப³ந்தோ⁴
   த³ரஹாஸவத³ந த்யாக³ராஜநுத (தே³)

தேவாதி தேவனே! சதாசிவ! சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய முக்கண்களையுடையவனே! (நீ) இந்திரன். பிரமன் ஆகியோரால் தேடப் பெறுபவன் (எட்டாதவன்). சாந்தம் முதலிய குணங்களை அணிகளாக உடையவன்: பார்வதி நாயகன், பரமசிவன். பிறைசூடிய பெருமான். நீலகண்டன். கோடி

சூரியப் பிரகாசன். விஷ்ணுவினல் துதிக்கப்பெறுபவன். தீன பந்து. சிறுநகை தவழும் வதனனே! உன் திருவடி பக்தியை எனக்கருள்.

458

சாவேரி ஆதி

ப. *நீவு ப்ரோவவலெ நம்ம நநு
நிகில லோக ஜநநீ (நீ)

அ. தேவி ஸ்ரீ தர்மஸம்வர்தநி திவ்ய
தர்சந மொஸகி ஸந்ததமு (நீ)

ச. 1. நீவலெ கருணாஸாகரி யீ ஜகாந
நேவெதகி கநுகொநகாநெக்கடகாந
பாவநமகு ஸ்ரீமத் பஞ்சநதீச்வருநி ராணி நா
பாவமுலோ தொருகுகொண்டி விக மறசெதநா
ஈவறகுநு ஜேஸிந நேரமுலநு
நீ வெஞ்சக நலுகுரிலோ தநகிக
காவலஸிந கோரிகலொஸகி
காவுமு பதிதபாவநி தர்மஸம்வர்தநி (நீ)

2. நாயெட வஞ்சந ஸேயக [1]பஸிடிசிலாகஞ்ஜ
ஸாயகு நந்நிட நீவநி யெஞ்சிதிகாக
மாயபு பவஸாகர பாதலு யெந்தாக யெட
பாயநி நீபத பக்தி நொஸங்க பராகா
காயஜ ஜநகுநி ஸோதரி நீயொக்க
மாயலநு தொலக ஜேயக யுண்டுட
ந்யாயமுகாது தயாபரி சுபபல
தாயகியௌ தர்மஸம்வர்தநி (நீ)

3. ராஜசிகாமணி ஸதியயிந சுபாகாரி அம்ப
ராஜராஜேச்வரி த்ரிஜகதாதாரி ஸ-

---

* திருவையாறு தர்மஸம்வர்த்தனி கீர்த்தனை.

1. ''பஸிடி சிலாகஞ்ஜஸாயகு'' என்ற சிதைந்த சொற்றொடருக்கு எவ்விதப் பொருளும் பொருந்தவில்லை.

ரோஜநயநி நீ மஹிமலநு தெலியலேரே த்யாக$^{v}$–
ராஜாதி$^{v}$ பரமபா$^{v}$,க$^{v}$வத ஹ்ருத$^{v}$யாகா$^{v}$ரே
யீ ஜக$^{v}$திநி கௌ$^{v}$ரி பராத்பரி அவ்-
யாஜமுநநு ப$^{v}$ரிபாலந ஜேயு
ஓ ஜக$^{v}$தீ$^{v}$ச்வரி நெற நம்மிதி நிநு
ராஜிகா$^{v}$ த$^{v}$,ர்மஸம்வர்த$^{v}$,நி (நீ)

நீயே காக்கவேண்டும் தாயே! உலகமனைத்திற்கும் அன்னையே! தர்மவஸம்வர்த்தனி தேவியே! அரிய உன் தரிசனமளித்து என்னை என்றும் காப்பாயாக,

உன்னைப்போன்ற கருணைக் கடலை இவ்வுலகில் நான் எங்கு தேடியும் காணேன். புனிதமான பஞ்சநதபுரத்தின் (திருவையாற்றின்) ஈசனுன பஞ்சநதீசுவரரின் நாயகியே! நீ என்னுள்ளத்தில் ஒன்றிவிட்டதால் நான் உன்னை மறப்பேனு? நான் இது வரையில் செய்த குற்றங்களை மன்னித்து நால்வருக்கிடையில் எனக்கு இப்பொழுது வேண்டிய விருப்பங்களையளித்துக் காப்பாற்று. எளியோரைப் புனிதமாக்குபவளே!

என்னிடம் வஞ்சனை செய்யாதே. அனைத்தும் நியேயென்று கருதினேன். ஆகவே, மாயையாகிற சம்சாரக் கடலின் தொல்லைகள் எனக்கு இனி எம்மாத்திரம்? இடைவிடாமல் உனது பொற்பாதங்களில் பக்தி செய்யும் பாக்கியத்தையளிக்க உனக்குப் பராமுகமா? மன்மதன் தந்தையாகிய திருமாலின் சோதரியே! உன் மாயையை அகற்றுமலிருப்பது நியாயமல்ல. தயாபரி! சுபமான பலன்களை யளிக்கும் தர்மஸம்வர்த்தனி!

பிறையணிந்த பெருமானின் துணைவியே! சுபந்தரும் உருவமுடையவளே! தாயே! இராஜ ராஜேசுவரி! மூவுலகிற்கும் ஆதாரமானவளே! தாமரைக் கண்ணியே! உன் மகிமையை யாரும் அறியாமற் போனுர்களே! தியாகராஜன் போன்ற பரம பாகவதரின் இதயத்தில் வசிப்பவளே! கௌரீ! பராத்பரி! இவ்வுலகில் காரணமின்றிக் காக்கும் ஜகதீசுவரி! உன்னைக் கிரமமாக முற்றும் நம்பினேன்.

## 459

ஸாவேரி சாபு

ப.| கர்மமே ப$^{v}$லவந்தமாயா தல்லி
காயாரோஹண ஜாயா (கர்)

அ. நிர்மலமகு$^{v}$ நாக$^{v}$புரமுந நெலகொந்ந
நீலாயதாக்ஷி ஸகலலோக ஸாக்ஷி (கர்)

ச. 1. த³ரநு த³நிகல கோ³ரி நாநா
பரிதாபமுல் தீ³ர்ப்பலேரைரி யநி
ஸரகு³ந நே ப³யலு வே³தரி வச்சி
பரமபாவநி நீ ஸந்நிதி³ ஜேரி நா (கா)

2. *வாரிதி³ மதி³ க³ர்விஞ்சி ஈ
வஸூத³கு தா ராநெஞ்சி நிந்நு
ஸாரெகு க³நி தலவஞ்சி யுண்டு³
தீ³ரதநமு க³ல்கு³ நிநு பொ³ட³கா³ஞ்சி நா (கா)

3. காஸாஸ லேநி நாமதி³கி நீ
கருணே த³நமநி பல்கி³ நிண்-
டா³ஸதோ வச்சி ஸந்நிதி³நி நிஜ
தாஸூடை³நஶ்ரீ த்யாக³ராஜுநிகி (கா)

தாயே! காயாரோகணப் பெருமானின் பத்தினியே! என் வினைப்பயனே (கடைசியில்) வலியதாகி விட்டதே! மாசற்ற நாகப்பட்டணத்தில் எழுந்தருளியிருக்கும் நீலாயதாட்சியே! சகல உலகிற்கும் சாட்சியே!

உலகில் தனவந்தர்களை யடுத்தும் என் பலவிதக் கஷ்டங் களைத் தீர்க்கமாட்டாகளென்று துணிந்து விரைவில் நான் புறப்பட்டு வந்து உன் சந்நிதியை அடைந்தும் (என் வினைப்பயன் வலியதாகி விட்டதே!) தூயவளே!

சமுத்திரம் தன் மனத்தில் கருவம் கொண்டு இப்புவிக்கு வர நினைத்த சமயம் உன்னைக் கண்டு தலைவணங்குமாறு செய்யக் கூடிய தீரத்தனமுள்ள உன்னைத் தரிசித்தும் (என் ஊழ்வினையே வலுத்துவிட்டது).

பணத்தாசையற்ற என்னுள்ளத்திற்கு உன் கருணையே செல்வமென்று கூறி, நிறைந்த ஆசையுடன் வந்து உன் சந்நிதி சேர்ந்த மெய்யடியவனான இத்தியாகராஜனுக்கு (வினைப்பயன் வலியதாகி விட்டதே!)

---

* நாகப்பட்டணம் நீலாயதாட்சி அம்மனைக் குறித்த இக்கீர்த் தனத்தில் எப்பொழுதோ ஒரு சமயம் கடல் பொங்கியெழுந்து ஊரையே விழுங்கவிருந்த தருணம் அம்மனின் மகிமையால் அது தலைவணங்கித் திரும்பிய தலபுராண வரலாறு குறிப்பிடப் பெறுகிறது. இவ்வூர் சௌந்தரராஜப் பெருமானைக் குறித்து பிருந்தாவனி ராகத்தில் இயற்றப்பட்ட ''ஸௌந்தரராஜ மாச்ரயே'' என்ற கிருதியில் ஸ்ரீ முத்துஸ்வாமி தீட்சிதரவர்கள் ''அம்புதி கர்வ நிக்ரஹம்'' என்று இவ்வரலாற்றைக் குறிப்பிடும் பொழுது பகவானின் மகிமையால் கடல் பொங்காமல் நின்றுவிட்டதாகக் கூறுகிறார்.

## 460

ஸுப்ரதீபம் (மே. 17) ஆதி

ப. வரசிகி,வாஹந வாரிஜலோசந
குரு சம் தநுஜித குஸ்ுமசராயுத (வ)

அ. சரஜப,வாம்பு,த வாஹநாதி
ஸுரநுதபாத ஸுகு,ணகுமார (வ)

ச. தாரக சூரபத்மாஸுர தூல
த,ஹந பூ,த,ரஸுதாநந்த,ந தீ,ர
ஸ்ரீரகு,வீரபா,கிநே யாப்தமந்-
தா,ர கு,ணகர த்யாக,ராஜார்ச்சித (வ)

சிறந்த மயிலை வாகனமாக உடையவனே! செந்தாமரைக் கண்ணனே! வடிவழகினால் பதினாயிரம் மன்மதரை வென்றவனே! (எங்களுக்கு) நன்மை புரிவாயாக. பிரமன், இந்திரன் முதலிய தேவரால் தொழப்படும் பாதனே!

(நீ) தாரகாசுரன், சூரபதுமாசுரன் போன்ற அரக்கரெனும் பஞ்சை எரிக்கும் நெருப்பு. மலைமகளாகிய பார்வதி தேவியின் தவப் புதல்வன். தீரன், ஸ்ரீராமனின் மருமகன். ஆப்தருக்குக் கற்பக விருட்சம் போன்றவன். நற்குண நிதி.

## 461

பை,ரவி ஆதி

ப. *லலிதே ஸ்ரீப்ரவ்ருத்,தே, ஸ்ரீமதி
லாவண்ய நிதி,மதி (ல)

அ. தெலிவிநி வர்தி,ல்லு ஸ்ரீ
தபஸ்தீர்த, நக,ரநிலயே (ல)

ச. 1. தெலியநி பா,லுட,கா,தா, அம்ப,
தெலிவி நீ ஸொம்முகா,தா,
சலமு ஸேய மரியாதா,
சல்லநி மாடலு ப,ல்கராதா, (ல)

* லால்குடி க்ஷேத்திரத்தைக் குறித்த ஐந்து கிருதிகளுள் ஒன்று.

2. ப்ᵛரோசுவாரிலநு லேக
ஜூசி ஜூடᵛக பராகா
ஈ ஸுஜநுல வேடᵛகᵛலேக
நே தாஸுடᵛ நீவே கᵛதிகாᵛக (ல)

3. கந்ந தல்லி சுபᵛவதᵛநே மீ
யந்ந தᵛயகு பாᵛத்ருடᵛநே
திந்நகᵛ சரணு ஜொச்சிதிநே
த்யாகᵛராஜ மாநஸஸதᵛநே (ல)

லலிதா தேவியே! ஸ்ரீபிரவிருத்த ஸ்ரீமதி! இலாவண்ணியத்தின் கருவூலமே! விவேகத்தை வளர்க்கும் ஸ்ரீதபஸ்தீர்த்தபுரத்தில் (லால்குடியில்) கோயில் கொண்டவளே!

நான் ஒன்றுமறியாத சிறுபிள்ளையல்லவா? அறிவு (ஞானம்) உன் சொத்தல்லவா? தாயே! என் மீது நீ கோபம் கொள்வது நியாயமா? குளிர்ந்த மொழிகளை நீ பேசலாகாதா?

என்னைக் காப்பவர்கள் வேறு யாரும் இவ்வுலகில் இல்லாதிருக்கையில், நீ பார்த்தும் பாராதது போல் அலட்சியம் செய்யலாமா?

(என்னைச் சூழ்ந்திருக்கும் பொறுமை கொண்ட) இப் பெரியோர்களை இரக்க முடியாமல் வருந்தும் உன் தாசனாகிய எனக்கு நீயே கதி.

என்னைப் பெற்ற தாயே! நன்மை தரும் முகத்தவளே! உன் அண்ணனாகிய இராமபிரானின் திருவருளுக்குப் பாத்திரமானவன் நான். ஆகவே, நேராக உன்னைச் சரணடைந்தேன்; தியாகராஜன் இதயத்தில் வீற்றிருப்பவளே!

## 462

ரீதிகௌᵛள ஆதிᵛ

ப. *பாᵛலே பாᵛலேந்துᵛபூᵛஷணி
பᵛவரோகᵛசமநி (பாᵛ)

அ. பாலலோசநி ஸ்ரீ தᵛர்மஸம்வர்தᵛநி
ஸகலலோக ஜநநி (பாᵛ)

ச. 1. சீலே நநு ரக்ஷிம்பநு ஜா-
கேᵛலே பரமபாவநி ஸுகுᵛண

* திருவையாறு தர்மஸம்வர்த்தனி தேவியைக் குறித்த கீர்த்தனை.

ஜாலே நதஜந பரிபாலந
லோலே கநகமய ஸு-
சேலே காலவைரிகி ப்ரியமைந இல்
லாலவை யிந்துˇ வெலஸிநந்துˇகு
ஸ்ரீலலிதே நீ தநயுடˇநி நநு குˇ-
சாலுகாˇ பிˇலுவவலெநம்மா (பாˇ)

2. ஸாரே ஸகல நிகˇம வந ஸஞ்-
சாரே சபலாகோடி நிபˇ,ச-
ரீரே தேˇவதாங்கˇநா பரி-
வாரே பாமரஜந-
தூˇரே கீரவாணி ஸ்ரீ பஞ்சநதˇபுர வி-
ஹாரிவை வெலஸிநந்துˇ கிக நா
நேர கோடுல நெல்ல ஸஹிஞ்சி
காˇரவிம்பவலெ நம்ம சிவே (பாˇ)

3. ராமே ப்ரணதார்த்தி ஹராபிˇ,-
ராமே தேˇவகாமிநீ ல-
லாமே த்யாகˇராஜ பˇ,ஜந ஸ-
காமே துˇர்ஜநகˇண
பீˇ,மே நா மநஸு நீ சரணமுல ஸதாˇ
நேமமுந பூˇஜஸேயநீ ஸ்ரீ
ராமஸோதˇரிவை வெலஸிந ஸ்ரீ
ச்யாமலே தˇ,ர்மஸம்வர்தˇ,நீ (பாˇ)

*அம்பிகையே! இளம் பிறையை யணிந்தவளே! சம்சார மென்னும் நோயைத் தணிப்பவளே! நெற்றிக்கண்ணையுடைய வளே! ஸ்ரீ தர்மஸம்வர்த்தினி! சகல உலகங்களுக்கும் அன்னையே!*

*சீலம் நிறைந்தவளே! என்னைக் காக்க ஏன் தாமதம்? பரமபாவனி! நற்குண நிதியே! தஞ்சமடைந்த மாந்தரைக் காப்பதில் ஆசையுடையவளே! பொன்னுடை யணிந்தவளே! லலிதா தேவியே! காலந்தகனை சிவனுக்குப் பிரியமான நாயகியாக நீ இவ்வூரில் விளங்கிக்கொண்டிருப்பதால் உன் புதல்வனுகக் கருதி மகிழ்ச்சியுடன் என்னை அழைக்க வேண்டுமம்மா!*

(நீ) அனைத்திற்கும் சாரமானவள். வேதங்களென்னும் காட்டில் சஞ்சரிப்பவள். கோடி மின்னல்களைப் போல் ஒளி வீசும் தேகமுடையவள். தேவலோகத்து மாதரைச் சேடிகளாக உடையவள். பாமர ஜனங்களை விலக்குபவள். கிளி மொழியாள். இத்திருவையாற்றில் நீ லீலையாக விளங்குவதால் எண்ணற்ற என் பிழைகளைப் பொறுத்து என்னைக் கவுரவிக்க வேண்டும் அம்பிகையே!

நங்கையர் திலகமே! (நீ) வணங்குபவர்களின் துயர் தீர்க்கும் உயர் குணமுடையவள். தேவ ஸ்திரீகளுள் திலகம் போன்றவள். தியாகராஜனின் பஜனையில் விருப்பமுடையவள். துஷ்டருக்கு அச்சம் தருபவள். என் மனம் எப்பொழுதும் நியமத்துடன் உன் சரணங்களையே பூசை செய்கின்றது. இராமனின் தங்கையாக விளங்கும் சியாமளா தேவியே! தர்மஸம்வர்த்தினி!

## 463

க₁ரஹரப்ரிய ஆதி³

ப. *கோரி ஸேவிம்ப ராரே
கோர்க்குலீடே³ர (கோ)

அ. ஸ்ரீ ரமணீகரமௌ கோ-
வூரி ஸுந்த³ரமூர்த்திநி (கோ)

ச. ஸுரலு வெயிவங்ரெ ப³ங்கா³ரு
விருலசே பூ³ஜிம்பக³ பூ³-
ஸுருலு ஸநகாதி³ மௌநி
வருலு நுதிம்பக³
ஸிரு லித்துநநி கொலுவையுண்டே³
ஸ்ரீ ஸௌந்த³ர்ய நாயிகா
வருநி ஸ்ரீ த்யாக³ராஜ
வரது³நி பரமாத்முநி ஹருநி (கோ)

திரு விளங்கும் கோவூரில் எழுந்தருளியிருக்கும் சுந்தரேசுவரப் பெருமானை விரும்பிச் சென்றடைந்து நமது விருப்பங்கள் நிறைவேறும் பொருட்டுச் சேவிப்போம் வாரீர்!

தேவர்கள் ஆயிர வண்ணங்களமைந்த பொன் மலர் கொண்டு பூசை செய்ய, அந்தணரும், சநகர் முதலிய முனி சிரேஷ்டர்களும் துதிக்க ''சகல சம்பத்துக்களையும் அருள்

---

* சென்னைக்கடுத்த கோவூர் க்ஷேத்திரத்தைக் குறித்து ஸ்வாமி இயற்றியுள்ள ஐந்து கிருதிகளுள் ஒன்று.

வேன்'' என்று கொலுவீற்றிருக்கும் சௌந்தரிய நாயகியின் பதியும், இத்தியாகஜனுக்கு வரமளிப்பவரும் பரமாத்மாவுமான சிவபெருமானைச் (சேவிப்போம் வாரீர்!)

464

மத்₄யமாவதி ஆதி₃

ப. *முச்சட ப்₃ரஹ்மாது₃லகு தொ₃ரகுநா
முதி₃ தலார ஜூதாமு ராரே (மு)

அ. பச்சனி தே₃ஹினி பரம பாவநினி
பார்வதினி த₃லசுசுநு ஹருடே₃கெ₃டு₃ (மு)

ச. 1. சல்லரெ வேல்புல ரீதி விருல கர
பல்லவமுலநு தளுக்கநுசு பி₃ருது₃
லெல்ல மெறய நிஜப₄க்துலு பொக₃ட₃க₃
உல்லமு ரஞ்ஜில்ல
தெல்லனி மேநுந நிண்டு₃ ஸொம்முலதோ
மல்லெ ஹாரமுலு மறி சோபி₄ல்லக₃
சல்லனி வேள ஸகல நவரத்நபு
ப₄ல்லகிலோ வேஞ்சேஸி வச்சு (மு)

2. ஹிதமைந ஸகல நைவேத்₃யம்பு₃ல ஸம்-
மதமுந அடு₃க₃டு₃கு₃ காரகி₃ம்புசு
மிதமுலேனி யுபசாரமுலதோ
நதி ஸந்தோஷமுந ஸததமு ஜ-
ப தபமுல நொநரிஞ்சு
நத ஜநுல கஷ்₁டமு லவ்வாரிக₃
வெதகி யொஸகு₃து₃ நநுசு ப₃ஞ்சநதீ₃
பதி வெட₃லி ஸொக₃ஸு மீறக₃ வச்சு (மு)

3. பா₄க₃வதுலு ஹரிநாம கீர்த்தநமு
பா₃கு₃க₃ ஸுஸ்வரமுலதோ விந்த
ராக₃முலநு யாலாபமு சேயு வை-
போ₃க₃முலநு ஜூசி

* திருவையாறு பஞ்சநதீசுவரரைப்பற்றிய கீர்த்தனம்.

நாக$^{v}$பூ$^{v}$ஷணுடு$^{v}$ கருணாநிதி$^{v}$யை
வேக$^{v}$மு ஸகல ஸுஜநரக்ஷணமுந
ஜாக$^{v}$ருகுடை$^{v}$ கோர்கெல நொஸகு$^{v}$
த்யாக$^{v}$ராஜு தா நநுசுநு வச்சு (மு)

இவ்வழகிய காட்சி பிரமன் முதலிய தேவருக்கும் கிடைக்குமா? பெண்மணிகாள்! காண்போம், வாரீர்! மரகதத்தை நிகர்த்த வண்ணமுடையவளும், பரமபாவனியுமான பார்வதி தேவியை நினைத்துக்கொண்டு சிவபிரான் எதிர்வரும் (இவ்வரிய காட்சி தேவருக்கும் கிடைக்குமா?)

தேவர்களைப்போல் (நீங்களும்) மலர்களை உங்கள் தளிர்க் கைகளால் தூவுங்கள்! பளபளவென்று தம்முடைய அலங் காரங்கள் ஒளி வீச, மெய்யடியார் துதிபாட, உள்ளம் மகிழ, வெண்ணிற தேகத்தின்மீது நிறைந்த ஆபரணங்களுடன் மல்லிகை மாலைகளும் சோபிக்க, குளிர்ந்த இவ்வேளையில் நவரத்தினங்கள் பதித்த பல்லக்கில் (பஞ்சநதீசர்) பவனி வரும் (இக்காட்சி தேவருக்கும் கிடைக்குமா?)

இனிமையான பல நைவேத்தியங்களை இஷ்டத்துடன் அடிக்கு அடி ஏற்றுக்கொண்டு, அளவற்ற உபசாரங்களுடனும் மிக்க மகிழ்ச்சியுடனும் ''எப்பொழுதும் ஜபதபங்கள் புரியும் பக்தர்களைத் தேடிவந்து விரும்பிய வரங்களை ஏராளமாக அளிப் பேன்'' என்று பஞ்சநதீசுவரர் எழுந்தருளி எழிலுடன் வரும் (இக்காட்சி தேவருக்கும் கிடைக்குமா?)

பாகவதோத்தமர்கள் ஹரி நாம ஸங்கீர்த்தனத்தை நன்கு ஸுஸ்வரத்துடன் விதவிதமான இராகங்களில் ஆலாபனம் செய்யும் வைபோகத்தைக் கண்டு கருணைக் கடலான பாம் பணியும் பிரான் விரைவுடன் நல்லோர் அனைவரையும் காப்பதில் விழிப்புடையவராகி ''கோரிக்கைகளையளிக்கும் தியாகராஜன் (சிவன்) நானே''யென்று பவனி வரும் (இவ்வரிய காட்சி தேவருக்கும் கிடைக்குமா?)

## 465

மத்$^{v}$யமாவதி த்ரிபுட

ப. *தே$^{v}$வ ஸ்ரீ தபஸ்தீர்த$_{1}$புர நிவாஸ
தே$^{v}$ஹி ப$^{v}$க்திமது$^{v}$நா (தே$^{v}$)

அ. பாவந ப்ரவ்ருத்$^{v}$த$^{v}$ ஸ்ரீமதி ஹ்ருத்$^{v}$
ப$^{v}$வந ஸகல ஜக$^{v}$த்$^{v}$வந ஸ்ரீ மஹா (தே$^{v}$)

* லால்குடி ஸ்ரீஸப்தரிஷீசப் பெருமானைக் குறித்த கீர்த்தனம்.

ச. 1. பாசஹஸ்த க³ணேச ஹரண ப-
லாசநாரி நுதேச வரத³ கு-
சேசயாரி த்³ராசரேப⁴ ம்ரு-
கே³ச ஸப்தருஷீச தே³வ (தே³)

2. நீலக³ள ஸுரஜாலநுத நத
பால கி³ரீச விசாலபா⁴லக்ரு-
பாலவால ஸுசீல கௌ³ரீ
லோல சிவ மாம் பாலயாத்³பு⁴த (தே³)

3. நாக³பூஜித நாக³த³நுஜ ஹ-
ராக³ மர்த³ந வாக³தி⁴ப விநு-
தாக³ணிதகு³ண ராக³மத³ தூ³-
ராக⁴ஹர ஸ்ரீ த்யாக³ராஜ (தே³)

மகா தேவனே! திருத்தவத் துறையில் (லால்குடியில்) வதிபவனே! எனக்கு உன் பக்தியை இப்பொழுதே அளிப்பாயாக, தூயவனே! பிரவிருத்த ஸ்ரீமதி அம்மனின் சித்தமிசை வாழ்பவனே! புவனமனைத்தையும் காப்பவனே!

(நீ) பாசக் கயிற்றை ஏந்திய யமகணங்களுக்குத் தலைவனான காலனை சம்ஹரித்தவன். புலால் உண்ணும் அரக்கரின் எதிரிகளான தேவரால் தொழப்பெறும் ஈசன். வரந்தருபவன். தாமரையின் விரோதியான சந்திரனையணிந்தவன். அசுரராகிய யானைகளையடக்கும் சிங்கம். சப்தருஷீசனென்ற திருநாமம் படைத்தவன்.

நீலகண்டன். தேவர் குழாத்தினால் வணங்கப் பெறுபவன். வணங்குபவரைக் காப்பவன். கைலாஸபதி. விசாலமான நெற்றியுடையவன். கருணையின் தேக்கம். நல்லொழுக்கமுடையவன். கௌரி பதியாகிய சிவன். அற்புத தேவன். என்னைக் காப்பாயாக.

ஆதிசேடனால் பூசிக்கப் பெறுபவன். கஜாசுரனை வதைத்தவன். இந்திரனாலும் பிரமனாலும் துதிக்கப்பெறுபவன். எண்ணற்ற குணங்களுடையவன். கோபம், மதம் முதலியவையற்றவன். பாவங்களையகற்றுபவன். ஸ்ரீ தியாகராஜனென்னும் சிவபிரான் நீயே.

466

*கேஸரி (மே. 28) தே³சாதி³

ப. நந்நு கந்தல்லி நாபா⁴க்³யமா
நாராயணி த⁴ர்மாம்பி³கே (ந)

---

* ஸிந்து⁴கந்நட³

அ. கநகாங்கி ரமாபதி ஸோதரி
[1]காவவே நநு காத்யாயநி (ந)

ச. காவு காவுமநி நே மொறபெட்டகா
[2]கமலலோசநி கரகுசுண்டகா
நீவு ப்ரோவகுண்டே யெவரு ப்ரோதுரு ஸ-
தாவரம்பொஸகு த்யாகராஜநுதே (ந)

என்னைப் பெற்ற தாயே! என் பேரதிர்ஷ்டமே! நாராயணி! தர்மாம்பிகையே! பொன்னிற மேனியாளே! திருமாலின் சோதரியே! காத்தியாயனி! கருணை புரிவாயாக! என்னைக் ''காப்பாற்று. காப்பாற்று'' என்று நான் முறையிட்டு உருகும் பொழுது நீ காக்கவில்லையாகில் வேறு யார் தான் காப்பாற்றுவர்? என்றும் வரம் தருபவளே!

## 467

காம்போஜி சாபு

ப. **மஹித ப்ரவ்ருத்த ஸ்ரீமதி
குஹ கணபதி ஜநநி (ம)

அ. பாஹி வதநஜித ஸுதாகரே ஸ்ரீகரே
பாஹி ஸுகுண ரத்நாகரே (ம)

ச. 1. தேஹி சரணபக்திமகில
தேஹிநி ஸதா சுபபல-
தே ஹிமகிரிதநயே வை-
தேஹீப ஸஹோதரி (ம)

2. வாஹிநீச ஸந்நுதே ந-
வாஹிபூஷ வல்லபே ப-
வாஹி நீலகண்டி, ஸிம்ஹ-
வாஹிநி ஜநநி (ம)

3. பார்த ஸந்நுத ப்ரியே [1]ப-
தார்த புண்யதூரே காமி-

---

1 கருணிம்பவே 2 கரகதேமி மதிகமலலோசநி
** லால்குடி அம்மனைக் குறித்த கீர்த்தனம்.
1 ''பதார்த்த புண்ய தூரே'' என்பதன் பொருள் விளங்கவில்லை

தார்த,ப,லதே ஸ்ரீ தபஸ்-
தீர்த,புர நிவாஸிநி (ம)

4. ராஜசேக,ராத்ம பூ,வி-
ராஜ ராஜ ஸந்நுதே ஸ-
ரோஜ த,ளநிபா,க்ஷி த்யாக-
ராஜ பா,க்யதா,யகி (ம)

மஹித பிரவிருத்த ஸ்ரீமதி தேவியே! குகன் (சுப்பிரமணியன்), கணபதி ஆகியோரின் அன்னையே! என்னைக் காப்பாயாக. முகவழகினால் சந்திரனை வென்றவளே! மங்களம் தருபவளே! என்னைக் காப்பாற்று. நற்குணக் கடலே!

உன் திருவடி பக்தியை எனக்கு அருள்வாய். (நீ) சகல அண்டங்களையும் சரீரமாக உடையவள். எப்பொழுதும் சுபமான பலன்களை அளிப்பவள் இமவானின் புதல்வி. சீதா நாயகனான இராமனின் சகோதரி.

வருணனால் துதிக்கப் பெறுபவள். நூதனமான சர்ப்பங்களையணியும் சிவபெருமானின் நாயகி. சம்சாரமென்னும் சர்ப்பத்தை வதைக்கும் மயில். சிங்கத்தை வாகனமாக வுடையவள்.

அர்ச்சுனனால் வணங்கப்பெறும் சிவனுக்குப் பிரியமானவள். விரும்பிய பலன்களையளிப்பவள். திருத் தவத்துறையை (லால்குடியை) இருப்பிடங்கொண்டவள்.

சிவன், பிரமன், திருமால் ஆகிய மும்மூர்த்திகளாலும் வணங்கப்பெறுபவள். செந்தாமரையிதழை நிகர்த்த கண்களையுடையவள். தியாகராஜனுக்கு பாக்கியமளிப்பவள்.

## 468

சஹாந ஆதி

ப. *ஈ வஸுத, நீவண்டி தைவமு நெந்து,கா,நரா (ஈ)

அ. பா,வுகமு க,ல்கி, வர்தி,ல்லு
கோவூரி ஸுந்த,ரேச கி,ரீச (ஈ)

ச. ஆஸசே யரநிமிஷமு நீ புர
வாஸ மொநர ஜேயுவாரி மதி,
வேஸட லெல்லநு தொ,லகி,ஞ்சி த,ந
ராஸுல நாயுவுநு

* கோவூரைக் குறித்த ஐந்து கீர்த்தனைகளுள் ஒன்று.

பூ᳚ஸுர ப᳚க்தியு தேஜமு நொஸகி᳚
பு᳚வநமந்து᳚ கீ᳚ர்த்தி க᳚ல்க᳚ஜேஸெ
தா᳚ஸவரத᳚ த்யாக᳚ராஜ ஹ்ருத᳚ய நி-
வாஸ சித்᳚விலாஸ ஸுந்த᳚ரேச (ஈ)

இவ்வுலகில் உன்னைப்போன்ற தெய்வத்தை எங்கே காண்பேன்? நலம்புரிந்து அனைத்தையும் வளரச் செய்யும் கோவூர் வாழ் சுந்தரேசுவரனே! சிவனே!

ஆசையுடன் அரை நிமிடமாவது உனது தலத்தில் வாசம் செய்பவர்களின் மனக் கவலைகள் அனைத்தையும் அகற்றிச் செல்வத்தையும், நீண்ட ஆயுளையும், அந்தணரிடம் பக்தியையும், பிரகாசத்தையும் அருளி உலகில் புகழ் பெறச் செய்பவனே! அடியார்க்கு வரந்தருபவனே! இத்தியாகராஜன் இதயத்தில் வசிப்பவனே! சித் ஸ்வரூபனே! சுந்தரேசனே!

## 469

மத்᳚யமாவதி ஆதி᳚

ப. **விநாயகுநிவலெநு ப்᳚ரோவவே நிநு
விநா வேல்புலெவரம்ம (வி)

அ. அநாத᳚ரக்ஷகி ஸ்ரீ காமாக்ஷி ஸு-
ஜநாக᳚மோசநி சங்கரி ஜநநி (வி)

ச. 1. நராத᳚முலகுநு வராலொஸக᳚ நுண்-
ட᳚ராமுலே பூ᳚ஸுராதி᳚ தே᳚வத-
லு ராயிடி᳚நி ஜெந்த᳚ராது᳚ த᳚ய ஜூ-
ட᳚ராதா᳚ காஞ்சீபுராதி᳚ நாயகி (வி)

2. பிதாமஹுடு᳚ ஜந ஹிதார்த᳚மை நிந்-
நு தா தெ᳚லிய வேட᳚ தாளிமிக᳚ல ய-
வதாரமெத்தி இகநு தாமஸமு ஸே-
ய தாளஜாலமு நதார்த்திஹாரிணி (வி)

---

** காஞ்சிபுரம் காமாக்ஷியம்மனைக் குறித்த கீர்த்தனம்.

1 புராந 2 ''ஸரோஜ மேலே ராமஸோதரி'' என்றும் பாடம். ''தியாகராஜனின் இதயத்தாமரையை ஆளும் இராமனின் சோதரி'' என்று பொருள்.

3. புராணி[1] த³யசே வராலு மாகுநி-
கி ராஜேஸி ப்³ரோசு ராஜத⁴ரி த்யா-
க³ராஜுநி ஹ்ருத³ய [2]ஸரோஜவாஸிநி
முராரி ஸோத³ரி பராசக்தி நநு (வி)

(உன் புதல்வனை) விநாயகனைப்போல் (கருதி) என்னைக் காப்பாயாக. உன்னையல்லால் வேறு தெய்வங்கள் யாருளர்? திக்கற்றவரைக் காப்பவளே! ஸ்ரீகாமாக்ஷி! நல்லோரின் பாவங்களையகற்றுபவளே! நலம் புரிபவளே! தாயே!

கீழ் மக்களுக்கும் வரமளிப்பவள் நீயாதலால் உன்னிடம் அன்பு பூண்டவர்களான அந்தணர், தேவர் முதலியோர் துயர் அடையலாகாது. (ஆகவே) தயவு புரியலாகாதா? காஞ்சிபுரத்தின் அதிதேவதையே!

பிரமதேவன் உலகிற்கு நலம் புரியக் கருதி உன்னை அறிந்து கொள்ள வேண்ட, பொறுமை நிறைந்த அவதாரத்தை நீ எடுத்திருக்கையில், இன்னும் தாமதம் செய்தால் நாங்கள் தாளமாட்டோம். வணங்குபவரின் துன்பத்தையகற்றுபவளல்லவா நீ?

தொன்மை பொருந்தியவளே! தயவுடன் வரங்களை எங்களுக்குக் கிடைக்குமாறு செய்து எங்களைக் காப்பாற்று. பிறையணிந்தவளே! தியாகராஜனின் இதயமாகிய தாமரையில் வசிப்பவளே! திருமாலின் சோதரியே! பராசக்தி!

## 470

*நாராயணகௌ³ள ஜம்ப

ப. த³ர்சநமு ஸேயநா தரமா (த³)

அ. (பரா) மர்சிஞ்சி நீவு நநு
மந்நிம்பவலெநு சிவ (த³)

ச. 1. கோ³புரம்பு³லநு க³டு³ கொ³ப்ப கம்ப³முல பூ⁴-
ஸ்தா₂பிதம்ப³கு³ சிலல தருணு லாடலநு
தீ³பால வருஸலநு தி³வ்ய வாஹநமுலநு
பாபஹர ஸேவிஞ்சி ப³ஹிர்முகு₂ண்டை³தி சிவ (த³)

2. தரலி பதி³யாறு ப்ரத³க்ஷிணமு லொநரிஞ்சி
பர நிந்த்³ய வசநமுல பா³கு³கா³டு³சுநு

* கேதாரகௌள

ஒருல பா॑மல ஜூசு சுப்பொங்கி॑திநி கா॑நி
வர சிவாக்ஷர யுக॑ ஜபமு ஸேயநைதி சிவ (த॑)

3. ஹாடக ஸமம்பை॑ந அத்॑பு॑தாக்ருதிநி நே
நாட ஜேஸிகொநி ஹ்ருந்நாளீகமுநநு
மாடி மாடிகி ஜூசி மைமறசி யுண்டே॑தி॑
ஆடலா த்யாக॑ராஜார்ச்சித ஸுபாத॑ சிவ (த॑)

(சின்மய ஸ்வரூபமான பரசிவத்தை) தரிசனம் செய்ய என்னுலாகுமா? நீயே இதைப் பரிசீலித்து என்னைக் காக்க வேண்டும்.

கோபுரங்களையும், மிகப் பெரிய தூண்களையும், பூமியில் நடப்பெற்ற கற்சிலைகளையும், பெண்களின் நாட்டியத்தையும், தீபங்களின் வரிசைகளையும், அழகிய வாகனங்களையும் சேவித்துப் புறப்பார்வை உடையவனுக ஆனேன். பாவங்களைப் போக்கடிப் பவனே!

அசைந்து கொண்டே பதினுறு பிரதட்சிணங்கள் செய்து கொண்டு, பிறரை நிந்தை செய்யும் வார்த்தைகளை நன்கு பேசிக் கொண்டு, பிறர் பெண்டிரைப் பார்த்து மகிழ்ந்தேனே தவிர, உயரிய ''சிவ'' என்ற இரண்டெழுத்தை ஜபம் செய்யத் தவறினேன்.

(பரம்பொருளின்) பொன்னிறமான அழகிய தோற்றத்தை என் இதயமாகிய தாமரையில் இருத்திக்கொண்டு, அதை அடிக்கடி தரிசித்து மெய்ம்மறந்து இருப்பது விளையாட்டா? தியாகராஜன் அருச்சிக்கும் அழகிய பாதங்களையுடையவனே!

## 471

சங்கராப॑ரணம் ரூபகம்

ப. சம்போ॑ சிவ சங்கரா கு॑ரு
அம்போ॑ருஹ நயந (சம்)

அ. த்॑ரணீ த்॑ர வரபூ॑ஷண
ஸுரஸேவித சரண (சம்)

ச. 1. தருணுருண கிரணுப॑ ஸு-
சரணுஸுர ஹரண (சம்)

2. கமநீய நிக॑ம ஸந்நுத
ஹிமகி॑ரிஜா ரமண (சம்)

3. சமநாந்தக விமலாங்க^v ப-
ரம காருண்யநிதே^v, (சம்)

4. ஸமலங்க்ருத கமலாஹித
கமலாஸுத ஹரண (சம்)

5. நதபோஷண ஹிதபா^v,ஷண
த்^v,ருத சாரு குரங்க^v (சம்)

6. மதபே^v,த^v பதித மாநவ
மத^v ஸந்தத ப^v,ங்க^v (சம்)

7. ஸுதபோத^v,ந ஹிதகர பா-
லித த்யாக^vராஜ (சம்)

சிவபெருமானே! சிவசங்கர! அகன்ற தாமரைகளையொத்த கண்களையுடையவனே! (நீ) ஆதிசேடனை ஆபரணமாக அணிந்தவன். தேவரால் தொழப்படும் பாதன். வைகறையில் அருணனின் செந்நிறத்தை நிகர்த்த பாதங்களையுடையவன். அரக்கரை மாய்ப்பவன். வடிவழகன். மறைகளால் போற்றப்படுபவன். மலைகள் நாயகன். காலனை வென்றவன். பரிசுத்தமான தேகமுடையவன். கருணைக்கடல். தாமரையின் விரோதியான சந்திரனை அணிந்தவன். மன்மதனை எரித்தவன். வணங்குபவரைக் காப்பவன். இதந்தரும் பேச்சையுடையவன். அழகிய மானைக் கையிலேந்தியவன். மத வேறுபாட்டினால் இழிவுற்ற மாந்தரின் கொழுப்பை என்றும் அடக்குபவன். தவ முனிவருக்கு இதமளிப்பவன். இத்தியாகராஜனைக் காப்பவன்.

## 472

சங்கராப^v,ரணம் ஆதி^v

ப. *ஸுந்த^vரேச்வருநி ஜூசி
ஸுரல ஜூட^v மநஸு வச்சுநா (ஸு)

அ. அந்த^vமுக^vல வர காசிகி ஸமாந-
மைந கோ^vபுரமந்து^v வெலயு மா (ஸு)

ச. 1. சரணமுலநு ப^vங்கா^vரு நூபுரமுலு
கரமுல ரவ கங்கணயுக^vமுலு ஸ்ரீ-
கர முக,முந க’ஸ்தூரி திலகமு
மெறயுசுநுண்டு^v லாவண்யமுக^vல (ஸு)

* கோவூர் பஞ்சகத்துள் ஒன்று.

2. ஒகசோ ப்ரஹ்மாதி³ ஸுராலு
ஒகசோ நிர்ஜர வார தருணுலு
ஒகசோ தும்பு³ரு நாரதா³து³லு
ஒகசோ ப⁴க்துலெல்ல பா³டு³ (ஸு)

3. ராஜராஜுநிகி செலிகாட³யிந
ராஜசேக²ருநி கோ³புரநிலயுநி
ராஜகு³ணரஹிதுநி ஸ்ரீ த்யாக³-
ராஜ பூஜிதுநி ரஜதகி³ரீசுநி (ஸு)

(வடிவழகனுன) இந்த சுந்தரேசுவரப் பெருமானைக் சேவித்த பின் (மற்ற) தேவர்களைக் காணவும் மனம் வருமா? அழகு மிகுந்ததும் சிறந்த காசித் தலத்திற்கு ஈடானதுமான இக்கோவூரில் விளங்கும் எங்கள் (சுந்தரேசுவரனை....வருமா?)

பாதங்களில் பொன் கொண்டிழைத்த நூபுரங்களும், கரங்களில் வைரங்கள் பதித்த கங்கணங்களும், மங்களம் தரும் திருமுகத்தில் கஸ்தூரிப் பொட்டும் பிரகாசித்துக்கொண்டு அழகு ததும்பும் (சுந்தரேசுவரனை....வருமா?)

ஒருபுறம் பிரமன் முதலிய தேவர்களும், ஒருபுறம் தேவலோகத்துக் கணிகையரும், மற்றொருபுறம் தும்புரு, நாரதர் முதலிய முனிவரும், வேறொருபுறம் அடியார்களும் துதி பாடும் (சுந்தரேசுவரனை....வருமா?)

குபேரனுடைய தோழனும், சந்திரனையணிந்தவனும், கோவூரில் வதிபவனும், இராசத குணமற்றவனும், இத்தியாகராஜனால் பூசிக்கப்படுபவனும், வெள்ளிமலைக்கு (கைலாசத்திற்கு) ஈசனுமான (சுந்தரேசுவரனை....வருமா?)

## 473

ஆரபி⁴ ஆதி³

ப. அம்ப³ நிந்நு நம்மிதி நண்டே
நீ கநுமாந மேமம்ம (அம்)

அ சம்ப³ரவைரி ஜநக ஸோத³ரி
சரணு ஜொச்சி மநஸார ஸ்ரீஜக³ (த³ம்)

ச. கீர்வாண க³ணதா⁴ரி யம்ப³
சர்வாணி யக²ண்டா³காரி
பர்வதராஜ மநோஜ்ஞகுமாரி
நிர்வாஹமுலேக மதி³நி கோரி (அம்)

2. ஸுரவைரி கத,ந ஸௌர்யே
வருணாலய ஸம கா^ம்பீ^,ர்யே
ஸ்வரஜித கோகில ரவ மாது^,ர்யே
பரிதாபமு தாளகநு ஸுசர்யே (அம்)

3. சர்மதா^யகி கௌரி^ துஷ்-
கர்ம கலுஷ வந குடா,ரி
நிர்மல த்யாக^ராஜ ஹ்ருச்சாரி
*த^,ர்மஸம்வர்த^,நி யோங்காரி (அம்)

ஸ்ரீ ஜகதம்பிகையே! தாயே! சம்பராசுரனையழித்த பிரத்யும்னின் தந்தையாகிய ஸ்ரீ கிருஷ்ணனின் சோதரி! உன்னைச் சரணடைந்து மனமார நம்பினேனென்றால் உனக்கேன் இன்னும் சந்தேகம், அன்னையே!

தேவகணங்களுக்கு ஆதாரமானவளே! பார்வதி தேவியே! அகண்ட ரூபிணி! இமவானின் செல்வப் புதல்வி! நிர்வகிக்க முடியாமல் நான் உன்னையே கோரிச் (சரணடைந்தால் உனக்கேன் சந்தேகம்?)

அரக்கருடன் போர் புரிவதில் வீரமுடையவளே! கடலை நிகர்த்த கம்பீரமுடையவளே! குயிலைப் பழிக்கும் இனிய குரலுடையவளே! மனோகரமான லீலைகள் புரிபவளே! பரிதாபம் தாள முடியாமல் (நான் உன்னைச் சரணடைந்தால் உனக்கேன் சந்தேகம்!)

நலந்தருபவளே' கௌரி! தீச்செயல்களெனும் காட்டை யழிக்கும் கோடரி! இத்தியாகராஜனின் நிர்மலமான இதயத்தில் சஞ்சரிப்பவளே! தர்மஸம்வர்த்தினி! ஓங்காரி!

## 474

ஆரபி^, சாபு

ப. *ஸுந்த^ரி நிந்நு வர்ணிம்ப ப்^ரஹ்மாதி^
ஸுரலகைந தரமா (ஸுந்)

அ. குந்த^ரத^ந ஸநந்த^நாதி^
வந்தி^த நே நெந்த த்ரிபுர (ஸுந்)

ச. 1. கலகலமநு முக, களலநு க^நி கலு-
வலராஜு பூ^,மிகி ராடா^யெ

---

* திருவையாறு தர்மஸம்வர்த்தனி தேவியைக் குறித்த கீர்த்தனம்
* திருவொற்றியூரில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் திரிபுர சுந்தரியம்மனைக் குறித்த கீர்த்தனம்.

செலகு^ நீ லாவண்யமுநு க^நி
யலநாடே^ வலராஜு^ கா^நக போயெ
நிலுவரமகு^ நீ க^ம்பீ^ரமுநு க^நி
ஜலராஜு^ ஜட^ வேஷு^டா^யெ
ப^லமைந தீ^ரத்வமுநு க^நி கநகா-
சலுடு^ தாசில ரூபுடா^யெ த்ரிபுர (ஸு^ந்)

2. கநுலநு க^நி ஸிக்^கு^ப^டிக^ண்டு^மீநுலு
வநதி^வாஸமு ஸேயநாயெ
ஜநநி நீ சிறுநவ்வு காந்தி ஸோகி சிவு-
ட^நுபமௌ சுப்^ருடா^யெ
மிநுகு ஸொம்முல சேல காந்துல மெறபுலு
க^நி நிமிஷமு நிலுவதா^யெ
கநகாங்கி^ நீ ஸ்வரமுநு விநி வாணி ம-
க^நி ஜிஹ்வநு தா^ பூ^நிகாயெ த்ரிபுர (ஸு^ந்)

3. பாவநமு ஸேயு பி^ருது^நி க^நி ப^க்த
பாபமு பாரிபோநாயெ
ஏவேள நீ த^யசேத ஸத்கவுலெல்ல
காவ்ய முலநு ஸேயநாயெ
மாவருநிகி செல்லலநி ஸந்தோஷமுந
தே^வி பெத்^த^லு பல்கநாயெ
பா^விஞ்சி நீ பாத^முந த்யாக^ராஜு^
பா^வுக மநுகோ நாயெ த்ரிபுர (ஸு^ந்)

திரிபுர சுந்தரி தேவியே! உன் திருவழகைவருணிக்கப் பிரமன் முதலிய தேவருக்கும் சாத்தியமா? முல்லையை நிகர்த்த பற்களை யுடையவளே! சனந்தனர் முதலியோரால் வணங்கப்படுபவளே நான் எம்மாத்திரம்?

பளபளவென்று ஒளிவீசும் உன் முகக் களையைக் கண்டு சந்திரன் இப்புவிக்கு வராமல் (வானத்திலேயே) நின்றுவிட்டான். பிரகாசிக்கும் உன் வனப்பைக் கண்டு மதனன் அன்றே மறைந்து போனான். நிலையான உனது கம்பீரத்தைக் கண்டு சமுத்திர ராஜன் நீர் வடிவங்கொண்டு சடமானான். திடமான உன் தைரியத்தைக் கண்டு மேரு பர்வதம் சிலையாக மாறிற்று.

உன் கண்ணழகைக் கண்டு வெட்கிக் கயல் மீன்கள் கடலில் மறைந்து வசிக்கத் தொடங்கின. தாயே! உன் புன்னகையின் ஒளி உடலின் விழவும் சிவபெருமான் வெண்ணிறங்கொண்டவ ராக ஆயினர், மின்னும் உன் அணிகளையும், பொன்னுடையின் ஒளியையுங்கண்டு மின்னல் ஒரு கணமும் நில்லாததாயிற்று. பொன்னொளிர் மேனியாளே! இனிய உன் குரலோசை கேட்டு சரசுவதி தன் கணவனான பிரமனின் நாவைஇருப்பிடங் கொண் டாள்.

பரிசுத்தமாக்கும் உன் புகழைக்கேட்டு பக்தரின் பாவங்கள் எங்கோ ஓடி மறைந்தன. அனவரதம் பெருகும் உன் கருணை யால் நற்கவிகள் காவியங்களை இயற்றலாயினர். நீ திருமகள் நாயகனுக்குத் தங்கையென்று பெரியோர் மகிழ்வுடன் கூறலா யினர், இத்தியாகராஜன் உன்னையே தியானித்து உன் பாதத்தை மங்களகரமென்று கருதலாயினன்.

## 475

அடாண ஆதி

ப. *இலலோ ப்ரணதார்த்திஹருட$^v$னுசு பே-
ரெவரிடி$^v$ரே சங்கருட$^v$நி நீ (கி)

அ. த$^v$லசி கரகி$^v$ சிரகாலமு பத$^v$முந
த$^v$ண்ட$^v$மிடி$^v$ந நாயெட$^v$ த$^v$ய லேதா$^v$யெ (இ)

ச: கர சரணயுரமு நொஸலு பு$^v$ஜமுலு
த$^v$ரணி ஸோக ம்ரொக்கக$^v$லேதா$^v$
சரணமநுசு மொரலிட$^v$லேதா$^v$பஞ்-
சநதீ$^v$ச த்யாக$^v$ராஜநுத நீ (கி)

வணங்குபவர் துயர் தீர்ப்பவனென்றும், நலம் புரிபவ னென்றும் இவ்வுலகில் யார் உனக்குப் பெயரிட்டனர்? உன்னையே நினைந்து உள்ளமுருகி வெகுகாலம் உனது திருவடிகளில் தண்ட னிட்ட என்னிடம் உனக்குச்சிறிதும் தயை இல்லாமற் போயிற்றே!

கை, கால், மார்பு நெற்றி, தோள் ஆகிய (எட்டு) அவயங் வங்கள் பூமியிற்படியுமாறு நான் உன்னை (சாஷ்டாங்கமாக) வணங்கவில்லையா? ''நீயே சரண்'' என்று முறையிடவில்லையா? பஞ்சநதீசனே! தியாகராஜன் வணங்கும் தெய்வமே!

---

* திருவையாறு பஞ்சநதீசரைக் குறித்த கீர்த்தனை.

## 476

அடாணா ஆதி

ப. *அம்ம த⁴ர்மஸம்வர்த⁴நி
யாது³ கோவம்ம மா— (ய)

அ. இம்மஹி நீஸரி யெவ—
ரம்ம சிவுநி கொம்ம மா (ய)

ச. 1. தா⁴த்ரி த⁴ரநாயக ப்ரிய
புத்ரி ம³தந கோடி மஞ்ஜுள
காத்³ரி அருண நீரஜத³ள
நேத்ரி நிருபம சுப⁴
கா³த்ரி பீட²நிலயே வர ஹஸ்த
த்⁴ருத வலயே பரம ப-
வித்ரி ப⁴க்த பாலந து⁴ரந்த⁴ரி
வீரசக்தி நே நம்மிநா (ந)

2. அம்ப³ கம்பு³கண்டி² சாரு க-
த³ம்ப³ க³ஹந ஸஞ்சாரிணி
பி³ம்பா³த⁴ர தடி³த்கோடி
நிபா⁴ப⁴ரி த³யா வாரிநிதீ⁴
சம்ப³ராரி வைரி ஹ்ருச்சங்கரி
கௌமாரி ஸ்வரஜித
தும்பு³ரு நாரத³ ஸங்கீ³த மாது⁴ர்யே
து³ரிதஹாரிணி மா (ய)

3. த⁴ந்யே த்ர்யம்ப³கே மூர்த⁴ந்யே
பரமயோகி³ ஹ்ருத³ய-
மாந்யே த்யாக³ராஜ குல ச-
ரண்யே பதிதபாவநி கா—

* திருவையாறு தர்மஸம்வர்த்தனி அம்மனைக் குறித்த கீர்த்தனை

ருண்யஸாக'ரி ஸதா' அப-
ரோக்ஷமு கா'ராதா' ஸஹ்ய-
கங்யா தீரவாஸிநி பராத்பரி
காத்யாயநி ராம ஸோத'ரி மா (ய)

தாயே! தர்மஸம்வர்த்தனி! என்னை ஆட்கொள்வாய். இவ்வுலகில் உனக்கு நிகர் யார் உளர்? பரமசிவன் பத்தினியே!

அன்னையே! இமவானின் அருமை மகளே! கோடி மன்மதரை நிகர்த்த அழகிய சரீரமுடையவளே! சிவந்த தாமரையிதழையொத்த விழிகளையுடையவளே! இணையில்லாத சுப சரீரமுடையவளே! ஸ்ரீ பீடத்தில் நிலை பெற்றவளே! அழகிய கரங்களில் கங்கணமணிந்தவளே! தூய்மை பொருந்தியவளே! பக்தரைக் காப்பதில் பொறுப்புடையவளே! வீரசக்தி! நான் உன்னையே நம்பினேன்.

தாயே! சங்குபோன்ற கழுத்துடையவளே! அழகு மிகும் கதம்ப வனத்தில் சஞ்சாரம் செய்பவளே! கோவைக்கனியொத்த அதரமுடையவளே! கோடி மின்னல்களையொத்த ஒளியுடையவளே! கருணாசாகரி! மன்மதனை எரித்த பரமசிவனின் இதயத்திற்கு இன்பமளிப்பவளே! கௌமாரி! குரல் இனிமையால் தும்புரு, நாரதர் ஆகியோரின் இசையை வென்றவளே! பாபங்களை அகற்றுபவளே!

பாக்கியவதி! பார்வதி தேவி! பூசிக்கத் தகுந்தவளே! பரம யோகியரின் உள்ளங்களில் போற்றப்படுபவளே! தியாகராஜனின் குல தெய்வமே! பாவிகளையும் புனிதமாக்குபவளே! கருணைக்கடலே! அனவரதமும் பிரத்தியட்சமாகி சேவை தரலாகாதா? காவேரி தீரத்தில் வசிப்பவளே! பராத்பரி! காத்யாயனி! இராம சோதரி!

## 477

பே'க'ட' ரூபகம்

ப. *ஸுந்த'ரி நந்நிந்த'ரிலோ
ஜூசி ப்'ரோவவம்ம த்ரிபுர (ஸுந்)

அ. ஸந்த'டி'யநி இந்து'முகி,
ஜாலமு வத்'த'ம்ம த்ரிபுர (ஸுந்)

ச. 1 பா'லே பாலிதஸுரஜாலே க'மநஜித ம-
ராளே ஸ்வக்ருதாகி,லலீலே திலகாங்கித
பா,லே நீ ப',க்தியு மேலே நீ த'யரா-
தே'லே தல்லி த்ரிபுர (ஸுந்)

* திருவொற்றியூர் திரிபுரசுந்தரியம்மனைக் குறித்த கீர்த்தனை.

2. வாணீவிநுதே சுகபாணீ வரசேஷ
வேணீ லலிதே கல்யாணீ ஸாம்ப<sup>v</sup>சிவநி
ராணீ மாது<sup>v</sup>ர்ய வாணீ நம்மிதி பூ<sup>v</sup>-
போ<sup>v</sup>ணீ தல்லி தரிபுர (ஸுந்)

3. வாரீசஸ்துத க<sup>v</sup>ம்பீ<sup>v</sup>ரே யாதி<sup>v</sup>புரவி-
ஹாரீ தீ<sup>v</sup>நஜநாதா<sup>v</sup>ரீ நக<sup>v</sup>ராஜ கு-
மாரீ து<sup>v</sup>ஷ்கர்மவிதா<sup>v</sup>ரீ த்யாக<sup>v</sup>ராஜு
கோரியுந்ந த்ரிபுர (ஸுந்)

அன்னே திரிபுரசுந்தரியே! உன் பக்த கோடிகளுள் என்னை யும் கடாட்சித்துக் காப்பாற்று. மதிவதனியே! இது இரைச்சலென்று கருதித் தாமதம் செய்யாதே.

பாலா திரிபுரசுந்தரி! தேவர் குழாங்களைக் காப்பவளே! அன்னத்தை வென்ற நடையுடையவளே! பிரபஞ்சத்தை விளையாட்டாக சிருஷ்டித்தவளே! நெற்றியில் திலகமணிந்தவளே! உன்னிடம் பக்தி செலுத்துவதே சிறந்தது. உன் கருணைவராத தேன் தாயே?

சரசுவதியால் வணங்கப் பெறுபவளே! கரத்தில் கிளியை ஏந்தியவளே! ஆதிசேடனையொத்த சடையுடையவளே! லலிதே! மங்களம் பொருந்தியவளே! பரமசிவன் நாயகியே! இன்மொழியாளே! உன்னை நம்பினேன். மலர்க் கூந்தலுடைய தாயே!

சமுத்திர ராஜன் துதிக்கும் கம்பீரமுடையவளே! திருவொற்றியூரில் விளங்குபவளே! எளிய மாந்தரின் ஆதாரமே! மலையரசன் மகளே! கொடிய கர்மங்களையகற்றுபவளே! தியாகராஜன் நாடும் அன்னையே!

## 478

பந்துவராளி சாபு

ப. *சம்போ<sup>v</sup> மஹாதே<sup>v</sup>வ சங்கர கி<sup>v</sup>ரிஜாரமண (சம்)

அ. சம்போ<sup>v</sup> மஹாதே<sup>v</sup>வ சரணாக<sup>v</sup>த ஜநரக்ஷக
அம்போ<sup>v</sup>ருஹலோசந பதா<sup>v</sup>ம்பு<sup>v</sup>ஜ ப<sup>v</sup>க்திம் தே<sup>v</sup>ஹி (சம்)

ச. பரமத<sup>v</sup>யாகர ம்ருக<sup>v</sup>த<sup>v</sup>ரத<sup>v</sup>ர க<sup>v</sup>ங்கா<sup>v</sup>த<sup>v</sup>ரத<sup>v</sup>ரணீ
த<sup>v</sup>ரபூ<sup>v</sup>ஷண த்யாக<sup>v</sup>ராஜ வரஹ்ருத<sup>v</sup>ய நிவேச
ஸுரப்<sup>v</sup>ருந்த <sup>v</sup> கிரீடமணி வர நீராஜிதபத<sup>v</sup>கோ<sup>v</sup>-
புரவாஸ ஸுந்த<sup>v</sup>ரேச கி<sup>v</sup>ரீச பராத்பர ப<sup>v</sup>வஹர (சம்)

---

* சென்னைக்கடுத்த கோவூரில் விளங்கும் சுந்தரேசுவரப் பெருமானைக் குறித்த கீர்த்தனை.

சம்போ மகாதேவ! சங்கர! மலைமகள் நாயகனே! சரண் புகுந்தவரைக் காப்பவனே! தாமரைக் கண்ணனே! உனது திருவடி பக்தியை அருள்வாயாக.

நீ மிகுந்த தயையுள்ளவன். சந்திரனையும் கங்கையையும் (முடிமீது) அணிந்தவன். ஆதிசேடனை ஆபரணமாகக் கொண்டவன். இத்தியாகராஜனின் தூய உள்ளத்தில் வசிப்பவன். தேவர் குழாங்களின் மணிமுடிகளால் தீபாராதனை செய்யப்பெறும் பாதன். கோவூரில் கோயில் கொண்டவன். சுந்தரேசன், கைலாயத்தின் அதிபதி. பரம்பொருள். சம்சாரப் பிணியைத் தீர்ப்பவன்.

## 479

பந்துவராளி — ஆதி

ப. சிவ சிவ சிவ யனராதா ஓரீ (சி)

அ. பவ பயபாதல நணசுகோராதா (சி)

ச. 1. காமாதுல தெககோஸி பர
பாமல பருல தநமுல ரோஸி
பாமரத்வமு நெடபாஸி அதி
நேமமுதோ பில்வார்ச்சந ஜேஸி (சி)

2. ஸஜ்ஜந கணமுல காஞ்சி ஓரி
முஜ்ஜகதீச்வருலநி மதி நெஞ்சி
லஜ்ஜாதுல தொலகிஞ்சி தந
ஹ்ருஜ்ஜலஜமுந நு பூஜிஞ்சி (சி)

3. ஆகமமுல நுதியிஞ்சி பஹு
பாகுலேநி பாஷலு சாலிஞ்சி
பாகவதுலதோ போஷிஞ்சி வர
த்யாகராஜ ஸந்நுதுடநி யெஞ்சி (சி)

மாந்தரே! (நீங்களனைவரும்) சிவ, சிவ, சிவவென்று ஜபம் செய்து உலக வாழ்க்கையின் தொல்லைகளைப் போக்கிக்கொள்ளக் கூடாதா?

காமம் முதலியவற்றை அடியுடன் அறுத்து, பர ஸ்திரீகளையும் பிறர் பொருளையும் (விரும்புவதை) வெறுத்து, மூடத்தனத்தை ஒழித்து, அதிநியமத்துடன் வில்வதளம் கொண்டு அருச்சனை செய்து (சிவ சிவ சிவ எனலாகாதா?)

நல்லோரை அடுத்து, அவர்களே தெய்வங்களென்று மனத்தில் கருதி, வெட்கம் முதலியவற்றை அகற்றி, இதயத் தாமரையில் சிவனைப் பூசித்து (நாமஸ்மரணை செய்யலாகாதா?)

வேதங்களோதிப் பரம்பொருளைத் துதித்து, பயனற்ற பேச்சுக்களை விலக்கி. பரம பாகவதருடன் கூடி நாம சங்கீர்த்தனம் செய்து, இத்தியாகராஜன் வணங்கும் தெய்வம் அவனேயென்று கருதி (சிவ சிவ சிவவென்று துதிக்கலாகாதா?)

## 480

சுத்ˇதˇ்ஸாவேரி ஆதிˇ

ப. *தˇரிநி தெலுஸுகொண்டி த்ரிபுரஸுந்-
தˇரி நிந்நே சரணண்டி (தˇ)

அ. மருநி ஜநகுடைˇந மா தசரத,கு-
மாருநி ஸோதˇரி தˇயாபரி மோக்ஷ (தˇ)

ச. 1. அம்பˇ த்ரிஜகˇதீச்வரீ முக,ஜித விதுˇ,
பிˇம்பˇ யாதிˇபுரமுந நெலகொந்ந கந-
காம்பˇரி நம்மிநவாரி கபீˇ,ஷ்ட வ-
ரம்புˇ லொஸகுˇ தீˇநலோகரக்ஷகி
அம்புˇஜபˇ,வ புருஹூத ஸநந்தˇந
தும்புˇரு நாரதுˇலந்தˇரு நீதுˇ ப-
தˇம்புˇநு கோˇரி ஸதாˇ நித்யாநந்-
தாˇம்புˇதிˇ,லோ நோலலாடுˇசுண்டேˇ (தˇ)

2. மஹதைˇச்வர்ய மொஸகிˇ தொலிகர்ம
கˇஹநமுநு கொட்ˇடி ப்ˇரோசுதல்லி
குˇஹ கˇஜமுக, ஜநநி யருண பங்கே-
ருஹ நயந யோகிˇஹ்ருத்ஸதˇந
துஹிநாசல தநய நீ சக்கநி
மஹிமாதிசயம்முல சேதநு யீ
மஹிலோ முநிகˇணமுலு ப்ரக்ருதி வி-
ரஹிதுலை நித்யாநந்துˇலைந (தˇ)

3. ராஜித மணிகˇண பூˇ,ஷணி மதˇகˇஜ
ராஜகˇமந லோகசங்கரி தˇநுஜ

---

*திருவொற்றியூர் திரிபுரசுந்தரியம்மனைக் குறித்த கீர்த்தனை.

ராஜகு³ருநி வாஸரஸேவ தந-
கே ஜந்ம ப,லமோ கநுகொ³ண்டிநி
ஆ ஜந்மமு பெத்³த³லு தம மதி³லோ
நீ ஜபமே முக்திமார்க³ மநுகொந
ராஜசேக,ருண்ட³கு³ ஸ்ரீ த்யாக³-
ராஜ மநோஹரி கௌ³ரி பராத்பரி

புகலிடம் அறிந்துகொண்டேன். திரிபுரசுந்தரீ அன்னையே! உன்னையே சரணடைந்தேன், மதனனைப் பெற்றவனும், எங்கள் தசரத குமாரனுமான இராமனின் சோதரி! கருணை நிறைந்த வளே? மோட்சம் நல்கும் (புகலிடம் அறிந்து கொண்டேன்).

நீ மூவுலகிற்கும் ஈசுவரி. முகவழகினால் சந்திரனை வென்ற வள். திருவொற்றியூரில் கோயில் கொண்டவள். பொன்னுடை யணிந்தவள். நம்பினோர்க்கு அவரவர் விரும்பும் வரங்களை யருளி எளியோரைக் காப்பவள். பிரமன், இந்திரன், சனந்த னர், தும்புரு, நாரதர் முதலிய அனைவரும் உன் பொன்னடியை நாடி நித்தியானந்தக் கடலில் மிதந்து கொண்டிருக்கையில் (புகலிடம் அறிந்துகொண்டேன்.)

பெருஞ்செல்வங்களை வழங்கி, பழவினையாகிய காட்டை யழித்துக் காப்பாற்று, தாயே! முருகனுக்கும், கணபதிக்கும் அன்னையே! அன்றே மலர்ந்த செந்தாமரையொத்த விழியாளே! யோகியரின் உள்ளத்துறைபவளே! இமவானின் செல்வியே! அபாரமான உன் அதிசய மகிமையால் இப்புவியில் முனிவர் குழாங்கள் இயற்கையின் பற்றையறுத்துப் பேரானந்தமடையும் (புகலிடம் அறிந்து கொண்டேன்.)

ஒளிவீசும் மணிகளையணிந்தவளே! மதயானை போன்ற நடையுடையவளே! உலகிற்கு நலம் புரிபவளே! எச்சன்மத்தின் பயனாகவோ அசுரரின் ராஜகுருவான சுக்கிரனின் கிழமையன்று (வெள்ளிக்கிழமை) உன் தரிசனம் கண்டு மகிழ்ந்தேன். பிறவி முதல் பெரியோர் தங்கள் மனத்தில் உன் ஜபமே முக்திக்கு வழியென்பதை அறிவர். பிறைசூடிய பரமசிவன் நாயகியே! அம்பிகே! பராத்பரி!

## 481

கல்யாணி ஆதி³

ப. *ஸுந்த³ரி நீ தி³வ்யருபமுநு
ஜூட³ த³நகு தொ³ரிகெநம்ம (ஸுந்)

அ. மந்த³க³மந நீ கடாக்ஷப³லமோ
முந்த³டி பூஜாப,லமோ த்ரிபுர ஸுந்)

* திருவொற்றியூரைக் குறித்த கீர்த்தனை.

ச. 1. பு'விலோ [1]வரமௌ ஶ்ரீமதா'தி'
புரமுந நெலகொந்ந நீ ஸொக'ஸு விநி
ஸுவிவேகுலைந ப்'ரஹ்மாதி
ஸுரலு கு'ம்பு கூடி'
கவி வாஸரபு ஸேவ கநுங்கொ'ந
கலுகு'நா யநி கரகு'சு மதி'லோ
தி'வி த'த்தரமு படு'சுநுண்ட'கா'
தீ'ந ஜநார்த்தி ஹாரிணி த்ரிபுர (ஸுந்)

2. கலிலோ தீ'நரக்ஷகி யநி ஸப',
கலிகி'ந தாவுந பொ'க'டு'து'நம்மா
ஸலலித கு'ண கருணாஸாக'ரி நீ
ஸாடி யெவரம்மா
அலஸிவச்சிநந்து'கு நா மநஸு
ஹாயி செந்து' நா யநி யுண்ட'க'மறி
கல கலமநி ஸுரஸதுலு வருஸகா'
கொ'லுசு சுக்ரவாரபு முத்'து' த்ரிபுர (ஸுந்)

3. நந்து க'ந்நதல்லி நா ஜந்மமு
நாடு' ஸப,லமாயெ நம்மா இபுடு'
க',ந த'ரித்'ருநிகி பைகமுவெலெ
க'நுல பண்டு'வுகா'
வநஜநயந யெண்டு' பைருலகு ஜலமு
வலெ சுப',தா'யகி காம
ஜநகுநி ஸோத'ரி ஶ்ரீத்யாக'-
ராஜமநோஹரி கௌ'ரி (ஸுந்)

திரிபுரசுந்தரியன்னையே! உனது திவ்விய வடிவைக் காண எனக்கு வாய்ப்புக் கிடைத்ததம்மா! மென்னடையாளே! இது உன் அருட்பார்வையின் பலனோ? அல்லது நான் முன் செய்த பூசையின் பயனோ?

இப்புவியில் சிறப்புற்ற ஆதிபுரமென்னும் திருவொற்றியூரில் எழுந்தருளியிருக்கும் உன் திருவழகைக் கேள்வியுற்று விவேகம் நிறைந்த பிரமன் முதலிய தேவர்கள் ஒன்றுகூடி

---

1 நாரமௌ

வெள்ளிக்கிழமையன்று உன் தரிசனம் கிடைக்குமாவென்று ஏங்கி மனங்கரைந்து வானுலகில் பதறும்பொழுது, எளியவர் துயர் தீர்ப்பவளாகிய உன் (வடிவைக் காணும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது.)

இக்கலியுகத்தில் எளியோரைக் காப்பவள் நீயே என்று சபை கூடுமிடங்களெல்லாம் புகழ்வேன். இனிய குணங்கள் நிரம்பிய கருணைக் கடலே! உனக்கு நிகர் யார்? களைத்து வந்திருக்கும் என் மனம் நிம்மதியடையுமாவென்று நான் இருக்கையில் கலகலவென்று தேவ ஸ்திரீகள் வரிசையாக வந்து உன்னை வணங்கும் இனிய இவ்வெள்ளிக்கிழமை சேவை (எனக்குக் கிடைத்தது.)

என்னைப்பெற்ற தாயே! என் சன்மமே இன்று தான் பயனுடையதாக ஆயிற்று. இன்று பரம ஏழைக்குச் செல்வம் கிடைத்தது போலவும், என் கண்கள் பெற்றபேறு போலவும், வாடிய பயிருக்கு நீர் போலவும் (உன் தரிசனம் கிடைத்தது.) தாமரைக் கண்ணியே! நன்மை புரிபவளே! மன்மதனைப் பெற்ற திருமாலின் சோதரி! தியாகராஜனின் (சிவனின்) மனத்தை வசீகரித்தவளே! கௌரி!

## 482

ஸாரங்கᵛ — சாபு

ப. *ஏஹி த்ரிஜகᵛதீᵛச ஸம்போᵛ, மாம்
பாஹி பஞ்சநதீᵛச (ஏ)

அ. வாஹிநீச ரிபுநுத ஸிவஸாம்பᵛ
தேᵛஹி த்வதீᵛய கராப்ᵛஜாவலம்பᵛம் (ஏ)

ச. 1. கᵛங்காᵛத,ᵛர தீ,ᵛர நிர்ஜர ரிபு
புங்கᵛவ ஸம்ஹார
மங்கᵛளகர புரப,ᵛங்கᵛ வித்,ᵛருத ஸுகு-
ரங்காᵛப்த ஹ்ருதᵛயாப்ᵛஜ
ப்,ᵛருங்கᵛ ஸுபாங்கᵛ (ஏ)

2. வாரணாஜிந சேல [1]ப,ᵛவோதᵛதி,ᵛ
தாரண ஸுரபால
க்ரூர லோகாப்,ᵛர ஸமீரண ஸுப்,ᵛர ஸ-
ரீர மாமகாகᵛ,
ஹர பராத்பர (ஏ)

---

*திருவையாறு பஞ்சநதீசரைக் குறித்த கீர்த்தனை,

1 ப,வநீரதி;

3. ராஜசேக₂ர கருணாஸாக³ர நக³
ராஜாத்மஜா ரமண
ராஜ ராஜ பரிபூஜிதபத³ த்யாக³-
ராஜ ரூப வ்ருஷ-
ராஜாதி₄ராஜ (ஏ)

மூவுலகிற்கும் ஈசனே வருக! சம்போ! பஞ்சநதீசுவரனே! என்னைக் காத்தருள். (சமுத்திரத்தை ஆசமனம் செய்த) அகஸ்திய மகரிஷியால் வணங்கப்பெறும் சிவபெருமானே! உனது தாமரைக் கையினால் எனக்கு ஆதரவு அளிப்பாயாக.

(நீ) கங்கையையணிந்தவன், தீரன். தேவ சத்துருக்களின் தலைவர்களை வதைத்தவன். நன்மை புரிபவன். முப்புரமெரித்தவன். மானைக் கையிலேந்தியவன். பக்தரின் இதயத் தாமரையை வட்டமிடும் வண்டு. சுப சரீரமுடையவன்.

யானைத் தோலை ஆடையாக அணிந்தவன். உலகவாழ்க்கையென்னும் கடலைத் தாண்டச் செய்பவன். தேவரைக் காப்பவன். கொடிய மனிதர்களென்னும் மேகங்களைச் சிதற அடிக்கும் காற்று. தூய சரீரமுடையவன். எங்கள் பாவங்களையகற்றுபவன். பரம்பொருள்.

சந்திரசூடன். கருணைக் கடல். மலையரசனான இமவானின் புதல்வியின் நாயகன். குபேரன் வணங்கும் பாதன். தியாகேசனின் உருவமுடையவன் நந்திகேசுவரனை வாகனமாக உடையவன்.

## 483

கல்யாணி ஆதி³

ப. *சிவே பாஹி மா மம்பி³கே
ச்ரித ப₂லதா³யகி (சி)

அ. குவேர ஜோத்தர தீரவாஸிநி
காத்யாயநி த₄ர்மஸம்வர்த₄நி (சி)

ச. 1. ஸ்வபா₄வமௌ நீ ப்ரபா₄வமு மஹா-
நுபா₄வுராலைந பா₄ரதிகி பொ³க³-
ட₃பா₄ரமையுண்ட₃ பா₄வஜாரா-
தி பா₄ம நே நெந்த பா₄க்₃யதா³யகி (சி)

2. கலார்த₂மிதி₃ சசிகலாத₄ரீ யுப-
வலாரி மாயாவிலாஸிநி ஸ-

* திருவையாறு தர்மஸம்வர்த்தனியம்மனைக் குறித்த கீர்த்தனை.

கலாகᵛமநுதே பᵛ₁லாரியந சுபᵛ₁-
ப₁லாலொஸகுᵛ பரம லாலநம்முந (சி)

3. சராசரமயீ கராரவிந்தᵛமு-
ந ராம சிலுகநு பிᵛராந பூᵛநி
பராகுகᵛ ஜூடᵛராதுஸ்ரீ[1]ரகு-
வராப்துடᵛகுᵛ த்யாக'ராஜவிநுதே (சி)

*பார்வதி தேவியே! அம்பிகே! தஞ்சமடைந்தவர்களுக்குப் பலன்களையளிப்பவளே! என்னைக் காத்தருள். காவேரி நதியின் வட கரையில் கோயில் கொண்டவளே! காத்யாயனி! தர்மஸம் வர்த்தனி!*

*இயற்கையாக அமைந்துள்ள உன் மகிமையைப் புகழ்வது கலைமகளாகிய சரசுவதிக்கே பாரமாக இருக்கையில் நான் எம்மாத்திரம்? மன்மதனை யெரித்த சிவபெருமானின் நாயகியே!*

*கலைகளின் பொருள் இதுவே. சந்திர கலையையணிந்தவளே! விஷ்ணுமாயையே உருவானவளே! சகல வேதங்களாலும் துதிக்கப்படுபவளே! ''பலே! நன்று!'' என்று புகழுமாறு சுப பலன் களையளிப்பாயாக. பரம வாத்சல்யத்துடன் (என்னைக் காத்தருள்.)*

*சராசரங்களில் நிறைந்தவளே! தாமரையொத்த உன் கரத்தில் இராம நாமத்தைச் செப்பும் கிளியை எப்பொழுதும் ஏந்தியும், என்னிடம் நீ பராமுகம் காட்டலாகாது. இராம பிரானுக்கு ஆப்தனான தியாகராஜனால் துதிக்கப்பெறுபவளே!*

## 484

**கல்யாணி** **ரூபகம்**

ப. *நம்மி வச்சிந நந்நு
நயமுகᵛ ப்ᵛரோவவே நிநு (நம்)

அ. கொம்மநி வரமுல நொஸகேᵛ
கோவூரி ஸுந்தᵛரேச (நம்)

ச. வேதᵛபுராணகᵛம சாஸ்த்ராதுᵛலு குᵛமிகூᵛடிᵛ
பாதᵛமுலநு கᵛநஜாலக பᵛதிமாலி வேடᵛ
நாதᵛரூப [2]ஸ்ரீ ஸௌந்தᵛர்யநாயகீபதே பேᵛ₁தᵛ
வாதᵛரஹித த்யாகᵛராஜ வரதᵛ ஸுந்தᵛரேச்வர நிநு (நம்)

---

1 ஹரி
* கோவூரைக் குறித்த ஐந்து கிருதிகளுள் ஒன்று.
2 ஸௌந்தர்ய நாயகிப மதபேᵛ₁த

உன்னையே நம்பி வந்தடைந்த என்னை அன்பு கூர்ந்து காத்தருள். ''இதோ பெற்றுக்கொள்'' என்று வரங்களை அருளும் கோவூர்வாழ் சுந்தரேசப் பெருமானே!

வேதம், புராணங்கள், ஆகமங்கள், சாத்திரங்கள் முதலியன ஒன்றுகூடி (தேடியும்) உன் சரணாரவிந்தங்களைக் காண முடியாமல் உன்னைக் கெஞ்சி இரந்தன. நாதமே உருவானவனே! சௌந்தரிய நாயகியம்மனின் கேள்வனே! மத வேறுபாட்டை அடிப்படையாகக் கொண்ட வாதங்களுக்குப் புறம்பானவனே! தியாகராஜனுக்கு வரமளிப்பவனே! சுந்தரேச!

## 485

**கல்யாணி** **ரூபகம்**

ப. *ஈச பாஹிமாம் ஜக³ (தீ³)

அ. ஆசரக³ண மத³ஹரண பி³-
லேசயபூ⁴ஷ ஸப்தரு (ஷீ)

ச. 1. ஸ்ரீநாத₁ கரார்ச்சித தொ³ரிகேநால்புல கீத³ர்சந
மேநாடி தப:ப₁லமோ நீ நாமமு தொ³ரிகெ
ஸ்ரீ நாரத³கா³நப்ரிய தீ³நார்தி நிவாரண பர-
மாநந்தா³ர்ணவ [1]தே³வ யநாப ஜநக ஸப்தரு (ஷீ)

2. வ்யாஸார்ச்சித பாலித நிஜதா³ஸ பூ⁴லோக கை-
லாஸம்ப³நு பல்குலு நிஜமே ஸாரெகு க³ண்டி
நீ ஸாடி யெவரய்யா நீ ஸாக்ஷாத்காரமுந
வேஸட லெல்ல தொ³லகெ³ நேடே³ஜந்மமு ஸாப₁ல்யமு (ஈ)

3. ஸாமாதி³ நிக³ம ஸஞ்சார ஸோமாக்³நி தரணி லோசந
காமாதி³ க₁ண்ட³ந ஸுத்ராமார்ச்சித பாத³
ஹேமாசலசாப நிநுவிநா மரெவரு முநிமநோ
தா⁴ம த்யாக³ராஜ ப்ரேமாவதார ஜக³ (தீ³)

*ஜகதீசனே! அரக்கர் கூட்டத்தின் மதத்தையடக்குபவனே! சர்ப்பத்தையணிந்தவனே! சப்தரிஷீசுவரனே! என்னைக் காப்பாற்று.*

---

** லால்குடியில் எழுந்தருளியிருக்கும் சப்தரிஷீசுவரரைக் குறித்த கீர்த்தனை.*

*1: தே³வயாநாப, தே³வயநாத.*

விஷ்ணுவினால் அருச்சிக்கப்பெறுபவனே! அற்பர்களுக்கு இத்தரிசனம் கிடைக்குமா? எந்நாள் புரிந்த தவத்தின் பலனாகவோ உன் திருநாமம் (எனக்குக்) கிடைத்தது. நாரத கானத்தில் விருப்பமுள்ளவனே! எளியவர் துயர் களைபவனே! பரமானந்தக் கடலே! [1]அக்கினிக்குத் தந்தையானவனே!

வியாச மகரிஷியால் போற்றப்பெறுபவனே! அடியார்களைப் பாலித்தருள்பவனே! இது (லால்குடி) பூலோக கைலாசம் என்பது முற்றிலும் உண்மையே என்பதை நான் அடிக்கடி கண்டு கொண்டேன். உனக்கிணை யாருளர்? உன் சந்நிதியில் (மாந்தரின்) துயர்கள் அனைத்தும் விலகிப் போகும். இன்றே என் சன்மம் பலனுடைத்தாயிற்று.

சாமம் முதலிய வேதங்களால் துதிக்கப் பெறுபவனே! சந்திரன், அக்கினி, சூரியன் ஆகிய முக்கண்களையுடையவனே! காமம் முதலியவற்றை ஒழிப்பவனே! இந்திரன் தொழும் பாதனே! மேரு பர்வதத்தை வில்லாக உடையவனே! உன்னை யன்றி (எனக்கு) யாருளர்? முனிவர் மனத்துறைபவனே! தியாகராஜனுக்கு அன்புருவானவனே!

## 486

யமுநாகல்யாணி — ரூபகம்

ப. *விதி$^v$, சக்ராது$^v$லகு தொ$^v$ரகுநா இடுவண்டி ஸந்-
நிதி$^v$, வேடு$^v$க ஜூதாமு ராரெ (வி)

அ. ஸுதீ$^v$,ஜந ரக்ஷகி த$^v$,ர்மாம்-
பு$^v$தி$^v$,சாயி ஸேவ ஜூட$^v$ (வி)

ச. 1. உடு$^v$பதி முகு,லெல்ல வருஸகா$^v$ பி$^v$ருது$^v$லநு ப$^v$ட்டி
அடு$^v$க$^v$டு$^v$கு$^v$ ஜய ஜய மநகா$^v$ யாவேல்புல வெல
படு$^v$சுலு நிஜநாட்யமாட$^v$கா$^v$ ஸமயம்பு$^v$ந ப-
ஸிடி$^v$ ஸுமவர்ஷமு கு$^v$ரியக$^v$ வடி$^v$வடி$^v$காமரகோடுலு
தட$^v$ ப$^v$ட$^v$ பூ$^v$,மிநி த$^v$ண்ட$^v$மு லிட$^v$கா$^v$ ஸந்-
தோஷமுநு கட$^v$கண்டிநி ஜூசு ஸொக$^v$ஸு (வி)

---

1. இங்கு வரும் ''யநாப ஜநக'' என்பதற்கு ''அக்கினிக்குத் தந்தையானவனே'' என்று கல்லூரி வீரபத்திர சாஸ்திரியவர்கள் பொருள் கூறுகிறார். ''அநாப'' என்பதற்கு ''அக்கினி'' என்ற அர்த்தம் எங்கும் காணப்படவில்லை. ''தேவயாநாப ஜநக'' என்று வைத்துக் கொண்டால் ''தேவயானையின் நாதனை சுப்பிரமணியக் கடவுளின் தந்தை'' என்று பொருள் கூறலாம். இது ஸ்ரீப(விஷ்ணு), வைதேஹிப (இராமன்) ஸௌந்தர்ய நாயகிப (ஸுந்தரேசர்) என்பதை யொக்கும். ''தேவயநாத ஜநக'' என்ற பாடத்தை அனுசரித்து ''தேவனே! அநாதைகளுக்குத் தந்தைபோன்றவனே'' என்று பமிடிபாடி காமேசு வரராவ் உரையெழுதியிருக்கிறார்.

* திருவையாற்றைக் குறித்த கீர்த்தனை.

2. ஸ்ரீரமணினி ஜூசி ப'ல்கக'நவரத்நால
ஹாரபு ஸருலல்லாட'க' ஆமொலக நக'பு
கௌ'ரவ மந்தடநு மெறயக' நாவேள ஸநக
நாரதா'து'லெல்ல பொ'க'ட'கா' கீரமுநநு
பூ'நி ஸரிக' சீரகாந்தி மெறயகா' ச்ருங்-
கா'ரி கொலுவுண்டு' சுக்ரவாரபு ஸொக'ஸெல்லஜூட' (வி)

3. தருணருண வத'ந கமலினி அத்யந்தமைந
கருணரஸ பூர்ண நேத்ரினி ஸ்ரீ பஞ்சநத'
புரமுந நெலகொந்ந தல்லினி ஸ்ரீ த்யா-
க'ராஜ பரிபாலினி ஸர்வரூபிணி
சரணக'த வத்ஸலினி வரமணுலு த'க'த'க'யநி
மெறயு கங்கணயுதகர பரதே'விநி ஸேவிம்ப (வி)

பிரமன், இந்திரன் முதலியோருக்கும் கிடைக்குமா இவ்விதமான சந்நிதி சேவை? காண்போம் வாரீர்! அறிஞரைக் காப்பவளும், தர்மமென்னும் கடலில் துயில்பவளுமான இவ்வன்னையின் சேவையைக் காண பிரமன் முதலியோருக்கும் கிடைக்குமா?)

மதியை நிகர்த்த முகமுடைய மாதர் வரிசையாக நின்று அம்பிகையின் விருதுகளைக் கையிலேந்தி அடிக்கு அடி ''ஜய ஜய'' வென்று முழங்க, தேவலோகத்து நாட்டியக் கணிகையர் அழகுற நர்த்தனம் செய்ய, அத்தருணம் பொன் மலர் மழையெனப் பெய்ய, விரைவுடன் தேவர் குழாங்கள் தடதடவென்று பூமி மீது விழுந்து வணங்க, சந்தோஷத்துடன் (அம்பிகை) கடைக் கண்ணால் (அனைவரையும்) பார்க்கும் அழகு (பிரமன் முதலி யோருக்கும் கிடைக்குமா?

ஸ்ரீ மகாலக்ஷ்மியை நோக்கி (அம்பாள்) ஏதோ கூறவும், நவரத்தினங்கள் பதித்த மாலைகள் அசைந்தாடவும், (அம்பிகை யின்) முல்லைச் சிரிப்பின் அழகினால் சபை முழுதும் ஒளி வீச, அச்சமயம் சனகர், நாரதர் முதலியோர் போற்றவும், கரத்தில் கிளியை ஏந்தி, சரிகைப் பட்டாடையின் பிரகாசம் கண்களைப் பறிக்க, லாவண்யவதியாகிய பராசக்தி கொலுவீற்றிருக்கும் வெள்ளிக்கிழமை சேவையைக் காண (பிரமன் முதலியோருக்கும் கிடைக்குமா?)

அன்றே மலர்ந்த தாமரையொத்த முகத்தவளும், எல்லையற்ற கருணா ரசம் ததும்பும் விழியாளும், திருவையாற்றில் எழுந்தருளியிருக்கும் தேவியும், தியாகராஜனை இரட்சிப்பவளும், எங்கும் நிறைந்தவளும், அடைக்கலம் புகுந்தவரைக் காப்பவளும்,

விலையில்லா ரத்தினங்கள் பளபளவென்று பிரகாசிக்கும் கங்கணங்களையணிந்த கரங்களையுடையவளுமான இப்பரதேவதையைச் சேவிக்க (பிரமன் முதலியோருக்கும் கிடைக்குமா?)

## 487

*ஆந்தோ^v^ளிக (மே. 22) தே^v^சாதி^v^

ப. ராக^v^ஸுதா^v^ ரஸபானமு சேஸி
ராஜில்லவெ ஓ மநஸா (ரா)

அ. யாக^v^யோக^v^ த்யாக^v^ போ^v^க^v^ ப,ல மொஸங்கே^v^ (ரா)

ச. ஸதா^v^சிவ மயமகு^v^ நாதோ^v^ங்கார ஸ்வர-
விது^v^லு ஜீவந்முக்துலநி த்யாக^v^ராஜு தெலியு (ரா)

மனமே! ராகம் எனப்படும் அமுத ரசத்தைப் பருகி மலர்ச்சி பெறுவாயாக. அது யாகம், யோகம், தியாகம், போகம் இவற்றின் பலன்களைத் தர வல்லது. ஸதாசிவ (சுத்த சைதன்ய) ஸ்வரூபமான நாதம், பிரணவம், ஸ்வரம் இவற்றையறிந்தவர்களே ஜீவன் முக்தரென்று இத்தியாகராஜன் அறிவன்.

---

* மயூரத்^v^வநி

இரண்டாம் பாகம் முற்றிற்று,



ஸ்ரீ

# தியாகராஜஸ்வாமி கீர்த்தனைகள்

## மூன்றும் பாகம்

### திவ்ய நாம ஸங்கீர்த்தனை

### 488

தோடி ரூபகம்

ப. ரே மாநஸ சிந்தய ஸ்ரீராமம் (ரே)

ச. 1. ஸாகேதநக ரநாது நி ஸமாநரஹித மாவருநி (ரே)

2. க தகாம ஜநஹ்ருத யார்ணவ கலாத ருநி இளாதி புநி (ரே)

3. ப க்தாக பயோத ர ப்ரப ஞ்ஜநுநி நிரஞ்ஜநுநி (ரே)

4. விநதா தநயார்த்தி தமோ விபா கருநி சுபா கருநி (ரே)

5. தே வேச ஸமாராத் யுநி தி க ம்ப ருநி சித ம்ப ருநி (ரே)

6. வந்தா ரு ப் ருந்தா ரக வராப யது நி ராக வுநி (ரே)

7. வர த்யாக ராஜார்ச்சித பதா ம்பு ஜுநிஸதா ஹிதுநி (ரே)

மனமே! இராமனையே (என்றும்) நினைப்பாயாக. ஸாகேத நகரத்தின் (அயோத்தியின்) அதிபதியும், இணையற்ற திருமகள் நாயகனும், காமம் முதலியவையற்ற சாதுக்களின் இதய மென்னும் கடலுக்குச் சந்திரன் போன்றவனும், பூமிதேவியின் கணவனும், பக்தரின் பாவங்களெனும் மேகங்களுக்குக் காற்றை யொத்தவனும், மாசற்றவனும, கருடனின் துயராகிய இருட்டை யகற்றும் சூரியனும், நலம் புரிபவனும், இந்திரனல் ஆராதிக்கப்படுபவனும், திசைகளை ஆடையாக உடையவனும், சைதன்யமே ஆவரணமாக உடையவனும், அடிபணியும் தேவர் களுக்கு வரங்களையும் அபயத்தையும் அளிக்கும் இராகவனும்,

தியாகராஜனால் அருச்சிக்கப் பெறும் தாமரைப் பாதனும், எப்பொழுதும் இதம் தருபவனுமாகிய (இராமனை நினைப்பாயாக).

## 489

தோடி^v ஆதி^v

ப. ஹரி யனுவாரி ஸரி யெவ்வரே (ஹ)

ச. 1. பலுவித^v முல தலபுல ரோஸி
நிலவரமகு^v ப^v க்தியு ஜேஸி
மலயநி மதபே^v த^v மு கோ^v ஸி (ஹ)

2. கரகு^v சு மதி^v லோ கா^v மிஞ்சி ஹரி
சரணமுலநு ஹ்ருத^v யமுநுஞ்சி
வர சுகமுக, த^v நமநி யெஞ்சி (ஹ)

3. ஈ ஸுக_மெறுக^v நி ஜநசெலிமி
வாஸுகி விஸமே மறிகொலிமி நிஜ
தா^v ஸுல ஸம்பா^v ஷண ப^v லிமிந் (ஹ)

4. நீ ஜபமுந ஹ்ருத^v யமு வேக^v
ராஜில்லநு ஜேஸிந த்யாக^v –
ராஜநுதுநி பேருல பா^v க^v (ஹ)

''ஹரி'' யென்று நாவினால் உரைப்பவர்களுக்கு நிகர் யாருளர்? (மனத்தின்) பல வகைப்பட்ட எண்ணங்களை வெறுத்து, ஸ்திரமான பக்தியை மேற்கொண்டு, வீணான மத வேறுபாடுகளை அறுத்து, உள்ளமுருகி, மனத்தில் ஆசை கொண்டு, ஹரியின் திருவடிகளை இதயத்தில் அமர்த்தி, ஸ்ரீசுகப்பிரம்மத்தின் மொழிகளே செல்வமெனக் கருதி (ஹரியென்று உரைப்பவர்களுக்கு நிகர் யார்?)

இவ்வின்பத்தை அறியாத மாந்தரின் நட்பு வாசுகி யென்ற பாம்பின் விஷமெனவும், துருத்தியினால் ஊதப்படும் உலையெனவும் கருதி, மெய்யடியார்களுடன் சம்பாஷணை புரிவதே வலிமையென்று துணிந்து, ஜபம் செய்வதன் மூலம் இதயத்தை விரைவில், மலரச் செய்யும் (தியாகராஜன் துதிக்கும்) பகவானின் பல திருநாமங்களை நன்றாகச் சுவைத்து (ஹரியென்று கூவுகின்றவர்களுக்கு இணை யாருளர்?)

490

* தே᳚சியதோடி᳚ த்ரிச்ரலகு᳞வு

ப. நமோ நமோ ராக᳞வாய அநிசம்
நமோ நமோ ராக᳞வாய (ந)

ச. 1. சுகநுதாய தீ᳚நப᳚ந்த᳞வே
ஸகலலோக த᳚யாஸிந்த᳞வே (ந)

2. ச்ரித து᳚ரிததமோ ப᳚ஹுரவயே
ஸதத பாலிதாத்᳚பு᳞த கவயே (ந)

3. நிஜஸேவக கல்பக தரவே
அஜ ருத்᳚ராத்᳚யமர ஸுகு᳚ரவே (ந)

4. தீ᳚நமாநவ க᳚ணபதயே
தா᳚நவாந்தகாய ஸுமதயே (ந)

5. ஆயுராரோக்᳚ய தா᳚யிநே
வாயுபோ᳞ஜி போ᳞கி᳚சாயிநே (ந)

6. நூதந நவநீத ப᳚க்ஷிணே
பூ᳞தலாதி᳚ ஸர்வஸாக்ஷிணே (ந)

7. வரக᳚ஜ கரதுலித பா᳚ஹவே
சரஜித தா᳚நவ ஸுபா᳚ஹவே (ந)

8. நாக᳚ராஜ பாலநாய
த்யாக᳚ராஜ ஸேவிதாய (ந)

அனவரதமும் இராகவனுக்கு (எமது) நமஸ்காரம். (அவன்) சுகப்பிரம்மத்தால் வணங்பெறுபவன். தீனபந்து. உலகமனைத்திலு முள்ள கருணையின் கடல் போன்றவன். தஞ்சமடைந்தவரின் பாவங்களென்னும் இருட்டையகற்றுவதில் பல சூரியர்களை நிகர்த்தவன். அற்புதக் கவிகளைச் சதா பாலிப்பவன். மெய்யடியார்க்கு கற்பகத்தருவை யொத்தவன். உருத்திரன் முதலியோரின் சிறப்புற்ற குரு. எளியவர்களான சாதுக்களின் பிரபு. அரக்கரை மாய்ப்பவன். சிறந்த அறிவாளி. ஆயுள், ஆரோக்கியம் முதலியவற்றை யருள்பவன். காற்றைப் புசிக்கும் ஆதிசேடன் மீது பள்ளி கொண்டவன். புதிதாகக் கடைந்தெடுத்த வெண்ணெயுண்பவன். பூவுலகம் முதலிய உலகங்களுக்குச் சாட்சியானவன். சிறந்த யானையின் துதிக்கை யொத்த

* ஸ்ரீதியாகராஜ ஸ்வாமி இயற்றிய முதல் கீர்த்தனை இதுவே யென்று சில சரித்திரங்களில் காணப்பெறுகிறது.

கரமுடையவன். சுபாகுவென்னும் அரக்கனைக் கணையினால் வென்றவன். ஆதிசேடனைப் பாலித்தவன். தியாகராஜனால் சேவிக்கப்பெறுபவன்.

## 491

புந்நாகᵛவராளி (மே. 8) சாபு

ப. பாஹி கல்யாணஸுந்தᵛர ராம மாம்
பாஹி கல்யாணஸுந்தᵛர ராம (பா)

ச. 1. சதிᵛவிநவாடᵛநு காᵛநு ராம
இதிᵛ புᵛத்ᵛத்ᵢயநுசு தெᵛலியலேநு (பா)

2. பᵢஜியிஞ்சுடகு புᵛத்ᵛதிᵢலேக ராம
பᵛதிமாலி திரிகிᵛதிந்தாᵛக (பா)

3. திᵛந திᵛந முதᵛரமு கொறகை ராம
தᵢநிகுல காᵛசிதீவறகை (பா)

4. ஆலு ஸுதுலபைநி ப்ரேம நீ ப-
தாᵛல நுஞ்சநைதி ராம (பா)

5. ஸம்ஸார ஸுக,மு ஸதமநி நாம
ஸார மெறுகᵛ மறசிதிநி (பா)

6. விஷய ஸுகா,துᵛல ரோயலேக
விர்ரவீகிᵛ மோஸமாய (பா)

7. நேரமெந்தோ சேஸிநாநு ஏமி
நேரமநுசு வேடிᵛநாநு (பா)

8. சுகஸந்நுத நந்நு கᵛந்ந தண்ட்ᵛரி
யொகபாரி சரணநுகொந்ந (பா)

9. தம்மிகந்நுல ரகுᵢவீர நிநு
நம்மிதி நந்நேலுகோரா (பா)

10. நிநு நம்முவாரிதேᵛ மேலு ராம
நீ பாᵛதஸேவ வேயிவேலு (பா)

11. ஸாகேதராம நாமீதᵛ ப்ரேம
லேகுண்டுᵛடகு மரியாதாᵛ (பா)

12. சரண்ய கோஸலராஜ ராம

பரிபாலித த்யாக^ராஜ, (பா)

கல்யாணசுந்தர வடிவனுன இராம! என்னைக் காத்தருள். நான் கற்றவன் அல்லன். எது நற்புத்தி யென்பதை அறியா தவன். உன் பஜனையைச் செய்ய புத்தியில்லாமல் பிறரை இரந்து இதுவரையில் திரிந்தேன். தினந்தோறும் வயிற்றுப் பிழைப்பிற்காக தனிகர்களை நாடினேன். மனைவி, மக்கள் மீது கொண்ட ஆசையை உன் திருவடிகளில் செலுத்த முடியாதவ ஞனேன். இல்வாழ்க்கையின் இன்பமே நிலையானதென்று எண்ணி உன் திருநாம சாரத்தை அறிவதை மறந்தேன். சிற்றின்பத்தை வெறுக்க முடியாமல் கர்வத்தினுல் மோசம் போனேன். எத்தனையோ பிழைகள் புரிந்தும் மன்னிக்குமாறு உன்னை வேண்டினேன். சுகர் வணங்கும் என் தந்தையே! ''நீயே சரண்'' என்று முறையிட்டேன். தாமரைக் கண்ணனுன இரகுவீர! உன்னையே நம்பிய என்னை ஏற்றுக்கொள். உன்னை நம்பியவரின் வாய்ப்பே சிறப்புற்றது. உன் திருவடி சேவை பத்து லட்சத்திற்கு ஈடாகும். ஸாகேத ராம! என் மீது அன்பு காட்டாமலிருப்பது நியாயமல்ல. சரண்யனே! கோசலராம! தியாகராஜனைக் காப்பவனே!

## 492

புந்நாக^வராளி ஆதி^

ப. தவ தா^ஸோஹம் தவ தா^ஸோஹம்

தவ தா^ஸோஹம் தா^சரதே, (த)

ச. 1. வரம்ருது^பா^ஷ விரஹிததோ^ஷ

நரவரவேஷ தா^சரதே, (த)

2. ஸரஸிஜநேத்ர பரமபவித்ர

ஸுரபதிமித்ர தா^சரதே, (த)

3. நிந்நுகோரிதிரா நிருபமசூர

நந்நேலுகோரா தா^சரதே, (த)

4. மநவிநி விநுமா மறவ ஸமயமா

இநகுல த^நமா தா^சரதே, (த)

5. க^நஸமநீல முநிஜநபால

கநகது^கூல தா^சரதே, (த)

6. த்ர நீவண்டி தைவமு லேதண்டி
சரணநுகொண்டி தாசரதே, (த)

7. ஆகமவிநுத ராகவிரஹித
த்யாகராஜநுத தாசரதே, (த)

தயரதன் மைந்த! நான் உனது தாசன். உன்னடிமை. இனிய பேச்சுடையவனே! (நீ) களங்கமற்றவன். சிறந்த மானிட அவதாரம் எடுத்தவன். தாமரைக் கண்ணன். தூய்மை வாய்ந்தவன். இந்திரனின் தோழன். இணையற்ற சூரன். நான் உன்னையே வேண்டி நின்றேன். என்னை ஏற்றுக்கொள். என் விண்ணப்பத்தைக் கேள் என்னை மறக்க இதுவா தருணம்? சூரியகுலச் செல்வமே! மேக வண்ணனே! முனிவரைக் காப்பவனே! பீதாம்பரமணிந்தவனே! இப்புவியில் உன்னைப் போன்ற தெய்வங்கள் எவருமிலர். நான் உன்னையே சரணடைந்தேன். மறைகளால் போற்றப்படுபவனே! பற்றில்லாதவனே! தியாகராஜன் வணங்கும் தாசரதி!

## 493

புந்நகவராளி சாபு

ப. எவரு தெலிய பொய்யேரு
விவரமுலேநி பூஜலு ஜேஸேரு (எ)

ச. 1. முதமுந பருல ருகலகு ப்ர
ஸூதுல காசிஞ்சி தா கூடுடகு
உதரமு நிம்புடகொறகு சால
ஊரநூர திரிகே ராவரகு (எ)

2. கொந்ந தொத்துல மாட மீரலேக
அந்ந தம்முல தல்லிதண்ட்ருல நேர-
மெந்நுடே பநிகாநி ஸாரமைந
பந்நகசயந நீ பதமு நம்மேரா (எ)

3. ஆலு பிட்டலநு நம்மேரு வாரி
காசிஞ்சி பருல கொம்பல முஞ்சேரு
காலுநிவல்ல நிண்டாரு ராம
கஷ்டமு ஜெந்தி புவிநி புட்டேரு (எ)

4. பெத்ᵛத³லதோ க³ல்லலாடி³ ராம
புᵛத்ᵛதி⁴லேநி து³நிகுல தா³ வேடி³
வத்ᵛத³ந வாரிதோ மோடி³ இட்லு
பொத்ᵛது³ போவுடகா³நி பதிதுல கூ³டி³ (எ)

5. ஈஸு³ந மரியாத³ லேது³ நிண்டு³
காஸு³ க³ல்கி³நவாநி கந்நிட வாது³
ஆஸ நீயெட³ க³ல்க³போ³து³ நிஜ
தா³ஸு³லு எவரோகா³ சேதகா³து³ (எ)

6. பந்நுக³ மநகே சக்தியநி
யந்நி கல்லலநுசுநு தொ³ங்க³ ப⁴க்தி
அந்ந இதே³டி விரக்தி ராம
கந்ந தண்ட்³ரி இதா³ பேத³யுக்தி (எ)

7. யோகு³லு மேநெறுங்க³லேக தம-
கே க³தியநி த்⁴யாநிந்துருகா³க
போ⁴கி³சயந ஏலுகோக ராம
த்யாக³ராஜு³நிபை நீ கிங்க பராகா (எ)

(சாமானிய மக்கள்) விவரம் அறியாமல் ஏதோ பூசை செய்வார்களே தவிர, உன்னை அறிந்துகொள்ளத்தக்கவரல்லர். இன்பமாகப் பிறர் பணத்தையும், பிறர் பெண்டிரையும் விரும்பி அவர்களையடையவும், வயிற்றை நிரப்பவும் இறுதிவரையில் திரிவார்களே தவிர (உன்னை அறியார்).

விலைக்கு வாங்கிய பெண்டிரின் துர்ப்போதனையை மீற முடியாமல் அண்ணன், தம்பி, தாய், தந்தை முதலியோரின் குற்றங்களை நினைப்பதே இவர்களுக்குப் பணியே தவிர, ஆதிசேடன் மீது துயிலும் உன் திருப்பாதங்களை நம்புவார்களா?

மனைவி, மக்கள் மீது மோகங் கொண்டு அவ்வாசையினால் பிறர் குடியைக் கெடுக்க முற்படுபவர். இராம! காலன் புரியும் யமயாதனையால் கஷ்டப்பட்டுத் திரும்பவும் இப்புவியில் பிறக்கின்றனர்.

பெரியோரிடம் பொய் பேசி, விவேகமற்ற தனிகரைத் தேடித் திரிந்து, உதவி புரியாவிடில் அவர்கள் மீது கோபங் கொண்டு, பதிதருடன் கூடிக் காலம் கழிப்பர்.

பொறுமையுள்ள இடத்தில் மரியாதை இராது. பெருஞ் செல்வம் படைத்தவனுக்கும் இறுதியில் அபகீர்த்தியே உண்டாகும். ஆயினும், உன்னிடம் (அம்மாந்தர்) பக்தி செலுத்துவதில்லை. உண்மையான பக்தர்களை அறிந்துகொள்ளவும் இவர்களால் முடியாது.

தங்கள் பலமே மெய்யென்றும், மற்றவை பொய்யென்றும் கூறி மனிதர் கள்ள பக்தி புரிகின்றனர். இதுவா வைராக்கியம்? இராம! என்னப்பனே! இது ஒரு யுக்தியா?

உண்மையான யோகியர் மெய்ம்மறந்து வேறு கதியில்லை யென்று உணர்ந்து உன்னையே தியானிப்பர். பாம்பின் மீது துயில்பவனே! என்னை ஏற்றுக்கொள்ளாமல் இன்னும் பராமுகமா?

## 494

புந்நாக³வராளி — சாபு

ப. மானஸ ஸஞ்சர ரே ராமே (மா)

ச. 1. வரமுநி ப⁴க்தலோக சயார்யே
பரமபாவந நிர்ஜரவர்யே முக²ஜித பா⁴ர்யே (மா)

2. ஸ்வரஜித க⁴நரவ மாது⁴ர்யே
ஸுரவைரி நிசய தமஸ்ஸூர்யே நிருபம் சௌர்யே (மா)

3. விகஸித ஸரஸீருஹநேத்ரே
மகராங்க கோடி ஸங்நிப⁴ கா³த்ரே கௌசிகமித்ரே (மா)

4. சுகமுக, விநுத ஸுசாரித்ரே
அகளங்க ஸீதா ஸுகளத்ரே கருணபாத்ரே (மா)

5. அக³ணித லோக ச³ணுதா⁴ரே
நக³வைரி ரிபு ஜலத³ஸமீரே து³ர்ஜநதூ³ரே (மா)

6. விக³ளித மத³ ஹ்ருத³யாகா³ரே
நிக³மாக³ம ஸஞ்சாரே ஹரிபரிவாரே (மா)

7. கமலாஸந நுத கு³ணக்³ராமே
கமலாரி சேக²ர ப்ரியராமே வாரித³ச்யாமே (மா)

8. கமலா ஹ்ருத³ய குமுத³ ஸோமே
அமலசித்த ஜநரிபு பீ⁴மே கோ³பிகாகாமே (மா)

9. வாகீ³சேந்த்³ர ருத்³ராதீ³சே
ராக³லோப⁴ மத³விநாசே ஸகலாதீ³சே (மா)

10. ராஜராஜபூஜித ரமேசே
த்யாக³ராஜ ஹ்ருத³யநிவேசே ஸாகேதபுரீசே (மா)

மனமே! ஸ்ரீராமனிடம் நிலைபெறுவாயாக: (அவன்) உத்தமரான முனிவர், பக்தர் குழாங்களினால் பூசிக்கப் பெறுபவன். தூயவர்களான தேவர்களுக்குத் தலைவன். (நட்சத்திர நாயகனான) சந்திரனை முகவழகினால் வென்றவன். குரலினிமையால் மேக முழக்கத்தை ஜயித்தவன். அரக்கர் கூட்டமென்னும் இருட்டைப் பிளக்கும் சூரியன். இணையற்ற பராக்கிரமசாலி. மலர்ந்த தாமரையொத்த கண்ணன். கோடி மன்மதரை நிகர்த்த வடிவழகன். விசுவாமித்திரனுக்கு இதந் தந்தவன். ஸ்ரீ சுகப்பிரம்மத்தால் போற்றப்பட்ட நற்சரிதையுடையவன். களங்கமற்ற சீதாபிராட்டியின் நாயகன். கருணைக் கடல். கணக்கில்லாத உலகங்களுக்கு ஆதாரமானவன். பர்வதங்களுக்கு எதிரியான இந்திரனின் விரோதிகளான அரக்கரெனும் மேகங்களைச் சிதறவடிக்கும் காற்று. துர்ச்சனர்களை விலக்குபவன். மதத்தை யொழித்தவர்களின் இதயத்தை இருப்பிடமாகக் கொண்டவன். வேத சாத்திரங்களில் சஞ்சரிப்பவன். வானரங்களைப் பரிவாரமாக உடையவன். பிரமனால் போற்றப்படும் திவ்விய குணங்களையுடையவன். பிறைசூடிய பெருமானின் உயிர்த் தோழன். முகில்வண்ணன். இலக்குமியின் உள்ளமெனும் ஆம்பலை மலர்விக்கும் சந்திரன். நிர்மலசித்தமுடையவர்களின் எதிரிகளுக்கு அச்சம் விளைவிப்பவன். கோபியரின் (ஞானியரின்) விருப்பமே உருவானவன். பிரமன், இந்திரன், உருத்திரன் ஆகியோரின் தலைவன். ஆசை, உலோபம், மதம் ஆகியவற்றை ஒழிப்பவன். அனைவருக்கும் ஈசன். குபேரன் வணங்கும் லக்ஷ்மிபதி. தியாகராஜன் உள்ளத்துறைபவன். அயோத்தி மன்னன்.

## 495

கு᳚ண்ட ஜ᳚ம்ப

ப. ராம ராம ராமசந்த்᳚ர ஸ்ரீ
ராம ராம கு᳚ணஸாந்த்᳚ர (ரா)

ச. 1. க᳚ல்லு க᳚ல்லு நீ கரமு ப᳚ட்டி க்ரீ-
க᳚ந்நுல க᳚ண்டே முந்நதி᳚தரமு (ரா)

2. நாஜபு நீஜபு ஸரிகா᳚ ஜேஸிதே ஜேயு
நா ஸு᳚ கமு எவரிகி யெறுக (ரா)

3. இதி᳚ பு᳚த்தி᳚யநுசு யாநதிய்ய வேறே
வேல்பு லேடிகி த᳚நகு ராமய்ய (ரா)

4. செட்டப᳚ட்டநி நா பீ᳚தி ராம
பொ᳚ட்டு க᳚ட்டநி கந்யகரீதி (ரா)

5. எவரிகி த᳚கு᳚நே பா᳚க᳚ ராஜு-
புவலெ ராம த்யாக᳚ராஜ பரிபால (ரா)

இராமசந்திர! நற்குணங்கள் நிரம்பியவனே! "கல் கல்"லென்று (கங்கணங்கள் ஒலிக்கும்) உன் கரத்தை நான் பற்றவும், நீ கடைக்கண்ணால் பார்ப்பதை விட வேறு எனக்கு என்ன வேண்டும்? எனது நோக்கும் உனது நோக்கும் (கண்ணோடு கண்ணிணை) ஒன்றிவிடும்பொழுது நான் பெறும் இன்பத்தை யாரே அறியவல்லார்? இதுவே நற்புத்தியென்று நீ கட்டளையிடும்பொழுது எனக்கு இதர தெய்வங்கள் எதற்கு? நீ என்னைக் கைப்பிடிக்காவிடில், மணமாகாத கன்னிபோல் எனக்கு அச்சம் ஏற்படுகிறது. உனது இராஜ பார்வை வேறு யாருக்குப் பொருந்தும் ஐயனே!

## 496

அஸாவேரி ஆதி

ப. த³சரத₂நந்த³ந தா³நவமர்த³ந
த³யயா மாம் பாஹி (த³)

ச. 1, சாலுநு மாயாஜாலமு சேய
ஜாலநு தோயஜாலயா ராய (த³)

2. மநஸுந நாரீமணுலநு கோ³ரி
ஜநுலதோ ஜேரி ஜெப்ப நீதா³ரி (த³)

3. த³நிகுநி நெஞ்சி தநுவுநு பெ³ஞ்சி
வநிதல கா³ஞ்சி வத³ருது³பொ³ஞ்சி (த³)

4. நே பரதே³சி நேர்ப்புந கா³ஸி
பா³பவே டாஸி பாவநு ஜேஸி (த³)

5. ஸர்வமு நீவு ஸாரெகு ராவு
க³ர்வமுலு லேவு க்³ரக்குந ப்³ரோவு (த³)

6. வலசிதி நீலவர்ண ஸுசீல
சலமிக நேல ஸ்வாமி நே தாள (த³)

7. ஸாக³ர சயந ஸாரஸநயந
த்யாக³ராஜாவந தாரக ஸுகு³ண (த³)

தயரதன் மைந்த! அரக்கரை மாய்ப்பவனே! தயவுடன் என்னைக் காப்பாயாக. உனது மாயா ஜாலங்களெல்லாம் போதும். நான் தாளமாட்டேன். இதயத் தாமரையில் வசிக்கும் பிரபுவே! என் மனத்தில் மாதரைக் காமுற்றதால் நான் மாந்தருடன் கூடி உனது பக்தி மார்க்கத்தை விளக்க முடியாதவனானேன். தனிகரை நாடி, இவ்வுடலை வளர்த்தும்

பெண்கள் மீது காமம் கொண்டு பிதற்றித் திரிந்தேன். நான் பரதேசி. என் துயரையறிந்து, அதையகற்றி, என்னருகில் வந்து என்னைத் தூயவனுக்குவாயாக. அனைத்தும் நீயாக இருந்தும் கருணை காட்டாயோ? எனக்கு இறுமாப்புச் சிறிதும் இல்லை. இக்கணமே என்னைக் காத்தருள். நீல வண்ணனே! சீலமுடையோனே! சுவாமி! என்மீது கோபம் ஏன்? நான் பொறுக்கேன். அலைகடல் துயில்பவனே! தாமரைக் கண்ண! தாரக நாமமுடைய சுகுணனே!

## 497

தந்யாஸி — சாபு

ப. ஸ்ரீராம தாஸதாஸோஹம் அந
நீரஜநேத்ர நீகேல ஸந்தேஹம் (ஸ்ரீ)

ச 1. கட்டு காநராநி குண்டா-ராம
பட்டுகோ தாட நீபேரு தெப்பண்ட (ஸ்ரீ)

2. சலசித்தமநு நலலகுநு ராம
செலகு நீ வாமஹஸ்தமு வைரியகுநு (ஸ்ரீ)

3. காமாதுலநு நக்ரபாதா, தீர்ப்ப
ராமய்ய நீ சேதி சக்ரமு லேதா (ஸ்ரீ)

4. அஹமநு ஜடத்வமணசி ப்ரோவ
ஸஹஜமௌ நீ சேதி சரமுலு லேவ (ஸ்ரீ)

5. துஷ்கர்மமநு கொண்ட லெகய ராம
நிஷ்கல்மஷ பவநஜுடுண்ட ஸதய (ஸ்ரீ)

6 ஜநந மரணமநு ஸுடிநி நில்ப
கநமைந நீயாஜ்ஞ காதநு வடிநி (ஸ்ரீ)

7. ஜாதி கொகரு கூடிநாரம் ப்ரீதி
சேத தெலிஸிகொண்டிமி நாமஸாரம் (ஸ்ரீ)

8. பந்நுக பவமதிகோரம் ராம
நிந்நு விநாந்ய தைவமுல நு கோரம் (ஸ்ரீ)

9. மத மத்ஸரமுலநு கஜமுலகு நீ
பத கமலாங்குச ரேக, அங்குசமு (ஸ்ரீ)

10. சோகாது^v^லு பர்வதமுலகு
நீ கராங்கித வஜ்ரரேக, வஜ்ரமு (ஸ்ரீ)

11. வரகு^v^ண ராஜாதி^v^ராஜ ராம
பரமபாவந பாலித த்யாக^v^ராஜ (ஸ்ரீ)

ஸ்ரீராம! உனது தாசர்களுக்கு நான் தாசன் (தாசானுதாசன்) என்றால் உனக்கேன் சந்தேகம்? (சம்சாரமாகிய) கரை தெரியாத கடலைக் கடக்க உன் திருநாமமே தெப்பமாகும். சித்தத்தில் தோன்றும் சஞ்சலங்களென்றும் அலைகளுக்கு (அபயமளிக்கும்) உனது இடது கையே எதிரியாகும். காமம் போன்ற முதலைகள் புரியும் இடர்களை யொழிக்க உனது கையில் சக்கராயுதம் இல்லையா?'' ''நான்'' என்ற சடத் தன்மையை யகற்றி என்னைக் காக்க உன் கரத்தில் அம்புகள் இல்லையா? கொடிய வினைகளெனும் மலைகளைத் தாண்டச்செய்வதற்குக் களங்கமற்ற வாயு குமாரன் உளனன்றோ? தயை நிரம்பியவனே! பிறப்பு, இறப்பெனும் பெருங் காற்றுடன் கூடிய வெள்ளத்தின் வேகத்தை நிறுத்த உனது ஆக்ஞையே போதும். ஒரே சாதியைச் சேர்ந்த நாங்கள் (பக்தர்கள்) ஒன்றுகூடி பக்தி பரவசத்தினால் உனது திருநாமத்தின் சாரத்தை யறிந்துகொண்டோம். சம்சாரம் மிகக் கொடியது. ஆகவே, உன்னையன்றி இதர தெய்வங்களை நாங்கள் அடிபணியோம். மதம், பொறாமை ஆகிய யானைகளுக்கு உன் தாமரைப் பாதத்தின் அடையாளமே அங்குசம் (யானைத் தோட்டி). துயரம் முதலிய மலைகளைப் பிளக்க உன் பொற்கையின் இரேகைகளே வச்சிராயுதம். உயரிய குணங்களுடைய இராஜாதி ராஜனே! பரமபாவந! தியாகராஜனைப் பாலிப்பவனே!

## 498

பூ^v^பாலம் (மே. 8) சாபு

ப. *தீ^v^நஜநாவந ஸ்ரீராம தா^v^நவஹரண ஸ்ரீராம
வீநவிமாந ஸ்ரீராம மீநசரீர ஸ்ரீராம (தீ^v^)

ச. 1. நிர்மல ஹ்ருத^v^ய ஸ்ரீராம கார்முக பா^v^ண ஸ்ரீராம
சர்ம ப^v^லப்ரத^v^ ஸ்ரீராம கூர்மாவதார ஸ்ரீராம (தீ^v^)

2. ஸ்ரீகர ஸுகு^v^ண ஸ்ரீராம ஸ்ரீ கரலாலித ஸ்ரீராம
ஸ்ரீ கருணார்ணவ ஸ்ரீராம ஸூகரரூப ஸ்ரீராம (தீ^v^)

---

* ஸ்ரீ ஜயதேவ ஸ்வாமிகளின் ''ப்ரளய பயோதி^v^ ஜலே'' என்ற அஷ்டபதியைப் போலவும், ஸ்ரீ வேதாந்த தேசிகனின் தசாவதார ஸ்தோத்திரத்தைப் போலவும் அமைக்கப்பட்டுள்ளது இவ்வினிய தசாவதார திவ்விய நாமகீர்த்தனை. பத்து அவதாரங்களையும் எடுத்த பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் என்று ஜயதேவர் கூறுவதுபோல் தியாகராஜர் அந்த பகவான் ஸ்ரீராமனே என்று இந்த கீர்த்தனத்தில் அறுதியிடுகிறார்.

3. ஸரஸிஜ நயந ஸ்ரீராம ஸுரபதி விநுத ஸ்ரீராம
நரவரவேஷ ஸ்ரீராம நரஹரிரூப ஸ்ரீராம (தீˇ)

4. காமிதப,லதˇ ஸ்ரீராம பாமரதூˇர ஸ்ரீராம
ஸாமஜவரதˇ ஸ்ரீராம வாமநரூப ஸ்ரீராம (தீˇ)

5. அகˇ,திமிராதிˇத்ய ஸ்ரீராம விகˇளிதமோஹ ஸ்ரீராம
ரகுˇ,குலதிலக ஸ்ரீராம ப்ˇ,ருகுˇஸுதரூப ஸ்ரீராம (தீˇ)

6. குசலவஜநக ஸ்ரீராம குசலதˇசதுர ஸ்ரீராம
தˇசமுக,மர்தˇந ஸ்ரீராம தˇசரத,நந்தˇந ஸ்ரீராம (தீˇ)

7. கலிமலஹரண ஸ்ரீராம ஜலஜபˇ,வார்ச்சித ஸ்ரீராம
ஸலலிதவசந ஸ்ரீராம ஹலதˇ,ரரூப ஸ்ரீராம (தீˇ)

8. ஸித்ˇதˇ,ஜநப்ரிய ஸ்ரீராம ப்ரஸித்ˇதˇ,சரித்ர ஸ்ரீராம
பˇத்ˇதˇ,ஸுவஸந ஸ்ரீராம புˇத்ˇதாˇ,வதார ஸ்ரீராம (தீˇ)

9. ஜயகரநாம ஸ்ரீராம விஜயரத,ஸாரதே, ஸ்ரீராம
பˇ,யநாசந ஹரே ஸ்ரீராம ஹயமுக,ரூப ஸ்ரீராம (தீˇ)

10. பாˇ,கˇவதப்ரிய ஸ்ரீராம ஆகˇமமூல ஸ்ரீராம
நாகˇஸுசயந ஸ்ரீராம த்யாகˇராஜார்ச்சித ஸ்ரீராம (தீˇ)

எளியோரைக் காப்பவனே! ஸ்ரீராம! (நீ) அசுரரை மாய்ப்பவன். கருட வாகன்ன். மச்சாவதாரம் எடுத்தவன். நிர்மல இதயமுடையவன். கோதண்டமும் பாணமும் ஏந்தியவன். இனிய பலனளிப்பவன். ஆமையுருவானவன். திருவளிக்கும் சுகுணன். இலக்குமியால் அடிவருடப்பெறுபவன். கருணைக் கடல். வராக அவதாரங் கொண்டவன். தாமரைக் கண்ணன். இந்திரனுல் தொழப்பெறுபவன். மானிட உருவம் பூண்டவன். நரசிம்மாவதாரம் எடுத்தவன். விரும்பிய பலனளிப்பவன். பாமர சனங்களை விலக்குபவன். கஜேந்திரனைக் காத்தவன். வாமன உருவங்கொண்டவன். பாவங்களென்னும் இருட்டைப் பிளக்கும் சூரியன். மோகமற்றவன். இரகு குலத்தின் திலகம். பரசுராமனுக அவதரித்தவன். குச, லவர்களின் தந்தை. மங்களம் புரிவதில் நிபுணன். இராவணனைச் சங்கரித்தவன். தசரதன் செல்வன். கலியின் கொடுமைகளைப் போக்குபவன். நான்முகனுல் துதிக்கப்பெறுபவன். இனிய பேச்சுடையவன். கலப்பையை ஆயுதமாகவுடைய பலராம அவதாரமெடுத்தவன். சித்தர்களுக்கு (பவுத்த சன்னியாசிகளுக்கு) பிரியன். பிரசித்தி பெற்ற சரிதையுடையவன். நல்லாடையணிந்தவன். புத்தாவதாரம் எடுத்தவன். வெற்றிதரும் திருநாமமுடையவன்.

அருச்சுனனின் தேர்ப்பாகன். அச்சத்தை யகற்றும் ஹரி. குதிரை முகமுள்ள கல்கி அவதார ரூபன். பாகவதரை நேசிப்பவன். வேதங்களுக்கு மூலமானவன். ஆதிசேடன் மீது துயில்பவன்.

## 499

ஸாவேரி ஆதி

ப. ஸ்ரீராம ராம ராம
ஸீதா ஹ்ருஜ்ஜலதி; ஸோம (ஸ்ரீ)

ச. 1. நீ பாதமூல பக்தி நிண்டாரகா நொஸகி
காபாடு நாபாப மேபாடி ராம (ஸ்ரீ)

2. பலிகி கொந்நாள்ளிபுடு பலுககுண்டே விடுதுநா
குலமர்மமுலநெல்ல தலசி நநு ப்ரோவவய்யா (ஸ்ரீ)

3. பலுமாரு நிநு பாடி பாடி வேடுகொந்நாநு
கலகலமநி நாதோ பலுகவேமய்யா இபுடு (ஸ்ரீ)

4. லோகுல நெரநம்முகோக நீ பாதமுலிந்-
தாகநு மதிநுஞ்ச க்ரீகண்ட ஜூடவேமி (ஸ்ரீ)

5. ராஜசேகர தேவராஜ ராஜீவபவ
பூஜார்ஹ ஸ்ரீ த்யாகராஜுநி மொருலகிஞ்சு (ஸ்ரீ)

ஸ்ரீராம ராம! சீதையின் இதயமெனும் கடலுக்குச் சந்திரனே! உனது திருப்பாதங்களின் மீது பக்தி செலுத்தும் வாய்ப்பை எனக்குப் பரிபூரணமாக அருளி என்னைக் காப்பாற்று. என் பாவங்கள் (உனக்கு) எம்மாத்திரம்?

சில காலம் நீயாகவே என்னுடன் பேசிக்கொண்டிருந்த பின்னர் இப்பொழுது பேசாமலிருந்தால் விடுவேனு? உன் குல மரபை நினைத்துப் பார்த்து என்னை இரட்சிப்பாயாக. பன்முறை உன்னைப் பாடிப் பாடித் துதித்து வேண்டினேன். கலகலவென்று என்னுடன் இச்சமயம் பேசமாட்டாயோ? உலகோரை நம்பாமல் நான் இதுவரையில் உனது திருவடிகளையே என்னுள்ளத்தில் வைத்தும் நீ கடைக்கண்ணுலும் பாராயோ? சிவன், தேவேந்திரன், பிரமன் ஆகியோராலும் பூசிக்கத் தகுதியுள்ளவனே. இத்தியாகராஜனின் முறையீட்டைக் கேட்டு (இரட்சித்தருள்)!

## 500

ஸாவேரி சாபு

ப. ஜய ஜய ஸீதாராம் ஜய ஜய ரகுராம்
ஜய ஜய கல்யாணஸுந்தர காருண்யராம் (ஜ)

ச. 1. சரணுக^வ்த வத்ஸலாக^வ்மஸார
பரமபுருஷ நம்மிதிநி மநஸார (ஜ)

2. பரிபூர்ண காருண்ய பாராவார
ஸுர முநிஜந யோகி^வ்க^வ்ண பரிவார (ஜ)

3. நீ மர்மமெறுக^வ் ப்^வ்ரஹ்மாது^வ்ல வசமா
ராமசந்த்^வ்ர நிஜதா^வ்ஸ ஸ்வவசமா (ஜ)

4. நிசிசரஹரண த^வ்ராதி^வ்ப ராகா
சசிமுக நாபை நீகிந்த பராகா (ஜ)

5. காவவே நநு ஸச்சிதா^வ்நந்த^வ்க^வ்நமா
நாவண்டி தீ^வ்நுநி ப்^வ்ரோசுட க^வ்நமா (ஜ)

6. நீவெ தை^வ்வமநி நெற நம்மிநாநு
தே^வ்வ நீது^வ் நாமமே நம்மிநாநு (ஜ)

7. அஜமுக பாலந நித்யாக^வ்ராஜாத்—
மஜ பதிநுத பாலித த்யாக^வ்ராஜ (ஜ)

ஜய ஜய கல்யாண சுந்தர காருண்ய ராம! தஞ்சமடைந்தவரைக் காப்பவனே! மறைகளின் சாரமே! பரமபுருஷ! உன்னை மனமார நம்பினேன். நிறைவு கொண்டவனே! கருணைக் கடலே! தேவர், முனிவர், யோகியர் ஆகியோரைச் சுற்றமாகக் கொண்டவனே! உன் மர்மங்களையறிய பிரமன் முதலியோராலும் சாத்தியமா? இராமசந்திர! மெய்யடியார்க்கு வசமானவனே! அசுரரையழிப்பவனே! உலகாளும் மன்னனே! முழுமதிவதனனே! என் மீது உனக்கு ஏன் இப்பராமுகம்? சச்சிதாநந்த சொரூபனே! என்னைக் காப்பாற்று. என் போன்ற ஏழையைக் காப்பது உனக்கு பாரமா? நீயே தெய்வமென்று நம்பினேன். உன் திருநாமத்தையும் நம்பினேன். பிரமன் முதலியோரைக் காப்பவனே! நித்தியனே! மலைமகள் கணவனால் தொழப்பெறுபவனே!

## 501

ஸாவேரி — சாபு

ப. இந்தகந்ந தெ^வ்ல்பதரமா ஜக^வ்-
தீ^வ்ச்வர நே நீகிதரமா நீதோ (இந்)

ச. 1. நீடிலோநி ராஜீவமுரா ராம
நிநு நம்மி ப்^வ்ரதுகு ஜீவமுரா (இந்)

2. நீவே தந கிஹபரமு ராம
நிந்நு நம்மிந காபுரமு (இந்)
3. க⁄நமுநு கோ³ரு சாதகமு ரீதி
கா³சிதி தந ஹ்ருத்பாதகமு (இந்)
4. ரஜநீசு ஜூசு குமுத³முரீதி
ராஜில்லு நிநு ஜூட³ முத³மு (இந்)
5 நீ கருணே ராஜயோ³கமு மாகு
நீ மாயமெ ராஜபோ⁄க³மு (இந்)
6. ராக⁄வ சுப⁄கர மூர்த்தே த்யாக³-
ராஜு நீவாட³நி கீர்த்தே (இந்)

இதை விட (அதிகமாக) நான் உன்னிடம் கூறுவது சாத்தியமா? ஜகதீசுவரா! நான் உன்னிடமிருந்து வேறுபட்டவனா? உன்னை நம்பி வாழும் வாழ்க்கை நீரில் மலரும் தாமரையை ஒக்கும். உன்னை நம்பி இவ்வுலகில் வாழ்ந்தால் நீயே இக, பர சுகங்களை அளிப்பாய். மேகத்தை (மழையை) விரும்பி நிற்கும் சாதகப் பறவைபோல் என் இதயத் தாபம் உன்னை எதிர்நோக்குகிறது. சந்திரனைக் கண்டு மலரும் அல்லியைப்போல் உன்னைக் காண என் மகிழ்ச்சி பொங்குகிறது. உன் கருணையே எனக்கு ராஜயோகம். உனது மாயா விலாசமே எனக்கு ராஜபோகம். இராகவ! சுபந்தரும் மூர்த்தியே! தியாகராஜன் உன்னைச் சேர்ந்தவன் என்பதே எனது புகழ்.

502

ஸாவேரி ஆதி³

ப. ஸ்ரீராமசந்த்³ர ராக⁄வ ஸகல லோகா-
தா⁄ர த்வமேவ மாமவ (ஸ்ரீ)

ச. 1. கண்டி கெது³ருகா³ ராரா ஸ்ரீ ராம நீ-
வண்டி தை³வமு கா³நரா (ஸ்ரீ)
2. விண்டே யேட³கு போ³து³ரா ஸ்ரீராம நாபே-
ரண்டே நீ கெந்த வாது³ரா (ஸ்ரீ)
3. வேஸட தோசதா³யெநே நா மாட பரி-
ஹாஸகமுக³ போ³யெநா (ஸ்ரீ)
4. பதி கோபிஞ்சிதே மாநவதியைந நிஜ-
ஸதி ரீதி நடு³சுகோநா (ஸ்ரீ)

5. *தல்லி கொ^v^ட்டிதே ஸரகு^v^ந பா^v^லுடு^v^ பத^v^
பல்லவமுல விடு^v^சுநா (ஸ்ரீ)

6. அகலங்க கு^v^ணஸாந்த்^v^ர நாபை கபட மெஞ்-
சகு மய்ய ராமசந்த்^v^ர (ஸ்ரீ)

7. பதி நீவு பரமபாவந ஸ்ரீராம ஸத்^v^-
கதி^v^ நீவு ஸுந்த^v^ராநந (ஸ்ரீ)

8. சாபத^v^ர ப்^v^ரோவ யோசநா நிஜப^v^க்த
பாப த்மிர விமோசநா (ஸ்ரீ)

9. தாஸுடௌ^v^ த்யாக^v^ராஜ ரக்ஷக சித்^v^ பி-
லாஸ ஸாகேதராஜ (ஸ்ரீ)

ஸ்ரீராமசந்திர! இராகவ! சகல லோகங்களுக்கும் ஆதாரமே! நீயே என்னை இரட்சிக்க வேண்டும். என் கண்ணிற்கெதிரே வருக. உன் போன்ற கடவுளை எங்கும் காணேன். என்னைப் பற்றிக் கேள்வியுறும்பொழுதே நீ எங்கு போய்விடுகிருய்? என் பெயரைக் கேட்டதும் உனக்கேன் பிடிவாதம்? என் கஷ்டம் உனக்குத் தோன்றவில்லையா? என் பேச்சும் பரிகாசத்திற் கிடமானதா? கணவன் கோபிக்கும்பொழுது மானவதியான பதிவிரதை நடந்துகொள்வதைப்போல் நான் நடக்கமாட்டேனு? தாய் அடித்தால் மகன் அவளுடைய தளிர் போன்ற பாதங்களை அணைப்பதை விட்டுவிடுவானு? களங்கமற்ற குண நிதியே! என்னிடம் வஞ்சனை செய்யாதே. எனக்கு நாயகனும் கதியும் நீயே. வில் வீரனே! என்னைக் காக்க யோசனையா? அடியார்களின் பாவங்களென்னும் இருளை யகற்றுபவனே? தாசனுகிய தியாகராஜனைக் காக்கும் சித்விலாஸ! ஸாகேதராஜ!

## 503

**ஸாவேரி** **ரூபகம்**

ப. ப^v^லமு குலமுயேல ராமப^v^க்தி காரணமு
வெலயு ஸகல ஸித்^v^து^v^லெல்ல
வெண்ட வச்சுகா^v^நி மேநு (ப^v^)

---

* ''ருஷா நிரஸ்தோபி சிசுஸ்தநந்த^v^யோ''
ந ஜாது மாதுச்சரணௌ ஜிஹாஸதி
(ஆளவந்தாரின் ஸ்தோத்ர ரத்நம்)

(கோபத்தினுல் தாய் வெறுத்துத் தள்ளினும்)
பால் அருந்தும் குழந்தை தாயின் பாதங்களை விடுமா?)
''அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்றவள் தன்
அருள் நினைந்தே யழும் குழவி யதுவே போன்றிருந்தேனே''
(குலசேகராழ்வார்)

ச. 1. நீடகாகி மீநு முநுக^v^ நிரத முத^v^ய ஸ்நாநமா
தேடகநுலு கொங்க^v^கூ^v^ர்ச்ச தே^v^வதே^v^வ த்^v^யாநமா (ப^v^)

2. பத்ரமுலநு மேயுமேக ப^v^லமைந யுபாஸமா
சித்ரப்க்ஷு^v^லெக^v^ய ஸூர்ய சந்த்^v^ருலகுஸாம்யமா (ப^v^)

3. கு^v^ஹல வேஷ கொடுலுண்டே கு^v^ணமு க^v^ல்கு^v^ மௌநுலா
க^v^ஹநமுநநு கோதுலுண்டே க^v^நமௌ வநவாஸமா (ப^v^)

4. ஜங்க^v^மமுலு ப^v^லுககுண்டே ஸங்க^v^திகா^v^மௌநுலா
அங்க^v^மு முய்யநி பா^v^லுரு யபுடு^v^தி^v^க^v^ம்ப^v^ருலா (ப^v^)

5. வலசு த்யாக^v^ராஜ வரது^v^ வர ப^v^க்துலு ஸேயுப^v^க்தி
செலகு^v^ ஸகல ஜநுலகெல்ல செல்லிந காஸௌநுகா^v^ (ப')

உடல் வலிமையும் நற்குலப் பிறப்பும் எதற்கு? இராம பக்தியே அனைத்திற்கும் காரணம். (அது இருந்தால்) சகல சித்திகளும் தாமாகவே பின் தொடர்ந்து வரும்.

காக்கையும் மீனும் தினமும் தண்ணீரில் மூழ்கினால் அது உதய ஸ்நானமாகுமா? கண்களை மூடியவண்ணம் கொக்கு அமர்ந்திருந்தால் அது கடவுள் தியானமாகுமா? ஆடு இலை தின்றால் அது உபவாசமாகுமா? மின்மினிப் பூச்சிகள் வானில் பறந்தால் அவை சூரிய சந்திரருக்கு நிகராகுமா? குகைகளில் வேஷதாரிகள் வசித்தால் ரிஷிகள் ஆகிவிடுவார்களா? காடுகளில் குரங்குகள் வசித்தால் அது வனவாசமாகிவிடுமா? (துறவி வேடம் பூண்ட) ஜங்கமர் (என்ற வகுப்பினர்) பேசாமலிருந்தால் அது மௌனமா? உடலை மூடிக்கொள்ளாத பச்சிளம் குழந்தைகள் திகம்பரராவாரா? பக்தனாகிய தியாகராஜனுக்கு வரமளிக்கும் தெய்வத்தின் மீது அடியார்கள் செலுத்தும் பக்தியே சகல ஜனங்களுக்கும் செலாவணியாகும் நாணயமாகும்.

## 504

ஸாவேரி சாபு

ப. ஸ்ரீராம ராமாச்ரிதுலமு கா^v^மா
நேரமா ப்^v^ரோவ பா^v^ரமா (ஸ்ரீ)

ச. 1. மநஸா நா மாட விநி ஸாரெகு
முக்தி க^v^நுமீ மஞ்சித^v^நுமீ (ஸ்ரீ)

2. பலுவித^v^ கர்மம்பு^v^லயந்து^v^மர்மமு
தெலிஸிகோ ஹரிநி கலுஸு^v^கோ (ஸ்ரீ)

3. லோகுலு தம த்ரோவ யேகமந்து^v^ரு ஒப்பு
கோகவே மோஸபோ^v^கவே (ஸ்ரீ)

4. மாடி மாடிகி நூநெ ரோடியெத்து^v^லு திருகு^v^
தா^v^டிரா மத மேபாடிரா (ஸ்ரீ)

5. ஆ மதமுலயந்து^v^ நேமமு ஸத்யமு
யேமரபோ^v^கு பாமர (ஸ்ரீ)

6. க^v^த்யந்தரமு லேது^v^ ப்ரத்யேகமுந ஜூடு^v^
நித்யுநி க்ருத க்ருத்யுநி (ஸ்ரீ)

7. தொலி ப^v^வ நாடகமுல ஜேயு பாபமு
தொலகு^v^நு ஸுகமு கலுகு^v^நு (ஸ்ரீ)

8. நா த^v^லபுலநுண்டு^v^ ஸ்ரீது^v^நி மநஸெந்து^v^
மீத^v^நோ எவரி போ^v^த^v^நோ (ஸ்ரீ)

9. ஜாட^v^தெ^v^லுஸுகொநி வேடு^v^கொந்ந நந்நு
ஜூட^v^டு^v^ மாடாட^v^டு^v^ (ஸ்ரீ)

10. க்ரோத^v^லோப^v^முலதோ பா^v^தி^v^ஞ்சிந யா-
ராத^v^நோ லேக ஸோத^v^நோ (ஸ்ரீ)

11. ஸத^v^யுநி சிறுநவ்வு வத^v^நுநி பத ப^v^க்தி
வத^v^லநு எந்து^v^ க^v^த^v^லநு (ஸ்ரீ)

12. நேமமுக^v^ தொ^v^லி நோமுந தொ^v^ரிகிந
ராமுநி ஜிதகாமுநி (ஸ்ரீ)

13. சீலுநி ஸத்^v^கு^v^ணசாலிநி ஜூசுடே
சாலுநு அந்யமேலநு (ஸ்ரீ)

14. வலராஜ ஜநகுநி வலசுது^v^நநி பேர
கொ^v^லுதுநு யமுநி கெ^v^லுதுநு (ஸ்ரீ)

15. நா ஜயமுநு த்யாக^v^ராஜுநி ராஜாதி^v^
ராஜுநகு கூ^v^ர்து ராஜிநி (ஸ்ரீ)

*ஸ்ரீராம! நாங்கள் உன்னையே தஞ்சமடைந்தவர்களல்லவா? ஏதேனும் பிழை புரிந்தோமா? அல்லது எங்களைக் காப்பது உனக்கு பாரமா? மனமே! என் பேச்சைக் கேட்டு எப்பொழுதும் முக்தியையே தேடு. அதுவே சிறந்தது.*

2. கோடீசுல கᵛநி ஸாடிலேநி பல்கு-
போᵛடி நொஸகிᵛ மும்மாடிகி வேடᵛநு (நா)
3. ஆசா பிசாசா வேசமு கலுகுᵛ தᵛ-
நேசுல காᵛசே தேசமு நேலுதுᵛ (நா)
4. நாலோநே நீசேலோ ஜிக்கிதி
நீ லோபᵛமு விடᵛவேலோ தெலியநு (நா)
5. பூᵛலோகமுலோ மேலோர்வரு விதிᵛ
வ்ராலோ நீ கௌசாலோ தெலியநு (நா)
6. தூᵛரே பநுலகு தூᵛரேரு கட-
தேரே பநுலநு தேᵛரே மநஸுகு (நா)
7. தொலி தா ஜேஸிந பᵛலமே கᵛலதᵛநி
இல நெஞ்சநி மர்தயுல செலிமெந்துᵛகு (நா)
8. தூᵛஷண ஹர பரதூᵛஷண ஜநகᵛண
பீᵛஷண ஸுதᵛண விபீᵛஷண ஸந்நுத (நா)
9. நோரெப்புடுᵛ நீ பேரே பᵛல்கநீ
வேரே யெவருந்நாரே ராகᵛவ (நா)
10. மித்ரகுலேச சரித்ர ரஸிகஜந
மித்ரமு கோருதுᵛ வ்ருத்ராரி விநுத (நா)
11, வீநவிமாந கவீந ஹ்ருதாᵛலய
தீᵛநஜநாவந தாᵛநவஹர ஸ்ரீ (நா)
12 நா ஜீவுலு மீ நாஜீவுகுதநமு
நே ஜீᵛடநீ த்யாகᵛராஜுல்ல மலரு (நா)

நாராயண! ஹரி! சகல பூதங்களையும் இயக்குபவனே! அழியக்கூடிய செல்வம், குதிரை முதலியவற்றுக்கு நான் ஆசைப் படேன். கோடீசுவரரை பேட்டி கண்டு இணையற்ற சரசுவதியை (கவிதையை) அவர்களுக்கு அர்ப்பணம் செய்து இரப்பதை ஒருநாளும் மேற்கொள்ளேன். ஆசையெனும் பேயின் ஆவேசங்கொண்ட பணக்காரரைக் கட்டளையிடும் தேசத்தை ஆள்பவன் நான். (பகவானுடைய சன்னிதானத்தைச் சேர்ந்தவன்). என்னுள்ளம் உன் கையில் அகப்பட்டிருக்கையில் நீ உன் உலோப குணத்தை ஏன் விடுவதில்லையோ அறியேன். இவ்வுலகில் பிறர் மேன்மையைக் கண்டு மாந்தர் சகியாம லிருப்பது, பிரமன் எழுதிய எழுத்தோ அல்லது உன் சாமர்த்

தியமோ? பிறரைத் தூற்றும் பணியையே (மாந்தர்) மேற்கொள்கிருர்களே தவிர தாங்கள் கடைத்தேறும் வழியை மனத்தாலும் நினைப்பதில்லை. முன்னர் தாங்கள் புரிந்த வினைகளின் பயனை அனுபவித்தே தீரவேண்டுமென்பதை எண்ணுத மனிதரின் நட்பு எனக்கெதற்கு? தோஷங்களை விலக்குபவனே! பிறரை நிந்தனை செய்யும் மாந்தரின் பகைவனே! குணவானே! விபீஷணனுல் வணங்கப் பெறுபவனே! என் நாவு சதா உன் பெயரையே உரைக்கட்டும். எனக்கு வேறு யாருளர்? சூரிய வமிசத்தின் நாயகனே! திவ்விய சரித்திரங்களில் ரசிகத்தனமுள்ளவரின் நட்பையே விரும்புவன் நான். இந்திரனுல் துதிக்கப் பெறுபவனே! கருட வாகனனே! கவி சிரேஷ்டர்களின் இதயத்தை இருப்பிடங் கொண்டவனே! எளியோரைக் காப்பவனே! அரக்கரின் பகைவனே! என் கண்கள் உன் நாசூக்கை (அழகை)க் காணட்டும். அப்பொழுதுதான் இத்தியாகராஜனின் உள்ளம் ஆனந்தமடையும்.

மூன்றும் பாகம் முற்றிற்று.



ஸ்ரீ

# தியாகராஜ ஸ்வாமி கீர்த்தனைகள்

---

## நான்காவது பாகம்

---

## (உத்ஸவ ஸம்பிரதாய கீர்த்தனைகள்)

---

### சூர்ணிகை

---

[1]ஜயது ஜயது ஸகல நிகᵛமாகᵛம குசல கிந்நர கிம்புருஷ ஸித்ᵛதᵛˌ வித்ᵛயாதᵛˌர கீᵛயமாந பᵛஹூ ஜகᵛதுᵛதᵛய ரக்ஷணலய ஹேதுபூᵛˌத சதுராநந ஹரிஹர ப்ரப்ᵛˌருதி சிந்த்யமாந மணித்ᵛ வீபே—ஜித ஸாதுᵛˌஹருத்தாபே—ஸகல ஸூரமுநிநிகர பᵛˌக்தஜந நிசய ஹ்ருதᵛயகாமித ஸந்தாந ஸௌபாᵛக்ᵛய தᵛˌந கநக வாஹநாத்ᵛயஷ்டைச்வர்யதாᵛயக சிந்தாமணிமய மஹா வைகுண்ட, நகᵛரே-நேத்ராநந்தᵛகரே—சண்டᵛ மார்த்தாண்டᵛ மண்டᵛல விலஸித ஸப்த ஹேமப்ராகார சோபாᵛˌயமாந பாᵛநுகோடிஸமாந வஜ்ர ஸ்தம்பாᵛயுத ஸஹித ஸூவர்ண மண்டபாந்தரே—சுபᵛˌ தரே—நவரத்ந கˌசித கநகமய ஹம்ஸதூலிகா தல்பே—சரச்சந்த்ᵛர கோடி நிபᵛˌ சேஷதல்பே—ஸூரநாயகாத்ᵛ யஷ்ட திᵛக்பால மகுட மணி கᵛண நீராஜித பதாᵛரவிந்தᵛ:ஜகᵛதாᵛநந்தᵛ: அநந்த கᵛருடᵛவிஷ்வக்ஸேநாதிᵛ நித்யஸூரி ஜந ஸமேத மஹா ப்ரபாᵛˌவ ஸம்பந்ந:—அகிˌல பᵛˌக்த ஜந ப்ரஸந்ந:—உபᵛˌய பார்ச்வோஜ்வலித கர்ண குண்டᵛல நிந்திᵛத சந்த்ᵛரமண்டᵛல: ஸேவிதமுநிமண்டᵛல: பᵛக்த த்ராணபராயண: ஸ்ரீமந்நாராயண: [2]லக்ஷ்மீரமணோ பᵛˌகᵛவாந்.

---

1. ஜயதி ஜயதி 2. லக்ஷ்மீபதி: விலஸதி

ஸ்ரீமந் நாராயணனும் இலக்ஷ்மியுடன் கூடிய பிரானுமாகிய பகவான் வெற்றியுடன் விளங்குக. சகல வேத சாத்திரங்களில் சமர்த்தரான கின்னரர், கிம்புருடர், சித்தர், வித்யாதரர் ஆகியோரால் துதிக்கப் பெறுவதும், அனேக புவனங்களின் தோற்றம், காத்தல், அழித்தல் இவற்றிற்குக் காரண பூதரான நான்முகன், திருமால், சிவபிரான் ஆகியோரால் சிந்திக்கப்படுவதுமான மணித்தீவில்—சாது ஜனங்களின் இதய வெப்பத்தைத் தணித்துக்கொண்டு தேவர், முனிவர், பக்தர் முதலியோர் மனத்தில் விரும்பும் மக்கட்பேறு, நல்வாழ்வு, செல்வம், பொன், ஊர்தி முதலிய எண்வகைச் செல்வங்களை வழங்கும் சிந்தாமணி நிறைந்த மகா வைகுந்த நகரில்—கண்களுக்கு ஆனந்தம் தரும் நகரத்தில்-உக்கிரமான சூரிய மண்டலத்தில் விளங்கும் ஏழு பொன் மயமான பிராகாரங்களுடன் பிரகாசிக்கும் கோடி சூரியர்களுக்கு நிகரான பதினுயிரம் வைரத் தூண்களுடன் கூடிய பொன் மண்டபத்தில்-மங்களம் தரும் இடத்தில்-நவமணிகளிழைத்த பொன்மயமான ஹம்ஸதூலிகா மஞ்சத்தில்-கோடி சரத்கால சந்திரர்களின் ஒளியையுடைய ஆதிசேடனுகிய படுக்கையின் மீது-இந்திரன் முதலிய எட்டு திக்பாலர்களின் மகுடங்களில் பதித்த இரத்தினக் குவியல்களால் தீபாராதனை செய்யப் பெற்ற திருவடித் தாமரையை உடையவனும் உலகிற்கு ஆனந்தமளிப்பவனும், அனந்தன், கருடன், விஷ்வக்ஸேனர் முதலிய திவ்விய சூரிகளுடன் கூடியிருக்கும் மகிமையுடையவனும், சகல பக்தர்களுக்கும் இன்ப தரிசனம் அளிப்பவனும், இருபுறமும் பிரகாசிக்கும் காதணி குண்டலங்களையுடையவனும், முனிவர் குழாங்களினல் சேவிக்கப் பெறுபவனும், பக்தரைக் காப்பதிலேயே கருத்துடையவனும், ஸ்ரீமந் நாராயணனும் திருவுடன் கூடிப் பொலிந்து நின்ற பிரானுமாகிய பகவான் வெற்றியுடன் விளங்கட்டும்.

## 574

**யதுᵛகுல காம்போᵥஜி [1](ஹெச்சரிக)** — ஜம்ப

ப. ஹெச்சரிககாᵛரார ஹே ராமசந்த்ᵛர
ஹெச்சரிககாᵛ ரார ஹே ஸுᵘகுᵛணஸாந்த்ᵛர (ஹெ)

அ. பச்ச வில்துநி [2]கᵛங்ந
பாலித ஸுᵘரேந்த்ᵛர . (ஹெ)

ச. 1. கநகமயமௌ மகுடகாந்தி மெறயகᵛநு
கᵥநமைந குண்டᵛலயுகᵛம்புᵛ கதᵛலகᵛநு

---

1. பகவானின் திவ்விய மங்கள விக்கிரகத்திற்கு ஹானி ஏற்படாமல் சாக்கிரதையாக எழுந்தருளுமாறு பக்தர்கள் வேண்டுதல்.

2. தண்ட்ᵛரி

க॒நமைந நூபுரயுக³ம்பு³(க॒ல்) க॒ல்லநக³
ஸநகாது³ லெல்லக³நி ஸந்தஸில்லக³நு (ஹெ)

2. ஆணிமுத்யாலஸரு லல்லலாட³க³நு
வாணிபதீந்த்³ரு லிருவருஸ பொ³கட³க³நு
மாணிக்ய ஸோபாநமந்து³ மெல்லக³நு
வீண பலுகுல விநுசு வேட்³க செல்லக³நு (ஹெ)

3. நிநு ஜூட³வச்சு ப॒கி³நி கரம்பு³ சிலுக
மநஸு ரஞ்ஜில்ல நீ மஹிமலநு ப³லுக
மிநுவாஸுலெல்ல விருலநு சால ஜிலுக
க॒ந த்யாக³ராஜு கநு கொ³ந முத்³து³ கு³லுக (ஹெ)

இராமசந்திரனே! நற்குணங்கள் நிறைந்தவனே! நீ எச்சரிக்கையுடன் (சாக்கிரதையாக) எழுந்தருள்க. மன்மதன் தந்தையே! இந்திரனைப் பாலித்தவனே!

பொன் மயமான உனது மகுடத்தின் ஒளி விளங்கவும், அழகிய இரு குண்டலங்கள் அசையவும், இரு கால்களில் சிலம்புகள் கல்லென்று ஒலிக்கவும், ஸனகர் முதலிய முனிவர் கண்டு களிக்குமாறும்,

ஆணிமுத்துக்கள் பொருந்திய மாலைகள் (உனது திரு மார்பில்) அசைந்தாடவும், பிரமன், இந்திரன் முதலியோர் இரு புறமும் துதிக்கவும், மாணிக்கங்கள் பதித்த படிகளில் மெதுவாக (இறங்கி) வீணையின் இன்னிசைக்குச் செவிசாய்த்து குதூகலம் பொங்குமாறு (எழுந்தருள்க).

உன்னைக் காண வரும் உனது தங்கையின் (பார்வதியின்) கையில் உள்ள கிளி உள்ளம் மகிழ உனது மகிமைகளைப் பேச, வானோர் அனைவரும் மலர்களைப் பொழிய, சிறப்புற்ற தியாக ராஜன் கண்டுகொள்ளுமாறு அழகு ததும்ப (எழுந்தருள்க).

## 575

(கௌ³ரீ கல்யாணமு)

[1]சங்கராப॒ரணம் க॒ண்ட³லகு॒வு

ப. ஸீதா கல்யாண வைபோ॒க³மே (ஸீ)
(ராம கல்யாண வைபோ॒க³மே)

ச. 1. பவநஜ ஸ்துதிபாத்ர பாவநசரித்ர
ரவிஸோம வரநேத்ர ரமணீய கா³த்ர (ஸீ)

---

1. குறிஞ்சி

2. ப⁴க்தஜந பரிபால ப⁴ரித சரஜால
புக்தி முக்திதலீல பூ⁴தே³வபால (ஸீ)

3. பாமராஸுர பீ⁴ம பரிபூர்ணகாம
ச்யாம ஜக³த³பி⁴ராம ஸாகேததா⁴ம (ஸீ)

4. ஸர்வலோகாதா⁴ர ஸமரைக வீர (ஸீ)
க³ர்வமாநஸதூ³ர கநகாக³தீ⁴ர (ஸீ)

5. நிக³மாக³ம விஹார நிருபம சரீர
நக³த⁴ராக⁴ விதா³ர நதலோகாதா⁴ர (ஸீ)

6. பரமேசநுதகீ³த ப⁴வஜலதி⁴போத
தரணிகுல ஸஞ்ஜாத த்யாக³ராஜநுத (ஸீ)

ஸீதா (ராம) கல்யாணத்தின் வைபவமே வைபவம். (இராமபிரான்) அனுமனால் துதிக்கப்பெறுபவன். புனிதமான சரிதமுடையவன். சூரிய சந்திரரைச் சிறந்த கண்களாக உடையவன். வடிவழகன். பக்தரைப் பாலிப்பவன். நிறைந்த அம்பறாத்தூணியுடையவன். போகம், மோட்சம் ஆகியவற்றை லீலையாக நல்குபவன். அந்தணரைக் காப்பவன்.

பாமரரான அரக்கருக்கு அச்சம் விளைவிப்பவன். நிறைவேறிய விருப்பங்களுடையவன். நீலவண்ணன். உலகிற்கு ஆனந்தமளிப்பவன். அயோத்தியில் உறைபவன். சகல புவனங்களுக்கும் ஆதாரன். போரில் இணையற்ற வீரன். கர்வமுள்ள மாந்தருக்கு எட்டாதவன். மேரு பர்வதத்தையொத்த தீரன். வேத, ஆகமங்களில் விளையாடுபவன். நிகரற்ற சரீரம் உடையவன். மலைகளை ஏந்தியவன். பாவங்களை யகற்றுபவன். வணங்குபவருக்கு ஆதாரமானவன். பரமசிவனால் துதி பாடப்பெற்றவன். சம்சாரமென்னும் கடலைத் தாண்ட உதவும் ஓடம் போன்றவன். சூரிய வமிசத்தில் நற்பிறவி யெடுத்தவன். தியாகராஜன் வணங்கும் தெய்வம்.

## 576

(¹நலுகு³ பாடலு)

மத்⁴யமாவதி — ஆதி³

ப. நகு³மோமு க³லவாநி நா மநோஹருநி
ஜக³மேலு சூருநி ஜாநகீவருநி (ந)

ச. 1. தே³வாதி³ தே³வுநி தி³வ்ய ஸுந்த³ருநி
ஸ்ரீவாஸுதே³வுநி ஸீதாராக⁴வுநி (ந)

1. நலங்குப் பாட்டுகள்

2. ஸுஜ்ஞாநநிதி⁴நி ஸோம ஸூர்ய லோசநுநி
அஜ்ஞாந தமமுநு அணசு பா⁴ஸ்கருநி (ந)
3. நிர்மலாகாருநி நிகி₂லாக⁴ஹருநி
த⁴ர்மாதி³ மோக்ஷம்பு³ த³யசேயு க⁴நுநி (ந)
4. போ³த⁴தோ பலுமாறு பூஜிஞ்சி நே நா-
ராதி⁴ந்து ஸ்ரீ த்யாக³ராஜ ஸந்நுதுநி (ந)

நகை தவழும் முகத்தவனும், என்னுள்ளம் கவர்ந்தவனும், உலகாளும் சூரனும், ஜானகி நாயகனும், தேவாதிதேவனும், திவ்விய அழகனும், வசுதேவன் மைந்தனும், சீதாராமனும், ஞானத்தின் நிதியும், சந்திர சூரியரைக் கண்களாக உடையவனும் அஞ்ஞானமென்னும் இருளையகற்றும் சூரியனும், நிர்மலமான வடிவமுடையவனும், சகல பாவங்களையும் நீக்குபவனும், அறம் முதல் வீடு (மோட்சம்) வரையில் நான்கு புருஷார்த்தங்களையும் அருளும் பிரபுவும், தியாகராஜனுல் வணங்கப்பெறும் தெய்வமுமாகிய இராமனை உணர்ச்சியுடன் பன்முறை பூசித்து நான் ஆராதனை செய்வேன்.

## 577

[1]சங்கராப⁴ரணம் ஆதி³

ப. நாபாலி ஸ்ரீராம பூ⁴பாலகஸ்தோம
காபாட³ ஸமயமு நீ பாத³முலீர (நா)
ச. 1. ப⁴ளி ப⁴ளி ப⁴க்துல பூஜாப₂லமு நீவநுகொண்டி
நளிநலோசந நீகு நலுகு³ பெ³ட்டேரா (நா)
2. கோடி மந்மத₂லந ஸாடிகா³ நீ ஸொக³ஸு
நாடியுந்தி³ மதி³நி மேடி ஸ்ரீராம (நா)
3. தொலி பூஜா ப₂லமேமோ கலிகெ³ நீபத³ஸேவ
நலுவகைநு நிந்து தெ³லியக³ தரமா (நா)
4. பதிதபாவந நீவு பாலிஞ்சகுண்டேநு
க³தி மாகெவரு மம்மு க்³ரக்குந ப்³ரோவு (நா)
5. கோரி நீ பத³ஸேவஸாரெகு ஸேயநு த³லசி
மாரமண நாலோநே மருலுகொந்நாநு (நா)
6. நிருபேத³ கப்³பி³ந நிதி⁴ரீதி தொ³ரிகிதிவி
வர த்யாக³ராஜுநிகி வரத³ ம்ரொக்கேரா (நா)

---

1 நவரோஜ்

என்னைக் காத்தருளும் ஸ்ரீராம! அரசர் குழாத்தினுல் சூழப் பெற்றவனே! என்னைக் காக்க இதுவே தருணம். உனது திருவடிகளை எனக்களிப்பாயாக. மிகவும் நன்று. பக்தர்கள் புரிந்த பூசைகளின் பயன் நீயேயென்று துணிந்தேன். தாமரைக் கண்ணனே! உனக்கு நலங்கிட்டேன். கொடி மன்மதரை நிகர்த்த உன்னழகு என் மனத்தில் நிலைபெற்றுள்ளது. உயர்மிகு இராமனே! நான் பூர்வத்தில் செய்த பூசையின் பயனுக உனது பாத சேவை கிடைத்தது. நான்முகனுல் கூட உன்னை அறிந்துகொள்ள முடியுமா? இழிந்தவரைத் தூய்மைப்படுத்துபவனே! நீ காப்பாற்ருமல் இருந்துவிட்டால் எங்களுக்கு வேறு யார் கதி? விரைவில் காப்பாற்றுவாயாக. திருமகள் நாயக! உன்னையே விரும்பி உன் பாத சேவையைத் திரும்பத்திரும்ப செய்வதற்கெண்ணி என்னுள்ளத்தில் காதல்கொண்டேன். பரம ஏழைக்குப் பெருஞ் செல்வம் கிடைத்ததுபோல் (நீ எனக்குக்) கிடைத்துள்ளாய். தியாகராஜனுக்கு வரமளிப்பவனே! உன்னை வணங்கினேன்.

## 578

([1]நலுகுˇ மங்கˇளமுலு)

கˇ,ண்டா — ஜம்ப

ப. ஜய மங்கˇளம் நித்ய சுபˇ, மங்கˇளம் (ஜ)

ச. 1. கருணுரஸாக்ஷாய காமாரிவிநுதாய
தருணுருணுதி ஸுந்தˇரபதாˇய
நிருபம சரீராய நிகி,லாகˇமசராய
ஸுரவிநுத சரிதாய ஸுவ்ரதாய (ஜ)

2. குந்தˇஸமரதˇநாய கும்பˇ,ஜஸுகேˇயாய
மந்தˇராகˇ தˇ,ராய மாதˇ,வாய
கந்தˇர்ப்ப ஜநகாய காமித ஸுப,லதாˇய
ப்'ருந்தாˇரகாராதி பீˇ,கராய (ஜ)

3. ஸர்வலோக ஹிதாய ஸாகேத ஸதˇநாய
நிர்விகாராய மாநிதகுˇணுய
ஸார்வபௌˇ,மாய போஷித த்யாகˇராஜாய
நிர்வாணப,லதாˇய நிர்மலாய (ஜ)

ஜய மங்களமும் சதா சுப மங்களமும் உண்டாகுக. அருள் பெருகும் கண்ணனும், சிவனுல் துதிக்கப் பெறுபவனும், இளஞ் சிவப்புள்ள அழகிய திருவடிகளை உடையவனும், இணையற்ற வடிவழகனும், சகல வேதங்களிலும் சஞ்சரிப்பவனும், தேவர்

1_நலங்கிட்டபின்னர் பாடப்பெறும் மங்களங்கள்.

துதிக்கும் சரிதனும், சிறந்த விரதங்களுடையவனும், முல்லை யொத்த பற்களையுடையவனும், அகத்திய முனிவரால் துதி பாடப்பெற்றவனும், மந்தரகிரியை எடுத்தவனும், இலக்குமி நாயகனும், மன்மதன் தந்தையும், விரும்பிய நற்பயன்களையளிப் பவனும், தேவரின் பகைவரான அரக்கருக்கு அச்சம் தருபவனும் சகல புவனங்களுக்கும் இதமளிப்பவனும், அயோத்தியில் உறை பவனும் (விகாரங்களற்றவனும், போற்றத்தகுந்த குணசாலியும், மன்னர் மன்னனும், தியாகராஜனைக் காப்பவனும், மோட்ச பலனை அளிப்பவனும், நிர்மலனுமாகிப் பகவானுக்கு என்றென் றும் மங்களம் உண்டாகுக.

## 579

நாத³நாமக்ரிய — ஆதி³

ப. ஜய மங்க³ளம் நித்ய சுப மங்க³ளம் (ஜ)

ச. 1. மங்க³ள மவநிஸுதா நாது₂நிகி
மங்க³ள மரவிந்தா³க்ஷுநிகி
மங்க³ள மத்³பு₄த சாரித்ருநிகி
மங்க³ள மாதி³தே³வுநிகி (ஜ)

3. இநகுலமுந வெலஸிந ராமுநிகி
ஜநக வசந பரிபாலுநிகி
மநஸிஜ கோடி லாவண்யுநிகி
கநக ஸிம்ஹாஸந நிலயுநிகி (ஜ)

4. மந்தா³நில போ₄ஜ சயநுநிகி
மந்தா³கிநீ வர ஜநகுநிகி
மந்த³ஜநக சத ஸங்காசுநிகி
மந்தா³ர ரூபுநிகி ஹரிகி (ஜ)

5. இந்த்³ராத்³யஷ்ட தி³க்³ச நுதுநிகி
சந்த்³ராதி³ த்ய ஸுநயநுநிகி க³-
ஜேந்த்³ருநி ஸம்ரக்ஷிஞ்சிந ராம-
சந்த்³ருநிகி ஜக³த்³ரூபுநிகி (ஜ)

6. ராஜசேக₂ர ப்ரியுநிகி மௌநி
ராஜ ராஜ பூஜிதுநிகி த்யாக³-
ராஜ விநுதுநிகி வர க³ஜ-
ராஜாதி³ ப₄க்த வரது³நிகி (ஜ)

அனவரதமும் ஜய மங்களம் உண்டாகுக. சீதா தேவியின் நாயகனும், தாமரைக் கண்ணனும் வியக்கத் தக்க ஒழுக்கமுடையவனும், ஆதிதேவனும், அழகிய முகத்தவனும், சிறந்த தேகமுடையவனும். தேவர் கூட்டங்களினுல் வணங்கப் பெறுபவனும், மந்தர கிரியைத் தாங்கியவனும், நமது திருமகளின் கேள்வனும், நற்பயன்களையளிப்பவனும், சூரிய வமிசத்தில் தோன்றிய இராமனும், தந்தை சொல் காத்தவனும், கோடி மன்மதரை நிகர்த்த அழகனும், பொன் மயமான சிங்காதனத்தில் அமர்பவனும், காற்றைப் புசிக்கும் சேடன்மீது துயில்பவனும் கங்கையைம் பிறப்பித்தவனும், நூறு சூரியர்களின் ஒளி பொருந்தியவனும், கற்பகத்தருவே உருவானவனும், இந்திரன் முதலிய அஷ்ட திக்பாலர்களால் துதிக்கப் பெறுபவனும், சந்திர சூரியரைக் கண்களாக உடையவனும், கஜேந்திரனைக் காத்தருளிய இராமச்சந்திரனும், உலகை வடிவாக உடையவனும், சிவபெருமானுக்கு இனியானும், முனிவராலும் சக்கரவர்த்திகளாலும் பூசிக்கப்படுபவனும், கஜேந்திரன் முதலிய பக்தருக்கு வரமளிப்பவனுமான ஹரிக்கு என்றென்றும் மங்களம் உண்டாகட்டும்.

## 580

(¹சோப᳚ந ஹாரதுலீ)

ஸுரடி ஆதி᳚

ப. பதிகி ஹாரதீரே ஸீதா (ப)

அ. அதிம்ருது᳚தர ஸத்யபா᳚ஷணுநிகி
அ,கிலாண்ட᳚ நாது,நிகி ஸீதா (ப)

ச. 1. ப᳚ங்க᳚ரு ரங்கு᳚ பு᳚ஜங்கு᳚நிபைநி செ-
லங்கு᳚சுநு மரயுதாங்கு᳚டு᳚ மெறுபு தெ-
றங்கு᳚ந மெறலி தந யங்க᳚நதோ ப᳚லு-
கங்க᳚ ஜூசி யுப்பொங்கு᳚சு ஸீதா (ப)

2. அக்கரதோ நிரு ப்ரக்கல நிலிசி த-
ளுக்கநி மெறயக᳚ சக்கநி மோமுந
சுக்கல ராயநி மக்குவதோ ஸரி
முக்கெர கத᳚லக᳚ க்᳚ரக்குந ஸீதா (ப)

3. ராஜ விபா᳚கர ராஜத᳚ராமர
ராஜ சுகாஜ விராஜுலு சூட᳚க᳚
ராஜமாநமகு᳚ கா᳚ஜுலு க᳚ல்லந
ராஜித த்யாக᳚ராஜ நுதுநுகி ஸ்ரீ (ப)

---

1 சோபன வாழ்த்துக்கூறி ஆரத்தி எடுப்பது.

சீதாபதிக்கு ஆரத்தி (தீபாராதனை) காட்டுங்கள். (அவன்) மிகவும் மென்மையானதும் உண்மையானதுமான பேச்சுடையவன். உலகங்கள் அனைத்திற்கும் நாயகன், பொன்னிறங்கொண்ட பாம்பின்மீது மரகத வண்ணமுடைய அவன் விளங்கிக்கொண்டு மின்னற்கொடிபோல் அமர்ந்த தனது பத்தினியுடன் உரையாடுவதைக் கண்டு மகிழ்ந்து (ஆரத்தி காட்டுங்கள்).

(பெண்மணிகள்) விருப்பத்துடன் இரு புறத்திலும் நின்று பொண்டு தளதளவென்று தமது அழகிய முகங்களில் சந்திரனைப் போல் ஒளிவீசும் புலாக்குகள் அசைந்தாட, பக்தியுடன் சீதாபதிக்கு (ஆரத்தி காட்டுங்கள்.)

சந்திரன், சூரியன், பரமசிவன், தேவேந்திரன், சுகர். பிரமன், கருடன் முதலியோர் காண (உங்கள் கைகளில்) பிரகாசிக்கும் வளைகள் கல்லென்று ஒலிக்கத் திருமகள் நாயகனுக்கு (ஆரத்தி காட்டுங்கள்).

## 581

ஆரபி⁴ ஆதி³

ப. பதிகி மங்க³ள ஹாரதீரெ
பா⁴மலார நேடு³ஸாகேத (ப)

அ. மதிகி ஸொம்பு கலுக³ ஜேயு ஸத்³கு³ண
ததிகி மானவதிகி ஸ்ரீ ஸீதா (ப)

ச. காமாதி³ ரிபுவிதா³ரிகி ஹரிகி
ஸாமாதி³ நிக³மசாரிகி ஸூர்ய
ஸோமாக்ஷுநிகி த்யாக³ராஜ
ப்ரேமாவதாருநிகி கோஸல (ப)

பெண்மணிகளே! அயோத்தியாபதியாகிய இராமனுக்கு இன்று மங்களஆரத்தி எடுங்கள். மனத்திற்கு ஆனந்தமளிக்கும் நற்குணங்களின் திரள் போன்றவளும் மானவதியுமான சீதையின் நாயகனுக்கு (ஆரத்தி எடுங்கள்.) காமம் முதவிய பகைவரை ஒழிப்பவனும், மகாவிஷ்ணு சொரூபனும், ஸாமம் முதவிய வேதங்களில் சஞ்சரிப்பவனும், சூரிய சந்திரரைக் கண்களாக உடையவனும், தியாகராஜனின் அன்பே உருவானவனும், கோசல இராஜ்யத்தின் அதிபனுமான (இராமனுக்கு) மங்களஆரத்தி சுற்றுங்கள்.

## 582

(¹சோபா⁴நே)

பந்துவராளி த்ரிபுட

ப. சோபா⁴நே (சோ)

1 சோபனங் கூறல்

ச. 1. வத³னத்³யுதி ஜித ஸோம
வஸுதா⁴மானஸகாம
மத³மானவ க⁴ணபீ⁴ம
மாம் பாஹி ஸ்ரீராம (ஸோ)

2. ஜனகஸுதா ஹ்ருத்³ரமண
ஜமத³க்³நிஜ மத³ஹரண
ப்ரணதாகா⁴நல வருண
பாஹி மாம் முநிசரண (ஸோ)

3. விக³ளித மோஹபாச
வித்³யுத்கோடி ஸங்காச
ப⁴கவந் ஸகலாதீ⁴ச
பாஹி பாபவிநாச (ஸோ)

4. வர த்யாக³ராஜநுத
வாரிஜ ஸம்ப⁴வ தாத
பரம கல்யாணயுத
பாஹி மாம் சுப⁴சரித (ஸோ)

நீ பல்லாண்டு வாழ்க. முகத்தின் ஒளியால் சந்திரனை வென்றவனே! பூதேவியின் மனத்தினுல் விரும்பப் பெறுபவனே! மதங்கொண்ட மாந்தருக்கு அச்சந்தருபவனே! இராமனே! என்னைக் காத்தருள்.

ஜானகியின் உள்ளத்தை மகிழ்விப்பவனே! பரசுராமனின் செருக்கையடைக்கியவனே! அடைக்கலம் புகுந்தவரின் பாவங்களென்னும் நெருப்பை யணைக்கும் தண்ணீர் போன்றவனே! முனிவருக்குத் தஞ்சமானவனே! என்னைக் காப்பாற்று.

மோகம், பாசம் ஆகியவற்றை ஒழித்தவனே! கோடி சந்திரருக்கு இணையான ஒளியுடையவனே! பகவானே! அனைத்திற்கும் ஈசனே! பாவங்களையழிப்பவனே! என்னைப் பாலித்தருள்.

தியாகராஜனுல் துதிக்கப் பெறுபவனே! தாமரையானுகிய பிரமனின் தந்தையே! மிக்க மங்களம் பொருந்தியவனே! சுப சரிதனே! என்னைக் காப்பாயாக.

## 583

(¹பவ்வளிம்பு பாடலு)

ஆஹிரி த்ரிச்ரலகு,

ப. பூல பாங்புமீத பாக பூர்ண பவ்வளிஞ்சு (பூ)

அ. நீல க,நச்யாம ஹரே நிருபம ராமய்ய மல்லெ (பூ)

ச. 1. மது,சர்க்கர யாநபாலு மறி யாறகிஞ்சி
விது,முக, கம்மனி விடெமு வேஸி நநு கடாக்ஷிஞ்சி (பூ)

2. பரிமள கந்த,ம்பு மேந பாகுகாநு பூஸி
மெறயக ஸுமஹாரமுலநு மெடநிண்டநு வேஸி (பூ)

3. ஆகமோக்தமைந சய்ய நங்கீகரிஞ்சி
த்யாகராஜ க்ருதமு லெல்ல தத்,யமநி ஸந்தோஷிஞ்சி (பூ)

அனைத்திலும் பூர்ணமாக நிறைந்திருப்பவனே! (நான் அமைத்துள்ள) மல்லிகை மலர்ப்படுக்கையின்மீது நன்கு கண் வளராய். நீல நிறத்து முகில்வண்ணனே! ஹரி! நிகரில்லாத இராமய்ய! மதிமுகத்தவனே! தேன், சர்க்கரை, சிவக்கக் காய்ச்சிய பால் ஆகியவற்றை அமுது செய்து, இனிய தாம்பூலத்தை உண்டு, என்னைக் கடைக்கண் பார்த்து, வாசனைப் பொருள்களைத் திருமேனியில் நன்கு பூசி, மலர் மாலைகளைக் கழுத்தில் நிறைய அணிந்துகொண்டு, வேதங்களில் கூறப்பட்டுள்ள திருப்பள்ளியை ஏற்றுக்கொண்டு, இத்தியாகராஜன் செய்பவை யாவும் சத்தியமேயென்று மகிழ்ந்து (கண் வளர்க.)

## 584

ரீதிகௌள ஆதி

ப. பட்லிக தீர பவ்வளிஞ்சவே (ப)

அ. ஸடலநி துரிதமுலநு தெக கோஸி
ஸார்வபௌம ஸாகேத ராம (ப)

ச. பங்கஜாஸநுநி பரிதாபமு கநி
பங்கஜாப்தகுல ²பதிவை வெலஸி
பங்கஜாக்ஷிதோ வநமுந கேகி
ஜிங்கநு வதி,யிஞ்சி

1 பகவானைக் கண் வளருமாறு வேண்டும் பாட்டுகள்.
2 பதியை

மங்கு ராவணுநி ம^v^தமு ந நணசி நிச்-
சங்குடௌ^v^ விபீ^v^ஷணுநிகி ப^v^ங்கா^v^ரு
லங்க நொஸகி^v^ ஸூரல ப்^v^ரோசிந நிஷ்க-
ளங்க த்யாக^v^ராஜநுத ராம (ப^v^)

ஸார்வபௌம! ஸாகேதராம! தீராத என் பாவங்களை அறவே ஒழித்து, உன் களைப்பு தீரப்பள்ளிகொள்வாயாக. பிரமனுடைய பரிதாபத்தைக்கண்டு (மனமிரங்கி), சூரிய குலத்தின் நாயகனுக அவதரித்து, சீதையுடன் காட்டிற்குச் சென்று, மாய மானைக் கொன்று, மூர்க்கனுகிய இராவணனின் மதத்தையடக்கி, ஐயமில்லாத விபீஷணனுக்குப் பொன்மயமான இலங்காபுரியை அளித்து தேவர்களைச் காத்த (சோர்வு தீர) பள்ளிகொள்வாய். களங்கமற்ற இராமனே!

## 585

(^1^லாலி பாடலு)

ஹரிகாம்போ^v^ஜி ஆதி^v^

ப. லாலி லாலீயநி யூசேரா வந-
மாலி மாலிமிதோ ஜூசேரா (லா)

ச. 1. தே^v^வதே^v^வயநி பி^v^லிசேரா மஹானு-
பா^v^வ பா^v^வமுந த^v^லசேரா (லா)

2. ராம ராமயநி ப^v^லிகேரா நிஷ்-
காம காமரிபுநுத ராரா (லா)

3. கோரி கோரி நிநு கொ^v^லிசேரா மாயா-
தா^v^ரி தா^v^ரி ஸத்^v^ப^v^ஜநேரா (லா)

4. ராஜராஜயநி போ^v^கடே^v^ரா த்யாக^v^-
ராஜராஜயநி ம்ரொக்கேரா (லா)

(ஊஞ்சலில் உன்னை எழுந்தருளச் செய்து) லாலி லாலியென்று (வாழ்த்துக்கூறி) ஆட்டுவேன். வனமாலி! அன்புடன் தரிசிப்பேன். தேவ தேவனேயென்று அழைப்பேன். மகானுபாவனே; உன்னை என்னுள்ளத்தில் நினைப்பேன். இராம இராமவென்று ஜபம் செய்வேன். விருப்பமற்றவனே! சிவனுல் துதிக்கப் பெறுபவனே! வாராய்! விருப்பமுடன் உனக்குப் பணிவிடை புரிவேன். மாயையை ஒழிப்பவனே! (மாந்தருக்கு) நல்வழி உன் பஜனையேயாகும். மன்னர் மன்னனே யென்று புகழ்வேன். தியாகராஜனின் அரசே என்று வணங்குவேன்.

---

1 ஊஞ்சல் முதலியவற்றை ஆட்டும்பொழுது பாடப்பெறும் பாட்டு.

## 586

கேதார^v^கௌ^v^ள ஜம்ப

ப. லாலி லாலய்ய லாலி! (லா)

அ. லாலி கு^v^ணசாலி வநமாலி ஸுஹ்ருத^v^யந
லாலி ம்ருது^v^தர ஹம்ஸதூலிகாசயந (லா)

ச. 1. இநவம்சமந்து^v^ ஜநியிஞ்சிந க^v^நாப^v^
கநகமயசேல தி^v^நகரகோடி சோப^v^
வநஜநயநாக்ரூர வரதா^v^ப்^v^ஜநாப^v^
ஸநகாதி^v^நுத ஸகல ஸத்^v^ப^v^க்த ஸுலப^v^ (லா)

2 கரகலித சரசாப க^v^ரசிரோஹரண
அருணப்^v^ஜநிப^v^சரண அஸுரமத^v^ஹரண
புரவைரிவிநுத ஸம்பூர்ண சசிவத^v^ந
கருணரஸாக்ஷ க^v^தகாம முநிசரண (லா)

3. புட^v^மிவரத^v^ நாது^v^ பூஜ கை^v^கொநுமா
கடு^v^ நம்முவாரிண்ட கலுகு^v^ஸ்ரீகரமா
கட^v^கண்டி சூபு நீகதி^v^ சால க^v^நமா
எட^v^பா^v^ய ஜால நந்நேலு குலத^v^நமா (லா)

4. கோடி ஸூர்ய ப்ரப^v^லகே^v^ரு மண்டபமு
சாடுகா^v^ நலங்கரிஞ்சிநதி^v^நெலகொநுமு
ஸாடி தொ^v^ரகநி ஸாது^v^ஜந வந்த்^v^ய விடெ^v^மு
மாடி மாடிகி நொஸகி^v^ மறவக கொ^v^லுதுமு (லா)

5. அந்து^v^ மத்^v^யம்பு^v^ நநு அபரஞ்சிதோநு
ஸுந்த^v^ரம்பை^v^ந மஞ்சமு வேஸிநாநு
அந்து^v^பை ஜாஜுலநு அமரபரிசாநு
அந்த^v^மௌ நீ பாத^v^யுக^v^மு ப^v^ட்டேநு (லா)

6. அஸமாந சூர முக்தாவளுலு மெரய
அஸமாநகி^v^ரி மத்^v^ய குஸுமமுலு கு^v^ரிய
பி^v^ஸருஹப^v^வாதி^v^ ஸுர ப்^v^ருந்த^v^கோட்லரய
அஸலைந பி^v^ருது^v^லிடி^v^ யூசெத^v^நு ஸத^v^ய (லா)

7. பாᵛ,கᵛவத ஸேவலோ பᵛடᵛலியுங்நாவு
ராகᵛ விரஹித நந்து மறவகᵛ பொᵛய்யேவு
பாᵛகைᵛந ஜநகஜா பாᵛ,க்யமா நீவு
த்யாகᵛராஜுᵘநி நிண்டுᵛ தᵛயசேஸி ப்ᵛரோவு (லா)

அய்யனே! குணசீலனே! வனமாலையணிந்தவனே! நல்லோர் இதயத்தில் வசிப்பவனே! மென்மை பொருந்திய ஹம்ஸதூலிகா மஞ்சத்தில் சயனித்திருப்பவனே] உனக்கு வாழ்த்துக் கூறுகிறேன்.

(நீ) சூரிய வமிசத்தில் தோன்றிய கருமுகில் வண்ணன். பீதாம்பரதாரி. கோடி சூரிய பிரகாசன். தாமரைக் கண்ணன். அக்ரூரருக்கு வரமளித்தவன். நாபியில் தாமரையுடையவன். முதலியோரால் துதிக்கப்படுபவன். மெய்யடியார்களுக்கு எளிதில் கிடைப்பவன்.

கரத்தில் வில் அம்புகளை ஏந்தியவன். கரனுடைய தலையைக் கொய்தவன். சிவந்த தாமரையொத்த பாதன். அரக்கரின் செருக்கையடக்கியவன். புரமெரித்த சிவனால் வணங்கப் பெறுபவன். முழுமதி வதனன். கருணை பெருகும் கண்களையுடையவன். காமங்களைக் கடந்தவன். முனிவரின் அடைக்கலம்.

பூதேவிக்கு வரமளித்தவனே! என் பூசையை ஏற்றுக்கொள். உன்னை முற்றிலும் நம்புபவரின் இல்லத்தில் திரு விளங்கச் செய்பவன் நீ. கடைக்கண்ணால் என்னைப் பார்ப்பது உனக்குப் பாரமோ? என்னால் உன்னை விட முடியுமா? என் குல தனமே! என்னை ஏற்றுக்கொள்.

கோடி சூரிய பிரகாசத்தைப் பழிக்கும் மண்டபம் அழகாக அலங்கரிக்கப்பட்டுள்ளது. அதில் நீ எழுந்தருள். இணையற்றவனே! சாதுக்களால் வணங்கப்பெறுபவனே! அடிக்கடி உனக்குத் தாம்பூலமளித்து உன்னை மறவாமல் சேவிப்பேன்.

மண்டபத்தின் மத்தியில் பொன்னாலான அழகிய கட்டிலை அமைத்து அதன்மீது ஜாதி மலர்களை நிறையப் பரப்பினேன். அந்தமான உன் சரணங்களைப் பற்றினேன்.

இணையற்ற வீரனே! முத்து மாலைகள் ஒளிவீச அஸ்மான கிரியின் (விதானத்தின்) நடுவில் புஷ்பங்கள் மழையெனப் பொழிய, பிரமன் முதலிய தேவர் குழாம் வாழ்த்துக்கூற, உண்மையான விருதுக்களைக் கூவி (ஊஞ்சலை) ஆட்டுவேன். தயை மிகுந்தவனே!

பக்தர்களுக்கு சேவை புரிந்து நீ களைப்படைந்திருக்கிறாய். பற்றில்லாதவனே! என்னை மறந்து விடப்போகிறாய்! சீர் மிகுந்த சீதாதேவியின் பாக்கியமே! தியாகராஜன்மீது மிகுந்த தயவு காட்டிக் காப்பாற்று.

## 587

**சங்கராபᵛ,ரணம்** **ஆதிᵛ**

ப. ராம ஸ்ரீராம லாலீ ஊகுᵛசு கᵛ,ந-
ச்யாம நநு ப்ᵛரோவு லாலீ (ரா)

ச. 1. சாலா பாலிந்து லாலீ மீக^ட^வெந்ந
பாலு தாகி^ந்து லாலீ சய்யபைநி மல்லெ
பூல ப^ரது லாலீ வரமைந வி-
டே^ல நொஸகெ^ லாலீ ஓ வநமாலீ (ரா)

2. க்^ாசி ஸேவிந்து லாலீ சேஷதல்பமு
நூசி பாடு^து^ லாலீ ஏகாந்தமுந
தா^சி பூஜிந்து லாலீ ஆவேள நிந்நு
ஜூசுசுப்பொங்கே^ லாலீ ஓ வநமாலீ (ரா)

3. வேத^வேத்^யமா லாலீ கந்நுல ஜூட^-
வே த்^யாநிதி^, லாலீ நாது^ரமுந நீ-
பாத^முலுஞ்சு லாலீ ஸ்ரீ த்யாக^ராஜ
மோத^ரூபமா லாலீ ஓ வநமாலீ (ரா)

ஸ்ரீராம! கருமுகில் வண்ணனே! (ஊஞ்சலில்) ஆடிக் கொண்டே என்னைக் காப்பாயாக. உன்னை நன்கு சீராட்டுவேன். தயிர், ஏடு, வெண்ணெய், பால் ஆகியவற்றை அளிப்பேன். படுக்கையின்மீது மல்லிகை மலர்களைப் பரப்புவேன். தாம்பூல மளிப்பேன். உன்னைப் பாதுகாத்து சேவை புரிவேன். பாம்பணை மீது அமர்த்தி ஆட்டிக்கொண்டே இசை பாடுவேன். ஏகாந்த மாக (தனிமையில்) உன்னை மறைத்துப் பூசை செய்வேன். அச் சமயம் உன்னைக் கண்டு உளம் பொங்குவேன். மறைகளால் அறியப்பட்டவனே! என்னைக் கண் பார். கருணைக் கடலே! என் மார்பின்மீது உனது திருவடிகளை இருத்து. தியாகராஜனின் ஆனந்தமே உருவானவனே! ஓ வனமாலி!

## 588

நீலாம்ப^ரி ஜம்ப

ப. உய்யால லூக^வய்ய ஸ்ரீராம (உ)

அ. ஸய்யாட பாடலநு ஸத்ஸார்வபௌ^ம (உ)

ச. 1. கமலஜாத்^யகி,ல ஸுரலு நிநு கொ^ல்வ
விமலுலைந முநீந்த்^ருலு த்^யாநிம்ப
கமநீய பா^,கவதுலு கு^ணகீர்த்த-
நமுந நாலாபம்பு^லு ஸேயக^ (உ)

2. நாரதா^து^லு மெறயுசு நுதியிம்ப
ஸாரமுல பா^க^ விநுசு நிநு நம்மு-

வாரல ஸதா<sup>v</sup> ப்<sup>v</sup>ரோசுசு வேத<sup>v</sup>-
ஸார ஸப<sup>v</sup>லநு ஜூசுசு ஸ்ரீராம (உ)

3. நவமோஹநாங்கு<sup>v</sup>லுந ஸுரஸதுலு
விவரமுக<sup>v</sup> பா<sup>v</sup>ட<sup>v</sup>க<sup>v</sup> நா பா<sup>v</sup>க்<sup>v</sup>யமா
நவரத்ந மண்டபமுந த்யாக<sup>v</sup>ரா-
ஜ விநுதாக்ருதி பூ<sup>v</sup>நிந ஸ்ரீராம (உ)

விநோதமான (பரஸ்பர) ஆடல் பாடல்களுடன் ஊஞ்சலில் ஆடுக. ஸ்ரீராம! சார்வபௌம! பிரம்மா முதலிய சகல தேவர்களும் உன்னைச் சேவிக்க, தூயவரான முனிவர் தியானம் செய்ய, பக்தியுள்ளம் படைத்த பாகவதர்கள் உன் குணங்களைப் பாடிப் புகழ, தேசு பொருந்திய நாரதர் முதலியோர் வணங்க, உபநிஷத் சாரங்களை நன்கு கேட்டுக்கொண்டு, உன்னை நம்புபவர்களை அனவரதமும் காப்பாற்றி, ஞானிகளின் சபைகளைக் கடாட்சித்துக்கொண்டு, வனப்பு மிகுந்த வானுலக மங்கையர் விஸ்தாரமாகப் பாடக் கேட்டு, நவரத்தினங்களிழைத்த மண்டபத்தில் தியாகராஜன் வணங்கும் அர்ச்சா வடிவமாக எழுந்தருளியிருந்து (ஊஞ்சலில் ஆடுக).

## 589

நீலாம்ப<sup>v</sup>ரி ரூபகம்

ப. லாலி யூக<sup>v</sup>வே மாபாலி தை<sup>v</sup>வமா (லா)

அ. லாலி யூக<sup>v</sup>வே நுநு கா<sup>v</sup>லி தி<sup>v</sup>ண்டி<sup>v</sup> பாங்புபைநி (லா)

ச. பம்மிந வேடு<sup>v</sup>கமீற தம்முலதோநு
கம்மநி விடெ<sup>v</sup>மொஸகு<sup>v</sup> யா ஜநகாத்மஜதோநு
பொ<sup>v</sup>ம்ம தே<sup>v</sup>வர தண்ட்<sup>v</sup>ரி பூ<sup>v</sup>மீசுலதோட<sup>v</sup>நு
ஸம்மதமுந த்யாக<sup>v</sup>ராஜு ஸந்நுதி ஸேயக<sup>v</sup> (லா)

எங்களைக் காக்கும் தெய்வமே! நீ ஊஞ்சலில் ஆடுக. ஆதிசேடனென்னும் மெத்தென்ற படுக்கை மீதமர்ந்து ஆடுவாயாக. மிகுந்த சந்தோஷத்துடன் உனது தம்பியருடனும், இனிய தாம்பூலமளிக்கும் ஜானகியுடனும், அந்தணருடனும் கூடி, சம்மதத்துடன் தியாகராஜன் துதி பாட, (நீ ஆடுக). பிரமதேவனின் தந்தையே!

## 590

சஹாந சாபு

ப. ராம ராம ராம லாலி ஸ்ரீராம
ராம ராம லாவண்ய லாலி (ரா)

ச. 1. தொ^v^ரகராநி நிதி^v^ ராரா தொ^v^ரகு
தொ^v^ரவு நீவு தொட்லலோ ராரா (ரா)

2. வரமைநட்டி நா பட்டி ராரா வர
ஸுருலகு அருதை^v^ந ஸுந்த^v^ர ராரா (ரா)

3. தொலி ஜேஸிந நோமு ப,லமா ராம
இலநு வெலயு இநகுலத^v^நமா (ரா)

4. கலகலமநி ராவு செந்த ஆ-
கலி கொண்டிவோ லேக கருணுஸ்வாந்த (ரா)

5. மத^v^க^v^ஜக^v^மந நா ஸ்வாமி ஓ
ஸத^v^யுட^v^ நீலோநி ஜாலி தெ^v^ல்புமி (ரா)

6. ஸரிபா^v^லுலாட^v^ ரம்மநிரி ஆடி^v^
வரத^v^ நீவு ராவத்^v^து^v^ பொம்மநிரி (ரா)

7. எவரு நிந்து ஏமநிரி ராக^v^வ நீ-
யெட^v^ தப்புக^v^நி ராவத்^v^த^v^நிரி (ரா)

8. கநுலு மூஸி யாடி^v^நாரு கர-
முந கணக^v^நி நேத்ரமநி கஸரெத^v^ரு (ரா)

9. கலுவ ரேகுலநு போ^v^லு கநுலு
கலக^v^நேல நந்து கந்த^v^யாளோ (ரா)

10. தேட கந்நுலநு மூஸெத^v^ரு நா-
தோடி^v^ வாருலெல்ல போவத்^v^த^v^நெரு (ரா)

11. நுது^v^டநு ச்ரமஜலமேல ஆ-
க,யேமி தெ^v^லுபவே கருணுலவால (ரா)

12. சிந்தசே தா^v^கு^v^து^v^ வேறே மேநி
காந்திசே த^v^கி^v^லிந கர்மமநேரே (ரா)

13. முத்யால ஸருல சிக்கேமீ ஓ
ஸத்யஸந்த^v^ பாத^v^ஸருல நொக்கேமி (ரா)

14. முத^v^முந நே பட்டுவேள நா
பத^v^முந வ்ராலெத^v^ரு பலுமாருவேள (ரா)

15. நிந்நேமநி பி^வ^ல்சுகொநிரி ராம
மந்நநதோ நேமநி யெஞ்சுகொநிரி (ரா)

16. பா^v^க^v^ ஸாக்ஷி ரம்மநிரி வர
த்யா^v^கராஜநுத தை^v^வமாயநிரி (ரா)

*லாவண்ய ராம! உனக்கு லாலி! கிடைத்தற்கரிய செல்வமே! வருக. பிரபுக்களுக்கும் பிரபுவான நீ இத்தொட்டிலில் அமர்ந்து வருக. சிறப்புற்ற என் குழந்தாய், நீ வருக. தேவருக்கும் கிடைத்தற்கரிய அழகனே வருக. நான் முன் செய்த நோன்புகளின் பயனே! இவ்வுலகில் விளங்கும் சூரிய வமிசத்தின் செல்வமே! வாராய். கல கலவென்று அருகில் வரமாட்டாயா? கருணையுள்ளம் படைத்தவனே! ஒருவேளை உனக்குப் பசியோ? மதயானை போன்ற நடையுடையவனே! என் சுவாமி! தயவு மிகுந்தவனே! உனக்கென்ன வருத்தம்? கூறுவாய்.

சம வயதுச் சிறுவர்கள் என்னை ''விளையாட வா'' என்றனர். வந்த பின்னர் ''வரத! நீ வரவேண்டாம் போ'' என்றனர்.

இராகவ! யார் உன்னை என்ன சொன்னார்கள்? உன்னிடம் என்ன குற்றம் கண்டு வரவேண்டாம் என்றனர்.

கண்ணும்பூச்சி விளையாடினர். என் கண்கள் அவர்கள் கைகளுக்கடங்கவில்லையென்று என்னைத் திட்டினர்.

என்னைப் பெற்ற செல்வமே! குவளையிதழ்களையொத்த உனது கண்கள் கலங்கியிருப்பதேன்?

ஒவ்வொருவராக அனைவரும் என் கண்களை மூட முயற்சி செய்த பின்னர் ''நீ வேண்டாம், போ'' என்றனர். (அதனால் என் கண்கள் கலங்கிவிட்டன).

கருணையின் தேக்கமே! உன் நெற்றியின்மீது இவ்வளவு வியர்வை துளிப்பதேன்? அக்கதையைக் கூறு.

கவலையுடன் நான் எங்காவது சென்று ஒளிந்துகொள்ளலாமென்றால் ''உனது தேக காந்தி உன்னைக் காட்டிக் கொடுத்துவிடுமாதலால் நீ அகப்பட்டுக்கொள்வாய். அதுவே உனது கர்மம்'' என்றனர்.

(உனது மார்பில்) முத்து மாலைகளில் முடிச்சுகளும், உனது பாத சரங்களில் காயங்களும் ஏற்பட்டிருப்பது ஏன்? நீ உண்மை பேசுபவன். ஆகவே உண்மையைக் கூறு.

குதூகலத்துடன் நான் அவர்களைக் கட்டிப் பிடிக்கும் பொழுது அவர்கள் என் கால்களில் பலமுறை வீழ்ந்தனர். (ஆகவே, முத்து மாலைகள் கலைந்து பாதசரங்கள் ஊறுபட்டன).

இராம! அவர்கள் உன்னை என்ன பெயரிட்டு அழைத்தனர்? உன்னைக் குறித்து கவுரவமாக என்ன நினைத்தனர்?

''நீ அனைத்திற்கும் சாட்சி'' என்றும், ''தியாகராஜன் வணங்கும் தெய்வம்'' என்றும் கூறினர்.

---

* குழந்தையாகிய இராமனுக்கும் அன்னை கோசலைக்கும் நிகழ்ந்த சம்பாஷணை வடிவத்தில் அமைக்கப்பெற்றுள்ள இந்த லாலி கீர்த்தனம் தியாகராஜ ஸ்வாமியின் கவியுள்ளத்தில் தோன்றிய ஓர் அற்புதக் கற்பனையாகும்.

## 591

ஆநந்த³பை⁴ரவி ஜம்ப

ப. க்ஷீரஸாக³ரவிஹார அபரிமித
கோ⁴ரபாதக விதா³ர
க்ரூரஜநக³ண விதூ³ர நிக³ம ஸஞ்-
சார ஸு²ந்த³ர சரீர (க்ஷீ)

ச. 1. சதமகா²ஹித விப⁴ங்க³ ஸ்ரீராம
சமநரிபு ஸந்நுதாங்க³
ச்ரிதமாநவாந்தரங்க³ ஜநகஜா
ச்ருங்கா³ர ஜலஜ ப்⁴ருங்க³ (க்ஷீ)

2. ராஜாதி³ ராஜவேஷ ஸ்ரீராம
ரமணீயகர ஸு²பூ⁴ஷ
ராஜநுத லலிதபா⁴ஷ ஸ்ரீத்யாக³-
ராஜாதி³ ப⁴க்த போஷ (க்ஷீ)

பாற்கடலில் விளையாடுபவனே! எல்லையற்ற கொடிய பாவங்களை யறுப்பவனே! கொடூரமான மாந்தரைத் தொலைவில் வைப்பவனே! மறைகளில் சஞ்சரிக்கும் வடிவழகனே! இந்திரனின் எதிரிகளையழிப்பவனே! சிவனால் துதிக்கப்பெறுபவனே! அடைக்கலம் புகுந்தவர்க்கு அந்தரங்கமானவனே! ஜானகியின் சிருங்காரமென்னும் தாமரையை வட்டமிடும் வண்டு போன்றவனே! மன்னர் மன்னனாக வேடந் தாங்கியவனே! கைகளில் அழகிய அணிகளையுடையவனே! அரசரால் துதிக்கப்பெறுபவனே! இன்சொல்லுடையவனே! தியாகராஜன் முதலிய பக்தரைக் காப்பவனே!

## 592

பை⁴ரவி ஆதி³

ப. ரக்ஷ பெ³ட்டரெ தொ³ரகு
ரக்ஷ பெ³ட்டரெ (ர)

அ. வக்ஷஸ்த²லமுந வெலயு
லக்ஷ்மீரமணுநிகி [1]ஸாய (ர)

---

1 ஜய

ச. ஸீதாகரமுநு ப³ட்டி செலகி³ந தொ³ரகு
வாதாத்மஜுநிகி செயி வசமைந தொ³ரகு புரு-
ஹூதாது³ல ரக்ஷிம்ப பா³ஹுஜுடை³ந தொ³ரகு ஸங்-
கீ³த ப்ரிய த்யாக³ராஜ கே³யுடை³ந தொ³ரகைச்வர்ய (ர)

தனது திருமார்பினில் விளங்கும் இலக்ஷ்மியின் நாயகனுன பிரபுவுக்கு மாலே வேளேயில் இரட்சை நிமித்தமாகப் பொட்டு இடுவீர். சீதா தேவியைக் கைப்பிடித்து விளங்கியவனும், அனுமனுக்குக் கை வசமானவனும், இந்திரன் முதலியோரைக் காக்க க்ஷத்திரிய வீரனுக அவதாரம் செய்தவனும், சங்கீத பிரியனுன தியாகராஜனுல் பாடப்பெறுபவனுமாகிய பிரபுவுக்கு ஐசுவரியம் பெருகுமாறு (நெறறியில்) வீர திலகம் இடுங்கள்.

## 593

[1]நீலாம்ப³ரி ஜம்ப

ப. ஸ்ரீராம ராம ராம ஸ்ரீமாநஸாப்³தி⁴ஸோம
நாராயணுப்தகாம நளிநாக்ஷ பவ்வளிஞ்சு (ஸ்ரீ)

ச. 1. பல்லவாத⁴ரவரேண்ய பாபேப⁴ ஸிம்ஹத⁴ந்ய
மல்லிகா தல்பமந்து³ மாத⁴வ பவ்வளிஞ்சு (ஸ்ரீ)

2. தா⁴ராத⁴ராப⁴தே³ஹ தாராதி⁴பாநந ஸதா³
நீ ராக கோரியுண்டி ஸ்ரீராம பவ்வளிஞ்சு (ஸ்ரீ)

3. ஜநகராஜிண்ட பு³ட்டி ஜாநகி செட்ட ப³ட்டி
கநகமௌ ஸூரடி பட்டி கா³சிநதி³ பவ்வளிஞ்சு (ஸ்ரீ)

4. வர்ணிம்ப த³ரமுகா³நி ஸ்வர்ணம்பு மேநு ஸீத
பூர்ணமௌ ப⁴கதிதோநு பூஜிஞ்சு பவ்வளிஞ்சு (ஸ்ரீ)

5. ஆசுகா³சந ஸூசயந அம்போ⁴ஜபத்ர நயந
ஆஸதோ த்யாக³ராஜு அர்ச்சிஞ்ச பவ்வளிஞ்சு (ஸ்ரீ)

ஸ்ரீராம! இலக்ஷ்மியின் மனமெனும் கடலுக்குச் சந்திரன் போன்றவனே! நாராயண! விரும்பியவற்றை அடைந்தவனே! பள்ளி கொள்வாயாக. தளிர் போன்ற உதடுகளேயுடையவனே! பாவமெனும் யானேக்குச் சிங்கத்தையொத்தவனே! மாதவ! மல்லிகை மலராலான இப்படுக்கையின்மீது கண் வளராய். நீருண்ட மேகத்தையொத்த சரீரனே! சந்திர முகத்தவனே! உன் வருகையை விரும்பி நிற்கிறேன். ஜனக மகாராஜன் வீட்டில் பிறந்த சீதை உன்னேக் கைப்பிடித்து, பொன் மயமான

1 கோ³பிகாவஸந்தம் (மே. 20)

விசிறி ஏந்திக் காத்திருக்கிருள். கண் வளர்க. வருணிக்கவும் இயலாத பொன்ஞெளிர் மேனி கொண்ட சீதை நிறைந்த பக்தியுடன் உன்னைப் பூசிக்கவும், நீ பள்ளி கொள்வாய். காற்றைப் புசிக்கும் பாம்பாகிய அணையில் பள்ளி கொள்பவனே தாமரை இதழை நிகர்த்த கண்ணனே! ஆசையுடன் இத் தியாகராஜன் உன்னை அருச்சிக்குமாறு திருப்பள்ளி கொள்வாயாக.

## 594

(1ஜோல பாட)

ரீதிகௌ^ள ஆதி^

ப. ஜோஜோ ராம ஆநந்த^க^ந (ஜோ)

ச. 1. ஜோஜோ த^சரத₂பா^ல ராமா
ஜோஜோ பூ^ஜாலோல ராம (ஜோ)

2. ஜோஜோ ரகு^குல திலக ராம
ஜோஜோ குடிலதராலக ராம (ஜோ)

3 ஜோஜோ நிர்கு^ணரூப ராம
ஜோஜோ ஸுகு^ணகலாப ராம (ஜோ)

4. ஜோஜோ ரவிசசிநயந ராம
ஜோஜோ ப₂ணிவரசயந ராம (ஜோ)

5. ஜோஜோ ம்ருது^தரபா^ஷ ராம
ஜோஜோ மஞ்ஜுல வேஷ ராம (ஜோ)

6. ஜோஜோ த்யாக^ராஜார்ச்சித ராம
ஜோஜோ ப^க்தஸமாஜ ராம (ஜோ)

பரிபூர்ண ஆனந்த சொரூபனே! தாலேலோ! தயரதன் புதல்வனே! பூதேவி புதல்வியாகிய சீதையை உகப்பவனே! இரகு வமிச திலக! சுருண்ட முன்னுச்சி மயிருடையவனே! நிர்குண சொரூபனே! நற்குணங்களை அணிகளாக உடையவனே! சூரிய சந்திர நயனனே! ஆதிசேடன்மீது சயனிப்பவனே! நயம்பட உரைப்பவனே! அழகிய தோற்றமுடையவனே! தியாகராஜனுல் பூசிக்கப் பெறுபவனே! பக்தரால் சூழப்பெறுபவனே! தாலேலோ!

---

1 தாலாட்டு

(¹மேலு கொலுபுலு)

595

பௌ³ளி (மே. 15) ஜம்ப

ப. மேலுகோவய்ய மம்மேலுகோ ராம
மேலை ஸீதாஸமேத நா பா⁴க்யமா (மே)

ச. 1. நாரதா³து³லு நிந்நு கோ³ரி நீ மஹிமலவ்-
வாரிகா³ பா³டு³சுந்நாரிபுடு³ தெல்ல
வாரகா³ வச்சிநதி³ ஸ்ரீராம நவநீத
க்ஷீரமுலு பா³கு³கா³ நாரகி³ம்பநு வேக³ (மே)

2. ப₁ணிசயந யநிமிஷ ரமணு லூடி³க³மு ஸேய
அணுகுவக³ நிண்டா³ரு ப்ரணுதி ஜேஸெத³ரு
மணிமயாப₄ரணுலௌ யணிமாது³ லிடு³தீ³ப
மணுலு தெலுபாயெநு தரணிவம்ச வரதிலக (மே)

3. ராஜராஜேச்வர ப₄ராஜமுக₁ ஸாகேத
ராஜ ஸத்³கு³ண த்யாக³ராஜநுத சரண
ராஜந்ய விபு³த₄க³ண ராஜாது³லெல்ல நிநு
பூஜிம்ப காசி³நா ரீஜக³மு பாலிம்ப (மே)

மேன்மை பொருந்திய சீதையுடன் கூடியிருக்கும் எங்கள் பேரதிர்ஷ்டமே! பள்ளி எழுந்தருள்க. எங்களை ஏற்றுக்கொள். நாரதர் (தும்புரு) முதலியோர் உன்னையே வேண்டி உனது மகிமைகளை நிரந்தரமாகத் துதி பாடிக்கொண்டிருக்கின்றனர். பொழுது புலர்ந்துள்ளது. இராம! வெண்ணெய், பால் ஆகியவற்றை நன்கு அமுது செய்யக் கண் விழித்துக்கொள்.

நாகணைப் பள்ளியானே! தேவ ஸ்திரீகள் உனக்கு ஊழியம் செய்ய வினயத்துடன் நின்று பல தோத்திரங்கள் செய்கின்றனர். அணிமாதி அஷ்ட சித்திகள் மணிகள் பதித்த அகல்களில் ஏற்றிய தீப மணிகள் வெளுக்கத் தொடங்கின. சூர்யகுல திலகனே!

மன்னர் மன்னனே! சந்திர வதனனே! அயோத்திக்கரசே! நற்குணங்களுடையவனே! தியாகராஜன் துதிக்கும் பாதனே! க்ஷத்திரிய வீரனே! தேவர் குழாங்களும் அரசர்களும் உன்னைப் பூசிக்கக் காத்திருக்கின்றனர். இவ்வுலகைக் காக்கப் பள்ளியெழுந்தருளாயே!

---

1 திருப்பள்ளியெழுச்சிப் பாட்டுகள்

## 596

ஸௌராஷ்ட்ரம் ரூபகம்

ப. மேலுகோ த³யாநிதீ⁴ மேலுகோ தாச²ரதீ, (மே)

அ மேலுகோ த³யாநிதீ⁴ மித்ரோத³யமௌ வேள (மே)

ச. 1. நாரதா³தி³ முநுலு ஸுரலு
வாரிஜப⁴வு டி³ந்து³கலா-
த⁴ருடு³ நீ ஸந்நிதி⁴நே கோரி
கொலுவு கா³சிநாரு (மே)

2. வெந்ந பாலு ப³ங்கா³ரு
கி³ந்நெல நே நுஞ்சிநாநு
திந்நகா³ரகி³ஞ்சி தேட
கந்நுலதோ நந்நு [1]ஜூட³ (மே)

3. ராஜராஜாதி³ தி³க³-
ராஜுலெல்ல வச்சிநாரு
ராஜநீதி தெலிய த்யாக³ராஜ
விநுத நநு ப்³ரோவ (மே)

கருணாநிதியே! தாசரதி! பள்ளியெழுந்தருள். சூரியன் உதிக்கப் போகும் இவ்வதிகாலையில் கண் விழிப்பாயாக. நாரதர் முதலிய முனிவரும், தாமரையில் தோன்றிய பிரமன், பிறை சூடிய சிவன் ஆகியோரும் உனது சந்நிதியை வேண்டி பேட்டி காணக் காத்திருக்கின்றனர்.

வெண்ணெய், பால் ஆகியவற்றை நான் பொற்கிண்ணத்தில் வைத்திருக்கிறேன். அவற்றை நன்முக அமுது செய்து தெளிந்த விழிகளால் என்னைக் கண்பார்க்க (விழித்துக்கொள்).

சக்கரவர்த்திகள், அஷ்டதிக்கு பாலகர்கள் ஆகிய அனைவரும் அரச நீதியை உன்னிடம் தெரிந்துகொள்ள வந்துள்ளனர். இத்தியாகராஜனையும் காக்க நீ பள்ளி எழுந்தருள்க.

## 597

(மங்களங்கள்)

த⁴ந்யாஸி ஆதி³

ப. ஜாநகீநாயக நீகு ஜயமங்க³ளம் ந்ருப-
ஸுத ஸுந்த³ரமுநகு சுப⁴மங்க³ளம் ஹரே (ஜா)

---

1 ப்³ரோவ

ச. 1. பா,லமுநகு நீது<sup>v</sup> கபோலமுநகு மங்க<sup>v</sup>ளம்
நீலவர்ண நீ பலு வஜ்ரால ஜாலமுநகு மங்க<sup>v</sup>ளம் (ஜா)

2. யௌவநமுநகு சிருநவ்வுநகு மங்க<sup>v</sup>ளம்
து<sup>v</sup>வ்விந யலகலமீதி<sup>v</sup> புவ்வுலகு மங்க<sup>v</sup>ளம் (ஜா)

3. மாடலகு ரத்நால கிரீடமுநகு மங்க<sup>v</sup>ளம்
நாடக ஸூத்ரதா<sup>v</sup>ர நீ தேட கண்ட்<sup>v</sup>லகு மங்க<sup>v</sup>ளம் (ஜா)

4. பா<sup>v</sup>ணமுநகு குஸுமபா<sup>v</sup>ணஜநக மங்க<sup>v</sup>ளம்
ஜாணதநமுநகு லோகத்ராணமுநகு மங்க<sup>v</sup>ளம் (ஜா)

5. உங்க<sup>v</sup>ரமுநகு நீ த்<sup>v</sup>ருஷ்டாங்க<sup>v</sup>முநகு மங்க<sup>v</sup>ளம்
பொங்கு<sup>v</sup>சு பத<sup>v</sup>முலநுண்டு<sup>v</sup> க<sup>v</sup>ங்க<sup>v</sup>குநு மங்க<sup>v</sup>ளம் (ஜா)

6. நீ கு<sup>v</sup>ணஜாலமுநகு நித்ய சுப<sup>v</sup>, மங்க<sup>v</sup>ளம்
நாக<sup>v</sup>சயந பாலித த்யாக<sup>v</sup>ராஜ மங்க<sup>v</sup>ளம் (ஜா)

ஜானகி நாயகனே! உனக்கு ஜய மங்களம்.

சக்கரவர்த்தி திருமகனான உன் அழகிற்கு சுபமங்களம்.

உனது நெற்றிக்கும், கன்னங்களுக்கும், நீல வண்ணனே! உனது வைர அணிகளின் கூட்டத்திற்கும் மங்களம். உனது இளமைக்கும், புன்னகைக்கும், வாரி விடப்பெற்ற குழலின் மீதுள்ள மலர்களுக்கும் மங்களம். உனது பேச்சிற்கும், இரத்தின கிரீடத்திற்கும், கபட நாடக சூத்திரதாரியாகிய உனது தெளிந்த கண்களுக்கும் மங்களம்.

உனது பாணங்களுக்கும், மன்மதனைப் பெற்றவனே! உன் சாமர்த்தியத்திற்கும், உலகைக் காக்கும் சக்திக்கும் மங்களம். உனது விரல்களில் மோதிரங்களுக்கும், அழகிய மணிக்கட்டிற்கும் உன் திருவடிகளிலிருந்து பொங்கி வரும் கங்கை நதிக்கும் மங்களம்.

உனது குணங்களின் திரளுக்கு சுப மங்களம். நாகணைப் பள்ளியானே! தியாகராஜனைக் காக்கும் உனக்கு என்றும் மங்களமாகுக.

## 598

**கேதா<sup>v</sup>ரகௌ<sup>v</sup>ள** **ஆதி<sup>v</sup>**

ப. மா ராமசந்த்<sup>v</sup>ருநிகி ஜயமங்க<sup>v</sup>ளம் (மா)

அ. கோ<sup>v</sup>ரப<sup>v</sup>வநீரநிதி<sup>v</sup> தாரகுநிகி மங்களம் (மா)

ச. 1. மாருநிக<sup>v</sup>ந்த ராஜகுமாருநிகி மங்க<sup>v</sup>ளம்
மாருலேநி ஹரிகி மும்மாரு ஜயமங்க<sup>v</sup>ளம் (மா)

2. பா॑ஹு॒லேயாப்துநிகி ஸு॒பா॑ஹு॒ வைரிகி மங்க॑ளம்
பா॑ஹு॒ஜாசூருடா॑ஜாநு பா॑ஹு॒நிகி மங்க॑ளம் (மா)

3. ப்॑ருந்தா॑வந ஸ்தி,த மௌநி
ப்॑ருந்தா॑வநுநிகி மங்க॑ளம்
ப்॑ருந்தா॑ லோலுநிகி பா॒லித
ப்॑ருந்தா॑ர குநிகி மங்க॑ளம் (மா)

4. ராஜவேஷ॒நிகி ராஜ
ராஜார்ச்சிதுநிகி மங்க॑ளம்
ராஜத,॑ருட॑கு॑ த்யாக॑-
ராஜநுதுநிகி மங்க॑ளம் (மா)

எமது இராமசந்திரனுக்கு ஜய மங்களம். கொடுமையான பிறவிக் கடலைத் தாண்டச் செய்பவனுக்கு மங்களம். மதனனைப் பெற்ற ராஜகுமாரனுக்கு, இணையற்ற ஹரிக்கு முக்காலும் மங்களமாகுக. முருகக் கடவுளின் ஆப்தனும், சுபாகுவின் பகைவனும், க்ஷத்திரியர்களுள் பரம வீரனும், நெடுந்தோளனுமாகியவனுக்கு மங்களம்.

பிருந்தாவனத்தில் வசிக்கும் முனிவர் கூட்டத்தைக் காத்தவனும், பிருந்தையென்ற பெண்ணிடம் அன்பு பூண்டவனும், தேவரைக் காத்தவனும் ஆகிய இராமச்சந்திரனுக்கு மங்களம். அரச வேடம் பூண்டவனும், சக்கரவர்த்திகளால் பூசிக்கப்படுபவனும், சந்திரனையணிந்தவனுகிய தியாகராஜனுல் (சிவனுல்) துதிக்கப் பெறுபவனுமான இராமசந்திரனுக்கு மங்களம்.

நான்காவது பாகம் முற்றிற்று.



ஸ்ரீ

# தியாகராஜ ஸ்வாமி கீர்த்தனைகள்

## ஐந்தாம் பாகம்

(பிரஹ்லாத பக்தி விஜய கீர்த்தனைகள்)

599

ஸௌராஷ்ட்ரம் ஆதி

ப. ஸ்ரீ க³ணபதிநி [1]ஸேவிஞ்சராரே.
ச்ரித மாநவுலாரா (ஸ்ரீ)

அ. [2]வாக³தி³பதி ஸுபூஜல ஜேகொநி
பா³க³ நடிம்புசுநு வெட³லிந (ஸ்ரீ)

ச. பநஸ நாரிகேளாதி³ஜம்பூ³
ப²லமு லாரகி³ஞ்சி
க³நதரம்புநு மஹிபை பத³முலு
க³ல்லு க³ல்லந நுஞ்சி
அநயமு [3]ஹரி சரணயுக³ முல
[4]ஹ்ருத³யம்பு³ந நுஞ்சி
விநயமுநநு த்யாக³ராஜ [5]விநுதுடு³
விவித⁴க³துல த⁴ளங்கு³மநி வெட³லிந (ஸ்ரீ)

அடியார்களே! ஸ்ரீ கணபதி தேவனை வணங்குவோம் வாரீர்! பிரமன் முதலியோர் அளிக்கும் பூஜையை ஏற்றுக்கொண்டு அழகாக நடனம் புரிந்துகொண்டு எழுந்தருளும் (கணபதியைச் சேவிப்போம் வாரீர்).

பலாப்பழம், தேங்காய், நாவல்பழம் முதலியவற்றை அமுது செய்துகொண்டு, கனமாக பூமியின்மீது தமது பாதங்களை 'கல்

---

1 ஸேவிஞ்சரே, 2 வாக³தி³பாதி³ 3. சிவுநி சரண
4 ஹ்ருத³யாம்பு³ஜ 5 விநுதிநி

கல்'லென்று ஊன்றிக்கொண்டு, அனவரதமும் திருமாலின் திருவடிகளைத் தமது உள்ளத்திற்கொண்டு, வினயத்துடன் தியாகராஜனால் வணங்கப்பெறும் வேழமுகக் கடவுள் அனேக தாள கதிகளில் தித்தளாங்கு என்று ஆடிக்கொண்டுவரும் (இக் கணபதியைச் சேவித்திடுவோம் வாரீர்).

## 600

கல்யாணி ஆதி^v

ப. வாஸுதே^vவயநி வெடலிந யீ தௌ^v-
வாரிகுநி க^vநரே (வா)

அ. வாஸவாதி^v ஸுரபூஜிதுடை^v (ந)
வாரிஜநயநுநி மதி^vநி த^vலசுசுநு (வா)

ச. 1. நீருகா பி தோ^vவதுலநு க^vட்டி
நிடலமுநநு ஸ்ரீசூர்ணமு பெ^vட்டி
ஸாரி வெட^vலி யீ ஸப^v,லோ ஜுட்டி
ஸாரெகு ப^vங்க^vரு கோலநு ப^vட்டி (வா)

2. மாடி மாடிகிநி மீஸமு து^vவ்வி
மந்மத,ருபுடு^v தாநநி க்ரொவ்வி
தா^vடி தா^vடி படு^vசுநு தா நிவ்வி-
த^v,ம்பு^vந ப^vலுகுசு பக பக நவ்வி (வா)

3. பா^vகு^v மீற நடநமு சேயுசுநு
பதித பாவநுநி தா வேடு^vசுநு
ராக^v தாள க^vதுலநு பா^vடு^vசுநு
த்யாக^vராஜ ஸந்நுதுநி பொ^vக^vடு^vசுநு (வா)

''வாஸுதேவா'' என்று கூவிக்கொண்டு வரும் இந்த துவார பாலகனை(வாயில் காப்போனை)ப் பாரீர். இந்திரன் முதலிய தேவரால் பூசிக்கப்பட்டுத் தாமரைக் கண்ணனாகிய ஹரியை மனத்தில் நினைத்துக்கொண்டு (வரும் துவாரபாலகனைப் பாரீர்).

நீர்க்காவி யேற்றிய வேஷ்டியை உடுத்து, நெற்றியின்மீது ஸ்ரீ சூர்ணத்தை யணிந்து, அடிக்கடி திரும்பி இம்மேடையைச் சுற்றிவந்து, எப்பொழுதும் கையில் ஒரு பொற்பிரம்பைப் பிடித்துக்கொண்டு,

அடிக்கடி மீசையை முறுக்கிக்கொண்டு, அழகில் நான் மன்மதனேயென்று பெருமைகொண்டு, தாண்டித் தாண்டிக் குதித்துக்கொண்டு, பலவிதமாகப் பேசி கடகடவென்று சிரித்துக் கொண்டு,

மிகவும் அழகாக நர்த்தனம் செய்து, எளியோரைக் காக்கும் ஹரியைப் போற்றிக்கொண்டு, இராக தாள கதியுடன் பாடிக் கொண்டு, தியாகராஜனுல் வணங்கப்பெறும் பகவானைப் புகழ்ந்து கொண்டும் (வரும் துவாரபாலகனைப் பாரீர்).

601

யமுநாகல்யாணி ரூபகம்

ப. ஸாக ருண்டு வெட லெனிதோ
ஸாரெகு க நராரெ (ஸா)

அ. பா கு க ப்ரஹ்லாது நி வர
யோகி நி கௌ கி ட ஜேர்ச்சி (ஸா)

ச. 1. மந்த ரத ருடா நந்த
கந்து டு தந ஹ்ருத யார-
விந்த ம்பு ந நெலகொந்ந
ஸௌந்த ர்யமுலநு த லசுசு (ஸா)

2. வாரண முலபை பே ரீ
வாத் யம்பு லு ம்ரோயக ஸுர-
வார ஸத்ரீல நாட்யபு
வருஸல ஜூசுசு வேட்கக (ஸா)

3. ராஜில்லிந ஶ்ரீ த்யாக-
ராஜஸகு நி மநஸார
பூ ஜிஞ்சுநுண்டு த நுஜ
ராஜகுமார ஸஹிதுடை (ஸா)

இதோ பாருங்கள்! சமுத்திரராஜன் பவனி வருவதைக் கண்ணுரக் காண வருவீர்! யோகியான பிரஹ்லாதனைத் தன் மார்புறத் தழுவிக்கொண்டு (சமுத்திரராஜன் வருவதைக் காணீர்!)

மந்தர மலையெடுத்தவனும் ஆனந்தந் தருபவனுமாகிய (ஹரி) தன் இதயத் தாமரையில் வீற்றிருக்கும் அழகை நினைந்து, யானைமீது பேரி முதலிய வாத்தியங்கள் முழங்க, தேவலோகத்துக் கணிகையர் நாட்டியமாடும் சொகசை விநோதமாகப் பார்த்துக்கொண்டு, ஒளி பொருந்திய தியாகராஜனின் தோழனுகிய ஹரியை மனமாரப் பூசை செய்பவனும் அரக்கன் மைந்தனுமாகிய பிரஹ்லாதனுடன் கூடி (சமுத்திரராஜன் பவனி வருவதைப் பாருங்கள்).

602

ஹுஸேநி ஆதி

ப. விநதாஸுத ராரா நா
விநுதி கைகொனுமா (வி)

அ. கந நாகபாசம்புல
கண்டிஞ்ச ராரா (வி)

ச. 1. அமரேசுநி கெலிசி நீ வம்ருதமு தெச்சி
விமல கீர்த்தி வஹிஞ்சி வெலஸில்லிந வீரா (வி)

2. ஹரிகி வாஹநமௌ மாயய்ய வேக ராரா நீ
ஸரியௌ பக்துநி ப்ரோவ ஸமயமிதி ராரா (வி)

3. த்யாகராஜநுதுநி தாஸுடௌ தீர
நாகாசந நிந்நு விநாக யெவ்வருரா (வி)

விநதை மைந்தனான கருடனே வாராய்! என் வணக்கத்தை ஏற்றுக்கொள். கனத்த இந்த நாகபாசங்களை விலக்க வருக. தேவேந்திரனை ஜயித்து அமிருதத்தைக் கொண்டுவந்து களங்க மற்ற புகழ்பெற்ற வீரனே! விஷ்ணு பகவானுக்கு வாகனமான என்னய்யனே! உனக்குச் சமானமான ஒரு பக்தனை (பிரஹ்லாதனை)க் காக்க இதுவே தருணம். தியாகராஜனால் வணங்கப் பெறும் ஹரியின் பக்தனே! தீரனே! பாம்புகளைப் புசிப்பவனே! உன்னையன்றி கதி வேறு யாருளர்?

603

சங்கராபரணம் ரூபகம்

ப. விஷ்ணுவாஹநுண்டிதிகோ
வெடலெ ஜூடரே (வி)

அ. க்ருஷ்ண சரண பக்துலலோ
கீர்த்தி கல்கு பாக்யசாலி (வி)

ச. 1. ரங்கபதிநி பொங்குசு ஹ்ருத்-
ரங்கமுநநு தலசி
பங்கருஸரி ரங்குகல ப-
தங்கராஜு தாநநுசுநு (வி)

2. வருணுலயு மொரலிட'விநி
கருணு பூரிதுடை
ஹரி ப'க்துல பரிதாபமு
ஹரியிந்துநுசு வேட்'கக' (வி)

3. ராஜில்லு விராஜாதி'புடு'
டீ' ஜக'முந கேகி' யஹி
ராஜராஜபோ'ஜி த்யாக'-
ராஜநுதுநி தா' பொ'க'டு'சு (வி)

மகாவிஷ்ணுவின் வாகனமான கருடன் எழுந்தருளுவதை இதோ பாருங்கள். (அவன்) ஸ்ரீகிருஷ்ணபகவானின் திருவடி பக்தர்களுள் மிகவும் புகழுடைய பாக்கியசாலி.

ஸ்ரீ ரங்கநாதனைப் பொங்கும் தன்னுள்ளமாகிற அரங்கில் நினைத்து மகிழ்ந்து, பொன்னை நிகர்த்த மேனியுடைய பட்சி ராஜன் நானேயென்றும், சமுத்திரராஜன் முறையிடுவதைக் கேட்டு இரக்கம் நிறைந்தவனாக ஹரி பக்தனின் துயர் நீக்குவே னென்ற ஆவலுடன், சர்ப்பராஜர்களைப் புசிக்கும் ஒளி மிகுந்த கருடன் இப்பூவுலகிற்கு இறங்கி வந்து தியாகராஜனால் வணங்கப் பெறும் பகவானைப் புகழ்பாடிக்கொண்டு (வருவதை இதோ பாருங்கள்).

## 604

தோடி' சாபு

ப. வாரிதி' நீகு வந்த'ந மொநரிஞ்செத' (வா)

அ. ஸாரெகு நீ ஹ்ருத'யாரவிந்த'முநு
மாரமணுடு' கூ'டு' தா'ரி தெ'ல்புமு நாதோ (வா)

ச. 1. நாயெட' த'யயுஞ்சி ஸாகுமீ யெட'
பா'யகுண்டு' தா'ரி தெ'ல்புமீ முநி
த்'யேயுநிதோ மாட ப'ல்குமீ ஏ யு-
பாயமைந ஜேஸி ப்ராணமு நில்புமீ (வா)

2. த'நுஜபா' த'லெல்ல த'லசநு போ'க'
த'ந ஸம்பது'லகு ஜேயி ஜாசநு நா
மநஸுந ஹரிநி நேமாரநு நா
கநுலார நாது, நி க'ந தெ'ல்புமீ நாதோ (வா)

3. ஆஜன்ம மஸுர பாᵛதா'யெநு ஜல
ராஜ ப்ராயமுலே தாᵛராயெநு த்யாகᵛ-
ராஜஸகு,டுᵛ ராடாᵛயெநு விநு
யாஜாநு பாஹுடுᵛ அகᵛபடᵛ தெᵛல்புமீ (வா)

சமுத்திரராஜனே! உனக்கு நமஸ்காரம். உன் இதயமாகிற தாமரையில் இலக்ஷ்மி பதியாகிய பகவான் அனவரதமும் எழுந்தருளியிருக்கும் வகையை எனக்குக் கூறுவாய்.

என் மீது கருணை புரிந்து என்னையாட்கொள். ஹரி என்னை விட்டு என்றும் அகலாதிருக்கும் வழி கூறு. முனிவர்களால் தியானிக்கப்படும் அவனிடம் ஒரு வார்த்தை சொல். ஏதாவது உபாயம் செய்து என்னுயிரை நிறுத்திவை.

அரக்கர் புரிந்த உபத்திரவங்களை நினைக்கேன், போகத்திற் காகவோ செல்வத்திற்கோ கைநீட்டி இரக்கமாட்டேன். மனத்தில் ஸ்ரீ ஹரியைப் போற்றுவதை விடமாட்டேன். என் கண்களார ஹரியைக் காணும் வழியைக் கூறுவாய்.

பிறவி முதல் அரக்கரால் துன்பமடைந்தேன். கடலரசனே! அப்பொழுதே ஐந்தாறு ஆண்டுகள் கழிந்தன. தியாகராஜனின் (சிவபெருமானின்) தோழனை பகவான் காட்சியளிக்கவில்லை. ஆகவே ஆஜானுபாகுவான அப்பரமன் அகப்படும் வழி கூறுவாய்.

## 605

கல்யாணி ஆதிᵛ

ப. வச்சுநு ஹரி நிந்நு ஜூடᵛ
வச்சுநு ஹரி நிந்நு ஜூசி
மெச்சுநு ஹரி நிந்நு ஜூசி (வ)

அ. குச்சித விஷயாதுᵛல சிச்சுரீதி நெஞ்சி நீவு
ஹெச்சுகாᵛநு மா ஸ்வாமிநி மச்சிகதோ நுதியிம்பு (வ)

ச. 1. தீᵛருநி ஸீதாராமாவதாருநி ஸகல லோகா-
தாᵛருநி நிஜபᵛக்த மந்தாᵛருநி நுதியிம்பவய்ய (வ)

2. தᵛந்யுநி வேல்புலலோ மூர்தᵛந்யுநி ப்ரதிலேநி லா-
வண்யுநி பரம காருண்யுநி நுதியிம்பவய்ய (வ)

3. ஏ ஜபதபமுலகு ராடுᵛ யாஜநாதுᵛலகு ராடுᵛ
ராஜிகாᵛ நுதியிஞ்சு த்யாகᵛராஜநுதுநி நீவேள (வ)

ஹரி உன்னைக் காண வருவார். வந்து உன்னைக் கண்டு மிகவும் மெச்சிப் போற்றுவார். வெறுக்கத்தகுந்த சிற்றின்பங்

களை வெறுப்புடன்நோக்கி, என் பிரபுவின்மீது மோகங்கொண்டு அவரை நன்கு வணங்குவாயாக.

(அவன்) தீரன். ஸீதாராம அவதாரம் எடுத்தவன். சகல புவனங்களுக்கும் ஆதாரமானவன். நிஜ பக்தருக்குக் கற்பகத் தருவைப் போன்றவன்.

மிகுந்த பாக்கியசாலி. தேவதைகளுள் மிகச் சிறந்தவன். இணையற்ற அழகன். பரம காருண்யன்.

அவன் எவ்வித ஜப, தபங்களுக்கும் கிட்டாதவன், வேள்விகளுக்கும் (யாகங்களுக்கும்) கிட்டாதவன். தியாகராஜனல் வணங்கப்பெறும் அவனை இன்று அன்புடன் துதிப்பாயாக.

## 606

சஹாந ஆதி

ப. வந்த³நமு ரகு⁴நந்த³ந ஸேது
ப³ந்த⁴ந ப⁴க்தசந்த³ந ராம (வந்)

அ. ஸ்ரீத³மா நாதோ வாத³மா நே
பே⁴த³மா இதி³ மோத³மா ராம (வந்)

ச. 1. ஸ்ரீரமா ஹ்ருச்சாரமா ப்³ரோவ
பா⁴ரமா ராயபா³ரமா ராம (வந்)

2. விண்டிநி நம்முகொண்டிநி சர-
ணண்டிநி ரம்மண்டிநி ராம (வந்)

3. ஓட³நு ப⁴க்தி வீட³நு ஒருல
வேட³நு நீவாட³நு ராம (வந்)

4. கமமநி விடெ³மிமமநி வரமு
கொம்மநி பலுக ரம்மநி ராம (வந்)

5. ந்யாயமா நீகாதா³யமா இந்த
ஹேயமா முநிகே³யமா ராம (வந்)

6. சூடு³மீ காபாடு³மீ மம்மு
போடி³மிகா³ கூ³டு³மீ ராம (வந்)

7. க்ஷேமமு தி³வ்யதா⁴மமு நித்ய
நேமமு ராமநாமமு ராம (வந்)

8. வே³கரா கருணாஸாக³ர ஸ்ரீ
த்யாக³ராஜுநி ஹ்ருத³யாகர ராம (வந்)

இரகுநந்தன! சேதுவை அமைத்தவனே! பக்தர்களுக்குச் சந்தனம்போல் குளிர்ச்சி தருபவனே! உனக்கு நமஸ்காரம்.

செல்வங்களை யளிப்பவனே! என்னுடன் வாதமா? நீ வேறு நான் வேறு? இது உனக்கு மகிழ்ச்சி தருகிறதா?

திருமகளின் உள்ளத்தில் உறைபவனே! என்னைக் காப்பது உனக்குப் பாரமா? உனக்கு நான் தூது அனுப்பவேண்டுமா?

உன்னைக் குறிந்துக் கேள்வியுற்று நான் உன்னையே சரணமடைந்தேன். உன் வரவையே கோரினேன்.

நான் பின் வாங்கமாட்டேன். உன் பக்தியைக் கைவிடேன். பிற தெய்வங்களை வேண்டேன். நான் என்றும் உன்னைச் சேர்ந்தவன்.

இது நியாயமா? இதனுல் உனக்கு இலாபமா? அல்லது நான் வெறுக்கத்தக்கவனு? முனிவரால் துதி பாடப்பெறுபவனே?

என்னைக் கடாட்சிப்பாய். காப்பாற்றுவாயாக. எங்களை ஒப்புடன் கூடுவாய்.

உன் இருப்பிடமே க்ஷேமத்தையளிக்கும் இடம். உன் திருநாமமே தினமும் ஜபம் செய்யத் தகுந்தது.

விரைந்து வாராய் கருணைக்கடலே! ஸ்ரீ தியாகராஜனின் இதயத்தை இருப்பிடமாகக் கொண்டவனே!

## 607

கˇ,ண்டா சாˇபு

ப எட்லகனுகொˇந்து³னோ ஸ்ரீ ஹரினி நே (நெ)

அ சுட்லர க³டி³ய தோ³வகு நாமதி³லோனி
ஜாலி தெ³லிபி விபு³னிதோ தெ³ல்புவாரி (நெ)

ச 1. த³ரலோ க³லுகு³ ஸம்பத³ல ரோஸி தநுவுநு
மாசி ஹரினி கூ³டு³ மஹாராஜுலகு கா³க (எ)

2 மலயனி ம³தமுந தெ³லியகுண்டினி கா³னி
யலநாடே³ ஸத³யுநி நநுஸரிஞ்சக போ³தினே (நெ)

3. சின்ந ப்ராயமு நாடே³ ஸ்ரீஹரிபை நாஸ
கொன்ந ஜீவுட³கா³நு கோத³ண்ட³பாணி நே (நெ)

4. ஈ ஜந்ம மீ பா³க்ய மீ ஸொம்முலெல்ல ப்³ர-
யோஜநமா த்யாக³ராஜ விநுதுநி நே (நெ)

எப்படிக் கண்டுகொள்வேன் ஸ்ரீ ஹரியை நான்? சுற்றிலும் அரை நாழிகை வழி தூரத்திற்கு என் மன வருத்தத்தைத் தெரிந்து ஹரியினிடம் உரைப்பவர்களை (எப்படிக் காண்பேன்?)

இவ்வுலகில் காணப்படும் செல்வங்களை வெறுத்து பக்தியினால் மெய்ம்மறந்து ஹரியைக் கூடும் மகான்களைத் தவிர மற்றவர்க்கு (எப்படிக் காட்சியளிப்பாரோ?)

மங்காத மதத்தினால் ஒன்றும் தெரியாமல் இருந்தேன். அந்நாளே தயையுடன் கூடிய ஹரியைப் பின்பற்றாமல் போனேன்.

கோதண்டத்தை ஏந்திய பிரானே! பின்ளைப்பருவம் முதலே நான் ஹரியின்மீது பெருங்காதல் கொண்டவனல்லவா?

இச்சன்மமும் இச் செல்வங்களும் இந்த பாக்கியமும் என்ன பயனளிக்கும்? தியாகராஜனால் வணங்கப்பெறும் ஹரியை (எப்படிக் காண்பேன்?)

## 608

புந்நகாᵛவராளி — சாபு

ப. இந்தூᵛகா யீதநுவுநு ஸாகிந (திᵛந்)

அ. இந்துᵛமு,குடுᵛ ராக ஹ்ருதᵛமு பகுᵛலகᵛ
நந்தᵛறிலோ ஜாலி ஜெந்தᵛநீயநி யந்தᵛ (ரிந்)

ச. 1. பாமுல கேமேநு பᵛலுகᵛட்டிகாᵛ நுண்டᵛ
நேமோ காரணமநி யெஞ்சுசுண்டிநே (நிந்)

2. மநகேல நெபமநி மந்நிஞ்சிரோ லேக
தநுவு பெᵛல்லமு காᵛதுᵛ தாளதுᵛ தைᵛவ (மிந்)

3. நா ஜயமுநு ஜூசி நம்மரே தேᵛவுநி
ராஜில்லு ஸ்ரீத்யாகᵛராஜ வரதுᵛடுᵛ தா (நிந்)

இதற்காகவா இவ்வுடல் காப்பாற்றப்பட்டது? மதிவதனனாகிய பகவான் என் முன் தோன்றாததால் என் உள்ளம் உடைந்து நான் வருந்துவதைப் பிறர் காணவேண்டுமென்று (நான் உயிர் வாழவேண்டும்?)

பாம்புகள் கடித்தும் என்னுடல் வலிமை குன்றாது இருப்பதற்குக் காரணம் என்னவென்று யோசித்திருந்தேன். "நமக்கேன் விரோதம்?" என்று மன்னித்துவிட்டார்களோ? இவ்வுடல் வெல்லம் அல்ல. தெய்வம் பொறுக்காது. என் வெற்றியைக் கண்டும் மக்கள் தெய்வத்தை நம்பவில்லையே! தியாகராஜனுக்கு வரமளித்த பகவான் (இதற்காகவா இவ்வுடலைக் காத்தார்?)

## 609

பைᵛ,பரவி — சாபு

ப. நிஜமைதே முந்ᵛதர நிலுவுமீவேள (நி)

அ. அஜுᵛடைᵛந ஹரிஹயுடைᵛந நா பᵛ,க்தியு (நி)

ச. 1. கா்ஸி ஜெந்து்சு நேநு க்ர்ப்ப்முலோநுண்ட்
தே்சிக வருடு்ப தேசிஞ்சிந தெ்ல்ல (நி)

2. உங்நதமுநநுண்டி் பட்த்ரோஸிந வேள
உர்விதே்வி நங்நெத்தி ப்ரோசிந தெ்ல்ல (நி)

3. நாக் நாக்முலு நநு பா்திஞ்சக்
த்யாக்ராஜநுதுடு் நந்நு கா்சிந தெ்ல்ல (நி)

(வருவது) பிரமனையினும் இந்திரனையினும், எனது பக்தி உண்மையாயின் என் எதிரில் இப்பொழுதே தோன்றுவீராக.

துயரத்துடன் நான் என் தாயின் கருவில் வளரும்பொழுது நாரதமுனிவர் உபதேசித்ததனைத்தும் உண்மையாயின், உயரத்திலிருந்து என்னைக் கீழே தள்ளியபொழுது பூமிதேவி என்னையேந்திக் காத்தது நிஜமாயின், யானைகளும் பாம்புகளும் என்னைத் துன்புறுத்தியபொழுது தியாகராஜன் வணங்கும் பரமன் என்னைக் காத்தது மெய்யாயின் (என் எதிரில் உடனே தோன்றுவீராக).

## 610

பந்துவராளி [1]திச்ரநடை

ப. நாரத்முநி வெட்லிந ஸு்கு்-
ஞதிசயமு விநரே (நா)

அ. ஸாரெகு ஸ்ரீஹரி பத்ஸாரஸமுல த்யாநிஞ்சுசு
நாராயண நாமமுலநு பா்ராயண மொநரிஞ்சுசு (நா)

ச 1. பே்தா்பே்த் ரஹிதமகு்
வேதா்ந்த ரஸ ப்ரிதுடா்-
ஹ்லாத்மு மீறக்நு ப்ரஹ்-
லாது்நகு சுப்மு தெ்லுபநு (நா)

2. கடு்தெல்ல தே்ஹமுந ப்
ஸிடி்வீணெ மெறயக் தா்-
நெட்பா்யநி ப்ரேமதோ
நடு்க்டு்கு்கு வாயிஞ்சுசு (நா)

---

1 சாபு

3. ராஜில்லிந ஸ்ரீத்யாக³-
ராஜ ஸகு,நி மர்மமுலநு
ஈ ஜக³திநி விந்நவாரி
கே ஜயமு ஜயமு ஜயமநி (நா)

நாரத முனிவர் எழுந்தருளி வந்த அதிசயத்தைக் கேளுங்கள். இடைவிடாமல் ஸ்ரீ ஹரியின் பாதத் தாமரைகளை தியானம் செய்துகொண்டும் ஸ்ரீமந் நாராயணனின் திருநாமங்களை சதா பாராயணம் செய்துகொண்டும் (வரும் அதிசயத்தைக் கேளீர்.)

பேதம், அபேதம் (வேற்றுமை, வேற்றுமையின்மை) இரண்டு மற்ற வேதாந்த ரசத்தில் (தத்துவ ஞானத்தில்) திளைப்பவரான நாரதர் மகிழ்ச்சி நிரம்பியவராகப் பிரஹ்லாதனுக்குச் சுப வார்த்தைகளைத் தெரிவிக்க, வெண்ணிறங் கொண்ட தமது தேகத்தின்மீது பொன் மயமான வீணை பிரகாசிக்க, இடைவிடாமல் ஒவ்வோரடிக்கும் அதை வாசித்துக்கொண்டு, ''ஒளிபொருந்திய ஸ்ரீ தியாகராஜனின் தோழனுகிய பகவானுடைய மர்மங்களை இவ்வுலகில் கேட்பவர்களுக்கே வெற்றி, வெற்றி, வெற்றி'' என்று பறைசாற்றிக்கொண்டு (முனிவர் வரும் இவ்விந்தையைக் கேளுங்கள்).

## 611

ஆரபி, சாபு

ப. இபுடை³ந நநு த³லசிநாரா ஸ்வாமி (இ)

அ. க்ருபகு பா³த்ருட³நநு கீர்த்திஞ்சிநாரா (இ)

ச. 1. த³யசேஸி நாமாடலெல்ல நா
தல்லிதோ ப³லிகிந கொல்ல
நயமுக³விண்டி நீவல்ல நேடு³
நாமநஸுந நெந்தோ சல்லநாயெ (இ)

2. உந்நத த³ய காஸகொண்டி நேநு
ப⁴ந்நமுலகு பா³லையுண்டி
கந்நுலார மிமு க³ண்டி நேடு³
கர்ணம்ருதபு மாட விண்டி (இ)

3. பலுரூபமுலு தாநு பூ³நி நந்நு
பா³தி³ஞ்சி வேட்³க ஜூசிந
பலுமாரு நந்நுநேசிந புண்ய
பாபமு ஹரி செந்தகா³நி யேமந்து³ (இ)

4. பூ⁴மினி பு⁴ட்டக³லேநு பூ⁴யோ
பூ⁴யோ ஹரிநி நம்மிநாநு
தாமஸமுநு தாள³லேநு வர
த்யாக³ராஜாப்துடு மதி³லோநு (இ)

இப்பொழுதாவது அந்த ஸ்வாமி என்னை நினைத்தாரா? கிருபைக்கு நான் பாத்திரமானவன் என்று கூறி என்னைப் புகழ்ந்தாரா? என்னைப்பற்றிய வார்த்தைகளை தயையுடன் அவர் அன்னை இலக்ஷ்மி தேவியுடன் பேசியதனைத்தும் உமது நாவிலிருந்து கேட்கப்போகிறேன். இன்று என் மனம் எவ்வளவோ குளிர்ந்திருக்கிறது.

நிகரற்ற அவரது தயைக்கு ஆசை கொண்டு நான் எத்தனையோ கஷ்டங்களை அடைந்தேன். என் கண்களார இன்று உம்மைக் கண்டேன். செவிகளுக்கு அமுதம் போன்ற உமது மொழிகளைக் கேட்டேன்.

அவர் பல உருவங்களையெடுத்து என்னை உபத்திரவங்கள் செய்து வேடிக்கை பார்த்தார். பலமுறை என்னை ஏமாற்றினர். அதன் பாப புண்ணியங்கள் ஹரியைச் சேர்ந்தவையே தவிர நான் வேறு என்ன கூறுலேன்?

இப்புவியில் நான் திரும்பப் பிறக்க விரும்பவில்லை. ஸ்ரீஹரியையே நான் நம்பியுள்ளேன். தாமச குணம் நிறைந்த செயல்களைப் பொறுக்கேன். சிறப்புற்ற தியாகராஜனுக்கு ஆப்தராகிய ஸ்ரீ ஹரி தம் மனத்தில் (இப்பொழுதாவது என்னை நினைத்தாரா?)

## 612

நீலாம்பரி³ ஆதி³

ப. எந்நக³ மனஸுகுராநி
பந்நக³சாயி ஸொக³ஸு
பந்நுக³ க³நுகொ³நநி கந்நுலேலே
கந்நு லேலே [1]கண்டி மிந்நுலேலே (எந்)

ச. 1. மோஹமுதோ நீலவாரி-
வாஹந காந்திநி கே³ரிந
ஸ்ரீஹரிநி க³ட்டு கொநநி தே³ஹமேலே
தே³ஹமேலே ஈ கே³ஹமேலே (எந்)

2. ஸரஸிஜ மல்லெ துலஸீ
விரவாஜி பாரிஜாத

1 கந்நெ மிந்நெ லேலே (அழகிய பெண்களெதற்கு?)

